# உண்மைக்கு ஓர் அபூபக்ர் (ரலி)

முதல் கலீபா

எம்.ஆர்.எம்.
முகம்மது முஸ்தபா

யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ்

# உண்மைக்கு ஓர்
# அபூபக்ர் (ரலி)
## (முதலாம் கலீபா)

எம்.ஆர்.எம். முகம்மது முஸ்தபா

யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ்
2, வடக்கு உஸ்மான் சாலை, முதல் மாடி,
(கோடம்பாக்கம் மேம்பாலம் அருகில்)
தியாகராய நகர், சென்னை - 600 017.
✆ : 044 - 2834 3385
E-mail : universal_pub2002@yahoo.co.in
Website : www.universal publishers.in

## நூல் விவரப் பட்டியல்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | உண்மைக்கு ஓர் அபூபக்ர் (ரலி) |
| நூலாசிரியர் | : | எம்.ஆர்.எம். முகம்மது முஸ்தபா |
| மொழி | : | தமிழ் |
| நூல் வகை | : | வரலாறு |
| நூல் உரிமை | : | ஆசிரியருக்கு |
| பதிப்பு ஆண்டு | : | முதற் பதிப்பு : டிசம்பர் - 2004<br>இரண்டாம் பதிப்பு : செப்டம்பர் - 2006<br>மூன்றாம் பதிப்பு : அக்டோபர் - 2009<br>நான்காம் பதிப்பு : டிசம்பர் - 2011<br>ஐந்தாம் பதிப்பு : டிசம்பர் - 2014 |
| பக்கங்கள் | : | 248 |
| நூல் அளவு | : | 14 x 22 செ.மீ. |
| எழுத்து | : | 11 புள்ளிகள் |
| தாள் | : | 18.6 கி.கி. வெள்ளைத்தாள் |
| பைண்டிங் | : | சாதாரண அட்டை |
| முகப்பு வடிவமைப்பு | : | ஓவியர் ஜானி<br>போன் : 9840156577 |
| வெளியீடு | : | யுனிவர்ஸல் பப்ளிஷர்ஸ்<br>2, வடக்கு உஸ்மான் சாலை, முதல் மாடி,<br>(கோடம்பாக்கம் மேம்பாலம் அருகில்)<br>தியாகராயர் நகர், சென்னை - 600 017. |
| ஒளி அச்சுக் கோர்வை | : | விக்னேஷ்வர் கிராபிக்ஸ்<br>சென்னை - 600 005<br>போன் : 9362330550 |
| அச்சிட்டோர் | : | ஸ்ரீ வெங்கடேஸ்வரா ஆப்செட்<br>வடபழனி,<br>சென்னை - 600 026.<br>போன் : 9841818101 |

விலை : ரூ. 130.00

# முன்னுரை

இறைதூதராய் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அரபு அவனி வரும்போது அங்கு இபுராஹீம் (அலை) அவர்களின் மார்க்கமும் இல்லை, அரசு என்று கூறத்தக்க அமைப்பும் இல்லை. எனவே, இவ்விரண்டையும் அங்கு ஏற்படுத்த வேண்டிய பொறுப்பு அண்ணல் நபி (ஸல்) அவர்களுடையதாகியது. அறிமுகமில்லாதவையாய் அவ்விரு பணிகளும் இருந்தாலும் அல்லாஹ்வின் அருள் இருந்ததால் அவற்றை அவர்கள் அழகுறச் செய்து முடித்தார்கள். அவர்கள் இறந்ததும் இபுராஹீம் (அலை) அவர்களுடன் தொடங்கிய இறை தூதர் தொடரும், இறைவனிடமிருந்து அமரர்கோ மூலம் வந்த செய்தித் தொடரும் அறுந்தன. இறைதூதர் என்ற முறையில் அவர்கள் ஆற்றிய பணியைப் பிறரால் ஆற்ற முடியாவிட்டாலும், இளைய அரசின் காவலர் என்னும் முறையில் அவர்கள் புரிந்த பணியைக் கவனித்துக் கொண்டவர்களே கலீபாக்கள் எனப்பட்டனர். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் விட்டுச் சென்றதும், ஒரு குறை மார்க்கம் அல்லாமல், ஒரு நிறை மார்க்கமாதலால், அதன் பாதையில் மக்களைத் தொடர்ந்து அழைத்துச் சென்றவர்களே கலீபாக்கள் என அழைக்கப்பட்டனர். இவர்கள் இறைவனின் பிரதிநிதிகள் அல்லர். இறைதூதரின் பிரதி நிதிகள் ஆவர். இதை அவர்கள் நன்கு அறிந்திருந்தனர்.

இறை தூதர்களுக்குத் தோழராயிருப்பதும், இன்னல்களுக்குத் தோழராயிருப்பதும் ஒன்றுதான். ஏனெனில் இன்னல் வாய்ப்படாத இறை தூதர்களே இம் மண்ணின் மீது வந்ததில்லை. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இறுதித் தூதராயிருந்ததாலோ, என்னவோ அவர்கள் அடைந்த துயர்களும் அதிகமானதாகும். ஆனால் அவர்களுக்கு இறை தூதர் எவருக்கும் இல்லாத ஒரு பேறு உண்டு; அதுவே நல்ல தோழர்கள் பலரைப் பெற்றிருந்தது. அந்தத் தோழர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அடைந்த துயர்கள் அனைத்திலும் பங்கு கொள்ள முந்தி யவர்கள். அலைபோல் வந்த துயரங்கள் அவர்களை அயர வைக்க வில்லை; ஆனால், அவை அவர்களை உயர வைத்தன. அதனால் தான் அவர்கள் இணையில் தோழமைக்கு இலக்கணம் கூறத்தக்க தோழர்களாய் இருந்து கொண்டிருக்கின்றனர்.

அகிலத்தின் இறப்பை ஒத்ததாகும் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இறப்பு. அந்த இழப்பு இந்தத் தோழர்களின் விசுவாசத்தை

அதிகப்படுத்தியது. அவர்கள் அதன் பின் சிறிய அரசாயினும், பெரிய அரசு ஒன்றிற்கு உதாரணம் கூறத்தக்கக் காவலராய் ஆனார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் ஆயினும், அரசர், நடுவர், அடுபோர்த் தலைவர் என்னும் பல்வேறு மனிதர்களின் சந்திப்பு ஆவர். அவர்களின் பக்கலில் ஆண்டுகள் பல நிழலினும் நெருக்கமாக இருந்ததால் பெற்ற பழக்கமும், பயிற்சியும் கலீபாக்களை உலகம் காணா உயர் ஆட்சியாளர்களாய் மட்டுமல்ல, இணையே காணமுடியா மாமனிதர்களாயும் ஆக்கின.

இந்நால்வரினும் முதலாமவர் அபூபக்ர் (ரலி) அவர்கள். இறைவனிடத்திலும், அவன் தூதரிடத்திலும் அவர்களுக்கு இருந்த மதிப்பு தனியானதாகும். எண் வரிசையில் மட்டுமல்ல, எல்லா வரிசையிலும் முதலாமவர் அவர்கள் தாம். அப்துல்லாஹ்வின் புதல்வரை, அல்லாஹ்வின் தூதர் என இறுதியில் எல்லோரும் தான் ஏற்றுக் கொண்டார்கள். ஆனால் அதனை ஆரம்பத்தில் ஏற்றுக்கொண்டவர்கள் ஆவார்கள் அவர்கள். பிறநாடு சென்றுவிட்டுப் பிறந்த ஊர் வரும் போது, சிரியா செல்லும் சாலையில் மக்காவிலிருந்து வரும் சிலரைச் சந்திக்கிறார்கள். அவர்கள் அப்துல்லாஹ்வின் புதல்வர் தம்மை இறை தூதர் எனக் கூறிக் கொண்டிருக்கிறார் என்று சொல்லக் கேட்டதும் 'அல்அமீன் அப்படிக் கூறினார்கள் என்றால் அவர்கள் அப்படித்தான் இருப்பார்கள்' என்று சொல்லி மக்கா வந்ததும், அண்ணல் நபி (ஸல்) அவர்களைக் கண்டு, அவர்கள் விரித்துரைத்த விளக்கங்களை வேண்டாம் எனத் தள்ளி, ஒற்றைச் சொல்லில் பதிலைக் கேட்டு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ''ஆம்'' என்று கூறியதும் இஸ்லாத்தை அக்கணமே ஒப்புக் கொண்ட பெருமைக்கு உரிமைக்காரர் அவர்கள் தாம். ஆண்களில் இஸ்லாத்தை ஏற்ற முதலாமவர் அலீ (ரலி) அவர்களாயிருக்கலாம். ஆனால் அவர்கள் சிறுவர். வயது வந்த ஆண்களில் யார் முதலாமவர் அபூபக்ர் (ரலி) அவர்களைத் தவிர்த்து?

ஆல் விழும் போது அதிர்ச்சி எழும், ஆழ்கடலில் கலம் கவிழும் போது கொந்தளிப்பு விளையும். அதைப் போல் தான் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இறந்த போதும் ஏற்பட்டது. ''நானும் நபிதான்'' எனக் கூறிக் கொண்டு பொய்யர்கள் கிளம்பினர். ''ஏழை வரி கொடுக்க மாட்டோம்'' எனக் கூறிக் கொண்டு குழப்பக்காரர்கள் எழுந்தனர். பொய்யர்களை ஒடுக்குவதும் குழப்பக்காரர்களை வழிக்குக் கொணர்வதும் எளிதான செயலாய் இருக்கவில்லை. ஒடுக்கப் புறப்பட்டவர்களையே ஒழித்து விடக் கூடிய ஆபத்துக்களாகும் அவை. அப்

பொழுது தான் அபூபக்ர் (ரலி) அவர்கள் தாம் ஆக்கப்பட்டிருப்பது ஊனால் அல்ல, உருக்கால் என்பதை எண்பித்தார்கள். இந்தச் சமயத்தில் அவர்கள் உறுதி சிறிது தளர்ந்திருந்தாலும், அரபு அவனியிலிருந்தே, அதன் மூலம் உலகத்திலிருந்தே இஸ்லாம் அகன்றுவிட்டிருக்கும். அப்பொழுது அபூபக்ர் (ரலி) அவர்கள் ஆற்றிய பணி இதயம் பெற்ற எவராலும் மறக்க ஒண்ணாததாகும்.

'உண்மைக்கு ஓர் அபூபக்ர்' என்னும், அவர்களின் வரலாறு கூறும் இந்நூல், கலீபா என்னும் முறையில் மட்டுமல்ல, வணிகர், தோழர், தொண்டர், துணைவர், மனிதர், என்னும் முறையில் அவர்கள் எவ்வாறு இருந்தார்கள் என்பதை விளக்குகிறது. இதைப் படிப்பவர் எவரும் அறிவர் அவர்கள் நிச்சயமாக மனிதரினும் அதிகமானவர்கள் என்பதை. இந்த அற்புத மனிதரின் வரலாற்றை எழுத வேண்டும் என்பது என்னுடைய நீண்ட நாள் ஆசையாகும். இதனை நான் ஐந்து ஆண்டுகளுக்கு முன்பே எழுத ஆரம்பித்தேன். எழுதத் தொடங்கும் போது இருந்ததைவிட இப்பொழுது இந்த நூல் வெளிவர வேண்டிய அவசியம் அதிகமாகியிருக்கிறது. ஏனெனில், மனிதனாய் உள்ளத்தில் அல்ல உருவத்தில் இருந்தால் போதும் என்னும் கொள்கை வளர்ந்து கொண்டிருக்கிறது. சாக்கடையைக் கண்டல்ல, சந்தனத்தைக் கண்டே மூக்கைப் பொத்திக் கொள்வோர் தொகை பெருகிக் கொண்டிருக் கிறது. இந்நிலை அபாய அளவை எட்டிவிடாதிருக்க இம்மாதிரி நூல்கள் அவசியம் அல்லவா?

ஓரிரு நூல்களைப் பார்த்துவிட்டு உருவாக்குவதென்றால் இந்நூல் என்றைக்கோ வெளிவந்திருக்கும். இயன்ற மட்டும் அதிகச் செய்திகள் கொடுக்கவேண்டும் என்னும் ஆர்வமே பல நூல்களைப் படிக்கச் செய்தது. ஆண்டுகளைப் பொருட் படுத்தாமல் ஆக்கப்படும் நூல்களே, ஆண்டுகளைப் பொருட் படுத்தாமல் வாழும் அல்லவா. இதைத் தொடர்ந்து உமர் (ரலி), உதுமான் (ரலி), அலீ (ரலி) ஆகியோரின் வரலாறுகளும், 'நீதிக்கு ஓர் உமர் (ரலி), 'அமைதிக்கு ஓர் உதுமான் (ரலி),' 'அறிவிற்கு ஓர் அலீ (ரலி)' என்னும் பெயர்களில் வெளிவர விருக்கின்றன. அவற்றையும் இதனையும் அவசியம் மக்கள் படிக்க வேண்டும் என நான் ஆசைப்படுகிறேன்.

தொண்டி,

– எம்.ஆர்.எம். முகம்மது முஸ்தபா

# பொருளடக்கம்

بِسْمِ اللهِ الرَّحْمٰنِ الرَّحِيْمِ

# உண்மைக்கு ஓர் அபூபக்ர் (ரலி) தோழர்

## இளமை வாழ்க்கை

ஒரு நாள் இரவு அண்ணல் நபி (ஸல்) அவர்களை 'இறைவனின் ஆணை' எனக் கூறி அமரர்களின் அரசர் ஜிப்ரயீல் (அலை) அவர்கள் அகல் வான் வழியில் அழைத்துச் செல்கிறார்கள். இணையில் ஒருவனான இறைவனின் சிறப்பு மிக்க இருக்கையை நோக்கி அவர்கள் இருவரின் வான் பயணம் வளர்கிறது. கணக்கிலே அடங்காக் ககன வெளித் தொலை கடந்து வந்த ஜிப்ரயீல் (அலை) அவர்கள், ஓர் இடம் வந்ததும் நிற்கிறார்கள். ''இதுதான் என் எல்லை. இந்த எல்லையிலிருந்து ஒரு மயிரிழை அளவு நான் முன்னே அடியெடுத்து வைத்தாலும், இறைவனின் பேரொளியைத் தாங்க இயலாமல் கரிந்து போய் விடுவேன்'' என்று கூறுகிறார்கள்.

அகல் வான் பயணத்தில் தம் துணையாக வந்தவர் அகன்று கொள்ள தாம் அடைந்த அனுபவத்தை அண்ணல் நபி (ஸல்) அவர்களே இவ்விதம் அறிவிக்கிறார்கள். ''அந்த இடத்தில் நான் ஒளியால் போர்த்தப்பட்டேன். ஒன்றைப் போல் ஒன்றில்லாத வெவ்வேறு வகையான எழுபதினாயிரம் திரைகள் என் முன்னிருந்து அகற்றப் பட்டன. மானிடர் முதல் வானவர் வரை எவருடைய சப்தமும் அவ்விடத்தை அடையவில்லை. என் உள்ளத்தில் ஓர் அச்சம் தோன்றத் தொடங்கியது. அப்பொழுது, 'அல்லாஹ்வின் தூதர் அவர்களே!

நில்லுங்கள்! உங்கள் இறைவன் 'சலாத்'தில் இருக்கிறான்' என்றொரு குரலொலி கேட்டது. அது அபூபக்ரின் குரலொலி போல் இருந்தது. அப்பொழுது 'அபூபக்ர் என்ன இந்த இடத்திற்கு எனக்கு முன்பே வந்து விட்டாரா? என் இறைவனுக்கு 'சலாத்'து உண்டா? என நான் வியப்போடு வினவினேன். அப்பொழுது 'முகம்மதே, உமக்கு உம் தோழரான அபூபக்ரிடம் அன்பிருந்ததால் நான் அபூபக்ரின் உருவில் ஓர் அமரரைப் படைத்திருக்கிறேன். உமக்கு அச்சம் தோன்றாமல் இருப்பதற்காகவும், அக அமைதியோடு விஷயங்களைப் புரிந்து கொள்வதில் உமக்கு உதவியாய் இருப்பதற்காகவும் அவர் அபூ பக்ரின் குரலில் உம்முடன் உரையாடினார்' என்று பதில் கிடைத்தது.''

துயரங்கள் நடுவில் எல்லாம் துளியளவும் துவளாமல் துணையாய் நிற்கும் தம் தோழரின் குரலொலி கேட்டதும், அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அகமுறும் அச்சம் அக்கணமே அகன்று விடுகிறது. அதன்பின் அவர்கள் இறைவனின் சிறப்பு மிக்க இருக் கையை நோக்கித் தம் சீர் பதம் வைத்து நடக்கத் தொடங்குகிறார்கள். 'ஆகுக' என்னும் ஒரு சொல்லால் இவ்வகல் ஞாலங்களைப்படைத்த இறைவனைக் கண்டு அவனுடன் பேசிவிட்டு மண்ணகம் திரும்பு கிறார்கள்.

மனித மனங்களால் எண்ணியும் பார்க்க இயலாத் தம் வான் பயண அனுபவங்களைத் தாம் வையகம் வந்ததும், தம் தம் வாய் பகர்ந்ததும் உடனே ஒப்புக் கொள்ளக்கூடிய ஒருவராய் அவர்கள் தேர்ந்தது அபூபக்ர் (ரலி) அவர்களைத் தாம். அவர்களிடம் அவற்றை விவரித்துக் கொண்டுவரும் போது, ''ஜிப்ரயீல் என்னிடம் வந்து, என் கையைப் பிடித்து, என் சமூகத்தவர் நுழையும் சுவனபதியின் வாயிலை எனக்குக் காட்டினார்'' என்று அவர்கள் கூறுகிறார்கள். அதைக் கேட் டதும் அபூபக்ர் (ரலி) அவர்கள், ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! நிச்சயமாக, நானும் அதனைத் தங்களுடன் இருந்து பார்க்க விரும்புகிறேன்'' எனப் பகர்கிறார்கள். உடனே அண்ணல் நபி (ஸல்) அவர்கள், நிச்சயமாக என்னைப் பின்பற்றுபவர்களில் சுவனம் நுழையும் முதல்வராக நீர் தாம் இருப்பீர்'' என நன்மாராயம் நவில்கிறார்கள்.

இந்த இரு நிகழ்ச்சிகளும் அவர்கள் இருவருக்கும் இடையே இருந்த இதய நெருக்கத்தை, நட்பின் இறுக்கத்தை உணர்த்தப் போது மானவையாகும். உண்மையில் அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு

அடுத்தவர் என்னும் படித்தரம் அபூபக்ர் (ரலி) அவர்களுக்குத்தான் அமைந்திருந்தது. இந்த இரண்டாவது இடத்தைப் பெறவேண்டும் என விரும்பிய ஒரே ஒருவர் உமர் (ரலி) அவர்கள் தாம். ஆனால் அவர்களின் அந்த விருப்பம் ஒரு போதும் நிறைவேறவில்லை. அதனை அவர்களே ஒப்புக் கொண்டதற்கு ஓர் ஆதாரம் அவர்களின் இந்த உரை : ''அபூபக்ர் அவர்களே! அல்லாஹ்வின் தூதர் அவர்களுக்கு அடுத்தபடியாக மனிதர்களில் மிகவும் மேலானவர் நாங்கள் தாம்''

அண்ணல் நபி (ஸல்) அவர்களும் அபூபக்ர் (ரலி) அவர்களும் இதயம் கலந்த நண்பர்களாகமட்டுமல்ல, இரத்தக் கலப்புள்ள உறவினர்களாகவும் இருந்தனர். இவர்கள் இருவரும் பிறந்தது குறைஷிப் பெருங்குடியில் தான். ஆறு தலைமுறைகளுக்கு அப்பால் இவ்விருவரின் முன்னோரும் ஒருவரில் இணைகின்றனர். முர்ரஃ என்பவரிடமிருந்து இருவரின் குடும்பங்களும் இரு கிளைகளாகப் பிரிகின்றன. முர்ரஃபின் ஒருமகன் கிலாப், மற்றொரு மகன் தைம். கிலாபின் மகன் குஸைய், குஸையின் மகன் அப்துமனாப், அப்துமனாபின் மகன் ஹாஷிம், ஹாஷிமின் மகன் அப்துல் முத்தலிப், தைமின் மகன் கஃப், கஃபின் மகன் அம்ர், அம்ரின் மகன் ஆமிர். அப்துல் முத்தலிபின் பெயரர் அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ஆமிரின் பெயரர் அபூபக்ர் (ரலி) அவர்கள். ஆமிரின் ஒரு புதல்வர் உதுமான், மறுபுதல்வர் சக்ர், உதுமானின் மகன் அபூபக்ர் (ரலி) சக்ரின் மகள் சல்மா, அபூபக்ர் (ரலி) அவர்களின் தந்தை உதுமான். அவர் அபூ குஹாபா என்னும் பெயரால் அழைக்கப் பட்டார். அபூபக்ர் (ரலி) அவர்களின் தாய் சல்மா, அவர் உம்முகைர் என்னும் பெயரால் அழைக்கப்பட்டார்.

அபூபக்ர் (ரலி) அவர்கள் அன்னை வயிற்றில் இருந்த காலம் ஆறு மாதங்கள். அவர்கள் அன்னையிடம் அமுதுண்ட காலம் இரண்டு ஆண்டுகள். அன்னை வயிற்றிலிருந்து விரைவில் வந்த அவர்கள், உண்மையில் உலகிலிருந்து விரைந்து விடவே அதிகம் விரும்பினர். அன்னையிடமிருந்து இரண்டு ஆண்டுகள் அமுதுண்ட அவர்கள் உண்மையில் வானாளில் பெரும் பகுதி பட்டினியாகவே இருந்தனர்.

பிற்காலத்தில் பெரும் பெயர் பெற்றுப் பிரபல்யம் அடையப் போகும் அவர்களுக்குப் பல பெயர்கள் இருந்தன. பெற்றவர்களால் அவர்களுக்கு இடப்பட்ட பெயர் அப்துல் கஃபா; அதன் பொருள் கஃபாவின் அடிமை என்பது. அறியாமைக் காலத்தில் அவர்கள் அப்

பெயரால் தான் அழைக்கப்பட்டார்கள். இஸ்லாத்தில் இணைந்தபின் அவர்களுக்கு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அளித்த பெயர் அப்துல்லாஹ், அதன் பொருள் அல்லாஹ்வின் அடிமை என்பது. அத்துடன் அவர்களுக்கு அதீக், சித்தீக் என்னும் சிறப்புப் பெயர்களும் இருந்தன.

''என் தந்தையாருக்கு வீட்டார் அப்துல்லாஹ் என்று பெயர் சூட்டினர். ஆயினும் அதீக் என்னும் இடுகுறிப்பெயரே பிரபல்யமாகி விட்டது. அதீக் என்றால் கண்ணியம், விடுதலை என்று பொருள்'' என ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவித்தனர். அண்ணல் நபி (ஸல்) அவர்களும் அபூபக்ர் (ரலி) அவர்களை வி ரித்து ''நீர் அல்லாஹ்வால் நரகிலிருந்து விடுவிக்கப்பட்டவர்'' என் ு கூறியிருந்தனர். எனவே இப்பெயர் அபூபக்ர் (ரலி) அவர்கள் கண்ணியம் பொருந்தியவர்களாய் இருந்தனர் என்பதற்காகவோ, வெந்நரக நெருப்பிலிருந்து விலகிக் கொண்டவர்கள் என்பதற்காகவோ ஏற்பட்டிருக்கலாம்.

''நரகை விட்டு விடுதலை பெற்றிருந்ததற்காக இப்பெயர் ஏற்பட்டது'' என்று நம்பத்தகுந்த அறு ஹதீஸ் திரட்டுகளில் ஒன்றான திர்மிதீயில் அறிவிக்கப்பட்டுள்ளது. ''அழகாக இருந்ததற்காக'' என்றும் ''நல்ல காரியங்களில் முந்திக் கொண்டதற்காக'' என்றும் சிலர் சொல்கின்றனர். ''சிறப்பும், தூய்மையும் பொருந்திய பரம்பரையில் வந்ததற்காக'' என்றும் சிலர் கருத்துக்கொள்கின்றனர்.

அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு 'சித்தீக்' என்னும் பெயர் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் தாம் என்னும் உண்மையை ஒப்புக் கொண்டதற்காகவும், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பைத்துல் முகத்தஸிற்கும், அர்ஷிற்கும் சென்று திரும்பியதைக் கூறியதும், அக்கணமே அதனை உண்மை என ஏற்றுக் கொண்டதற்காகவும் ஏற்பட்டதாகும். மிஃராஜ் இரவில் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஜிப்ரயீல் (அலை) அவர்களை நோக்கி, ''இந்த மிஃராஜ் சம்பவத்தை எப்படி மக்கள் உண்மைப்படுத்துவர்?'' எனக் கேட்டபோது, ''அபூபக்ர் சித்தீக்காக இருப்பதால் அவர் உண்மைப்படுத்துவார்'' என ஜிப்ரயீல் (அலை) அவர்கள் பதிலிறுத்தனர். இஸ்லாத்தை ஏற்பதற்கு முன்பே, எப்பொழுதும் உண்மையே பேசுபவர்களாய் அபூபக்ர் (ரலி) அவர்கள் இருந்ததால், அவர்களை அக்கால மக்கள் சித்தீக் என அழைத்தனர் என்று சிலர் சொன்னாலும், பலர் ஒப்புவது அலீ (ரலி) அவர்களின் இந்த அறிவிப்பைத்தான் : ''ஜிப்ரயீல், அண்ணல் நபி (ஸல்) அவர்கள்

ஆகியோர் மூலம் அல்லாஹ்வே அபூபக்ர் அவர்களுக்கு சித்தீக் என்னும் பெயரை வழங்கினான் என்றும் அல்லாஹ் அபூபக்ர் அவர்களுக்கு சித்தீக் என்னும் பெயரை வானத்திலிருந்து இறக்கி வைத்தான்'' என்றும் அலீ (ரலி) அவர்கள் அறிவித்தனர்.

சித்தீக்குகள் மூன்று பேர் ஆவர். அவர்களில் ஒருவர் ஹபீபுந் நஜ்ஜார். இரண்டாமவர், ''என் ரப்பு அல்லாஹ் தான் என்று கூறிய தற்காக ஓர் ஆடவரை நீங்கள் கொல்கிறீர்களா?'' என்று கூறிய ஃபிர் அவ்ன் குடும்பத்தைச் சேர்ந்த முஃமின். மூன்றாமவர் அபூபக்ர் (ரலி). மூவரில் அபூபக்ர் (ரலி) அவர்கள் தாம் சிறந்தவர்கள். அதனால் தான் அவர்கள் 'சித்தீக்குல் அக்பர்' என்று குறிப்பிடப்படுகின்றனர். அதன் பொருள் பெரிய சித்தீக் என்பதாகும்.

இப்பெயர்கள் எல்லாவற்றையும்விட அதிகப் பிரபல்யம் அடைந்த பெயர் அபூபக்ர் என்பதுதான். அரபிகள் தம்மைத் தந்தை யின் பெயர் கொண்டோ, தலைமகன் பெயர் கொண்டோ அழைத்துக் கொள்வது வழக்கம். உதாரணம் : இப்னுபக்ர், அபூபக்கர். இப்னுபக்ர் என்றால் பக்ரின் புதல்வர் என்று பொருள். அபூபக்ர் என்றால் பக்ரின் தந்தை என்று பொருள். அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு அப்பெயர் வரவேண்டுமென்றால் அவர்களுக்கு பக்ர் என்னும் பெயரில் தலைமகன் இருந்திருக்க வேண்டும். ஆனால் அந்தப் பெயரில் புதல்வர் எவரும் அவர்களுக்கு இருந்ததாகத் தெரியவில்லை. ஒருவேளை அவர்களின் புதல்வர் எவருக்காவது பல பெயர்கள் இருந்து, அவற்றில் அதிகப் பிரபல்பம் அடையாத பெய்ராக இது இருந்திருக்கலாம். பக்ர் என்பதன் ஒரு பொருள் கன்னி. கன்னி யாயிருந்த ஆயிஷா (ரலி) அவர்களின் தந்தை என்னும் பொருளில் அப்பெயர் வந்திருக்கலாம் என்பது சிலர் கருத்து. தலைமகன் பெயரால் தான் அரபிகள் தம்மை அழைத்துக் கொள்வர் என்னும் போது, இது இடிக்கும். ஆயினும் தலைமகனைப் போல் அதிக அன்பிற்குரியவராய் ஆயிஷா (ரலி) அவர்கள் இருந்ததால், அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு இப்பெயர் வந்திருக்கும் என்பதே பலரும் ஒப்பும் கருத்தாகும்.

பக்ர் என்றால் இளம் ஒட்டகை என்றும், அபூபக்ர் (ரலி) ஒட்டகைகள் மீது அன்புள்ளவர்களாய் இருந்ததால், அவர்களுக்கு இப்பெயர் வந்திருக்கும் என்றும் சிலர் கூறுகின்றனர். அதற்கு அவர்கள் கூறும் ஆதாரம் பூனையின் தந்தை என்று பொருள்படும் அபூஹுரைரா

ஏன்னும் பெயரை. அபூபக்ர் என்றால் இளம் ஒட்டகையின் தந்தை என்று பொருள்படும் என்றும், இப்படி முதல் குழந்தைக்குச் செல்லப் பெயர் இடுவது அப்பொழுது அரேபியாவில் இருந்த வழக்கம் என்றும், அபூபக்ர் (ரலி) அவர்கள் பெற்றோருக்கு முதல் குழந்தை என்றும், இன்னும் சிலர் கூறுகின்றனர். இதற்கு அவர்கள் கூறும் ஆதாரம், பிற்காலத்தில் பொய்த் தூதர்களுடன் போன கூட்டத்தவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களை ஒட்டகைக் குட்டியின் தந்தை என்று ஏளனமாக அழைத்ததை, அப்பெயர் கொண்டு சிலர் அவர்களை ஏளனமாய் அழைத்தாலும், ஏராளமானவர்கள் அவர்களை அதிக மதிப்புடன் அழைத்தது அப்பெயரைக் கொண்டு தான். அப்பெயர் எக்காரணம் கொண்டு வந்தாலும், அதனை பெற்றிருந்தவர் சிறப்பால் அது பெருமை யுற்றது என்பதை எவராலும் மறுக்க முடியாது.

## உள ஒற்றுமை

அண்ணல் நபி (ஸல்) அவர்களைப் போலவே அபூபக்ர் (ரலி) அவர்களும் மக்கமா நகரில் தான் பிறந்தனர். அல்லாஹ்வுடன் போரிட அவன் ஆலயம் நோக்கிப் பெரிய யானைப்படையுடன் வந்த ஆப்ரஹா, அவன் அனுப்பிய சிறிய பறவைகள் முன் நிற்க முடியாமல் ஓடி உயிர் துறந்து இரண்டரை ஆண்டுகள் உருண்ட பின் பிறந்தவர் அவர்கள். அப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தம் வளர்ப்புத் தாய் ஹலீமாவின் மடியில் இரண்டரை வயதுக் குழந்தையாய்ப் புரண்டு கொண்டிருந்தனர். இவ்விதம் அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கும் அபூபக்ர் (ரலி) அவர்களுக்கும், வயதில் இரண்டரை ஆண்டு இடை வெளி இருந்தாலும், ஒத்த வயது உள்ளவர்கள் போலவே அவர்கள் இருவரும் இருந்தனர்.

அவர்கள் இருவருக்கும் வயதில் மட்டும் இருக்கவில்லை இந்த நெருக்கம், இயல்பிலும் இருந்தது இந்த இணக்கம். அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் அமைந்திருந்த பெரும் குணங்களில் பெரும்பா லானவை அபூபக்ர் (ரலி) அவர்களையும் இணைந்திருந்தன. எவரை யும் எளிதில் இனம் கண்டு கொள்ளுதல்; கண்டு கொண்டதும் அவருடன் இதமாகவும், இனிமையாகவும் உரையாடுதல்; 'உதவி' என வந்தவர்க்கு 'இல்லை' என்னாது உதவுதல்; வழிப்போக்கரை ஆதரித்தல், ஏழைகள் மீது இரங்குதல், கேளிரை அணைத்தல், தோழர்க்குத் துணை போதல் இவையும், இவை போன்ற இன்னும் பல நல் இயல்புகளும் அபூபக்ர் (ரலி) அவர்களைத் தம் பிறந்தகமாகப்

பெற்றிருந்தன. ஆனால் அரபு மக்களிடமிருந்த ஆகாப் பழக்கங்கள் அவர்கள் அருகிலும் வந்ததில்லை. பொய்யை அவர்கள் புகன்றறி யார்கள். சூதும், வாதும் அவர்களைவிட்டு எத்தனையோ காதங் களுக்கு அப்பால் இருந்தன.

அரபு மக்கள் மதுக்குளத்தில் மூழ்கிக் குளித்துக் கொண்டிருக்கும் போது, அதனை அவர்கள் ஏறிட்டும் பார்த்ததில்லை. ''மதுவின் முடை நாற்றத்தை நான் வெறுக்கிறேன். அதை அருந்தியவன் வீரத்தையும், வெட்கத்தையும் இழந்து விடுகிறான்'' என்று கூறினார்கள் அவர்கள். சிலை வணக்கம் அவர்கள் செய்ததே கிடையாது. இறைவனுக்கு இணை வைப்பதற்கு அவர்கள் மனம் இணங்கியதும் இல்லை. இணை வைக்கப்பட்டவற்றிற்கு அவர்கள் தலை வணங்கியதும் இல்லை. அவர்கள் அப்பொழுது ஒரு சிறுவர். அவர்களை, அவர் களின் தந்தை அபூகுஹாஃபா அறை ஒன்றில் இருக்க வைத்துவிட்டு ''இதோ வந்து விடுகிறேன் இங்கேயே இரு!'' என்று கூறிவிட்டுச் செல்கிறார். அதற்குமுன் அவர்களைத் தந்தை அனுமதியாத அறை அது. குறுமாக்களுக்கே இருக்கும் துறு துறுப்புடன் அபூபக்ர் (ரலி) அவர்கள், அவ்வறையை தம் பார்வையால் அளக்கிறார்கள். அப்பொழுது அங்கு ஒரு சிறு சிலை அவர்களின் கண்களில் தென் படுகிறது. அதுவே தம் தந்தை தொழும் தெய்வத்தின் சிலை என்று தெரிந்து விடுகிறது அவர்களுக்கு. கோருவதை எல்லாம் கொடுக்கும் அது என வீட்டில் பேசிக் கொள்ளப்பட்டதை அவர்கள் கேட்டிருக் கிறார்கள். எனவே அதன் அருகில் சென்று ''எனக்கு உடை இல்லை, உடை கொடு'' என்கிறார்கள். அது வழங்கவுமில்லை, வாயைத் திறக்கவுமில்லை. ''எனக்கு உணவு இல்லை, உணவு கொடு!'' என்கிறார்கள். அதற்கும் அது யாதொரு பதிலும் அளிக்கவில்லை. அது கண்டு அவர்களுக்கு ஆத்திரமே வந்து விடுகிறது.

இளமையிலேயே இவ்விதக் கூர்மதி கொண்டவர்களாய் இருந்த தால், அவர்கள் எழுதவும், படிக்கவும் எளிதில் கற்றுக் கொள்கின்றனர். அன்றைய மக்காவில் எழுதப் படிக்கத் தெரிந்தவரை எண்ண, இரு சோடிக்கைகள் இருந்தாலே போதும். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் எழுதப்படிக்க அறிந்து கொள்ளவில்லை. அதற்கு இரண்டாவது காரணம் தான், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அநாதையாக இருந்தது. முதல் காரணம் அது அல்லாஹ்வின் ஏற்பாடு ஆகும். அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கும், அபூபக்ர் (ரலி) அவர்களுக்கும்

ஒற்றுமை இல்லாத ஒரு சிலவற்றில், ஒன்று எழுத்தறிவு, மற்றொன்று கவியாக்கும் திறன். கவியாக்கும் திறன் இருந்தது அபூபக்ர் (ரலி) அவர்களுக்குச் சிறப்பு, இல்லாதது அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்குச் சிறப்பு. கவியாக்கும் திறன் மட்டும் கைவரப் பெற்றவர்களாய் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இருந்திருந்தால், அவர்களின் வாய் வழியே வந்த இறைவனின் வேத உரைகளை, இறைவனின் வார்த்தைகள் என வாதிப்பது கடினமாயிருக்கும். எனவே இதுவும் இறைவனின் ஏற்பாடேயாகும்.

கவிஞர் அப்பாஸ் இப்னு மிர்தாஸ் என்பவர் தாம் ஆக்கிய கவியொன்றில், ''என் கொள்ளைப் பொருள்களை அல்அக்ராவும், உயைனாவும் பங்கிட்டுக் கொண்டனர்'' என்று குறிப்பிட்டார். ''அல்அக்ராவும் உயைனாவும் தங்களுக்குள் பங்கிட்டுக் கொண்டனர் என்று தான் குறிப்பிட வேண்டும். அதுதான் அரபிப் பாவிலக்கணப்படி சரியானது'' என்று அபூபக்ர் (ரலி) அவர்கள் கூறினர். பாவிலணக்கணம் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அறிந்திராததால் ''இரண்டும் ஒன்று தானே'' என இயம்பிய போது அபூபக்ர் (ரலி) அவர்கள் ஆனந்தத்தால் துள்ளி அறிவித்தார்கள். ''அல்லாஹ் உங்களை எப்படி வர்ணித்தானோ அப்படியே நீங்கள் இருக்கிறீர்கள் என நான் சாட்சியம் பகர்கிறேன் என்று அல்லாஹ் அண்ணல் நபி (ஸல்) அவர்களை இப்படி வர்ணித்திருந்தான். ''அவருக்கு நாம் கவிதை (இயற்றக்) கற்றுக் கொடுக்கவில்லை. அது அவருக்குத் தகுமானதும் அல்ல.''(36:69). அண்ணல் நபி (ஸல்) அவர்கள் புரியாத ஒன்றைத் தாம் புரிய அபூபக்ர் (ரலி) அவர்கள் அறவே விரும்பவில்லை. எனவே இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட பின் அவர்கள் கவி எழுதுவதைக் கை கழுவி விட்டனர். கவி எழுதுவதைக் கை கழுவி விட்டாலும், ஏற்கனவே எழுதிய கவிதைகளை அவர்கள் மனம் நழுவ விடவில்லை. எனவே இடைக்கிடையே அவர்களின் வாயுரைகளில் கவிதை வரிகள் சில வந்து விழுவதுண்டு.

கவியாக்கும் திறனிற்கும் அதிகமாக அவர்களிடம் இருந்தது கனவுகளுக்கு விளக்கம் அளிக்கும் திறன். ''முஸ்லிம்களில் அபூபக்கர் (ரலி) அவர்களே அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு அடுத்தபடியாக கனவுகளுக்கு விளக்கம் அளிப்பதில் சிறந்தவர்கள்'' என்று இப்னு சீரீன் கூறுகிறார். இப்னுசிரீன் இந்தக் கலையின் இமாம் எனப் போற்றப்படுகிறவர். அவர் கூறியது ஆதாரமற்றதல்ல என்பதற்கு இந்தச் சம்பவங்கள் சான்று ''மூன்று முழுமதிகள் என் இல்லம் வந்தன''

என ஒருநாள் ஆயிஷா (ரலி) அவர்கள் உரைத்த போது, மூன்று முக்கிய மனிதர்கள், அவர்கள் வதியும் மனையில் அடக்கப்படப் போவதையே அது குறிக்கிறது என்று அபூபக்ர் (ரலி) அவர்கள் விளக்கம் கூறினர். அவர்கள் கூறியது பிறகு மயிரிழையும் பிழையாது அப்படியே நிறை வேறியது. ''நானும் நீரும் ஓர் ஏணியில் ஏறப் போராடுகிறோம். நான் உம்மை இரண்டரைப் படிகள் முந்தி விட்டேன்.'' என ஒருநாள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களைப் பார்த்துப் பகர்ந்த போது, ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! உங்களை இறைவன் எடுத்துக் கொண்ட பின், நான் இரண்டரை ஆண்டுகள் உயிர் வாழ்வேன்'' என உடனே அதற்கு அபூபக்ர் (ரலி) அவர்கள் விளக்கம் அளித்தனர். அவர்கள் அறிவித்தது அணுவளவும் பிறழாது அப்படியே நிறைவேறியது. இவ்விரு நிகழ்ச்சிகளையும் குறிப்பிடுபவர் உண்மை வரலாறுகளை உரைப்பதில் வல்லவரான ஜலாலுத்தீன் சுயூத்தி (ரஹ்) ஆவர்.

தாயிஃப் முற்றுகையின் போது, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஒரு கனவு கண்டனர். அவர்களிடம் ஒரு கோப்பை பாலாடை கொடுக் கப்படுகிறது. அப்பொழுது ஒரு சேவல் வந்து அதைத் தன் அலகால் கொத்தி, சிந்திவிட்டு விடுகிறது. இதனை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களிடம் கூறினர். அதற்கு அபூபக்ர் (ரலி) அவர்கள் அன்றிருந்து அம்முற்றுகையின் வெற்றியானது, தங்கள் பிடியிலிருந்து வெகு தொலை விலகிப் போய்விட்டது என விளக்கம் பகர்ந்தனர். அவ்விளக்கத்தை அண்ணல் நபி (ஸல்) அவர்களும் ஏற்றுக் கொண்டனர்.

ஒரு நாள் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் வந்து தாம் கண்ட கனவொன்றைக் கூறினார்: ''இன்று இரவில் ஒரு மேகம் நெய்யையும் தேனையும் பொழிகிறது அதிலிருந்து மக்கள் அள்ளு கின்றனர். சிலர் அதிகமாக எடுக்கிறார்கள். சிலர் கொஞ்சமாக எடுக்கிறார்கள். அப்பொழுது புவியிலிருந்து வான்வரை ஒரு கயிறு இணைகிறது. அதனைப் பிடித்துக் கொண்டு தாங்கள் ஏறுகிறீர்கள். பிறகு அதனை ஒரு மனிதர் பிடித்து ஏறுகிறார். பிறகு வேறொருவர் பிடித்து ஏறுகிறார். பிறகு இன்னொருவர் பிடித்து ஏறுகிறார். அக்கயிறு அறுந்து விடுகிறது. பிறகு இணைக்கப்படுகிறது.''

இதை அவர் கூறி முடித்ததும் அங்கிருந்த அபூபக்ர் (ரலி) அவர்கள் அதற்குத் தாம் விளக்கம் சொல்வதாய்க் கூறினர். அண்ணல்

நபி (ஸல்) அவர்கள் அதற்கு அனுமதி வழங்கவே அபூபக்ர் (ரலி) அவர்கள் கூறினர் : 'மேகம் என்பது இஸ்லாம். தேனும், நெய்யும் பொழிவது குர்ஆனும், அதன் இன்பமும் பொழிவதாகும். குர்ஆனி லிருந்து அதிகமாக எடுத்தவரும் இருக்கின்றனர். கொஞ்சமாக எடுத்த வரும் இருக்கின்றனர். வானிலிருந்து வையம் வரை கயிறு என்பது தாங்கள் இருந்து கொண்டிருக்கும் சத்தியம். அதனைத் தாங்கள் பிடித் திருக்கிறீர்கள். அல்லாஹ் உங்களை உயர்த்துகிறான். தங்களுக்குப் பிறகு ஒருவர் அதனைப் பிடித்து ஏறுகிறார். பிறகு மற்றொருவர் ஏறுகிறார். பிறகு இன்னொருவர் ஏறுகிறார். அது அறுந்து விடுகிறது. பிறகு அவருக்காக அது இணைக்கப்பட்டு அதைப் பிடித்துக் கொண்டு அவர் ஏறுகிறார். அல்லாஹ்வின் தூதர் அவர்களே! என் தந்தை தங்களுக்கு அர்ப்பணமாகட்டும். நான் சரியாகக் கூறினேனா, தவறிழைத்தேனா என்பதை எனக்குக் கூறுங்கள்!''

இதைக் கேட்டு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ''சிலவற்றில் சரியாகச் சொன்னீர், சிலவற்றில் தவறிழைத்தீர்'' என்றனர்.

முக்காலத்தையும் அறிந்த ஒரே ஒருவன் அல்லாஹ் தான். எனவே மனிதர்கள் கூறும் விளக்கங்கள் சிலசமயம் சரியாக இருக் கலாம், சிலசமயம் இல்லாதும் இருக்கலாம். கனவுகளுக்கு விளக்கம் அளிக்கும் இந்தத் திறனுக்கு இணையாக அபூபக்ர் (ரலி) அவர்களிடம் அமைந்திருந்தது குறைஷிகளின் குடும்ப, கோத்திர வரலாற்று அறிவு ஆகும். இந்த அறிவில் அன்று வாழ்ந்த அறிஞர் பலரையும் அபூபக்கர் (ரலி) அவர்களுக்கு அடுத்தவர்களாகத்தான் குறிப்பிடவேண்டும். அரபு சமூகம் கோத்திரங்களை அடிப்படையாகக் கொண்டிருந்ததால் இந்த அறிவு அன்று மிகவும் அவசியமானதாக அமைந்திருந்தது. கோத்திரங்கள் ஒவ்வொன்றின் குறையையும், நிறையையும் அபூபக்ர் (ரலி) அவர்களைப் போல் அவ்வளவு துல்லியமாக அறிந்தவர் அப்பொழுது எவரும் இருக்கவில்லை. இன்று வரலாறு வகிக்கும் இடத்தை, அன்று இந்த அறிவுதான் பெற்றிருந்தது. அபூபக்ர் (ரலி) அவர்கள் ஒருவனைப் பார்த்து, ''உன் கோத்திரம் எது?'' என்று கேட்டனர். ''ராபியா'' என்றான் அவன். ''அதன் முக்கியக் கிளையா''? என வினவினர். ''ஆம்'' என்றான் அவன். ''அல்ல'' என்று அவர்கள் மறுத்து, ''அந்தக் கோத்திரத்தின் இளைய கிளையிலிருந்து வந்தவன் நீ'' எனக் கூறினர். விசாரித்துப் பார்த்தபோது, அவர்கள் கூறியதே சரியாக இருந்தது.

அபூபக்ர் (ரலி) அவர்களிடம் இருந்த இந்தத் திறனை அண்ணல் நபி (ஸல்) அவர்களும் அங்கீகரித்தனர். அதற்கு ஆதாரம், ஒரு முறை அவர்கள் கவிஞர் ஹஸ்ஸான் இப்னு தாபித் (ரலி) அவர்களிடம் அரபு மக்களின் குடும்ப, கோத்திர வரலாற்றை அபூபக்ர் (ரலி) அவர் களிடமிருந்து கற்றுக் கொள்ளும்படிக் கூறியது. அவர்களின் சொல் ஏற்று, ஹஸ்ஸான் இப்னு தாபித் (ரலி) அவர்களும் அபூபக்ர் (ரலி) அவர்களிடமிருந்து அதனைக் கற்றுத் தேர்ந்தனர். அதன் பின் அவர்கள் யாத்த பாக்களில் வம்சா வழிச் செய்திகள் பிறழாமலும், பிழை யில்லாமலும் இருப்பதை அறிந்து மக்கள் அவர்களின் ஆசான் அபூபக்ர் (ரலி) அவர்களாகவே இருப்பர் எனப் பேசிக் கொண்டனர்.

ஒருவரின் தரத்தை உயர்த்துபவை திறனும் ஆகும்; தகுதியும் ஆகும். தகுதி பெரும்பாலும் பிறப்பாலும் குணச் சிறப்பாலும் வருவது வழக்கம். அபூபக்ர் (ரலி) அவர்களுக்குப் பிறப்பால் வந்த இந்தத் தகுதி, அவர்களின் குணச் சிறப்பால் மேலும் உயர்ந்தது. ஒருவர் கொல்லப்பட்டால், அவர் உயிருக்குப் பகரமாய்ப் பழி வாங்குவதே அரபிகளின் பரம்பரைப் பழக்கம். ஆனால் சில சமயங்களில கொன்ற வரைக் கொல்லுவதற்குப் பதிலாக பணம் பெற்றுக் கொள்ளுவதும் உண்டு. இப்படிப் பணம் பெற்றுக் கொள்ளுபவர், முதலாவதாக அதற்கு அபூபக்ர் (ரலி) அவர்களின் அனுமதியைப் பெறவேண்டும். இந்தத் தகுதி அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு வந்ததற்குக் காரணம், அவர்களின் பனீதைம் குடும்பம் மக்காவை ஆளும் பெறுப்பேற்ற குடும்பங்களில் ஒன்றாக இருந்ததாகும். பரம்பரைப் பதவிகளை வகிக்கச் சிலர் தகுதியற்றவர்களாய் இருப்பர். ஆனால் அபூபக்ர் (ரலி) அவர்கள் அப்படி அல்லர். அந்தப் பதவிக்கு அவர்களைவிடத் தகுந்தவர் இன்னொருவர் இல்லை என்று சொல்லத் தக்கவிதமாக அவர்கள் இருந்தனர். அதனால் தான் இதில் மட்டுமல்ல, இன்னும் எத்தனையோ விஷயங்களில் அவர்களின் ஆலோசனையைப் பெற மக்கநகர் மக்கள், அவர்களின் வாயில் வருவதும் உண்டு, அவர்கள் அளிக்கும் ஆலோசனையை அதிகம் மதிப்பதும் உண்டு. எனவே அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு மதிப்பிற்குரிய ஓர் இடம் மக்க நகர் மக்களின் மனங்களில் இருந்து கொண்டிருந்தது.

அண்ணல் நபி (ஸல்) அவர்களும், அபூபக்ர் (ரலி) அவர்களும் இளவயதில் ஒருவரை ஒருவர் பார்த்திருக்கலாம், பழகியதாகத் தெரியவில்லை; ஒருவரை ஒருவர் அறிந்திருக்கலாம், அறிமுகம் இருந்ததாகத் தெரியவில்லை. அதற்குக் காரணம் அபூபக்ர் (ரலி)

அவர்களோ வசதியும், செல்வாக்குடனும் வாழ்ந்து வந்தது. அண்ணல் நபி (ஸல்) அவர்களோ ஈன்றவர் இருவரையும் இழந்து அநாதையாய் அபூதாலிப் அவர்களின் ஆதரவில் இருந்து வந்தது. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கதீஜா (ரலி) அவர்களின் செயலராய் ஆன போது தான் அவர்களுக்கும், அபூபக்ர் (ரலி) அவர்களுக்கும் அறிமுகம் ஆரம்பமாகியது. அதற்கு ஒரு காரணம் கதீஜா (ரலி) அவர்கள் வாணிபம் செய்த பகுதியில் தான் அபூபக்ர் (ரலி) அவர்களின் வணிக நிலையமும் இருந்தது. அடிக்கடி பார்க்கும் வாய்ப்பு, பழக்கத்தை வளர்ப்பது அல்லவா? அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கதீஜா (ரலி) அவர்களைக் கடிமணம் புரிந்து கொண்டு, அவர்களின் வீட்டிலேயே தங்கியது, அண்ணல் நபி (ஸல்) அவர்களைக் காணவும், அவர்களுடன் கலந்துரையாடவும் அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு அதிக வாய்ப்புகளை வழங்கியது.

இருவரின் இதயங்களும் ஒரே மாதிரியாய்த் துடிப்பதை உரையாடல் உணர்த்திய போது, அவர்கள் இருவரும் ஒருவரை ஒருவர் நெருங்க ஆரம்பித்தார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்களின் ஒழுக்கங்களும் உயர் தன்மைகளும், அபூபக்ர் (ரலி) அவர்களைக் கவர்ந்தன, கட்டின. அபூபக்ர் (ரலி) அவர்களின் இயல்புகளும் இனிய பண்புகளும் அண்ணல் நபி (ஸல்) அவர்களை இழுத்தன. ஈர்த்தன. இதன் பின் அவர்கள் இருவரும் அடிக்கடி சந்தித்துக் கொண்டனர். ''ஒவ்வொரு நாளும் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் காலையிலும், மாலையிலும் தங்கள் இல்லம் வந்து தம் தந்தையாருடன் பேசிக் கொண்டிருப்பர்'' என்னும் ஆயிஷா (ரலி) அவர்களின் அறிவிப்பு இதனை உறுதி செய்கிறது. அவர்கள் இருவரும் சந்திக்கும் போதெல்லாம், உருவ வணக்கத்திலும், ஒழுக்கவீனத்திலும் அரபு மக்கள் ஊறிப் போய் இருப்பதைப் பற்றித் தான் உரத்துச் சிந்திப்பார்கள். அப்பொழுது அவர்களின் கண்களிலிருந்து நீரும் இதயங்களிலிருந்து செந்நீரும் கசியத் தவறாது. பேசி முடித்ததும் இருவரும் பெரு மூச்செறிந்து கொண்டு எழுவர். இந்தப் பெருமூச்சு ஒரு நாள் அரபு மக்களின் ஆகாப்பழக்கங்களை ஒழிக்கும் பெரும்புயலாக உருவாகப் போவதை அவர்கள் இருவருமே அறிந்திருக்கவில்லை.

அபூபக்ர் (ரலி) அவர்களைக் காண்பது, கலந்துரையாடுவது, இறுதியில் பெருமூச்செறிந்து விட்டு எழுந்து செல்வது இத்துடன் இருந்துவிடவில்லை. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மக்க நகர் அருகிருந்த ஹிரா என்னும் மலைக்குகைக்கு அடிக்கடி சென்று,

இரவிலும், பகலிலும், தனித்திருந்து தம் முகவாயை நெஞ்சில் பதித்திருந்து, ஆகா ஒழுக்கத்தில் உழலும் அரபு மக்களைக் காக்கும் வழி யாது என்பது பற்றிச் சிந்திக்கும் வழக்கத்தை மேற்கொண்டிருந் தார்கள். அபூபக்கர் (ரலி) அவர்களின் இதயத்திலும் இந்தக் கவலை இருந்தாலும், தொழிலில் துணி வணிகராய் இருந்ததால், அவர்கள் பொதி கொண்டு பொன்குவிக்க சிரியாவுக்கும், யமனுக்கும், இவற் றிற்கு இடையிலிருந்த நாடுகளுக்கும் பயணம் செய்த வண்ணமாகவே இருந்தனர். இவ்வித வாணிபப் பயணங்கள், அவர்களின் பதினெட் டாம்'அகவையில் ஆரம்பமாயின. ஹிராக் குகையில் ஒரு நாள் ஜிப்ரயீல் (அலை) அவர்கள், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் முன் தோன்றி 'ஓதுக!' என உரைத்து இறை செய்தியை உணர்த்திய போது அபூபக்ர் (ரலி) அவர்கள் யமன் நாட்டில் இருந்தனர்.



# 2. தொண்டர்

## இஸ்லாத்தில் இணைதல்

அபூபக்ர் (ரலி) அவர்கள் யமனிலிருந்து மக்கா செல்லும் சாலையில வந்து கொண்டிருக்கிறார்கள். பிறந்த ஊரை விட்டுப் பல நாட்கள் பிரிந்திருந்ததால் தாம் ஆங்கு இல்லாத நாட்களில் நிகழ்ந்த வற்றை அறிய ஆவல் மேலிடுகிறது அவர்களுக்கு. எனவே சாலையில் சந்தித்த சிலரிடம் அவர்கள் ''ஊரில் ஏதேனும் விசேஷம் உண்டா?'' என விசாரிக்கிறார்கள். ''ஆம்'' எனக்கூறி அபூபக்கர் (ரலி) அவர்களின் ஆவலைப் பெருக்கிய அவர்கள், ''அபூதாலிபின் தம்பி மகன் தம்மை அல்லாஹ்வின் தூதுவர் எனக் கூறிக் கொண்டிருக்கிறார்'' என்கி றார்கள். அதைக் கேட்டதும் அடுத்த கணம் அபூபக்ர் (ரலி) அவர்களின் வாய் உதிர்த்த சொற்கள், ''அல் அமீன் அப்படிக் கூறினார்கள் என்றால் அவர்கள் அப்படித்தான் இருப்பார்கள்'' என்பவையே.

அமைதியாக வாய் இதைக் கூறினாலும் அமைதியாக இருக்க வில்லை அவர்களின் இதயம். தொலைவு அவர்களுக்குப் பெரும் தொல்லையாகத் தோன்றுகிறது. அண்ணல் நபி (ஸல்) அவர்களையும், தம்மையும் பிரிக்கும் தொலைவு தொலைய அவர்கள் மக்காவை நோக்கி விரைந்து வருகிறார்கள். அதனை அடைந்ததும், நேராக அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இல்லம் செல்கிறார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்களைக் கண்டதும் அவர்களின் கண்டம் விட்டு வெளி வந்த முதல் கேள்வி, ''நடந்தது என்ன?'' என்பது தான். அபூபக்ர் தம்மைத் தவறாகப் புரிந்து கொள்ளக் கூடாது என அஞ்சி அண்ணல் நபி (ஸல்) அவர்கள் நீண்ட விளக்கம் கூற ஆரம்பிக்கின்றனர். அவர்கள் அஞ்சியதற்குக் காரணம் வேறு எவரையும் விடத் தம்முடன் நெருங்கிப்

பழகிய அபூபக்ரே தாம் கூறுவதை நம்பாமல் போனால், வேறு எவர் தாம் நம்புவர் என்னும் எண்ணம் தான். அதனால் தான் அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களின் மனத்தில் அவநம்பிக்கை அணுவளவும் ஏற்பட்டு விடக் கூடாது என்பதற்காக மிகவும் எச்சரிக்கையுடன் நடந்தவை அனைத்தையும் விளக்கமாகக் கூறத் தொடங்குகின்றனர். ஆனால், நட்பின் இலக்கணம் நன்கு தெரிந்திருந்த அபூபக்ர் (ரலி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் பேச்சில் குறுக்கிட்டு, விளக்கங்களையெல்லாம் தாம் விரும்பவில்லை எனக் கூறி, ''செய்தி யுடன் உங்களிடம் வானவர் எவராவது வந்தனரா?'' என்று கேட்கி றார்கள். இன்னும் அண்ணல் நபி (ஸல்) அவர்களைப் பிடித்திருந்த அச்சம் அகலவில்லையாதலால் அவர்கள் மீண்டும் நீண்ட விளக்கம் கூற ஆரம்பிக்கின்றனர். அபூபக்ர் (ரலி) அவர்கள் அதைத் தடுத்துத் தம் கேள்விக்கு ''ஆம் அல்லது இல்லை'' என்னும் ஒரே சொல்லில் பதில் கூறும்படிக் கேட்கின்றனர். இதன் பின்னர் தான் அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ''ஆம்'' என்கின்றனர். அடுத்த கணம் அபூபக்ர் (ரலி) அவர்கள் அணுவளவும் தயங்காமல், தாமதியாமல் தம்மால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு உரத்து, ''இறைவன் ஒருவன், அவன் தூதர் முகம்மது'' என முழங்குகிறார்கள். அப்பொழுது அவர்களுக்கு வயது முப்பத்தெட்டு.

விரித்துரைத்த விளக்கங்களைக் கூட 'வேண்டாம்' எனக் கூறி ஒரே ஒரு கேள்வி, அதற்கு ஒற்றைச் சொல்லில் பதிலைப் பெற்று, அதனைக் காதுற்றதும் கணப்பொழுதும் தயங்காமல், தாமதியாமல் அறிவுமிக்க அபூபக்ர் (ரலி) அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளக் காரணம் இருந்தது. அபூபக்ர் (ரலி) அவர்களின் மனம் இதற்கான பக்குவத்தைப் பல நாட்களுக்கு முன்பே பெற்றுவிட்டது. நெருங்கிப் பழகியபோது அண்ணல் நபி (ஸல்) அவர்களை ஒழுக்கங்களிலும், ஒப்புரவிலும் ஒப்புயர்வற்ற ஒருவர் என அபூபக்ர் (ரலி) அவர்கள் அறிந்திருந்தார்கள். அரபு மக்களின் ஆகாப் போக்கை அகற்றும் வழிகாண அவர்கள் ஹிராக் குகையில் தனித்திருந்து தவம் செய்வதும், அபூபக்கர் (ரலி) அவர்களுக்குத் தெரியும். இவையெல்லாம் ஓர் அதி மனிதர் அல்லாதவருக்கும் இருக்கக் கூடியவை அல்ல என்பதை அபூபக்ர் (ரலி) அவர்களின் அறிவு கண்டு கொண்டது. அதனால் தான் அவர்களால் அப்துல்லாஹ்வின் புதல்வரை, அல்லாஹ்வின் தூதர் என அவ்வளவு விரைவாக ஏற்றுக் கொள்ள இயன்றது.

ஒருமுறை அபூபக்ர் (ரலி) அவர்கள் தனியாக சிரியா சென்றிருந்த போது கனவு ஒன்று கண்டனர். அவர்களின் மடியில் சூரியனும், சந்திரனும் வந்து விழுகின்றன. அவற்றை அவர்கள் தம் ஆடைக்குள் வைத்து நெஞ்சோடு அணைத்துக் கொள்கின்றனர். விடிந்ததும் அவர்கள் கிறிஸ்தவ மதகுரு ஒருவரைக் கண்டு, அவரிடம் அன்றிரவு தாம் கண்ட கனவை விண்டு அதற்கு விளக்கம் கேட்டனர். அவர், அபூபக்ர் (ரலி) அவர்களின் குடும்ப, கோத்திரத்தைக் கேட்டறிந்து கொண்டு, ஹாஷிம் குலத்தில் இறைவனின் தூதுவர் ஒருவர் தோன்றப் போவதையும், அவருக்கு அவர்கள் அமைச்சர் போல் இருக்கப் போவதையும் அக்கனவு உணர்த்துகிறது என உரைத்தார். அக்கனவுச் சம்பவம் உண்மையாய் இருக்குமானால், அதுவும் தயங்காமல், தாமதியாமல் அபூபக்ர் (ரலி) அவர்கள் இஸ்லாத்தை ஏற்கக் காரண மாய் அமைந்திருக்கலாம்.

இன்னொருமுறை அபூபக்ர் (ரலி) அவர்கள், அண்ணல் நபி (ஸல்) அவர்களுடன் சிரியா சென்ற போது, அவர்கள் இருவரும் வழியில் ஓர் இலந்தை மரத்தின் அடியில் தங்க நேர்ந்தது. அப்பொழுது அபூபக்ர் (ரலி) அவர்கள் அருகில் இருந்த கிறிஸ்தவ மதகுரு ஒருவரைக் காணச் சென்றனர். அண்ணல் நபி (ஸல்) அவர்கள், அபூபக்ர் (ரலி) அவர்களுடன் செல்லாது இலந்தை மரத்தடியிலேயே இருந்து கொண்டிருந்தனர். அப்பொழுது அம்மதகுரு அபூபக்ர் (ரலி) அவர்களிடம், ''அம்மர நிழலில் அமர்ந்திருக்கும் மனிதர் யார்?'' எனக் கேட்டார். ''முகம்மது இப்னு அப்துல்லாஹ் இப்னு அப்துல் முத்தலிப்'' என அபூபக்ர் (ரலி) அவர்கள் பதிலிறுத்தனர். அதைக் கேட்டு அம்மதகுரு கூறினார். ''இறைவன் மீது ஆணையாக, இவர் இறைவனின் தூதுவர் ஆவார். ஈஸா அவர்களுக்குப் பின் இம்மரத்தின் கீழ் எவரும் அமரவில்லை. இவர் தாம் இறைவனின் இறுதித் தூதுவர்.'' இந்தச் சம்பவம் உண்மையாய் இருக்குமானால், இதுவும் தயங்காமல், தாமதியாமல் அபூபக்ர் (ரலி) அவர்கள் இஸ்லாத்தில் இணைந்திடக் காரணமாக இருந்திருக்கலாம்.

அபூபக்ர் (ரலி) அவர்கள் இவ்வாறு ஒற்றைச் சொல் பதிலைப் பெற்று உடனே இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டதை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மறக்கவில்லை. ''நான் இஸ்லாத்தை வழங்கும் போதெல்லாம் அதனைத் தழுவுமுன் சற்றாவது தயக்கம் காட்டாதவர் இருக்கவில்லை. ஆனால் அதற்கு அபூபக்ர் விதிவிலக்கு. அவர் நான்

வழங்கியதும் அதனைச் சிறிதளவும் தயக்கமின்றி ஏற்றுக்கொண்டார்'' என அண்ணல் நபி (ஸல்) அவர்கள் நன்றியோடு நவின்றனர்.

அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு முன் இஸ்லாத்தை ஏற்றிருந் தவர்கள் இருவர் தாம். ஆண் அவர்களில் ஒருவர்; பெண் மற்றவர். ஆனால், அந்த ஆண் ஆண்டுகள் சிலவே ஆன சிறுவர். ஆயினும் சாண் பிள்ளையானாலும், ஆண் பிள்ளை என்பதற்குச் சரியான உதாரணம். எனினும் வயது வந்த ஆண்களில் முதல் முஸ்லிம் என்னும் பெருமை அபூபக்ர் (ரலி) அவர்களுக்கே உரியது. அபூபக்ர் (ரலி) அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டதை அறிந்ததும், மகிழ்ச்சி அடைந்த வர்கள் கதீஜா (ரலி) அவர்கள். அதிர்ச்சி அடைந்தவர்கள் மக்க மாநகர் மக்கள், அடைந்திருந்த மகிழ்ச்சி கதீஜா (ரலி) அவர்களை வீட்டில் அமர்ந்திருக்கவிடவில்லை. ஒரு துணியைக் கொண்டு, உடலைப் போர்த்திக் கொண்டு அபூபக்ர் (ரலி) அவர்களின் இல்லம் சென்று, ''அபூகுஹாஃபாவின் மகனே! உங்களுக்கு வழி காட்டிய அல்லாஹ் வுக்கே அனைத்துப் புகழும்!'' என வாழ்த்தி விட்டு வீடு திரும் பினார்கள். அதிர்ச்சி அடைந்த மக்க நகர் மக்களால் தம் உணர்ச்சியை வெளிப்படுத்தாதிருக்க இயல வில்லை. முகம்மதை விடத் தங்களுக்கு அபூபக்ரால் அதிகத் தொல்லைகள் வரலாம் என அவர்கள் அஞ்சி னார்கள். அதற்குக் காரணம் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அநாதையாக இருந்தது. அபூபக்ர் (ரலி) அவர்கள் செல்வமும் செல்வாக்கும் மிகுந்தவர்களாய் வாழ்ந்தது.

இதன்பின் இஸ்லாம், அபூபக்ர் (ரலி) அவர்களின் உயிரோடும், ஊனோடும் ஒன்றாக இணைந்தது. அவர்களின் இதயத்தோடும், இரத்தத்தோடும் இரண்டறக் கலந்தது, ''முகம்மதை இறை தூதர் என எப்படி ஒப்புக் கொண்டீர்?'' என சில நாட்களுக்கு முன்வரை, தம் ஆலோசனையைப் பெறத் தம்வீட்டு வாயில் காத்திருந்தவர்கள் கேள்வி கேட்ட போது, அபூபக்ர் (ரலி) அவர்கள் அளித்த அடக்கமான பதில் இதுதான்: ''பொய் கூறும் வாய் ஒன்றிற்கு உரியவர்கள் அல்லர் அவர்கள். மனித வாய் ஒன்று இதனினும் உண்மையான செய்தி ஒன்றை உரைத்ததில்லை.'' இந்த உரையில் இருந்த ஒவ்வொரு சொல்லும் அபூபக்ர் (ரலி) அவர்களின் உள்ளில் உறைந்திருந்த நம்பிக்கையின் அளவை நன்குஉணர்த்த கேள்வி கேட்ட வாய் ஊமையாகியது, உளமோ உலைக்களமாக மாறியது.

இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட பின் அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் அறிவு, அதிகாரம், திறம், செல்வாக்கு அனைத்தையும் அல்லாஹ்

வுக்கும், அவன் தூதருக்கும் அர்ப்பணித்து விடுகிறார்கள். அத்துடன் அவர்கள் தம் உயிரும், உடைமைகளும் தமக்கு உரியவை அல்ல, அல்லாஹ்வுக்கும் அவன் தூதருக்கும் உரியவை எனவும் எண்ணிவிடு கிறார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஒரு நாள் அளவற்ற நன்றிப் பெருக்குடன், ''நிச்சயமாக அபூபக்ரின் செல்வங்களைப் போல் வேறு எவரின் செல்வமும் இவ்வளவு அதிகமாக எனக்குப் பயன்பட்ட தில்லை'' என நவின்றதைக் கேட்டதும் அபூபக்ர் (ரலி) அவர்கள் நயனப் பெருக்குடன் வினவினர், ''அல்லாஹவின் தூதர் அவர்களே! தங்களுக்குச் சொந்தமானவை இல்லையா என் உயிரும், உடைமை களும்?'' என்று. அபூபக்ர் (ரலி) அவர்கள் இவ்விதம் கண்கள் குளமாகக் கேட்டதற்குக் காரணம், அல்லாஹ்வின் தூதர் அவர்கள் தம்மை அந்நியராகக் கருதிவிட்டார்களோ என்னும் ஐயம்தான்.

அபூபக்ர் தமக்குப் புரியும் உதவிகளுக்குப் பிரதி செய்யா விட்டாலும், நன்றியாவது செலுத்துவது தம் கடன் என அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கருதினார்கள். அதனால்தான் அவர்கள், ''மற்ற எல்லா மனிதர்களையும் விட அபூபக்ருக்கே, அவருடைய நட்பிற் காகவும், செல்வத்திற்காகவும் நான் அதிகம் கடமைப்பட்டிருக் கிறேன்'' என்று கூறினார்கள்.

## அடிமைகளை விடுதலை செய்தல்

வாலிப வயதில் தொடங்கித் தொடர்ந்த வாணிபப் பயணங்களில் அபூபக்ர் (ரலி) அவர்கள் ஈட்டிய பொருள் 40,000 திர்ஹம்கள் ஆகும். அப்பொழுது மக்கமாநகரில் பெரிய செல்வர் தாமே என அவர்களே கூறியிருக்கின்றனர். அந்தப் பெரிய செல்வம் பையில் இருந்தது பொன்னாக, அபூபக்ர் (ரலி) அவர்களின் கைகளில் ஆகியது தண்ணீராக. ஆம். அவர்கள் தண்ணீரைப் போலத்தான் அதனை அள்ளி, அள்ளி இஸ்லாத்திற்காகச் செலவிட்டார்கள். 'ஒருவன் இறை, அவன் உருவ மற்றவன்' எனக் கூறிய பெரிய பிழைக்காக, இரக்கமற்ற எசமானர்களால் இம்சிக்கப்பட்ட ஒன்பது அடிமைகளின் தளை ஒடித்து விடுதலை அளித்தது அபூபக்ர் (ரலி) அவர்களின் செல்வம் தான். அண்ணல் நபி (ஸல்) அவர்களும், அபூபக்ர் (ரலி) அவர்களும் தவ்ர் குகையில் தங்கியிருக்கும் போது அவர்களுக்குப் பால் கொணர்ந்து கொடுத்த ஆமிர் இப்னு புகைரா, நஹ்தியா, அவர் மகள் உமைஸ், உமர் (ரலி) அவர்களின் அடிமைப் பெண் ஜுவைரியா ஆகியோர் அவர்களில் சிலர். ஜுவைரியாவை அபூஜஹ்ல் அடித்தஅடி அவர்

களின் கண்ணைப் பழுதுறச் செய்து பார்வையைப் பறித்துக் கொண்டது.

அபூபக்ர் (ரலி) அவர்களால் விடுதலை செய்யப்பட்ட அடிமை களில் சிறப்பானவர்கள் பிலால் (ரலி) அவர்கள். 'அஹதுன்' (அல்லாஹ் ஒருவன்) எனக் கூறிய குற்றத்திற்காக அருமை பிலால் (ரலி) அவர்களை, அவர்களின் எசமானன் அனல் போலும் மணல் மீது கிடத்தி வதைத்தான். அவர்கள் உறும் அவதியைக் கண்டு உளம் பொறாமல் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பிலால் (ரலி) அவர்களை விலைக்கு வாங்கி விடுவிக்கும் படி அபூபக்ர் (ரலி) அவர்களிடம் கூறினர். அதைக் கேட்டு அபூபக்ர் (ரலி) அவர்கள் என்ன விலை கேட்டாலும், கொடுத்து பிலால் (ரலி) அவர்களை விலைக்கு வாங்கப் பொன்னை அள்ளிக் கொண்டு புறப்பட்டனர். பிலால் (ரலி) அவர் களின் யூத எசமானனைக் கண்டு, ''இத்தகைய அல்லாஹ்வின் அன்பரை ஏன் நீ இம்சிக்கிறாய்?'' என்று கேட்டனர். கரு நிற பிலாலுக்குப் பதிலாக, அழகிய யூத அடிமையைத் தாம் தருவதாகக் கூறினர். மாற்று அடிமையை ஏற்க மறுத்து, அவன் ஐந்து ஊக்கியா தங்கம் தரும்படிக் கேட்டான். அவன் கேட்ட விலையைக் கொடுத்து, பிலால் (ரலி) அவர்களை விடுவித்துக் கொண்டு, அபூபக்ர் (ரலி) அவர்கள் கிளம்பினர். அவர்களைப் பார்த்து அந்த யூதன் கேலியாகச் சிரித்தான். கிண்டலும் பண்ணினான். ''என்ன மோசமான வியாபாரம் சித்திச் செய்திருக்கிறார்!'' என ஏளனமாகவும் பேசினான்.

அதைக் கேட்டு அபூபக்ர் (ரலி) அவர்கள் கூறினர்: ''நீ முட்டாளாய் இருக்கிறாய். பிலாலை இவ்வளவு மலிவாக வாங்கியதற் காக நான் மகிழ்ச்சி அல்லவா அடைகிறேன். நீ இன்னும் அதிகமாகக் கேட்டிருந்தாலும் நான் (என்னிடமுள்ள) எல்லாவற்றையும் கொடுத்திருப்பேன் பிலாலைப் பெறுவதற்காக. நீ உடலை மதிப்பவன், நான் ஆன்மாவை மதிப்பவன். பிலாலின் கருத்த உடலிற்குள் ஒளிரும் ஆன்மா மீது உன் பார்வையைப்பட விட்டிருப்பா யானால், இரு உலகங்களுக்குப் பிரதியாகவும் நீ பிலாலை எனக்குக் கொடுத்திருக்கமாட்டாய். நான் வாங்கியிருப்பது உடலை அல்ல, ஒரு தளராத ஆன்மாவை, அல்லாஹ் மீது நம்பிக்கை கொண்ட ஆன்மாவை, மூடனே! (பிலாலை விற்றதன் மூலம்) நீ உன் கபிட் சத்தையே விற்றுவிட்டாய்.'' இவ்விதம் வார்த்தையால் அவனை வாங்கி விட்டு, விலைமதிப்பற்ற பிலால் (ரலி) அவர்களை விலை

கொடுத்து வாங்கிக் கொண்டு, அபூபக்ர் (ரலி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் சமுகம் வந்தனர்.

விடுதலை பெற்ற பிலால் (ரலி) அவர்களைக் கண்டதும் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அளவற்ற மகிழ்ச்சியடைந்து, ''பிலாலே! உம் நம்பிக்கை வெகுமதி பெற்று விட்டது'' என்று கூறினர். அண்ணல் நபி (ஸல்) அவர்களின் தகைமையும், தாராளத் தன்மையும் பிலால் (ரலி) அவர்களை அயரவைத்தன. பரவசம் அவர்களை மயக்கமுறச் செய்தது. கருப்பு நிற உடலில் இருந்த அந்தத் தங்க மனிதரை, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அப்படியே கட்டித் தழுவி அணைத்துக் கொண்டார்கள். அதன்பின் அபூபக்ர் (ரலி) அவர்களைப் பார்த்து, ''ஏன் நீர் விலையில் என்னைப் பங்காளியாக்கிக் கொண்டு வாங்கியிருக்கக் கூடாது?'' என்று கேட்டார்கள். அதற்குள் அபூபக்ர் (ரலி) அவர்கள், ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! நாங்கள் இருவரும் அடிமைகள். அவரை விடுவித்து, உங்களுக்கு அவரை அளித்ததன் மூலம் நாங்கள் இருவரும் விடுதலை பெற்றோம்'' என்றார்கள்.

அபூபக்ர் (ரலி) அவர்களைப் பார்த்து பிலால் (ரலி) அவர்கள், ''உங்களுக்காக நீங்கள் என்னை வாங்கியிருந்தால், (உங்களுடனே) வைத்துக் கொள்ளுங்கள்! அல்லாஹ்வுக்காக நீங்கள் என்னை வாங்கி யிருந்தால் அல்லாஹ்வின் பணியில் என்னை விட்டு விடுங்கள்! என்று கூறினர். அபூபக்கர் (ரலி) அவர்கள் பிலால் (ரலி) அவர்களை அல்லாஹ்வின் பணிக்கே அர்ப்பணித்தார்கள்.

இவ்விதம் அபூபக்ர் (ரலி) அவர்கள், இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்கள் என்பதற்காக வதைக்கப்பட்ட அடிமைகளை விலை கொடுத்து வாங்கி விடுதலை அளித்து வருவதை அறிந்தார் அவர் களின் தந்தை அபூகுஹாஃபா. தம் தனையருக்கு ஆலோசனை ஒன்று கூற அவர் மனத்தில் ஆவல் எழுந்தது. அவர் ஆலோசனையில் அறிவு இருந்தது உண்மை. ஆனால் அதில் இதயம் இருக்கவில்லை. அவர் அபூபக்ர் (ரலி) அவர் களைக் கண்டு கூறினார்: ''மகனே! பலவீனமான அடிமைகளையே நீர் விடுவிப்பதாய் அறிகிறேன். நல்ல உடல் உரமும் உறுதியும் கொண்டவர்களை விடுவித்தாலாவது அவர்கள் உமக்கு உறு துணையாகவும் இருப்பர். உம்மைப் பாதுகாக்கவும் செய்வர்'' தந்தையின் சிந்தனை செல்லும் போக்கைக் கவனித்த அபூபக்ர் (ரலி) அவர்கள், அதனை அணுவளவும் அங்கீகரியாது, ''தந்தையே! இந்த விஷயத்தில் நான் அல்லாஹ் ஒருவனை மட்டுமே திருப்திப்படுத்த

விரும்புகிறேன். வயது முதிர்ந்த பலவீனர்களுக்கு உதவி புரிவது அல்லாஹ்விடத்தில் உயரிய தரத்தை அளிக்கிறது'' என்று கூறினர். அப்பொழுது அவர்களின் செயலாலும், சொல்லாலும் திருப்தியுற்றது போல் இறைவனிடமிருந்து பின்வரும் செய்தியும் வந்தது: ''நிச்சயமாக, அல்லாஹ்வின் பார்வையில், உங்களில் மிகவும் மேலானவராகத் தோன்றுபவர், தீமைக்கு எதிராய்த் தம்மை மிகவும் அதிகமாகத் தம்மைக் காத்துக் கொண்டவரே உங்களில் மிகவும் மேலானவர்'' என அல்லாஹ் குறிப்பிட்டது அபூபக்ர் (ரலி) அவர்களைத் தாம் என இவ்வசனத்திற்குப் பொருள் விரிக்கப்படுகிறது.

சிலர் செல்வத்தைப் பயன்படுத்துவர்; செல்வாக்கைப் பயன் படுத்தமாட்டார்கள். சிலர் செல்வாக்கைப் பயன்படுத்துவர்; செல்வத்தைப் பயன்படுத்தமாட்டார்கள். அபூபக்ர் (ரலி) அவர்களோ தம் செல்வம், செல்வாக்கு இரண்டையுமே இஸ்லாத்திற்காகப் பயன்படுத்தியவர்கள். அபூபக்ர் (ரலி) அவர்களை அதிகம் மதித்த சிலர் மக்கநகரில் இருந்தனர். அவர்கள்தாம் மக்க நகரின் மதிப்பிற்குரிய பெருமக்களான உதுமான் இப்னு அஃப்பான் (ரலி), சுபைர் இப்னு அவ்வாம் (ரலி), தல்ஹா இப்னு உபைத்துல்லாஹ் (ரலி), அப்துர் – ரஹ்மான் இப்னு அவஃப் (ரலி), சஃத் பின் அபீவக்காஸ் (ரலி) ஆகியோர். இவர்களை இஸ்லாத்தின்பால் ஈ ந்தவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்கள் தாம். இஸ்லாத்தை இவர்கள் ஆரம்பத்திலேயே தழுவிய வர்கள் ஆதலால் அவ்விதமே பொருள்படும் 'சாபிக்கூனல் அவ்வலூன்' என அழைக்கப்பட்டனர். அபூபக்ர் (ரலி) அவர்களின் முயற்சியால் இஸ்லாத்தை ஏற்றவர் இன்னும் சிலர். அவர்கள் தாம் உமர் பின் மள்ஊன் (ரலி), அபூஉபைதா பின் ஜர்ராஹ் (ரலி), அபூசல்மா பின் அப்துல் அஸத் (ரலி), காலித் பின் சயீத் (ரலி), அபூஹ ுதை ஃபாபின் உத்பா (ரலி), அர்க்கம் பின் அபுல் அர்க்கம் (ரலி) ஆகியோர்.

அபூபக்ர் (ரலி) அவர்களின் செல்வாக்குச் செல்லாத ஒருவர், அவர்களின் தந்தை அபூகுஹாஃபா தான். தம் உதிரத்தில் பிறந்த புதல்வரின் உள்ளத்தில் பாய்ந்த ஒளியைத் தம் இதயத்திலும் ஏற்று, அதிலிருந்த இருட்டை விரட்ட விரும்பவில்லை அவர். 'வாணிபத்தின் மூலம் வளர்செல்வம் ஈட்டி வந்த தம் மைந்தனை முகம்மது கெடுத்துவிட்டார்' என்னும் தவறான கருத்தைக் கொண்டதுடன் நில்லாமல், அதனைத் தயங்காமல் கூறியும் திரிந்தார் அவர். அல்லாஹ்வின் தூதர் மீது ஒரு சிறு துரும்பு கூட விழப்பொறுக்காத அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு இது அடங்காத சினத்தை உண்டு பண்

ணியது. எனவே அவர்கள் தம்மை ஈன்ற தந்தை என்று கூடப் பாராமல் அபூகுஹாஃபாவை நன்கு அடித்துவிட்டார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இதனை அறிந்தபோது, அதிகம் வருந்தினர். அபூபக்ர் (ரலி) அவர்களை உடனே அழைத்து, ''இனிமேல் இவ்விதம் செய்ய வேண்டாம்!'' எனக் கடிந்தனர். அண்ணல் நபி (ஸல்) அவர்களின் சொல்லுக்கு மறு சொல் பேசி அறியாத அபூபக்ர் (ரலி) அவர்கள், ''கைக்குத் தோதாய் வாள் மட்டும் அப்பொழுது அகப்பட்டிருக்கு மானால் அவரைக் கொன்றே இருப்பேன்'' என்று கூறினார்கள். இவ்விதம் கூறியதற்காக அபூபக்ர் (ரலி) அவர்களைக் குறை கூறுவதில் பயனில்லை. மனித மனங்களில் இஸ்லாத்தின் பிடிப்பு அப்பொழுது அப்படித்தான் இருந்தது. இரத்த உறவுகளெல்லாம், இஸ்லாத்தின் முன் இற்றுப்போன நூலுக்கு இணையானவையாகவே இருந்து கொண்டிருந்தன.

**பிரச்சாரம் துவக்கம்**

இப்பொழுது இஸ்லாம் என்னும் புலர் கதிர் அரபு அவனிக்குள் இரேகை விட்டு ஆண்டுகள் மூன்று ஆகி விட்டிருந்தன. இதுவரை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இஸ்லாமியப் போதனைகளை இரகசியமாகவே புரிந்து வந்தார்கள் தமக்குக் கிடைத்த அரிய பொருளைப் பிறர்க்கும் கொடுக்க வேண்டும் என்னும் ஆவல் உள்ளத்தில் பெருகியிருந்தாலும், அதனை வெளியில் எடுத்துச் சொல்ல இயலாத நிலை இருந்தது, அபூபக்ர் (ரலி) அவர்களின் மனத்தை அறுத்துக் கொண்டிருந்தது. அவர்களின் மனம்படும் வேதனையை விலக்க அல்லாஹ் விரும்பினான் போலும். ஆண்டுகள் நான்கு ஆன போது அமரர்களின் அரசர் ஜிப்ரயீல் (அலை) அவர்கள், இம் மாநிலம் வந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் அவர்களிடம், ''உமக்கு ஏவப் பட்டதை வெளிப்படையாகக் கூறும்! அல்லாஹ்வுடன் பொய்க் கடவுளர்களை இணைவைப்பவரை விட்டு விலகும்!'' என்னும் இறை செய்தியை இயம்பினார்கள்.

இந்தச் செய்தியை அறிந்ததும் முதலில் மகிழ்ந்தவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் என்றால், அடுத்தவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்கள் தாம். இதன் பின்பும் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இஸ்லாத்தை இரகசியமாக வைத்திருக்க விரும்பவில்லை. அதனை மக்கா நகர் எங்கணும் எடுத்துச் சென்றார்கள். ஆங்காங்கே நின்று கொண்டு, அதை மக்களிடம் எடுத்துச் சொன்னார்கள். இறைவனுக்கு இணை

வைப்பதையும், அரபு மக்களை அழித்துக் கொண்டிருந்த இன்ன பிற தீமைகளையும் சாடத் தொடங்கியதும், தம் தாதையர் மதத்திற்கு முகம்மதின் போதத்தால் ஆபத்து வந்து விட்டது என மக்க நகர் மக்கள் அலற ஆரம்பித்தனர். அவர்களின் போதத்தில் உண்மை ஏதாவது பொதிந்துள்ளதா என எண்ணிப் பார்க்கக்கூட அவர்களின் மனம் இடம் கொடுக்கவில்லை. கர்வம், அரபு மண்ணில் புரளும் புழுவுக்கும் கூட உண்டு. எனவே அவர்கள் ''இந்த முகம்மது கூறுவதை நாம் ஏற்பதா?'' எனச் சீறினார்கள். ''யார் இவர், நமக்கு வழிகாட்ட?'' எனச் சினந்தர்கள்.

ஒருநாள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அம்மார் (ரலி) பிலால் (ரலி) போன்ற ஏழைத் தோழர் சிலருடன் ஞாலத்து முதல் ஆலயமான கஃபாவில் அமர்ந்திருக்கக் கண்டான் அபூஜஹ்ல் என்னும் அல்லாஹ் வின் பகைவன். அல்லாஹ்வின் தூதர் அவர்கள் மீது குறைஷிகள் கொண்டிருந்த குரோதத்தின் மொத்த உருவம் இவன். உலகத்தவர் கர்வம் அனைத்தையும் ஒன்றிணைத்தாலும், அது இவன் கர்வத்திற்கு இணையாக மாட்டாது; வன்மம் வளர்ந்திருந்த அவன் மனத்தில், ஏளனம் இழைந்தது. அது அவன் நாவில் நஞ்சாக ஊறியது. இந்தப் பஞ்சைப் பயல்களைத் தாம் முகம்மது சுவர்க்கத்தின் அரசர்கள் என எண்ணிக் கொண்டிருக்கிறார் என அவன் எகத்தாளமாகக் கூறினான்.

இவன் மனத்தில் ஒருநாள் அண்ணல் நபி (ஸல்) அவர்களைப் பரிகசிக்க 'அருமை' யான யோசனை ஒன்று உதித்தது. தம் ஆட்களில் சிலரை இவன் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் அனுப்பி வைத் தான். அவர்கள் வந்தார்கள்; ''சுவர்க்கத்திலிருந்து தாங்கள் பெறும் பழங்கள் சிலவற்றை வாங்கி வருமாறு அவர் எங்களை அனுப்பி வைத்தார்'' எனச் சொன்னார்கள். இந்தச் சொற்களில் மறைந்திருந்த கிண்டலை அபூபக்ர் (ரலி) அவர்கள் அறிந்து கொண்டனர். அண்ணல் நபி (ஸல்) அவர்களின் வாய் இதற்குப் பதில் புகலு முன் அபூபக்ர் (ரலி) அவர்களின் வாய் பகர்ந்தது : ''அவை இறைவனை மறுப்பவர்களுக்கு ஹராம் (விலக்கு) ஆகும். போய்ச் சொல்லுங்கள்.

ஏளனமும், இகழ்ச்சியும், கேலியும், கிண்டலும் எதிர்பார்த்த பலனை அளிக்காத போது, மக்க நகர் மக்கள் அடி உதையில் இறங்கி னார்கள். அறிவான வாதத்தில் தோற்பவர்கள், இறுதியில் இறங்குவது இதில்தான். அடியும், உதையும் தோல்வியின் அடையாளங்கள் என்பதை அவர்கள் அறிந்து கொள்ளவில்லை. இப்பொழுது

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் உயிர் மக்க நகரில் எவரும் வதைக்கத் தக்க எளிய உயிராக ஆகியிருந்தது. அதனால் அவர்களின் உயிருக்கு ஆபத்து நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே வந்தது. அவர்களுக்கு வந்த ஆபத்து, அவர்களின் பின்புறம் நிழல் போல நின்று கொண்டிருந்த அபூபக்ர் (ரலி) அவர்களுக்கும் வந்ததில் வியப் பில்லை. ஒரு நாள் குறைஷிகள் அவர்களையும் தல்ஹா (ரலி) அவர்களையும் ஒன்றாகப் பிணைத்து உடலும், உயிரும் துடிக்கத் துன்புறுத்தினார்கள். அவர்கள் இருவரையும் வதைக்கவும், அவமதிக்கவும் குறைஷிகள் செய்த இக்கொடும் செயல், ஒன்றாகக் கட்டப்பட்டவர் என்னும் புகழ்ப் பெயரே அவர்களுக்கு ஏற்படக் காரணமாகியது. அணுகும் ஆபத்தை அண்ணல் நபி (ஸல்) அவர் களும், அபூபக்ர் (ரலி) அவர்களும், அணுவளவும் பொருட்படுத்த வில்லை. அவர்களை அணுகிய ஆபத்தின் அளவைத் தெரிந்து கொள்ள, இந்தச் சம்பவம் ஒன்றே போதும். துணிவிற்குப் பேர் போன அலீ (ரலி) அவர்களே, அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் ஒருவரை அழைத்துச் செல்ல எவ்வளவு எச்சரிக்கை எடுத்துக் கொண்டார்கள் என்பதை இந்தச் சம்பவம் உணர்த்துகிறது. அபூதர் கிஃபாரி என்னும் அயலூர்க்காரர், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உரைப்பது உண்மை தானா என்பதை நேரில் கண்டறிய மக்க நகர் வந்தார். அவரை அலீ (ரலி) அவர்கள் தம் அதிதியாக ஏற்றுக்கொண்டார்கள். அவரை அவர்கள் ஒருநாள் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் அழைத்துச் செல்லும் போது, குறைஷிகளின் கண்ணில் பட்டு ஆபத்தின் கண்ணி யில் பட்டு விடாமல் இருக்க அவர்கள் கூறிய உபாயம் இது : ''வழியில் ஐயப்படத்தக்க ஆள் எவராவது எதிர்ப்பட்டால், சிறுநீர் கழிப்பது போல் நான் தெரு ஓரத்தில் உட்கார்ந்து கொள்வேன் அல்லது செருப்பைப் பழுது பார்ப்பது போல் பாவனை செய்வேன். அப்பொழுது நீர் எனக்காகக் காத்துக் கொண்டு நிற்காமல் தெரு வழியே போய்க் கொண்டே இருக்கவேண்டும்.'' தம்முடன் இணைந்து வந்தால் அணைந்து கொள்ளும் அவரையும் ஆபத்து என அஞ்சியே அலீ (ரலி) அவர்கள் இந்த உபாயத்தை உடனே செய்தார்கள்.

இவ்வித நிலையில் ஒரு நாள் குறைஷிகள் சிலர் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் புரியும் போதத்தால், தாம் பரவும் கடவுளர்களுக்கு ஏற்பட்டுக் கொண்டிருக்கும் தாழ்வை பற்றி, கஃபாவில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர். அப்பொழுது அமைதியாக அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அங்கு வந்து, அல்லாஹ்வைத் தொழத் தொடங்

கினார்கள். அத்தகைய சந்தர்ப்பம் ஒன்றையே எதிர்பார்த்துக் கொண்டிருந்த குறைஷிக் கொடியவர்களின் ஆத்திரம், அண்ணல்நபி (ஸல்) அவர்களைக் கண்டதும் அணை கடந்தது. அங்கிருந்தவர்களில் ஒருவன் உக்பத் இப்னு அபீமுயீத் என்பவன். உமையாக் குடியில் பிறந்த அவன், கண் இமையாமல் அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு இன்னல் செய்ய தருணம் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் அவர்களைக் கண்டதும் அவர்களின் அருகில் அட்டகாசமாக வந்தான். அவர்களின் அழகுக் கழுத்தில் தன் அழுக்குப் போர்வையைப் போட்டு முறுக்கி, அவர்களின் குளிர் சொல் கூறும் குரல் வளையை நெறித்தான். ''எங்களின் தாதையர் வணங்கி வந்ததை விட்டும், எங்களை விலக்குபவர் நீர் தாமா?'' எனக் கேட்டான். அவன் எதையும் செய்யும் நிலையில் இருக்கிறான் என்பதை அறிந்தாலும் அணுவளவும் தயங்காமல் அண்ணல் நபி (ஸல்) அவர்கள். ''ஆம், நான் தான்'' என அழுத்தமாகக் கூறினார்கள். பாதி விலங்காக வந்த அவன் தன்னிடம் மீதமிருந்த மனிதனையும் விரட்டி அடித்தான். அந்த முழு விலங்கின் உதவிக்கு ஆட்கள் வேறு முந்திக் கொண்டு வந்தனர். அவர்களும், அவனும் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மீது பல நாள் பட்டினி கிடந்த புலி போல் பாய்ந்தனர். ''அனைத்துக் கடவுளர்களையும் ஒரே கடவுளாக ஆக்கி விடுவீரோ''? எனக் கேட்டுக் கொண்டே அவர்களின் உடல் மீது அடிகளை அடுக்கினர்.

தம் ஆவியினும் ஆயிரம் மடங்கு மேலான அருமைத் தோழரை, எவர் மீது பூ விழுந்தாலும் பொறுக்க முடியாதோ அந்த அன்புத் தோழரைப் பாவிகள் அடிக்கின்றனர் என்பதை அவ்வழியே வந்த அபூபக்ர் (ரலி) அவர்கள் அறிந்ததும், துடிதுடித்துப்போய் ஓடி வருகிறார்கள். அங்கு மனிதர்கள் சிலர் இருக்கத்தான் செய்தனர். ஆனால் அச்சம் அவர்களை மரமாக்கி விடுகிறது. ஆனால் ஆண் மையோ அபூபக்ர் (ரலி) அவர்களை உரமாக்கி விடுகிறது. எனவே தம்மைத் தடுத்தவர்களை ஆத்திரத்துடன் இடித்துத் தள்ளி விட்டுக் கூட்டத்திற்குள் கூர்வேல் போல் பாய்கிறார்கள். ''என் இறைவன் அல்லாஹ் எனக்கூறும் ஒருவரையா நீங்கள் கொலை செய்கிறீர்கள். அவர் நிச்சயமாக உங்கள் இறைவனிடமிருந்து அத்தாட்சிகளைக் கொண்டு வந்திருக்கும் நிலையில்?'' என்று கேட்கிறார்கள். இடித்துத் தள்ளிக் கொண்டு வந்து அபூபக்ர் (ரலி) அவர்கள் இடுக்கிக் கேள்வி கேட்டதும், அந்த மடமாக்களின் ஆத்திரம் பல மடங்காகிறது அதனால் அவர்களின் குறிமாறுகிறது. அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்

கண்டபடி அடிக்க ஆரம்பிக்களை, கண், மூக்குப் பார்க்காமல் கிறார்கள். அபூபக்ர் (ரலி) அவர்களின் தலை உடைகிறது. அதிலிருந்து பச்சை இரத்தம் பாய்ந்தோடுகிறது. அந்நிலையிலும் அவர்கள், ''மகிமையும், கண்ணியமும் நிறைந்த இறைவனே!'' எனத் திரும்பத் திரும்பக் கூறிக் கொண்டே இருக்கிறார்கள். அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு அன்று தலையில் ஏற்பட்ட காயம் எத்தகையது என்பதை ஆயிஷா (ரலி) அவர் களின் இச்சொல் விளக்குகிறது. ''என் தந்தையின் தலையில் எந்தப் பகுதியில் கைவைத்தாலும் அந்தப் பகுதியிலிருக்கும் தலைமயிர் (அப்படியே) வந்துவிடும்.''

இப்பொழுது குறைஷிகள் முஸ்லிம்களுக்குக் கொடுக்கும் கொடுமைகள் அளவைக் கடக்க ஆரம்பிக்கின்றன. முஸ்லிம்களில் சிலர் தாம் விரும்பும் மார்க்கத்தை தடையின்றி பின்பற்ற, ஏற்ற இடம் எங்காவது சென்று விடலாமா எனச் சிந்திக்கிறார்கள். அவர்களின் எண்ணப் போக்கை அறிந்த அண்ணல் நபி (ஸல்) அவர்களும், அவர்களை அபீஸீனியாவிற்குப் போகும்படி ஆலோசனை கூறினர். அதன் பிரகாரம் இரு குழுவினர் முதன் முதலாக அபீஸீனியா புறப் பட்டார்கள். ஆனால் அண்ணல் நபி (ஸல்) அவர்களோ, மக்காவை விட்டு எங்கும் செல்ல எண்ணம் கொள்ளவில்லை. அவர்களுடன் இருப்பதையே அதிகம் விரும்பினாலும், தடையின்றி இறையை வணங்கத் தக்க இடம் ஏக ஏங்கியது அபூபக்ர் (ரலி) அவர்களின் அவல மனம். ஒரு நாள் அவர்கள் பிறந்த நகரையும், பெற்றவரையும், உற்றவரையும் அவர்கள் அனைவரையும் விடத் தமக்கு அதிகமான, தம் ஆருயிர்த் தோழரான அண்ணல் நபி (ஸல்) அவர்களையும் விட்டுப் பிரிகிறார்கள்.

மக்காவிலிருந்து யமன் செல்லும் சாலை எத்தனையோ முறை அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் ஒட்டகைகளில் பொன் குவிக்கும் பொதி கொண்டு சென்றதைப் பார்த்திருக்கிறது. ஆனால் அது அன்று போல் அவர்கள் உள் ஒடிக்கும் துயரச் சுமையுடன் சென்றதைப் பார்த்தில்லை. பெரும் குடிப்பிறப்பிற்காகவும், சிறப்பிற்காகவும் பெறுதற்கரிய தன்மைகளுக்காகவும், தகுதிகளுக்காகவும் தன் தலைவர்களில் ஒருவராய்க் கொண்டிருந்த மக்கா, அவர்களை வெறுத்து விரட்ட, அவலமே உருவாய் அவர்கள் யமன் நாடு நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறார்கள். அவர்களை, பர்க்குல் கமீத் என்னும் இடத்தில் வைத்துக் காராக் கோத்திரத்தைச் சேர்ந்த இப்னு தஃனா என்பவர் காண்கிறார். அவருக்குத் தம் கண்களையே நம்ப இயலவில்லை. அவர் இந்நிலையில் அபூபக்ர் (ரலி) அவர்களைப் பார்த்தறியாதவர். எனவே

அவர், மக்கநகரின் மதிப்பிற்குரிய தலைவரான அபூபக்ருக்கு என்ன நேர்ந்து விட்டது என எண்ணுகிறார். ''எங்கே இப்படிக் கிளம்பி விட்டீர்கள்?'' என வினவுகிறார்! ''என் மக்கள் என்னை விரட்டி விட்டார்கள். அந்நிய நாடு ஒன்றிற்கு நான் அடைக்கலம் தேடிப் போகிறேன். என் இறைவனை (என் விருப்பப்படி) வணங்க நாடுகிறேன்'' என அபூபக்ர் (ரலி) அவர்களின் தளர்ந்திருந்த நாவிலிருந்து வளர்கின்றன வார்த்தைகள்.

இதைக் கேட்கிறார். இதயத்தில் ஈட்டி பாய்ந்ததுபோல் துடிக்கிறார் இப்னு தஃ்னா. 'கூடாது' என அவர் வாய் உரத்துக் கூறுகிறது. ''உங்களைப் போன்றவர்கள் வெளியேறவும் கூடாது, வெளியேற்றப் படவும் கூடாது. நீங்கள் இல்லாதவருக்காக ஈட்டுகிறீர்கள். இனபந்துக்களை ஆதரிக்கிறீர்கள். இயலாதவர்களுக்காகப் பொறுப்பேற்கிறீர்கள். விருந்தாளிகளுக்கு உணவளிக்கிறீர்கள். நியாயமான முறையில் துன்பப்படுகிறவர்களுக்கு உதவி புரிகிறீர்கள். நீங்கள் வீட்டை விட்டுப் போகவே கூடாது, ஊரை விட்டு விரட்டப்படவே கூடாது. வாருங்கள்! உங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் பொறுப்பை நான் ஏற்றுக் கொள்கிறேன். மக்காவுக்குத் திரும்புங்கள். உங்கள் ஊரில், உங்கள் இறைவனைத் தொழ உங்களுக்கு முழு உரிமையும் இருக்கிறது.'' இவ்விதம் இப்னு தஃ்னா அழுத்தமாகக் கூறுகிறார். அவர் அபூபக்ர் (ரலி)அவர்களை வர்ணித்தது ஹிராக்குகையில் தாம் அடைந்த அற்புத அனுபவத்தால் நடுக்கத்துடன் வந்த அண்ணல் நபி (ஸல்)அவர்களுக்கு ஆறுதல் கூற, அவர்களை கதீஜா (ரலி) வர்ணித்ததை ஒத்திருந்தது. இரும்பாகி விட்டிருந்த அபூபக்ர் (ரலி) அவர்களின் இதயம் இதைக்கேட்டுச் சற்று இளகுகிறது. இறுதியில் அவர்கள், அவருடன் ஊர் திரும்ப இணங்குகிறார்கள்.

இருவரும் இணைந்து மக்கா வந்து சேர்கின்றனர். இப்னு தஃ்னா அன்றிரவே குறைஷித் தலைவர்களைக் கஃபாவில் ஒன்று கூட்டுகிறார். ''அபூபக்கரைப் போன்றவர்கள் வெளியேறவும் கூடாது, வெளியேற்றப்படவும் கூடாது. வறியவருக்கும், வருந்துவோருக்கும் உதவ முந்தும் ஒருவரையா ஊரைவிட்டு விரட்ட விரும்புகிறீர்கள்? உண்மையின் பாதையைத் தொடர்பவர்களின் துயரில் பங்குபெறப் பிந்தாத ஒருவரையா ஊரை விட்டு விரட்ட விரும்புகிறீர்கள்?'' என்னும் கணை போல் கேள்விகளை இப்னு தஃ்னா குறைஷித் தலைவர்களைப் பார்த்துக் கேட்கிறார். அதன்பின் அவரே குறைஷித் தலைவர்களின் பதிலை எதிர்பாராமல் பகர்கிறார். ''அபூபக்ர்

விரட்டப்படவும் கூடாது. அவர் விரும்பினாலன்றி ஊர்விட்டு விலக நாம் அனுமதிக்கவும் கூடாது.''

இப்னு தஃனா விடுத்த இடுக்கி வினாக்கள் குறைஷித் தலைவர்களின் இதயங்களை இடிக்கின்றன. மதிப்பிற்குரிய தலைவராய் அபூபக்ர் (ரலி) அவர்கள் மக்க நகரில் இருந்தது அவர்களின் மனக்கண் முன் நிழலாடுகிறது. ''அபூபக்ர் தம் வீட்டில் தம் இறைவனை வணங்கிக் கொள்ளட்டும்! அங்கு அவர் தொழுது கொள்ளட்டும்! அவர் பிரியப்படுவதை ஓதிக் கொள்ளட்டும்! ஆனால் அவற்றால் அவர் எங்களுக்குத் தொல்லை தரக்கூடாது என (நீர்) அவருக்குக் கூற வேண்டும். அவர் அதனைப் பகிரங்கப்படுத்தக் கூடாது. (அதில்) எங்களுடைய பெண்களும், குழந்தைகளும் சிக்கிக் கொள்வர் என நாங்கள் பயப்படுகிறோம்'' என்று குறைஷித் தலைவர்கள் இப்னு தஃனாவைப் பார்த்துக் கூறுகின்றனர். இதனை இப்னு தஃனா அபூபக்ர் (ரலி) அவர்களிடம் கூறுகிறார். அந்த நிபந்தனைகளை அபூபக்ர் (ரலி) அவர்களும் அரை மனத்துடன் ஏற்றுக் கொள்கின்றனர்.

நிபந்தனைகள் அரை மனத்துடன் ஏற்றுக் கொள்ளப் பட்டவை என்றாலும், அவை நிறைவேற்றப்பட வேண்டியவை தாம் என்பதை அறியவே செய்வர் அபூபக்ர் (ரலி) அவர்கள். ஆயினும் அவர்களுக்கு நாளுக்கு நாள் இஸ்லாத்தின் பால் கொண்ட ஆர்வம் அதிகரித்துக் கொண்டே சென்றது. அதனால் அவர்களால் நிபந்தனைகளுக்குக் கட்டுப்பட்டு நடக்க இயல வில்லை. எனவே அவர்கள், தம் வீட்டிற்கு வெளியே சிறுபள்ளி ஒன்றை எழுப்பினார்கள். அதுதான் இஸ்லாத்தின் முதல் பள்ளி என்று சொல்லப்படுகிறது. அப்பள்ளியில் அவர்கள் தம் இறையை அச்சமின்றித் தொழவும், அவன் மறையை ஒச்சமின்றி ஓதவும் தொடங்கினார்கள். இளகிய மனம் பெற்றவர்களாய் இருந்ததால், இறைவனின் வேத உரைகளைத் தம் வாயால் ஓதும் போது அவர்கள் மனம் பாகாய் உருகியது. இறைவனின் சொற்களைத் தம் நாவால் மொழிசெய்யும்போது, அவை உணர்த்தும் உண்மைகளை தம் மனத்தால் உணரும் போது, அவர்களால் தம் அழுகையை அடக்க இயலவில்லை. மக்கள் செல்லும் பாதையில் அவர்களின் இல்லம் இருந்ததால், அவர்கள் இறைவனைத் தொழுவதும், தொழும் போது அழுவதும், அவர்கள் இறை மறையை ஓதும் இனிமையும், இறை மறையில் இருந்த உண்மையும் மக்களின் கவனத்தைக் கவர்ந்தன. அதனால் மக்கள் அவ்வழியே செல்லும் போதெல்லாம் அங்கு நின்று அவர்களை ஆச்சரியத்துடன் பார்க்கத் தொடங்கினார்கள்.

இது தெரிய வந்தது குறைஷித் தலைவர்களுக்கு. தாம் அஞ்சிய ஆபத்து வந்தே விட்டது என அவர்கள் நடுங்கினார்கள். உடனே ஆள் அனுப்பப்பட்டது இப்னு தஃீனாவுக்கு. அவர் அவர்கள் இருக்கு மிடம் வந்தார். அவரிடம் அவர்கள் கூறினார்கள்: ''அபூபக்ர் தம் வீட்டில் தம் இறைவனை வணங்கிக் கொள்ள வேண்டும் என்று உம் பிணையின் பேரில் நாங்கள் அவருக்கு அபயம் அளித்தோம். அதனை அவர் மீறிவிட்டார். தம் வீட்டு முற்றத்தில் பள்ளியைக் கட்டிக் கொண்டு, அதில் தொழுவதையும், ஓதுவதையும் பகிரங்கமாகச் செய்கிறார். எங்கள் பெண்களும், புதல்வர்களும் (அதில்) சிக்கிக் கொள்வர் என நாங்கள் பயப்படுகிறோம். அவரை நீர் (அவ்வாறு செய்ய வேண்டாம் என) விலக்கவேண்டும். (அவர்) தம் வீட்டிலேயே தம் இறைவனை வணங்குவதுடன் சுருக்கிக் கொள்ள விரும்பினால் (அப்படியே) அவர் செய்யட்டும்! அதனைப் பகிரங்கப்படுத்துவதைத் தவிர்த்து (வேறு எதற்கும் அவர் இணங்க) மறுப்பாராயின், உம் பிணையை முடித்துக் கொண்டு, அதனை உமக்குத் திருப்பி விடுமாறு நீர் அவரைக் கேட்க வேண்டும். நாங்கள் உம்முடன் செய்து கொண்ட உடன்படிக்கையை மீற விரும்பவில்லை. அதே சமயத்தில் நாங்கள் அபூபக்ரை பகிரங்கமாகத் தொழவும், ஓதவும் அனுமதிக்கிறவர் களாகவும் இல்லை.''

குறைஷித் தலைவர்கள் கூறியவற்றைக் கூர்ந்து கேட்டு விட்டு அபூபக்ர் (ரலி) அவர்களிடம் சங்கட உணர்ச்சியுடன் வந்தார் இப்னு தஃீனா. ''நான் உங்களுக்காக எந்தக் காரியத்தின் பேரில் ஒப்பந்தம் செய்தேன் என்பதை நீங்கள் அறிந்திருக்கிறீர்கள். அதன்படி நீங்கள் சுருக்கிக் கொள்ளவேண்டும் அல்லது என் பொறுப்பை எனக்குத் திரும்பத் தந்துவிடவேண்டும். ஒரு மனிதருக்காக நான் வாக்குக் கொடுத்து, அதனைக் காப்பாற்ற வில்லை என அரபு மக்கள் அறிவதை நான் விரும்பவில்லை'' என்று கூறினார் அவர். அதைக் கேட்டு அபூபக்ர் (ரலி) அவர்கள். ''தாங்கள் இதுவரை எனக்கு அளித்து வந்த பாதுகாப்பைத் திரும்பப் பெற்றுக் கொள்ளுங்கள்! நான் என் இறை வனின் பாதுகாப்பைக் கொண்டு மட்டும் திருப்தி அடைகிறேன்'' எனப் பகர்ந்தனர். இதுவரை நிபந்தனையில் இருப்பது அபூபக்ர் (ரலி) அவர்களின் மனத்தை நெருடிக் கொண்டுதானிருந்தது. இப்பொழுது அது அகன்று விட்டதாக அவர்கள் அதிக ஆர்வத்துடனும், எவ்வித அச்சமுமின்றியும், தம் இறைவனைத் தொழவும், தம் இறைவனின் வேத உரைகளை ஓதவும் தொடங்கினார்கள். இப்னு தஃீனா தம்

பாதுகாப்பை அகற்றிக் கொண்டாரானால் அபூபக்ருக்கு ஆட்டம் கண்டு விடும் எனக் குறைஷித் தலைவர்கள் கருதினர். அது நடக்க வில்லை என அறிந்ததும் அவர்களுக்கு ஆட்டம் கண்டது. அவர்கள் அபூபக்ர் பகிரங்கமாகத் தொழுவதை, ஓதுவதைத் தடுக்க என்ன செய்யலாம் என எண்ணலாயினர். அவர்களின் மூளை வேகமாக வேலை செய்யத் தொடங்கியது.

இப்னு தஃனா தம் பாதுகாப்பை விலக்கிக் கொண்டது குறைஷி களுக்கே பாதகமாய் முடிந்தது. இப்பொழுது அபூபக்ர் (ரலி) அவர்கள் இறைவனைத் தாம் மட்டுமல்ல, மற்ற முஸ்லிம்களும் பகிரங்கமாகத் தொழவேண்டும் என விரும்பினார்கள். அதனால் அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களைக் கண்டு இஸ்லாத்தை இரகசியமாக வைத்திருக்க வேண்டாம், அதைப் பகிரங்கப்படுத்துங்கள் என வேண்டிக் கொண்டார்கள். ஆனால் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அதனை ஆரம்பத்தில் ஏற்றுக் கொள்ளவில்லை. அதற்குக் காரணம் ஆபத்து நமக்கு மட்டுமல்ல, தம்மைப் பின்பற்றுபவர் அனைவருக்கு மல்லவா வரும் என அவர்கள் அஞ்சியதாகும். ஆயினும் ஒரு நாள் அவர்கள் இதுவரை இஸ்லாத்தை ஏற்றிருந்த தம் முப்பத் தேழு தோழர்களுடன் கஃபாவை நோக்கிக் காலடி எடுத்து வைத்தார்கள். அங்கு அபூபக்ர் (ரலி) அவர்கள் இஸ்லாத்தின் இணையில் கொள்கை களை விளக்கிச் சிறப்பான ஒரு சிறு சொற்பொழிவு செய்தனர். அது தான் இஸ்லாத்தின் விழுமிய கொள்கையை எடுத்து விளக்கிச் செய்யப்பட்ட முதற்பொழிவு என மொழியப்படுகிறது.

அபூபக்ர் (ரலி) அவர்களின் அதரம் பிளந்து கொண்டு, 'இறைவன் ஒருவன், அவன் இணையற்றவன், துணையற்றவன்' என்னும் ஒப்புயர்வற்ற சொற்கள் உதிர்வதைக் கேட்டதும், ஆங்காங்கிருந்த வீடுகளில் இருந்துகொண்டிருந்த குறைஷிகள் அடித்துப் புரண்டு கொண்டு ஓடி வந்தார்கள். அடாத செயல் ஒன்று கஃபாவில் நடந்தேறிக் கொண்டிருக்கிறது என அவர்கள் அடங்காச் சினம் கொண்டனர். வீடுகளிலிருந்து தான் அவர்கள் வெளியே வந்தார்கள். ஆனால் அவர்கள் காடுகளிலிருந்து வெளிப்படும் விலங்குகளை விஞ்சினார்கள். அடக்கமே உருவாய் இறை நினைப்பில் நனைந்து நின்ற முஸ்லிம்களை அவர்கள் அடிக்க ஆரம்பித்தார்கள். அவர்கள் கொடுத்த இடிபோல் அடிகள் முஸ்லிம்களின் உடல்மேல் அவர்களின் எலும்புகளையெல்லாம் ஒடித்து விடுபவை போல் விழுந்தன. கைகளால் அடித்த பிறகும் அவர்கள் நிற்கவில்லை. காலில் கிடந்த

வற்றைக் கொண்டும் கண்டபடி அடித்துக் கீழே தள்ளினார்கள். அதன் பின் தம் அழுக்குப் பாதம் கொண்டு மிதித்துத் துவைத்து அவர்களின் உடலைப் பதம் பார்த்தார்கள். கொடியவன் ஒருவன் அபூபக்ர் (ரலி) அவர்களின் தாடியைப் பிடித்துத் தன் பலம் கொண்ட மட்டும் இழுந்தான். தாடியில் ஒருபகுதி அவன் கையில் வரும்போது அபூபக்ர் (ரலி) அவர்களின் ஆவியில் ஒரு பகுதி வெளியே போய்விட்டது. அவர்கள் முகம், காது, மூக்கு ஆகியவையெல்லாம் நனைச்சேறாக மாறியிருந்தன. அபூபக்ர் (ரலி) அவர்கள் மீது மதிப்புக் கொண்ட குறைஷிகள் கூட, அவர்களை அடையாளம் தெரிந்து கொள்ளாததால், அவர்களை கழி கொண்டு அடித்தார்கள். காலில் கிடந்தவற்றைக் கொண்டு துவைத்தார்கள். இதனால் அபூபக்ர் (ரலி) அவர்கள் மூர்ச்சை யுற்று விழுந்து குற்றுயிராய்க் கிடந்தனர்.

அடித்து நொறுக்கப்பட்டு அபூபக்ர் (ரலி) அவர்கள் அரை உயிருடன் கிடப்பது தெரியவந்தது அவர்களின் பனூதைம் கோத்திரத்தாருக்கு. ஆத்திரம் அவர்களின் உள்ளத்தில் அணை கடக்க, அவர்கள் வீறு கொண்டு எழுந்து வந்தார்கள். அபூபக்ர் (ரலி) அவர் களை, அவர்களின் வீட்டிற்குத் தூக்கிச் சென்று கிடத்தினார்கள். பிறகு கஃபாவிற்குத் திரும்பி வந்து ''இந்தக் கொடிய தாக்குதல் காரணமாக இப்னு அபீகுஹாஃபா இறந்து விட்டாரானால், நாங்கள் உத்பாவின் ரபீ ஆவைக் கொன்று பழி தீர்க்கும் வரை ஓயமாட்டோம்'' என முழங் கினார்கள். உத்பாபின் ரபீ ஆ என்னும் கொடுமைக்காரன் தான் அபூபக்ர் (ரலி) அவர்களைக் கடுமையாக அடித்து அவர்களை இறப்பின் விளிம்பிற்கே இழுத்துச் சென்றவன்.

அபூபக்ர் (ரலி) அவர்களின் ஆவி பொன்றிவிடும் இந்த அடியுடன் என்றே எல்லோருமே எண்ணினர். அன்று மாலை வரை அவர்களும் அப்படித்தான் நினைவிழந்து கிடந்தார்கள். பிறகு தான் அவர்களுக்கு நினைவு திரும்பியது. நினைவு திரும்பியதும் அவர்கள் கேட்ட முதல் கேள்வி. ''அல்லாஹ்வின் தூதர் அவர்கள் எப்படி இருக்கிறார்கள்?'' என்பது தான். அவர்களின் அருகிருந்து அவர்களுக்கு நினைவு திரும்பு வதை ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்த பனூதைம் கிளையினரின் ஆத்திரத்தை இக் கேள்வி கிளறி விட்டு விட்டது. ''அந்த மனிதரை இன்னும் நீர் மறக்கவில்லையா? அவரால் தானே இந்த அடிகளும், அவமானங்களும். இந்த அடிகளும் அவமானங்களும் நம் பரம்பரை பாராததாயிற்றே'' என அவர்கள் கடிந்துரைத்தார்கள். அத்துடன் வடிந்து விடவில்லை அவர்களின் ஆத்திரம். ''உங்கள் பிள்ளையை

நீங்களே பார்த்துக் கொள்ளுங்கள்!'' என அபூபக்ர் (ரலி) அவர்களின் அன்னை உம்முகைர் அவர்களிடம் சினத்துடன் சொல்லிவிட்டு, அங்கிருந்து எழுந்து சென்று விட்டார்கள். இஸ்லாத்திற்காக எதையும் இழக்கவும், எவரையும் துறக்கவும் எப்பொழுதோ துணிந்து விட்ட அபூபக்ர் (ரலி) அவர்கள், தம் உறவினர் போக்கையும் வாக்கையும் ஒரு சிறிதும் பொருட்படுத்தவில்லை.

சிறிது நேரம் சென்றபின் அன்னை, அபூபக்ர் (ரலி) அவர்கள் அருந்துவதற்காகக் கொஞ்சம் உணவு கொண்டு வந்தார். ஆனால் அதனை அருந்த அடியோடு மறுத்துவிட்டு, ''அல்லாஹ்வின் தூதர் அவர்கள் நலமாயிருக்கிறார்களா?'' என்று அபூபக்ர் (ரலி) அவர்கள் கேட்டார்கள். அது தமக்குத் தெரியாது என அன்னை உரைத்தபோது ''உமரின் சகோதரி உம்மு ஜமீலுக்குத் தெரியும். அவரிடம் கேட்டு வாருங்கள்!'' என அவர்கள் கூறினார்கள். அதை அறியாத வரை உணவை பிள்ளை உட்கொள்ளமாட்டார் என்பதை உணர்ந்து கொண் டார் அன்னை, எப்படியாவது பிள்ளையை உணவுண்ண வைக்க வேண்டும் என்னும் ஆதங்கம் அவருக்கு. எனவே உம்முஜமீலைக் காண எழுந்து சென்றார். அவர் சென்ற பக்கமே பார்த்துக் கொண்டு அபூபக்கர் (ரலி) அவர்கள் படுத்திருந்தார்கள். அன்னை திரும்பியதும், உடனே அண்ணல் நபி (ஸல்) அவர்களின் நலம் கேட்க அதுதான் வசதியாக இருக்கும் என்றே அபூபக்ர் (ரலி) அவர்கள் அப்படிப் படுத்திருந்தனர். அபூபக்ர் (ரலி) அவர்கள் எப்படி இருக்கிறார்கள் என்பதை அறிந்து கொள்ள அவர்களின் வீடு நோக்கி வந்து கொண்டி ருந்தார் உம்முஜமீல். அவரை வழியில் கண்டு விழிகளில் ஆவல் பொங்க, ''முகம்மது நலமாயிருக்கிறாரா? அது உமக்குத் தெரியும்?'' என உம்முகைர் கேட்டார். தாம் இஸ்லாத்தைத் தழுவியிருப்பது எவருக்கும் தெரியக் கூடாது என எண்ணிக் கொண்டிருந்ததால் உம்முஜமீல், ''முகம்மது என்றால் யார் என்றே எனக்குத் தெரியாதே!'' எனத் தம் மனத்தை மறைத்துக் கொண்டு கையை விரித்தார். ஆனால் அவர் தாம் கஃபாவில் வைத்து அடிபட்டு வீழ்ந்த அபூபகர் (ரலி) அவர்களைப் பார்க்க விரும்புவதாய்ப் பகர்ந்தார்.

இருவரும் இல்லம் சேர்ந்து அபூபக்ர் (ரலி) அவர்கள் படுத்திருந்த பக்கம் வந்தார்கள். அடிபட்டுக் கிடந்த அபூபக்ர் (ரலி) அவர்களைக் கண்டதும் கண்ணீர் பெருகியது உம்முஜமீலின் பெரிய கண்களில், அவர், தம் கண்டத்தில் துக்கம் அடைக்க கூறினார். ''எந்த மக்கள் தங்களுடன் இவ்வாறு நடந்து கொண்டனரோ, அவர்கள் பெரும்

பாவிகள், அல்லாஹ்வின் பகைவர்கள். அவர்களை அவன் நிச்சயம் பழி வாங்குவான் என்பதில் எனக்கு ஐயமே இல்லை'' என்று. இந்தப் பரிவுரை களையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த அபூபக்ர் (ரலி) அவர்களிடம், அப்பொழுது பொறுமை இருக்கவில்லை. அல்லாஹ் வின் தூதர் அவர்களின் நலம் பற்றி முதலில் கூறும்படி அவரை அவர்கள் அவசரப்படுத்தினார்கள். அதனை உம்முகைர் முன் வைத்து உரைக்க விரும்பவில்லை என அவர் சாடையால் தெரிவித்தும், ''அவர்களைப் பொருட்படுத்த வேண்டாம்'' என அபூபக்ர் (ரலி) அவர்கள் அறிவித்தார்கள். அதன்பின் தான், ''அல்லாஹ்வின் தூதர் அவர்கள் நலமாயிருக்கிறார்கள்'' என நவின்றார் உம்முஜமீல். அதை அறிந்ததும் கை தவறிப்போன அரும் நிதியம் கைக்கு வந்தது போல் ஆறுதல் அடைந்த அபூபக்ர் (ரலி) அவர்கள் அடுத்து விடுத்த வினா, ''அவர்கள் எங்கிருக்கிறார்கள்?'' என்பது. ''அர்க்கமுடைய வீட்டில்'' என உம்முஜமீல் உரைத்ததைக் கேட்டபின் அபூபக்ர் (ரலி) அவர் களுக்குத் தம் இல்லத்தில் இருப்புக் கொள்ளவில்லை. அல்லாஹ் வின் தூதர் அவர்களைத் தம் கண்களால் காணும் வரை உணவு எதுவும் உட்கொள்ள முடியாது என அவர்கள் அன்னையிடம் அடம்பிடிக்க ஆரம்பித்தார்கள். அன்னை என்று ஒருவர் இருக்கும் வரை அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு மட்டும் என்ன அகிலத்தில் உள்ள அத்தனை பேருக்குமே இருக்கும் உரிமை தான் இது. அந்த உரிமையை மறுக்க வில்லை அந்த அன்புத்தாய். அப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு எதிராய் ஊரே எழுந்திருந்ததால் வெளியில் செல்லின் ஊறு நேரலாம் என அஞ்சினார் அவர். ஆனால் பிள்ளை அதிகம் வற்புறுத்தவே அவருக்கு வரும் ஆபத்து தமக்கும் வரட்டும் என எண்ணி, அன்னை அவரை அர்க்கமுடைய வீட்டிற்கு அழைத்துச் செல்ல ஆயத்தமானார்.

இரவில் ஒரு பகுதி கழிந்ததும், அர்க்கமுடைய வீட்டை நோக்கி அவர்கள் இருவரும் அடி எடுத்து வைத்து நடந்து சென்றார்கள். அர்க்கமுடைய வீட்டில் அல்லாஹ்வின் தூதர் அவர்கள் நலத்துடன் இருப்பதைத் தம் நயனங்களால் கண்டதும், அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் வேதனைகளையெல்லாம் மறந்து விட்டார்கள். அல்லாஹ்வின் தூதர் அவர்களை அப்படியே கட்டி அணைத்துக் கொண்டார்கள். அக்கணமே அவர்கள் இருவர் விழிகளும் அருவிகளாகி விட்டன. தாடிகளில் கண்ணீர் தாரையாகியது. இதைக் கண்டதும் அங்கிருந்த அனைவருக்கும் அழுகை வந்து விட்டது. அல்லாஹ்வின் தூதர்

அவர்களிடம் தம் அன்னையை அறிமுகம் செய்து வைத்து, அவர்களை ஆசீர்வதிக்கும்படியும், அவர்களுக்கு இஸ்லாத்தை எடுத்துரைக்கும்படியும் அபூபக்ர் (ரலி) அவர்கள் கேட்டுக் கொண்டனர். அவ்விதமே அல்லாஹ்வின் தூதர் அவர்கள் செய்ய, அவ்விடத்திலேயே அபூபக்ர் (ரலி) அவர்களின் அன்னை இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டார்.

ஆவியைக் கவர வெகு அருகில் வந்துவிட்ட இவ்வித ஆபத்துக்களுக்கிடையிலும், கொண்ட கொள்கையைக் கொஞ்சமும் விடாமல் அபூபக்ர் (ரலி) அவர்கள் இருந்ததால் தான் பிறகு ஒருநாள் தம்மைச் சூழவிருந்த தோழர்களைப் பார்த்து அலீ (ரலி) அவர்கள் கேட்டனர். ''ஃபிர் அவ்ன் காலத்து விசுவாசிகள் மேலானவர்களா, அபூபக்ர் அவர்கள் மேலானவர்களா?'' என்று. அதற்கு ஏற்ற பதில் அங்கிருந்த எவராலும் கூற இயலவில்லை. அதனால் அவர்கள் அனைவரும் மறுமொழி கூறாது மௌனமாய் இருந்தனர். அப்பொழுது அலீ (ரலி) அவர்கள், அங்கிருந்தவர்கள் 'ஆம், ஆம்' என ஏற்கத் தக்க இந்த பதிலைக் கூறினர்: 'அல்லாஹ்மீது ஆணையாக, அபூபக்ர் அவர்களுடைய ஒரு நாழிகைப் பொழுதானது, ஃபிர் அவ்ன் காலத்து விசுவாசிகளுடைய ஆயிரம் நாழிகை நேரத்தைவிட மேலானது. ஏனெனில், அவர்கள் தம் நம்பிக்கையை அந்தரங்கமாக வைத்திருந்த போது, அபூபக்ர் அவர்களோ அதனைப் பகிரங்கப்படுத்தினர்.

### புதிய பிணைப்பு

இஸ்லாத்தை ஏற்று, அத்துடன் எண்ணற்ற இன்னல்களையும் ஏற்று, ஆண்டுகள் பத்தை அபூபக்ர் (ரலி) அவர்கள் கடந்து விட்டிருந்தார்கள். இப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தம் அருமை மனைவி கதீஜா (ரலி) அவர்கள் கண்களை மூடி விடவே, அதனால் ஏற்பட்ட கவலைக் கடலை கடக்க முயன்று கொண்டிருந்தனர். அவர்களின் மனம் தம் ஆருயிர்த் தோழர் அபூபக்ர் (ரலி) அவர்களின் அன்புப் புதல்வி ஆயிஷா (ரலி) அவர்களை மணம் செய்து கொள்ள விரும்பியது. அதனை அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களிடம் அறிவித்த போது, 'இப்படி ஒரு பந்தமா இறைவனின் தூதுவருடன்' என எண்ணி அதிகம் மகிழ்ந்தாலும் அதற்கு உடனே உடன்பட அவர்களால் இயலவில்லை. அதற்கு இரு காரணங்கள் இருந்தன. ஒன்று அவர்கள் ஏற்கனவே ஆயிஷா (ரலி) அவர்களை சுபைர் என்பவருக்கு மணம் புரிய ஏற்பாடு செய்திருந்தது. இரண்டாவது,

அபூபக்ர் (ரலி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு சகோதரர்போல் இருந்தது. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தம் விருப்பத்தை வெளியிட்டதும் அபூபக்ர் (ரலி) அவர்கள் சுபைரின் தந்தை முஃதமிடம் சென்றார்கள். அவர் உருவ வழிபாட்டில் ஊறிப் போய் இருந்ததால், அல்லாஹ்வை வணங்கும் ஆயிஷா (ரலி) அவர் களைத் தம் மருமகளாக ஏற்றுக் கொள்ள மனம் விரும்பவில்லை. இது அபூபக்ர் (ரலி) அவர்களை ஆறுதல் கொள்ள வைத்தது. அபூபக்ர் (ரலி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களைப் பார்த்து, ''நான் தங்களின் சகோதரன் ஆயிற்றே'' என்னும் தம் ஐயத்தை அறிவித்தனர். அதைக் கேட்டு அண்ணல் நபி(ஸல்) அவர்கள், ''அல்லாஹ்வுடைய சன்மார்க்கத்திலும், அவனுடைய வேதத்திலும் நீர் என் சகோதரர்தாம். ஆனால், அவர் (ஆயிஷா) எனக்கு ஹலால்'' என்று கூறினர். இது அபூபக்ர் (ரலி) அவர்களை ஆனந்தம் கொள்ள வைத்தது. இதன்பின் அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கும், ஆயிஷா (ரலி) அவர்களுக்கும் இனிய திருமணம் மிகவும் அழகிய முறையில் நடந்தேறியது.



# 3. துணைவர்

## அகலுதற்கு ஆயத்தம்

மக்க நகர் குறைஷிகள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் புரியும் போதத்தைக் கேளாததுடன் நின்று விடவில்லை. அவர்களையும், அவர்களின் தோழர்களையும் அடிக்கவும், உதைக்கவும், அதிகம் வருத்தவும் ஆரம்பித்தனர். இதனால் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் நகருக்கு வெளியே நடக்கும் சந்தைகளுக்கு நடந்து சென்று, அங்கு வரும் மக்களைச் சந்தித்து அவர்களிடம் இஸ்லாமியப் பிரச்சாரம் செய்தார்கள். இவ்விதம் அவர்கள் செல்லும்போது அபூபக்ர் (ரலி) அவர்களும் சில சமயங்களில் அவர்களுடன் சென்று மக்களுக்கு ''இவர்கள் அல்லாஹ்வின் தூதுவர்'' என்று அறிமுகம் செய்து வைப்பது வழக்கம். அவர்களின் பிரச்சாரத்தை ஆரம்பத்தில் அலட்சியம் செய்த மக்கள், பிறகு சற்று அக்கறை செலுத்தத் தொடங்கினார்கள். அவர்களில் பலர் மதீனாவிலிருந்து வந்த மக்கள்.

இவ்விதம் மதீனாவிற்குள் இலேசாக இரேகை விட்ட இஸ்லாம், இரண்டு, மூன்று ஆண்டுகளில் ஒளிபாய்ச்ச ஆரம்பித்தது. அதனால் மதீனா, விரைவில் முஸ்லிம்கள் பத்திரமாக வாழத் தகுந்த இடமாக மாறியது. அண்ணல் நபி (ஸல்) அவர்களும், மக்காவிட்டு விலக விரும்புபவர்கள் அங்கு போகலாம் என அனுமதி கொடுத்தார்கள். இதன்பின் முஸ்லிம்கள் கூட்டம் கூட்டமாக பிறந்த ஊர் பெயர்ந்து மதீனாவில் குடியேறத் தொடங்கினர். அவ்விதம் சென்றவர்களில் ஒருவர் உமர் (ரலி) அவர்கள். அதைப் பார்த்து அபூபக்ர் (ரலி) அவர்களின் மனமும் மதீனா செல்ல மறுகியது. ஒரு நாள் அவர்கள், அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம், ''அனாவசியமாய் நாம் ஏன்

'மக்காவில் ஆபத்துக்களையும், அல்லல்களையும் சந்தித்துக் கொண்டு தங்கியிருக்கவேண்டும்? மற்றவர்கள் போன்று நாமும் ஏன் மதீனா போகக்கூடாது?'' எனக் கேட்டனர். அதற்கு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ''அல்லாஹ்விடமிருந்து ஆணை வரவில்லை'' என்றோ, ''அவசரப்படாதீர்! உமக்குத் துணையாய் ஒரு தோழரை அல்லாஹ தரலாம்'' என்றோ, ''நீர் இரும்! நானும் அனுமதிக்கப்படலாம் என நம்புகிறேன்'' என்றோ பதில் கூறினர் என்று சொல்லப்படுகிறது.

''அல்லாஹ்வின் தூதர் அவர்கள் மக்காவிடடுப் போகத் தீர்மானித்து விட்டனர். அதற்கு அல்லாஹ்வின் அங்கீகாரத்தைத் தான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றனர். அப்படிப் போகும் போது நம்மையும் அழைத்துக் கொள்வர்.' இதனை, அண்ணல் நபி (ஸல்) அவர்களின் பதிலிலிருந்து அபூபக்ர் (ரலி) அவர்கள் தெரிந்து கொண் டனர். உடனே அவர்கள் அவசரப் பயணத்திற்கு அவசியமாகலாம் என இரு ஒட்டகைகளை எண்ணூறு திர்ஹங்களுக்கு வாங்கி வீட்டில் கட்டினர். மதீனா செல்லும் சாலைகளை அனைத்தையும் நன்கு அறிந்திருந்த அப்துல்லாஹ் இப்னு அரீக்கத்தை அழைத்து, தம்முடன் வர எந்தக் கணமும் தயாராய் இருக்கும்படி சொல்லி வைத்தனர். ஒட்டகைகள் இரண்டையும் பிறரிடம் ஒப்படைக்க மனம் உடன் படாததால், அவற்றைக் கவனிக்கும் பொறுப்பைத் தாமே வைத்துக் கொண்டனர். அவர்களின் நேரடிக் கவனிப்பில், அவ்விரு ஒட்டகை களும் நான்கு மாதங்கள் இருந்தன. அவை நன்கு கொழுத்து வேகப் பயணத்திற்குப் பயன்படவேண்டும் என்பதற்காக அவற்றிற்கு வேல மரத்து இலைகள் உணவாக ஊட்டப்பட்டன.

## வந்துவிட்டது உத்தரவு

அண்ணல் நபி (ஸல்) அவர்கள், அபூபக்ர் (ரலி) அவர்களின் வீட்டிற்குக் காலையிலோ, மாலையிலோ தான் வருவது வழக்கம். நண்பகல் நேரத்தில் அவர்கள் ஒரு போதும் வந்ததில்லை. ஆனால் அன்றோ அவர்கள் வழக்கத்திற்கு மாறாக நண்பகல் நேரத்தில், பாலைக்கதிரின் வெப்பம் தம் தலையைத் தாக்காதிருப்பதற்காகத் தம் தலையைத் துணியால் மூடிக் கொண்டு வந்தார்கள். அப்பொழுது அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் அருமைப் புதல்வியர் இருவருடனும் அமர்ந்து அளவளாவிக் கொண்டிருந்தனர். ''அல்லாஹ்வின் தூதர் அவர்கள் வருகிறார்கள்'' என அவர்களில் ஒருவர் அறிவித்ததும், ''அர்ப்பணமாகட்டும் என் தாயும், தந்தையும் அவர்களுக்கு அல்லாஹ்

மீது ஆணையாக, இந்த நேரத்தில், இந்த நண்பகல் வெப்பத்தில் அவர்கள் ஒரு போதும் வந்ததில்லை. ஒருவேளை அவர்கள் ஏதோ அவசர வேலையாகத்தான் வந்திருப்பார்கள்'' என்றார்கள் அபூபக்ர் (ரலி) அவர்கள். அதற்குள் அண்ணல் நபி (ஸல்) அவர்களும் அங்கு வந்து உள்ளே வர அனுமதி கோரினார்கள். அவர்களை, அபூபக்ர் (ரலி) அவர்கள் அக்கணமே உள்ளே அழைத்துச் சென்று, அவர்கள் வழக்க மாக அமரும் நாற்காலியில் அமர வைத்தனர். தாம் தனியாகப் பேச விரும்புவதாய் அண்ணல் நபி (ஸல்) அறிவித்த போது, ''இங்கு என் இரு புதல்விகளைத் தவிர்த்து வேறு எவரும் இல்லை'' என அபூபக்ர் (ரலி) அவர்கள் கூறினர். அதைக் கேட்டதும் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தமக்கு யத்ரிபுக்குச் செல்வ உத்தரவு வந்து விட்டதாக உரைத்தனர். அடுத்தகணம் அபூபக்ர் (ரலி) அவர்கள் விடுத்த வினா, ''நான் தங்களுடன் வருவது பற்றி என்ன?'' என்பது தான். ''ஆம் அதுவும் அனுமதிக்கப்பட்டிருக்கிறது'' என்றார்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள். தம் செவியுள் விழுந்த அந்தச் சொற்களை அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் நெஞ்சத்துள் பிழிந்த தேனாகக் கருதினார்கள். அக்கணமே அவர்களுக்குத் தம் மனைவி மக்கள் மற்றுமுள்ள சுற்றம் எல்லாம் மறந்துபோய் விட்டது. தாம் மக்கா விட்டு நீங்கும் தகவலைத் தம் தந்தையிடம் கூடக் கூற அவர்கள் தயாராய் இல்லை. அதற்குக் காரணம் அச்செய்தி பிறர் செவிக்குத் தாவி விடலாம் என்னும் அச்சம் தான்.

அப்பொழுது அவர்களுக்கு ஏற்பட்ட உணர்ச்சியெல்லாம் மகிழ்ச்சி ஒன்று தான். அதனால் அவர்களின் இருவிழிகளிலிருந்தும் நீர் வழிந்தோடியது. இது ஆயிஷா (ரலி) அவர்களுக்கு ஆச்சரியத்தை அளித்தது. 'தந்தையார் மனத்திலோ மகிழ்ச்சி மண்டியிருக்கிறது. பின்னர் ஏன் அவர்களின் விழிகளிலிருந்து நீர் வழிந்தோட வேண்டும்?' எனத் தம்மையே தாம் அவர்கள் வினவிக்கொண் டார்கள். அளவிற் கதிகமான மகிழ்ச்சியும் கூட, மனிதர் கண்களிலிருந்து நீரை வரவழைக்கும் என்பதைத் தாம் முதன் முதலாக அறிந்து கொண்டது அப்பொழுது தான் என ஆயிஷா (ரலி) அவர்கள் பின்பொரு சமயம் புகன்றனர்.

இவ்விதச் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்தே தாம் வாங்கிக் கட்டியிருந்த ஒட்டகைகளை அவிழ்த்துக் கொண்டு வந்து, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் முன் நிறுத்தி அவற்றில் ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொள்ளும்படி வேண்டிக் கொண்டார்கள் அபூபக்ர் (ரலி) அவர்கள்.

ஒட்டகைகளில் ஒன்றை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் எடுத்துக் கொண்டதும், அபூபக்ர் (ரலி) அவர்கள் மகிழ்ந்தார்கள். அதற்கான விலையை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கேட்டதும், அதிர்ந்தார்கள். தாம் அளிக்கும் பொருளை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஏற்றுக் கொள்ளுதலே, அதற்காகத் தாம் பெறும் விலை என எண்ணிக் கொண்டிருந்தவர்கள் அவர்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அதிகம் வற்புறுத்தவே ஒட்டகைக்கான பணத்தை அபூபக்ர் (ரலி) அவர்கள், மனத்தை இரும்பாக்கிக் கொண்டு ஏற்றுக்கொண்டனர்.

சபர்மாதம் இருபத்தேழாம் நாள் ஒரு திங்கள் இரவு, அவ்விரவின் இருளைத் தம் இதயத்தில் கொண்டிருந்த குறைஷிகள், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பற்றி இறுதி முடிவு எடுத்துவிடவேண்டும் என்னும் உறுதியுடன் ஊர்ப் பொது மன்றத்தில் ஒன்று கூடினர். அவர்கள் எடுத்த முடிவின் படி, விடிவதற்குள் அல்லாஹ்வின் தூதர் அவர்களைக் கொன்றுவிட அவர்களின் இல்லத்தைச் சூழ்ந்தனர். சூழ்ச்சிக்காரர்களுக் கெல்லாம் பெரிய சூழ்ச்சிக்காரனான அல்லாஹ் அவர்களின் கண் களில் மண்ணைத் தூவினான். அணுவளவும் ஆபத்தின்றி அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தம் வீட்டை விட்டு வெளியேறினார்கள்.

### மக்கா விட்டுப் பெயர்தல்

அல்லாஹ்வின் தூதர் அவர்கள் மூன்று நாட்களுக்கு முன் ஒரு நண்பகல் நேரத்தில் வந்து அல்லாஹ்வின் அனுமதி வந்து விட்டதை உரைத்துச் சென்றது முதல் அபூபக்ர் (ரலி) அவர்கள் ஒவ்வொரு நாள் இரவும் உறக்கம் உதறி, தம் வீட்டுக் கதவில் காதை வைத்துக் கொண்டு 'டொக்' என்று கதவு தட்டப்படும் ஒலி கேட்காதா என எதிர்பார்த் திருந்தனர். அன்றிரவு அந்த ஒலியைக் கேட்டதும், அக்கணமே அவர்கள் கதவைத் திறந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் அவர்கள் முழுமதியை முகில் மறைப்பது போல் தம் முத்து முகத்தைத் துகில் ஒன்றால் மறைத்துக் கொண்டு நிற்பதைக் கண்டார்கள். உள்ளே வரும்படி அன்போடு அழைத்தார்கள். ஒரு தட்டு தட்டியதுமே அபூபக்ர் (ரலி) அவர்கள் கதவைத் திறந்தது அண்ணல் நபி (ஸல்) அவர் களுக்கு ஆச்சரியத்தை அளித்தது. அதுபற்றி அவர்கள் தம் மனத்தைத் திறந்தபோது, அபூபக்ர் (ரலி) அவர்கள், புறப்படும்படி அல்லாஹ்வின் ஆணை வந்த அந்தக் கணத்திலிருந்து, அல்லாஹ்வின் தூதர் அவர் களின் வருகைக்காகத் தாம் கதவருகில் காத்திருந்ததாகக் கூறினார்கள்.

இதன்பின் அபூபக்ர் (ரலி) அவர்கள் இதுவரை இஸ்லாத்திற்காகச் செலவிட்டது போக எஞ்சியிருந்த செல்வத்தை எடுத்துக் கொண்டு, அகிலத்து செல்வத்தையெல்லாம் அணுவளவாக ஆக்கக் கூடிய அண்ணல் நபி (ஸல்) அவர்களை அழைத்துக் கொண்டு, தம் வீட்டின் பின் புறவாயில் வழியாக வெளியேறினார்கள். இருள் குழம்பில் ஊறி அறலாய் ஆகியிருந்த கரியமணல் மீது அவர்கள் இருவரின் சிவந்த பாதங்களும் பதிந்து பெயர்ந்தன. தம் பாதத் தடங்கள் கூட மக்க நகர்ப் பாதகர்களுக்குத் தாம் செல்லும் பாதை ஈதெனக் காட்டிக் கொடுத்து விடலாம் என அஞ்சி, அவர்கள் இருவரும் தம் மிதியடிகளைக் கழற்றிக் கையில் பிடித்துக் கொண்டு தம் பெருவிரல்களால் நடக்கத் தொடங்கினார்கள். அந்தப் பெருவிரல் தடத்தைக்கூட நம்புவதற் கில்லை என எண்ணி அபூபக்கர் (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் அவர்களின் பெருவிரல் தடத்தின் மீதே தம் பெருவிரலைப் பதித்து நடந்து சென்றார்கள். அவர்கள் இருவருக்கும் அடைக்கலம் கொடுக்கப்போகும் மதீனா வடக்குத் திக்கில் இருந்தது. ஆனால் அவர்கள் தெற்குத் திக்கில் திரும்பினார்கள். இது அபாயத்திலிருந்து தப்ப அவர்கள் செய்த உபாயமாகும்.

இதுவரை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மிதியடி இல்லா மலும், கால் பெருவிரலாலும் நடந்திராதவர்கள் ஆதலால், இது அவர்களுக்கு அதிகத் துன்பத்தை அளித்தது. எந்தப் பொற் பாதங் களைப் பிற்காலத்தில் தம் தலையில் தாங்க மகுடத் தலைகள் எல்லாம் மறுகினவோ, அந்தப் பாதங்களைப் பாறைக் கற்கள் பதம் பார்த்தன. அவர்களின் பாதங்களிலிருந்து இரத்தம் கசிந்தபோது அபூபக்ர் (ரலி) அவர்களின் கண்களிலிருந்து இரத்தம் வழிந்தது. அடுத்தகணம் அபூபக்ர் (ரலி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களைத் தூக்கித் தம் தோளில் வைத்துக் கொண்டு நடந்தனர். மக்காவிலிருந்து மூன்று கல்களுக்கு அப்பால் இருந்தது தவ்ர்மலை. அதில் ஹவாம் என்னும் பெயரில் குகை ஒன்றிருப்பது அவர்களுக்கும் தெரியும். அதில் போய்ப் பதுங்கிக் கொள்ளலாம் என்றே அவர்கள் அதை நோக்கிச் சென்றனர். கரிய இருள், கரடு முரடான கற்கள், கடினமான பாதை; இவற்றையெல்லாம் கூட ஒன்றுமில்லை எனக் கூறத் தக்க ஆபத்தான பயணம். ஆயினும் அபூபக்ர் (ரலி) அவர்கள், அண்ணல் நபி (ஸல்) அவர்களைச் சுமந்து கொண்டு மலை மீது ஏறினார்கள். அதன் உச்சிக்கு அருகிலிருந்த குகையை நெருங்கியதும், ''இதுவே நாம் தங்க வேண்டிய குகை'' என்று கூறினார்கள்.

அதனுள் செல்ல அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஆயத்த மாயினர். அப்பொழுது அவர்களை அபூபக்ர் (ரலி) அவர்களின் கை மறித்து நின்றது. அதற்குக் காரணம் எச்சரிக்கை, ''அது பழைய குகை. அதனால் அது அசுத்தமாயிருக்கலாம். எவ்விதத் தீங்கும் தங்களுக்கு ஏற்பட்டு விடக்கூடாது. எனவே அதனுள் நானே முதலில் செல்கி றேன். ஆபத்து எதுவும் அங்கு இருந்தால் அது முதலில் என்னைப் பாதிக்கட்டும்!'' என்று கூறிவிட்டு, அபூபக்கர் (ரலி) அவர்கள் தாமே அதனுள் முதலில் சென்றனர். சென்றதும் அதனைத் தம் கை கொண்டு சுத்தம் செய்தனர். அதில் பல துளைகள் இருந்தன. அவை நச்சுப் பூச்சிகள் வதியும் வளைகளாக இருக்கலாம் என்னும் அச்சத்தால், அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் மேனி மீது கிடந்த கச்சத்தைக் கிழித்து அவற்றை அடைத்தார்கள். ஒரு துளை மட்டும் துணி பற்றாததால் அடைக்கப்படவில்லை. இதுவரை குகை வாயிலில் நின்று கொண் டிருந்த அண்ணல் நபி (ஸல்) அவர்களை உள்ளே வரும்படி அபூபக்ர் (ரலி) அவர்கள் அழைத்தனர். அப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்களின் மனத்தின் கவலைக் களைப்பு இல்லை, அத்துடன் அவர்களுக்குப் பயணக் களைப்பின் தொல்லை. அவர்கள் உறும் துயர் கண்டதும் அது உருக்கியது அபூபக்ர் (ரலி) அவர்களின் உள்ளை. உடனே அவர்கள் தரையில் அமந்தார்கள். தம் மடியை மஞ்சமாக் கினார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்களைத் தம் மடிமஞ்சத்தின் மீது படுத்துக் கொண்டு நன்கு தூங்கும்படிக் கூறினார்கள். மற்ற சமயமாக இருந்திருந்தால், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இதனை ஏற்க மறுத்திருப்பார்கள். ஆனால் அடைந்திருந்த களைப்பு அவர்களை இதற்கு இணங்க வைத்தது. அபூபக்ர் (ரலி) அவர்களின் மடி மீது தம் தலையை வைத்து அவர்கள் அயர்ந்து தூங்க ஆரம்பித்தார்கள்.

எவ்வளவோ எச்சரிக்கையுடன் இருந்தும் எப்படியோ ஒரு சிறிய விஷயம் விடப்பட்டு விட்டால், அந்த சிறிய விஷயமே பெரிய விபரீதமாக ஆகிவிடுவது உலகில் உண்டு. இப்பொழுது அத்தகைய விபரீதம் ஒன்றே விளைய விருந்தது. அபூபக்ர் (ரலி) அவர்கள் துணிபற்றாததால் அடைக்கப்படாமல் விடப்பட்டிருந்த துளையில் நச்சுப் பூச்சி ஏதாவது இருக்கலாம். அதனால் அல்லாஹ்வின் தூதருக்கு ஏதாவது பாதகம் ஒரு கால் ஏற்பட்டு விடலாம் என அஞ்சித் தம் ஒரு காலால் அந்தத் துளையை அடைத்துக் கொண்டிருந்தனர். அவர்கள் அஞ்சியது எதுவோ, அதுவே நிகழ்ந்தது. அந்தத் துளையில் நச்சரவம் ஒன்று இருக்கவும் செய்தது. அது தன் தீ நாக்கால் அவர்களின் கால்

பெருவிரலைத் தீண்டியும் விட்டது. விடம், கடித்த அவ்விடத்தி லேயே இருந்து கொண்டிருக்குமா? அது உடலில் ஏற, ஏற, அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு வேதனை அதிகரித்துக் கொண்டே சென்றது. விடத்தின் வேதனை தாங்க இயலாததாய் இருந்தாலும், அசைந்தால் அல்லாஹ்வின் தூதர் அவர்களின் அயர்ந்த தூக்கம் கலைந்து விடலாம் என அஞ்சிய அபூபக்ர் (ரலி) அவர்கள் விடத்தின் வேதனையைத் தாங்கிக் கொள்ள எவ்வளவோ முயல்கின்றனர். ஆனால் அவர் களையும் அறியாமல் அவர்களின் கண்களில் ஊறிய கண்ணீர் அல்லாஹ்வின் தூதர் அவர்களின் முகத்தில் முத்துத் துளியாய் உதிர்ந்தது. உடனே அல்லாஹ்வின் தூதர் அவர்கள் கண் விழித்துக் கொண்டு விட்டார்கள். தம் அன்புத் தோழர் அபூபக்ரின் கண்களில் கண்ணீரைக் கண்டு அதன் காரணத்தை அறிந்து கொண்டு, பரிகாரம் பண்ண எண்ணினார்கள், அரவக் கடியின் வேதனையால், அதனால் ஏற்பட்ட சோர்வால் அபூபக்ர் (ரலி) அவர்களால் பேசக் கூட இயல வில்லை. அல்லாஹ்வின் தூதர் அவர்கள் தம் பொற்கரத்தால் அபூபக்ர் (ரலி) அவர்களின் காலைப் பொந்திலிருந்து அகற்றி, அதனைப் பார்த்தார்கள். அரவம் கடித்திருப்பதை அறிந்து, அந்த இடத்தில் தம் வாயில் சுரந்த அமிழ்தத்தைத் தடவினார்கள். உலகின் ஆன்ம நோய் அத்தனைக்கும் மருந்தாய் வந்த அவர்கள் தம் வாயில் சுரந்த அமிழ் தத்தைத் தடவியதும், அக்கணமே வலி அபூபக்ர் (ரலி) அவர்களின் விரல்விட்டு விலகி, உடல் விட்டு உதிர்ந்தது.

குகையில் அபூபக்ர் (ரலி) அவர்களின் கால்வலி குறைந்து கொண் டிருக்கும் போது, மக்காக் குறைஷிகளின் மனவலி கூடிக் கொண் டிருந்தது. ஊர்ப் பொது மன்றத்தில் வைத்து எடுத்த இறுதி முடிவை இனிதே நிறைவேற்ற அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இல்லத்தைச் சூழ்ந்து நின்ற குறைஷிகள், விடிந்ததும் அதிர்ந்தனர். தாம் சூழ்ந்து நின்றது முகம்மது இல்லாத வீடு என்பதை அறிந்து, இது அவர்களின் உள்ளில் அடங்காச் சினத்தை உண்டு பண்ணியது. உடனே அவர்கள் கை வாளுடன் கிளம்பி மக்காவிலிருந்து செல்லும் சாலைகளி லெல்லாம் கால் வைக்கலாயினர். ஆத்திரத்தை மட்டுமல்லாமல் அவர்களின் ஆசையையும் கிளறிவிட வேண்டும் என்பதற்காக, "முகம்மதையும், அபூபக்ரையும் உயிருடன் கொண்டு வருபவருக்கு சிவப்பு முடியும், கருப்புக் கண்களும் பெற்ற ஒரு நூறு ஒட்டகைகள் பரிசளிக்கப்படும். அவர்கள் இருவரும் இருக்கும் இடம் வரை ஏங்களை இட்டுச் செல்பவரிடம், அதே எண்ணிக்கை ஒட்டகை

ஒப்படைக்கப்படும்'' எனக் குறைஷிகள் பிரகடனம் பிறப்பித்தனர். இதனை உரத்த குரல் பெற்றிருந்த இருவர் ஊரின் இரு பகுதிகளில் முழங்கிக் கொண்டு சென்றார்கள். ஆத்திரம் ஆசை இவற்றில் ஒன்றாலோ, இரண்டாலுமோ உந்தப்பட்ட பாதகர்களின் பாதம் பாலைப் பரப்பெல்லாம் பதிய ஆரம்பித்தது.

## அபூஜஹ்லின் அடாச் செயல்

'தம் தோழருடன் முகம்மது தப்பிவிட்டார்' என்பதை அறிந்த போது, அறிவிற்கு விடை கொடுத்துவிட்டு, ஆத்திரத்திற்கு வரவு கூறிய அபூஜஹ்ல் அவர்களைப் பற்றி ஏதாவது செய்தி அறியலாம் என்னும் ஆவலுடன், அபூபக்ர் (ரலி) அவர்களின் வீட்டிற்கு வந்தான். அங்கிருந்த அபூபக்ர் (ரலி) அவர்களின் புதல்வி அஸ்மா (ரலி) அவர் களிடம் ''எங்கே உன் தந்தை''? என ஆணவத்துடன் கேட்டான். ''அவர்கள் எங்கிருக்கிறார்கள் என்பது எனக்குத் தெரியாது'' என அஸ்மா (ரலி) அவர்கள் கூறியதும், அபூஜஹ்ல் விலங்கானான். சிறுமி என்று கூடப் பாராமல் அஸ்மா (ரலி) அவர்களின் முகத்தில் தம் பவக் கரம் கொண்டு பலமாக அறைந்தான். அந்த அறை வேகத்தில் அஸ்மா (ரலி) அவர்கள் அணிந்திருந்த காதணி ஒன்று கழன்று போய் விழுந்தது.

தாம் பெற்ற பிள்ளை ஊரைவிட்டுப் போய் விட்டார் என அறிந்ததும், அபூபக்ர் (ரலி) அவர்களின் தந்தை அபூகுஹாஃபா அபூபக்ர் (ரலி) அவர்களின் வீட்டிற்கு வந்தார். அவர் அஸ்மா (ரலி) அவர்களைப் பார்த்து, ''அபூபக்ர் உங்களை விட்டுப் போனது ஒரு துக்கம். அவர் தம்முடன் பொருளையும் கொண்டு சென்றிருக்கக் கூடும். அந்தத் துக்கத்தோடு இந்தத் துக்கத்தையும் அவர் உங்கள் மீது சுமத்தி விட்டார்'' என்று கூறினார். ''இல்லை'' என்று, அஸ்மா (ரலி) அவர்கள் பாட்டனார் கூறியதை மறுத்து விட்டுப் பகர்ந்தனர். ''தந்தையார் எங்களுக்கு ஏராளமான பொருள்களை விட்டுவிட்டுத் தான் சென்றுள்ளனர்'' என்ற பெயர்த்தியின் இந்தப் பதிலில் பாட்டனார் நம்பிக்கை கொள்ளவில்லை. அதனை அறிந்து கொண்ட அஸ்மா (ரலி) அவர்கள், தம் தந்தையார் பணம் வைத்திருக்கும் மாடக் குழியில் கூழாங்கற்களை நிரப்பி, அவற்றைத் துணி கொண்டு மூடி, பாட்ட னாரைத் தொட்டுப் பார்க்கும்படிக் கூறினார். கண்பார்வை இழந் திருந்த பாட்டனார், பெயர்த்தி புரிந்திருக்கும் தந்திரம் புரியாமல், அவ்விதமே தடவிப் பார்த்தார். சிறிதும் பெரிதுமாய்த் தம் கைகளில்

பட்டவற்றைக் கொண்டு, தம் பெயர்த்தி கூறியது பொய்யல்ல என உறுதி கொண்டார். ''சரி. அவர் இப்படிச் செய்தது நல்லதாய்ப் போயிற்று. இதைக் கொண்டு நீங்கள் ஜீவனம் செய்து கொள்ளலாம்'' எனக் கூறி ஆறுதல் அடைந்தார். அஸ்மா (ரலி) அவர்கள் எதிர்பார்த் ததும் இதுதான். பிறகு ஒரு நாள் அவர்கள், தாம் செய்த தந்திரம் பற்றிப் பேச்சு வந்த போது கூறினர். ''என் பாட்டனார் வருத்தமடைந்து விடக் கூடாது எனக் கருதி, அவர்களுக்கு ஆறுதல் அளிப்பதற்காகவே நான் அவ்வாறு செய்தேன்'' என்று.

இவ்விதம் அஸ்மா (ரலி) அவர்கள் ஒரு பொய்யை நன்மை செய்ய நாடிச் சொன்னார்கள். மக்கா நகர்ப் பாதகர்களோ, ஒரு மெய்யைத் தீமை செய்ய தேடிச் சென்றார்கள். பாதகர்களில் சிலர் அண்ணல் நபி (ஸல்) அவர்களும், அபூபக்ர் (ரலி) அவர்களும் மறைந் திருந்த குகை வாயிலின் மருங்கிலும் வந்து விட்டனர். அவர்களில் ஒருவன் அபூகர்ஸ் என்னும் மந்திரக்காரன், மற்றொருவன் அபூஜஹ்ல் லாகிய தந்திரக்காரன். சிறிது தொலைவு சென்றதும், அபூகர்ஸ், ''நில்லுங்கள்!'' எனக் கத்தினான். தரையைக் குனிந்து பார்த்தான் தலையைத் திருப்பிப் பார்த்தான். ''இதுவரை தான். இதற்கு மேல் போக வேண்டாம்! நீங்கள் தேடும் ஆட்கள் இந்த இடத்தைத் தாண்டி யிருக்க முடியாது. அவர்கள் இந்தக் குகைக்குள் பதுங்கியிருக்க வேண்டும். அங்கு இல்லையேல் வானத்திற்கு ஏறியிருக்கலாம் அல்லது பூமிக்குள் புதைந்திருக்கலாம்'' என்றான். அவன் சொல் கேட்டு எல்லோரும் 'கொல்' எனச் சிரித்தனர். ''பைத்தியக்காரன்'' எனப் பல்வரிசை காட்டிப் பரிகசித்தனர். அபூஜஹ்ல் மட்டும் அவ் விதம் செய்யவில்லை. அபூகர்ஸ் கூறியதை அவன் ஆமோதித்தான். ''பகைவர் தூரத்தில் இல்லை என நினைக்கிறேன்'' எனவும் பகர்ந்தான். மந்திரக்காரர்களில் பலர் தந்திரக்காரர்களாய் இருப்பர். ஆனால் அபூகர்ஸ் மந்திரக்காரன் தான் என அபூஜஹ்ல் நம்பினான்.

இப்பொழுது அவ்வழியே ஆடுமேய்ப்பவன் ஒருவன் செல்வது அவர்களின் பார்வையில் பட்டது. அவனிடம் கேட்டுப் பார்த்தால் என்ன என அவர்கள் எண்ணினார்கள். எனவே அவனிடம் அவர்கள், ''இந்தக் குகையில் எவராவது ஒளிந்து கொண்டுள்ளனரா?'' எனக் கேட்டார்கள். உள்ளத்தை உலுக்கவல்ல இந்தக் கேள்வி அபூபக்ர் (ரலி) அவர்களின் செவியில் விழுந்தபோது, அவர்களின் உதிரம் உறைந்து விடுகிறது. இதயம் நின்று விடும் நிலைக்குள்ளாகிறது. அதற்குக் காரணம் அவர்களின் உயிர் பற்றிய அச்சமல்ல. அல்லாஹ்வின் தூதர்

அவர்களின் உயிர் பற்றிய அக்கறை. இந்தக் கேள்வி தன் காதில் விழுந்ததும் ஆடுமேய்ப்பவன் அலட்சியமாக ''அங்கு எவரையும் நான் பார்க்கவில்லை. அவர்களைப் பற்றி அறிய வேண்டுமானால், நீங்களே போய் பார்த்துக் கொள்ளுங்கள்!'' என்று கூறிவிட்டு நடந்தான்.

அவன் கூறியது போல் அவர்கள் வந்து பார்த்தால், தங்களின் நிலை என்னவாகும் என எண்ணி அபூபக்ர் (ரலி) அவர்கள், குலை நடுங்கிய போது, அவர்களுடன் இருந்த அல்லாஹ்வின் தூதர் அவர் களோ, எதுவுமே நிகழாதது போல் அமைதியாக அமர்ந்திருந்தார்கள். அப்பொழுது அபூபக்ர் (ரலி) அவர்களின் கண்களுக்குக் குகை வாயிலில் நிற்கும் பகைவர்களின் பாதங்கள் நன்கு தெரிந்தன. அவர்களில் ஒருவன் சற்றுக் குனிந்து பார்த்தால்கூடப் போதும், இருவர் குகைக்குள் இருப்பது தெளிவாகத் தெரிந்துவிடும். கொலை வாளுடன் வந்திருக்கும் பகைவர் பலரைக், குகை வாய்க்குள் இருக்கும் இருவரால் என்ன செய்ய இயலும்? இந்நிலையில் இரு மனித இதயங்கள் வெடிக்காது இருந்தனவென்றால், அவற்றை ஊனால் ஆனவை என்று எப்படி உரைக்க முடியும்? அண்ணத்தில் நாவு அப்படியே ஒட்டிக்கொள்ளக் கூடிய அந்த அபாய நேரத்தில், எப்படியோ அசைந்தது அபூபக்ர் (ரலி) அவர்களின் நாவு. ''நாம் என் செய்வது? ஏராளமான குறைஷிகள் நம்மைப் பிடிக்க வந்திருக் கிறார்களே, அவர்களில் ஒருவன் தன் கால் பெரு விரலைப் பார்க்கச் சற்றுக் குனிந்தால் கூடப் போதுமே நம்மைக் கண்டு கொண்டு விடுவானே. நான் சாமான்யன். நான் கொல்லப் பட்டால் அதனால் சமூகத்திற்கு ஒரு பாதமும் வந்து விடாது. ஆனால் தாங்கள் அப்படி அல்லவே, உங்களின் இறப்பு உலகின் இறப்பு அல்லவா? இப்பொழுது நாம் என் செய்வது? நாம் இருவர், அவர்கள் பலர் இருக்கின்றனரே'' என அபூபக்ர் (ரலி) அவர்கள், அச்சம், அவலம் இரண்டையும் கலந்து இப்படி இயம்பினர்.

உருக்கு நெஞ்சையும் உலுக்க வல்ல ஆபத்து, தாம் இருக்கும் இடத்தில் வந்து நின்ற வேளையிலும், அமைதி குலையாதிருந்த அல்லாஹ்வின் தூதர் அவர்கள், அபூபக்ர் (ரலி) அவர்களைப் பார்த்துக் கூறினர். ''இல்லை, நாம் இருவர் அல்லர். நாம் மூவர். நிச்சயமாக அல்லாஹ் நம்முடன் இருக்கிறான்'' என்ற அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ''நிச்சயமாக அல்லாஹ் என்னுடன் இருக்கிறான்'' என்று கூறாது, ''அல்லாஹ் நம்முடன் இருக்கிறான்'' என்று அபூபக்ர் (ரலி) அவர்களையும் இணைத்துக் கூறியதும், மேலும், ''நம்முடன்

அல்லாஹ் இருக்கிறான்'' என்று கூறாது, ''அல்லாஹ் நம்முடன் இருக்கிறான்'' என அல்லாஹ்வை முற்படுத்திக் கூறியதும் கவனிக்கத் தக்கது. அவர்கள் உரைத்தது உண்மையாகியது. அல்லாஹ் மட்டும் அவர்களுடன் இல்லாதிருந்தால் இப்படியெல்லாம் நிகழ்ந்திட இயன்றிருக்குமா?

ஓர் ஊகத்தில் தான், அந்த ஊகம் அளித்த ஊக்கத்தில் தான், அப் பாதகர்கள் தவ்ர் மலையின் ஹவாம் குகை வாயில் வரை வந்தார்கள். தாம் தேடி வரும் மனிதர் இருவரும் அக்குகைக்குள் இருக்கலாம் எனவும் எண்ணினார்கள். பாதகர்களில் ஒருவன் குகைக்குள் நுழைந்து பார்த்தால் என்ன எனப் பகர்ந்தான். ''ஆம் பார்ப்போம்'' என அவர்களில் ஒருவன் ஆமோதித்துக் குகைக்குள் குனிந்து பார்த்திருந் தால், உலக வரலாறே நிலை குலைந்து போயிருக்கும். ஆனால் அவர்களில் எவனும் அப்படிச் செய்யவில்லை. ''குகைவாயிலில் பின்னப்பட்டிருக்கும் சிலந்தி வலை, முகம்மது பிறப்பதற்கு முன் பிருந்தே இருப்பது போல் தோன்றுகிறது. அதனுள் எவரும் சென்றிருக்க இயலாது என்பதற்கு இவ்வளவு பெரிய ஆதாரம் இருக்கும் போது, அதனுள் எட்டிப் பார்த்து நம்மையே நாம் ஏன் முட்டாளாக்கிக் கொள்ள வேண்டும் ?'' என்று அவர்களில் ஒருவன் கூறினான். ''அவன் சொல்வது சரிதான்'' என்று எல்லோரும் ஆமோதித்தனர்.

அதன்பின் அவர்கள் அங்கு அதிக நேரத்தை வீணாக்க விரும்ப வில்லை. நெஞ்சை ஏமாற்றம் நிறைக்க, அங்கிருந்து அவர்கள் திரும்பிச் சென்றார்கள். எனினும் அபூஜஹ்லுக்கு மட்டும் தாம் தேடிவரும் மனிதர்கள் இருவரும் அங்கே தான் இருக்கவேண்டும் என்னும் நம்பிக்கை குறையவில்லை. 'அவர்கள் நமக்கு அருகில் தான் இருந்து கொண்டிருக்கிறார்கள். அத்துடன் நம்மைப் பார்த்துக் கொண்டும், நாம் பேசுவதைக் கேட்டுக் கொண்டும் இருக்கிறார்கள். அவர்களின் சூனியம் நம்பார்வையை மறைத்துக் கொண்டிருக்கிறது' என அபூஜஹ்ல் எண்ணினான். ஆயினும் அவனோ, அவனுடன் வந்தவர் களில் எவனுமோ குகைக்குள் மட்டும் குனிந்து பார்க்க வில்லை. மதகரியை மயிர் கொண்டு கட்டுவது போன்ற இந்த அற்புதச் செயலை ஆற்றியவன் எவன்? கொலைவாளுடன் வந்த கொடிய வர்களை மிகவும் பலவீனமான பொருளான சிலந்தி நூல்களைக் கொண்டு திரும்பிவிட்டவன் எவன்? அல்லாஹ்வின் தூதருடனும் அவர்களின் தோழருடனும் இருந்த இறைவன் அல்லவா?

ஆபத்தால் சூழப்பட்டு, அல்லாஹ்வால் காக்கப்பட்ட அவர்கள் இருவரும், அக்குகைக்குள் மூன்று நாட்கள் வரை தங்கியிருந்தனர். அம்மூன்று நாட்களிலும் அவர்களுக்கு உணவு ஆட்டுப் பால் தான். அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் ஆட்டு மந்தையை அப்பக்கம் மேய்ப்பது போல் போக்குக் காட்டி ஓட்டிக் கொண்டு வருவதற்கு ஏற்கனவே ஏற்பாடு செய்து வைத்திருந்தனர். ஆட்டு மந்தையை அவர்களின் ஊழியர் ஆமிர் பின் புகைரா ஓட்டிக்கொண்டு வருவார். அவர்களின் மகள் அஸ்மா (ரலி) அவர்களும், மகன் அப்துல்லாஹ் (ரலி) அவர்களும் ஆட்டு மந்தைக்கு முன் வருவார்கள். ஆட்டு மந்தைக்கு முன் அவர்கள் வந்ததற்குக் காரணம், அவர்களின் கால் தடம் பகைவர்களுக்கும் தடயமாகி விடக்கூடாது, என்பதுதான். ஆட்டு மந்தையை அந்தப் பக்கம் பார்த்த வழிப்போக்கர்கள் புதிய மேய்ச்சல் நிலம் நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறது போலும் என எண்ணிக் கொண்டனர். அப்துல்லாஹ் (ரலி) அவர்கள், இருவரும் அக்குகையில் தங்கியிருந்த மூன்று நாளும் இவ்விதம் வந்து போய்க் கொண்டிருந் தார்கள். அவர்கள் பகல் முழுவதும் மக்காவின் தெருக்களில் சுற்றுவார்கள். ''அல்லாஹ்வின் தூதர் அவர்களைப் பற்றி மக்கள் என்ன பேசிக் கொள்கிறார்கள். அவர்களைப் பிடிக்க, என்ன ஏற்பாடுகள் செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதையெல்லாம் கவனிப்பார்கள். அதன்பின் குகைக்கு வந்து அவற்றையெல்லாம் கூறுவார்கள்.

## மதீனா புறப்படல்

அண்ணல் நபி (ஸல்) அவர்களும், அபூபக்ர் (ரலி) அவர்களும், நான்காம் நாள் இரவு அங்கிருந்து கிளம்ப ஆயத்தமாயினர். ஏற்கனவே செய்திருந்த ஏற்பாட்டின்படி அபூபக்ர் (ரலி) அவர்களின் மகள் அஸ்மா (ரலி) அவர்களும், மகன் அப்துல்லாஹ் (ரலி) அவர்களும், அவர் களின் ஊழியர் ஆமிர்இப்னு புகைராவும் அங்கு வந்து சேர்ந்தனர். அப்துல்லாஹ் இப்னு அரீக்கத்தும் தாம் தயாராய் வைத்திருந்த இரு ஒட்டகைகளையும் ஓட்டிக் கொண்டு வந்து சேர்ந்தார். வழிப் பயணத் தில் உணவாக உபயோகப்படலாம் என அஸ்மா (ரலி) அவர்கள், பையொன்றில் மாவு கொண்டு வந்திருந்தனர். அந்தப் பையின் வாயைக் கட்ட, அவ்விடத்தில் கயிறு ஒன்றும் அகப்படாத போது, அவர்கள் அணுவளவும் தயங்காது தம் இடுப்புத் துணியைக் கிழித்துக் கொடுத்தனர். இந்தச் செயல் அவர்களுக்குப் பெருமைப்படத்தக்க பெயர் ஒன்றைப் பெற்றுக் கொடுத்தது.

இதன்பின் அண்ணல் நபி (ஸல்) அவர்களும், அபூபக்ர் (ரலி) அவர்களும், இதுவரை தங்களுக்குப் புகல் அளித்துக் கொண்டிருந்த குகையிலிருந்து வெளியே வந்தார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அல்கஸ்வா என்னும் வேக ஒட்டகையில் ஏறிக்கொண்டார்கள். அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் ஒட்டகையில் ஏறிக்கொண்டனர். இதன் பின் உலக வரலாற்றைப் புரட்டப் போகும் அவர்களின் பயணம் ஆரம்பமாகியது. அவர்களின் ஒட்டகைகள் கடற்கரைப் பாதையில் கடுகி நடைபோடத் தொடங்கின. பிறந்த பொன்னகரை விட்டு, இருட்டில் எவருக்கும் தெரியாமல் புறப்பட்டு, அயலூர் ஒன்றிற்கு அடைக்கலம் தேடிப் போவது, இந்நேரத்தில் அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு நினைவு வந்து விட்டது. அவர்களால் ஆத்திரத்திற்கு அணைகோல் இயல வில்லை. ''பிறந்த ஊரை விட்டுப் பெயரும் அளவு அல்லாஹ்வின் தூதர் அவர்களுக்கு இன்னல் இழைத்தவர்கள் நிச்சயம் அழியவே செய்வர்'' என அவர்கள் ஆவேசத்துடன் கூறி னார்கள். அப்பொழுது அல்லாஹ்விடமிருந்து இவ்வசனம் அவர்களின் விசனம் தணிக்கும் விதத்தில் வந்தது. ''நிச்சயமாக எவன் (இறைவனின் கட்டளை பொதிந்த) இந்தக் குர் ஆனை உம்மீது விதித்திருக்கிறானோ, அவன் நிச்சயமாக உம்மை (மக்காவாகிய உம்முடைய) இல்லத்தில் திரும்பச் சேர்த்து வைப்பான்.'' *(28:85)* இறைவனின் இவ்வசனம் வந்தது அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு ஆறுதல் அளித்தது. இதன்பின் அல்லாஹ்விடமிருந்து இவ்வசனம் இறங்கியது: ''தவறிழைக்கப்பட்டவர்களுக்குப் போரிட அனுமதி அளிக்கப்படுகிறது. அவர்களுக்கு வெற்றி அளிக்க அல்லாஹ்வால் முடியும்.'' இவ்வசனம் அபூபகர் (ரலி) அவர்களை ஊக்கப்படுத்தியது. அதிகப் போர்கள் இனி நடக்கவிருப்பதையும், அவற்றிலெல்லாம் தாங்களே வெற்றி அடையப் போவதையும், இது உணர்த்துகிறது என அவர்கள் ஊகித்துக் கொண்டனர்.

எனவே, அவர்கள் இருவரும் ஆபத்து நிறைந்த எதிர் காலத்தையும், அடைக்கலம் அளிக்கப் போகும் யத்ரிபையும் நோக்கிப் போய் கொண்டேயிருந்தார்கள். அப்பொழுது அபூபக்ர் (ரலி) அவர்கள் சற்று நேரம் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் முன் புறமாய்ப் போவார்கள். சற்று தூரம் அவர்களின் பின் புறமாய்ச் செல்வார்கள். மீண்டும் மீண்டும் அவர்கள் இவ்வாறே சென்று கொண்டிருந்தார்கள். இது மலர் ஒனறை வண்டு ஒன்று சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருப்பது போல் இருந்தது அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு இது ஆச்சரியத்தை அளித்தது.

''ஏன் இவ்வாறு செய்கிறீர்?'' என அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர் களைப் பார்த்துக் கேட்டனர். ''பகைவர் முன்புறமாக வந்தால் அவர்களின் தாக்குதல் என் மீது விழட்டும் என்பதற்காகவும், அவர்கள் பின்புறமாக வந்தால், அவர்களின் அடியை நான் தாங்கிக் கொள்ள வேண்டும் என்பதற்காகவுமே நான் இவ்வாறு செய்கிறேன்'' என அபூபக்ர் (ரலி) அவர்கள் பதில் கூறினர்.

சாலையில் அபூபக்ர் (ரலி) அவர்களை அறிந்தவர் சிலரும் வந்தனர். அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களைச் சுட்டிக் காட்டி, ''யார் அவர்?'' எனக்கேட்கும் போதெல்லாம் அபூபக்ர் (ரலி) அவர்கள், ''எனக்கு வழிகாட்டக் கூடியர்'' எனக் கூறிச் சென்றனர். அண்ணல் நபி (ஸல்) அவர்களையும் எவர் என்று கூறிவிடக் கூடாது, பொய்யும் புகன்று விடலாகாது என்பதற்காகவே, வழிகாட்டக் கூடியவர் என்னும் இருபொருள் கொண்ட இச்சொல்லை அவர்கள் எச்சிரிக்கையுடன் பயன்படுத்தினர்.

இப்படி அடிக்கு அடி அபாயங்கள் அமைந்திருந்த காதங்களைக் கடந்து தான் அவர்கள் இருவரும் மதீனா நோக்கிப் போய்க்கொண்டி ருந்தனர். பகல் முழுவதும் பயணம் செய்வதும், இரவு வந்ததும் இளைப்பாறுவதும், பாலைப் பயணங்களில் பழக்கமாகும். ஆனால் அவர்களுக்கோ, இரவு பகல் இரண்டிற்கும் வேறுபாடு இருக்க வில்லை. அவர்கள் இரவு, பகல் எந்நேரமும் பயணம் செய்து கொண்டி ருந்தனர். அதனால் அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு அதிகக் களைப்பு ஏற்பட்டு விட்டது. ஒருநாள் பகலில் பயணம் செய்யும் போது, எங்காவது கொஞ்சம் நிழல் இருக்கிறதா என்று அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் பார்வை செல்லும் தொலைவரை பார்த்தனர். அப் பொழுது உயர்ந்த கற்பாறை ஒன்றின் கீழ் கொஞ்சம் நிழல் இருப்பது தெரிந்தது. அங்கு ஒரு மரம் இருந்தது என்றும் கூறப்படுகிறது. அப் பாறை இதுவரை பாலைக் கதிரின் பதம் பார்க்கவில்லை. அந்த இடத்தை அடைந்ததும், அபூபக்ர் (ரலி) அவர்கள் தாம் முதலில் இறங்கினார்கள். அல்லாஹ்வின் தூதர் அவர்கள் படுப்பதற்கு ஏற்றதாக அந்த இடத்தைச் சுத்தம் செய்து, அங்குப் போர்வை ஒன்றை விரித் தார்கள். அயர்வும், களைப்பும் அபூபக்ர் (ரலி) அவர் களுக்கும் அதிகம் இருக்கவே செய்தன. ஆயினும் உலகத்து நிதியங்களையெல்லாம் ஒன்று சேர்த்தாலும், அவற்றை அணுவளவானதாய் ஆக்கக்கூடிய ஒருவருக்குத் துணையாகச் செல்கிறோம் என்பதை அபூபக்ர் (ரலி) அவர்கள் கணப்பொழுதும் மறக்கவில்லை. எனவே அவர்கள்

அண்ணல் நபி (ஸல்) அவர்களைப் பார்த்து, ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! தாங்கள் உறங்குங்கள்! தங்களை நான் காவல் புரிகிறேன்'' என்று கூறினார்கள். அபூபக்ர் (ரலி) அவர்கள் தமக்காகப்படும் அவதி, இதயம் பிசைந்தாலும், அண்ணல் நபி (ஸல்) அவர்கள், இதற்கு இசைந்து அங்குப் படுத்து அயர்ந்து தூங்க ஆரம்பித்தனர்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பசியோடு இருக்கிறார்கள் என்னும் எண்ணமே போதும், அபூபக்ர் (ரலி) அவர்களின் உறக்கத்தை ஓடச் செய்வதற்கு. அதனால் அவர்கள் அருந்துவதற்கு ஏதாவது அகப்படுமா என்னும் ஏக்கத்துடன் அங்குமிங்கும் பார்த்துக் கொண்டிருந்தனர். பார்வை அலைந்ததே தவிர, அண்ணல் நபி (ஸல்) அவர்களைப் பாதுகாத்துக் கொண்டு நின்ற பாதம் பெயரவில்லை. அப்பொழுது ஒருவன் பாறை நிழலில் இளைப்பாறுவதற்காகத் தன் ஆடுகளை ஓட்டிக் கொண்டு அங்கு வந்தான். அவனைப் பார்த்து அவர்கள் ''நீ யார்?'' என்று கேட்டார்கள். அவன் மக்க நகர் மனிதர் ஒருவரின் பெயரைக் குறிப்பிட்டு அவரின் ஆள் என்றான். ''உன் ஆட்டில் பால் இருக்கிறதா?'' என்று அவர்கள் கேட்டபோது, ''ஆம் இருக்கிறது'' என்றான் அவன். ''எனக்குக் கொஞ்சம் தருகிறாயா?'' என்று அவர்கள் கேட்டார்கள். அவன் முதலில் அவர்கள் நெஞ்சில் பாலைவார்த்தான். ஆம். அவன் ''பால் கறக்கிறேன்'' எனப் பகர்ந்தது அபூபக்ர் (ரலி) அவர்களுக்குத் தம் நெஞ்சில் பால் வார்த்தது போல் தான் இருந்தது. கைகளையும், ஆட்டின் மடுக்களையும் நன்குக் கழுவிக் கொள்ளும்படி அவர்கள் கூறினர். அதன்படியே செய்து அவன் பாத்திரத்தில் பால் கறந்தான்.

அபூபக்ர் (ரலி) அவர்கள் அப்பாலை எடுத்துக்கொண்டு, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் படுத்திருக்கும் இடம் வந்தனர். அவர்கள் அப்பொழுதும் அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்ததால், அவர்களின் உறக்கத்தைக் கலைக்க அபூபக்ர் (ரலி) அவர்களின் மனம் உடன்படவில்லை. எனவே அவர்கள் பால் பாத்திரத்துடன் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கண் விழிக்கும்வரை காத்திருந்தனர். பாத்திரத்தில் இருந்த பால் சூடாயிருந்ததால், அதனைக் குளிர்விக்க துருத்தியிலிருந்த நீரை அதில் வார்த்தனர். அப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கண் விழித்தார்கள். அவர்களிடம் பாலைக் கொடுத்து, ''அருந்துங்கள்! அல்லாஹ்வின் தூதர் அவர்களே!'' என அபூபக்ர் (ரலி) அவர்கள் அளவற்ற பரிவுடன் கூறினர். அண்ணல் நபி (ஸல்) அவர்களும் தாம் திருப்தியுறும் வரை அதனை அருந்தினர். அபூபக்ர் (ரலி) அவர்களின்

இத்தகைய அன்பு தான், ''நான் மற்றவர்களுக்குப்பட்ட கடனை யெல்லாம் தீர்த்துவிட்டேன். அபூபக்ருக்குப்பட்டதைத் தவிர்த்து; அவர் அதற்கேற்ற பரிசை மறுமை நாளில் இறைவனிடமிருந்து பெறுவார்'' என அண்ணல் நபி (ஸல்) அவர்களைப் பேச வைத்தது. அபூபக்ர் (ரலி) அவர்கள், அண்ணல் நபி (ஸல்) அவர்களைப் பார்த்து, ''இது புறப்பட வேண்டிய நேரம், அல்லாஹ்வின் தூதர் அவர்களே!'' என்று கூறினர். பாலை அருந்தியபின் சற்று நேரத்திற்கெல்லாம் பாலைப் பயணம் தொடர்ந்தது.

வெள்ளைக் கதிரை வீசிக் கொண்டிருந்த சூரியன், மஞ்சள் நிறத்திற்கு மாறி, இரத்தச் சிவப்பை இறைத்துக் கொண்டிருந்தது. அண்ணல் நபி (ஸல்) அவர்களும், அபூபக்ர் (ரலி) அவர்களும் கடற் கரைப்பாதையிலிருந்த ராபிஃ என்னும் இடத்தை நெருங்கிக் கொண்டிருந்தனர். அப்பொழுது எவரும் வருகின்றனரா என எச்சரிக் கைக்காக அபூபக்ர் (ரலி) அவர்கள் திரும்பிப் பார்த்த போது, புழுதிப் படலம் எழுவது அவர்களின் கண்களுக்குப் புலப் பட்டது. அபாயம் மிகவும் வேகமாக வந்து கொண்டிருப்பதை அறிந்து அவர்கள், அதன் பிடியிலிருந்து தப்ப தம் ஒட்டகைகளை விரைவாக ஓட்டினர். ஆனால், அதற்குள் புரவியில் ஒருவர் விரைவாக வந்து அவர்களை நெருங்கி விட்டார். அவர் மக்க நகர மனிதர் தாம், இரக்கம் நெஞ்சில் இம்மியும் சுரக்காதிருந்தவர். பெயர் சுராக்கா இப்னு மாலிக். 'ஒரு நூறு ஒட்டகைகள் ஒப்படைக்கப்படும் முகம்மதைக் கொணர்பவருக்கு' என்னும் பிரகடனம் பெருக்கி விட்டது அவர் ஆசையை. அதனால் தான் அவர் தம் வேக பரியில் ஏறிப் பாலைப் பாதையில் பாய்ந்து வந்தார். அவர் தங்களின் உயிரை வாங்குவதற்காகவே அவ்வளவு விரைவாக வருகிறார் என்பதை ஊகத்தால் உணர்ந்து கொண்டதும், அளவற்ற வருந்தத்துடன் அலறினார்கள், அபூபக்ர் (ரலி) அவர்கள் ''நாம் என் செய்வது?'' என்று. அது உண்மையில் ஆற்றாத நிலையில் ஒருவர் அலறுவது போல் தான் இருந்தது. ஆனால், அண்ணல் நபி (ஸல்) அவர்களோ அருகே வந்து கொண்டிருக்கும் அபாயத்தை திரும்பிக் கூடப் பார்க்கவில்லை. அது அவசியமில்லை என்பது அவர்கள் நினைப்பு. அவர்களின் வாயில் இறை வசனம் இருந்து கொண்டிருந்தது. நெஞ்சில் இறை நம்பிக்கை இறுகிக் கொண்டிருந்தது. சுராக்கா இப்னு மாலிக் அருகில் வந்து விட்டதும், அபூபக்ர் (ரலி) அவர்கள் மீண்டும் அலறினார், ''அந்தோ பகைவன் நம்மை முந்தி விட்டானே'' என்று. இந்த அலறலைத்தான் சுராக்கா இப்னு மாலிக்

கவனித்தார். அல்லாஹ்வின் தூதர் அவர்களின் அமைதியை அவர் கவனிக்கவில்லை. எனவே அவர், தம் மனத்தில் தப்புக் கணக்குப் போட்டுக் கொண்டு, அல்லாஹ்வின் தூதர் அவர்களைப் பார்த்துக் கேட்டார், ''இப்பொழுது உம்மைக் காப்பவர் யார்?'' என்று. அதற்கு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அமைதி கொஞ்சமும் குறையாமல் ''எல்லாம் வல்ல அல்லாஹ்'' என்று கூறினர். அதன்பின் அவர்கள் தம் கைகளை உயர்த்திக் கொண்டு, ''இறைவனே! நீ விரும்புவது போல் அவருடைய தீமையிலிருந்தும் எங்களைக் காப்பாற்று!'' என்று இறைஞ்சினர். அவர்களின் கை தாழுமுன் சுராக்கா இப்னு மாலிக் அமர்ந்திருந்த புரவியின் கால் தடுக்கியது அவரும் தரையில் விழுந்தார்.

அபாயம் இத்துடன் கூட அகன்று விடவில்லை. அஸ்லம் கூட்டத் தலைவரான புரைதாஹ் என்பவர் ஆசையையும், ஒரு நூறு ஒட்டகைப் பரிசுப் பிரகடனம் கிளறிவிட்டு விட்டது. அவர் அதனைத் தாமே பெறவேண்டும் என்னும் ஆவலுடன் எழுபது பேர்களைக் கொண்டு, அண்ணல் நபி (ஸல்) அவர்களைச் சூழ்ந்து கொண்டார். வாளுடன், தம் தலை அரிய வந்திருக்கும் பகைவர் என்றாலும், அணு வளவும் அஞ்சாமல் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அவரைப் பார்த்து, ''நீர் யார்?'' என்று கேட்டார்கள். ''புரைதாஹ்'' என்றார் அவர், பெயர்களிலிருந்து முன் அறிவிப்புகள் பெறுவது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் வழக்கம். எனவே அவர் ''புரைதாஹ்'' என்று புகன்றதும், அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களைப் பார்த்து, ''புறப்படும்! நம் காரியம் நல்ல முறையில் முடியும்'' என்று கூறினர். ''புரைதாஹ்'' என்றால் குளிர்ச்சி என்று பொருள். பிறகு அவர்கள், புரைதாஹ்வைப் பார்த்து ''உம் கூட்டம் எது?'' என்று கேட்டனர். ''அஸ்லம்'' என்றார் அவர். இதைக் காதுற்றதும் அவர்கள் மகிழ்ச்சியுடன், ''அபூபக்ரே! நாம் பத்திரமாக இருக்கிறோம்'' என்றனர். அஸ்லம் என்றால் பத்திரம் என்று அர்த்தம். அதன்பின் அவர்கள், ''எந்தக் குடும்பத்தைச் சேர்ந்தவர் நீர்?'' என்று கேட்டனர். அதற்கு அவர் ''பனூசஹ்ம்'' என்றார். அதைச் செவியுற்றதுமே அவர்கள், ''உம் அம்புகள் தீர்ந்து விட்டன'' என்றனர். சஹ்ம் என்பதற்கு அம்பு என்று பொருள். அண்ணல் நபி (ஸல்) அவர் களின் இந்த இதப் பேச்சு, அவரின் இதயம் கவர்ந்தது. அக்கணமே அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டனர்.

## அன்பான அரவணைப்பு

அபாயங்களுக்கு அல்லாஹ்வின் உதவி கொண்டு முனை முறித்துக் கொண்டு, அவர்கள் இருவரும் இறுதியாக குபா என்னும் சிற்றூர் சேர்ந்து, அங்கு சில நாட்கள் தங்கியிருந்து விட்டு மதீனா புறப்பட்டனர். அல்லாஹ்வின் தூதர் அவர்கள் தம் பதி வருவதை அரும்நிதியமே வருவதாய் மனத்திற் கொண்டு, மதீனா மக்கள் மகிழ்ச்சி அடைந்தனர். ஏற்கனவே தம் உள்ளத்திற்குள் வந்து விட்ட அவர்களைத் தம் ஊருக்குள் அழைத்துச் செல்வதற்காக அவர்கள் சாலையிலும் வந்து திரண்டு நின்றனர். ஒளி மிகுந்த ஒரு பகலில், பாலை மணம் மீது பாதம் பதித்து வரும் இரு ஒட்டகைகளில் ஓரளவு ஒரே மாதிரியே உருவம் அமைந்த இருவர் இருப்பதைப் பார்த்த அவர்களால், இருவரில் எவர் அல்லாஹ்வின் தூதர் என்பதைத் தெரிந்து கொள்ள இயலவில்லை. சிலர் அபூபக்ர் (ரலி) அவர்களை அல்லாஹ்வின் தூதர் எனக் கருதிக் கொண்டு, அவர்களுக்கு மரியாதை செய்தனர். இவ்விதம் அவர்கள் கருதவும் காரணம் இல்லாமல் இல்லை. அபூபக்ர் (ரலி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு இரண்டரை ஆண்டுகளே தாம் இளையவர்களாக இருந்தாலும், அவர் களுக்குத் தலை, தாடி மயிர்கள் அதிகம் நரைத்திருந்தன. மக்களில் சிலர் புரியும் தவற்றை, அரைக் கணத்தில் அபூபக்ர் (ரலி) அவர்கள் புரிந்து கொண்டார்கள். அதனை அகற்ற அவர்களுக்கு அற்புதமான யோசனை ஒன்று அப்பொழுது தோன்றியது. உடனே அவர்கள் தம் தோள் துண்டைப் பிரித்தார்கள். அதனைத் தம் தோழரான அல்லாஹ் வின் தூதர் அவர்களின் தலைக்கு மேல் பிடித்தார்கள். இது இருவிதப் பயன்களை ஈந்தது. ஒன்று கொதிக்கும் வெய்யிலை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தலை மீது விழாது தடுக்கும் குடையாகியது. இரண் டாவது அல்லாஹ்வின் தூதர், அவர்கள் தாமா என்னும் மதீனமக்கள் ஐயத்திற்கு விடையாகியது.

அல்லாஹ்வின் தூதர் யார், அபூபக்ர் (ரலி) யார், என இனம் தெரிந்து கொண்டதும், மதீன மாநகர் மக்கள், அவர்கள் இருவரையும் அளவற்ற அன்புடன் வரவேற்று அவர்களைத் தம் உடன் பிறப்பு களுக்கு ஒப்பானவர்களாக ஒப்புக் கொண்டனர். அபூபக்ர் (ரலி) அவர்களைத் தம் அன்னை வயிற்றில் பிறவாச் சகோதரராய் அணைத்துக் கொண்டவர் காரிஜா பின் ஜைது என்னும் மதீனா மகனார் தம் மனத்திற்கு அருகில் வந்துவிட்ட அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு

மதீனாவுக்குச் சற்றுத் தொலைவில் இருந்த சுன்ஹ் வீட்டை அவர் அளித்தார். குடியிருக்க மனை அளித்த அவரே அபூபக்ர் (ரலி) அவர்கள் மனம் மகிழ மனைவியும் அளித்தார். ஆம், தம் மகள் ஹபீபாவை அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு மணமுடித்துக் கொடுத்தார். ஹபீபா தம் தந்தை வீட்டிலேயே இருந்து கொண்டிருந்தார். அபூபக்ர் (ரலி) அவர்கள் ஹபீபாவின் தந்தை தந்த வீட்டிலேயே வாழ்ந்து கொண்டிருந்தனர்.

காய் சுரப்பாலை கடந்து குபா வந்து, அங்கிருந்து மதீனா சேர்ந் ததும், அபூபக்கர் (ரலி) அவர்களுக்கு சுரம் ஏற்பட்டு விட்டது. சுரம் கண்டிருக்கும் போது, அவர்களின் கண்டம் விட்டு இக்கவி வெளிவந்து கொண்டிருந்தது.

*''குல்லும்ரி இன் முஸப்பிஹுன்பீ அஹ்லிஹி*
*வல்மவ்த்து அத்னாமின்ஷிராக்கி நிஃலிஹி''*

இதன் பொருள், ''ஒவ்வொரு மனிதனும், அவனுடைய வீட்டில் இருந்து கொண்டிருக்கிறான். அப்பொழுது அவனுடைய மிதியடியின் வாரைவிட அதிக சமீபத்தில் அவன் இறப்பு இருந்து கொண்டிருக்கிறது என்பதை அவன் அறிவதில்லை'' என்பதாகும்.

சுரம் ஏற்பட்டு, தம் அன்புத் தோழர் அவதிப்பட்டுக் கொண்டி ருப்பதை அறிந்ததும், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களை வந்து பார்த்தார்கள். அவர்களின் உடல் நலனிற்காக அல்லாஹ்விடம் இருகரம் ஏந்தி இறைஞ்சினார்கள். பிரார்த்தனை பலன் அளித்தது. விரைவில் அபூபக்ர் (ரலி) அவர்கள் உடல் நலம் பெற்றனர்.

தாம் தலைவைத்துப் படுப்பதற்கு, வீடுகட்டிக் கொள்வதற்கு முன் தம் நுதல் பதித்து வணங்குவதற்கு இல்லம் எழுப்ப விரும்பினார்கள் அல்லாஹ்வின் தூதர் அவர்கள். அதற்கென அவர்கள் தேர்ந்த இடம் இரு அநாதைச் சிறுவர்களுக்குச் சொந்தமானதாயிருந்தது. அதனைத் தானமாகத் தர அவ்வநாதைச் சிறுவர்கள் விரும்பினாலும் அதனை அவ்விதம் பெற அண்ணல் நபி (ஸல்) அவர்கள் விரும்பவில்லை. அதன் விலை பத்து தீனார்கள் எனத் தீர்மானிக்கப்பட்டபோது, அவற்றைக் கொடுக்கும்படி அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியது அபூபக்ர் (ரலி) அவர்களிடம் தான். அபூபக்ர் (ரலி) அவர்களின் பணத் தால் வாங்கப்பட்ட அவ்விடத்தில் கட்டப்பட்ட முதல் இறையில்லம் தான் 'மஸ்ஜிதுந் நபவீ' என்பது. அதைச் சுற்றி, தம்மை இன்னல்

நடுவில் சூழ்ந்து நின்ற தோழர்களுக்கு வீடுகள் கட்டிக் கொள்ள அனுமதி வழங்கினார்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள். இதன்பின் சில நாட்களில் அவர்கள் தம் குடும்பத்தினரை மதீனாவுக்கு அழைத்துக் கொண்டனர். அபூபக்ர் (ரலி) அவர்களும், ஜைது, அபூராபி ஆகிய இருவரையும், அப்துல்லாஹ் பின் அருக்கத்துடன் தம் குடும்பத்தினரை அழைத்து வர மக்காவுக்கு அனுப்பி வைத்தனர். அவர்களின் மனைவி உம்முரூமான் (ரலி) அவர்களும், அண்ணல் நபி (ஸல்) அவர்களின் மனைவி ஆயிஷா (ரலி) அவர்களும், அப்துல் லாஹ் பின் அபூபக்ர் (ரலி), தல்ஹா (ரலி) ஆகியோருடன் மதீனா வந்து சேர்ந்தனர். அல்லாஹ்வுக்கு இல்லம் எழுப்பும் போது, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் சௌதா (ரலி) அவர்களுக்கு ஓர் அறை அதன் கிழக்குப் புறத்தில் கட்டிக் கொண்டனர். ஆயிஷா (ரலி) அவர்களுக்கு அறை கட்டாததை அபூபக்ர் (ரலி) அவர்கள் அறிய வந்ததும், அது பற்றி அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் கேட்டனர். ஓர் அறை கட்டுவதற்குப் போதுமான பணமே அப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் இருந்தது. அதனால் அவர்கள், ''என்னிடம் பணம் இல்லையே'' என்று கூறினார். உடனே அபூபக்ர் (ரலி) ஆயிஷா (ரலி) அவர்கள் உறைவதற்காக ஓர் அறை கட்டிக் கொள்ள பன்னிரண்டு உகாஸுகளும் இருபது திர்ஹங்களும் வழங்கினர். அபூபக்ர் (ரலி) அவர்கள், இறையில்லத்திற்கு மேற்குப் புறத்தில் தம் மனைவி உம்மு ரூமான் (ரலி) அவர்களுக்கு ஓர் அறையும் கட்டிக் கொண்டனர். தம் மனைவி ஹபீபா (ரலி) அவர்களுக்கு சுன்ஹில் ஒரு வீடும் கட்டிக் கொண்டனர்.

## பத்ருப் போர்

இறைவனுக்கும் தங்களுக்கும் இல்லங்கள் கட்டிக் கொண்டு, அமைதியாக அல்லாஹ்வை வணங்கிக் கொண்டு வாழத்தான் முஸ்லிம்கள் ஆசைப்பட்டனர். ஆனால், அவர்களின் ஆசையை நிராசையாக்க மக்க நகரில் குறைஷிகள் திட்டம் தீட்டிக் கொண் டிருந்தார்கள். ''ஊரை விட்டு ஓடிய முகம்மது மதீனா நகரில் மதிப் புடன் வாழ்வதா?'' என அவர்களின் மனங்கள் கொதித்துக் கொண் டிருந்தன. எனவே அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கும், அவர்கள் கொணர்ந்த மார்க்கத்திற்கும் கத்தி முனையில் இறுதி முடிவு காண்பதென சத்தியம் செய்தார்கள். அதன் பிரகாரம் அடல் வீரர் ஆயிரவரைக் கொண்ட ஒரு படையுடன் மக்காவிட்டுக் கிளம்பி வந்து

பத்ரு வெளியை நிரப்பிக் கொண்டு நின்றார்கள். இந்தச் செய்தியை அறிந்ததும், அதிர்ந்தாலும், அயர்த்துவிடாமல் அண்ணல் நபி (ஸல்) அவர்கள், "என்ன செய்யலாம் இந்நிலையில்?" எனத் தம் தோழர் களை அழைத்து ஆலோசனை கேட்கத் தீர்மானித்தனர். அதற்காக அவர்களால் அழைக்கப்பட்ட முதல் மனிதர் அபூபக்ர் (ரலி) அவர்களே அவர். பகைவரைக் களத்தில் சந்திப்பதே உகந்தது என்னும் தம் உளக்கருத்தை அணுவளவும் தயக்கமின்றி அபூபக்ர் (ரலி) அவர்கள் அறிவித்தனர்.

அல்லாஹ்வின் மீது தமக்கிருந்த நம்பிக்கையில் அபூபக்ர் (ரலி) அவர்கள் இப்படி அறிவித்து விட்டாலும், அதைச் செயல் படுத்து வதில் இருந்த சிரமம் பிறகுதான் தெரிய வந்தது. மக்கநகர்ப் பகைவரை எதிர்க்க, அண்ணல் நபி (ஸல்) அவர்களால் திரட்ட முடிந்ததெல்லாம் முந்நூற்றுப் பதின்மூன்று பேர்களைத் தாம். முஸ்லிம்களை விடப் பகைவர் மும்மடங்கு அதிக எண்ணிக்கையில் இருந்தனர். முஸ்லிம் களிடம் இருந்ததைவிட அவர்களிடம் இருபது மடங்கு அதிக ஆயுதங்கள் இருந்தன. ஆட்களும் ஆயுதங்களும் அதிகமாய் அவர் களிடம் இருந்த இந்த நிலையில், அல்லாஹ்வின் உதவி இல்லாமல் வெற்றி பெற அறவே இயலாது என்பதை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உணர்ந்து கொண்டார்கள். எனவே அவர்கள் கள நடுவில் தமக்காகப் போடப்பட்டிருந்த குடிலுக்குச் சென்று தம் நெற்றியைத் தரையில் பதித்தார்கள். "இறைவனே! எனக்கு நீ அளித்த வாக்கு றுதியை நிறைவேற்றும்படி நான் உன்னை வேண்டுகிறேன். இறைவனே! இன்று முஸ்லிம்களின் இச்சிறு அணியை அழிய நீ அனுமதித்தால், மண்மீது உன்னை வணங்க ஒருவருமே இருக்க மாட்டார்கள்" எனப் பிராத்தித்தார்கள்.

அவர்கள் இருந்த குடிலின் வாயிலில் நின்று கொண்டிருந்த அபூபக்ர் (ரலி) அவர்களின் செவியில் இவ்விறைஞ்சுதல் விழுந்தது. அஞ்சா நெஞ்சினரான அல்லாஹ்வின் தூதர் அவர்கள் எவ்வளவு கலக்கம் அடைந்திருந்தால், இவ்வித இறைஞ்சுதல் ஒன்றைச் செய்திருப்பர் என எண்ணியதுமே உள்ளம் உருகி விட்டது அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு. எனவே அவர்கள் "அல்லாஹ்வின் தூதர் அவர் களே! உறுதியாக இறைவன் உங்களுக்கு வெற்றியை வழங்குவான். வெற்றியின் ஒளியில் உங்கள் வதனம் சுடர்விட அவன் அருளுவான்" என ஆறுதல் கூறினார்கள்.

ஆனால், அண்ணல் நபி (ஸல்) அவர்களின் செவியில், அபூபக்ர் (ரலி) அவர்கள் கூறிய ஆறுதல் மொழிகளெல்லாம் அறவே விழவில்லை. அதற்குக் காரணம் அவர்கள் அந்த இறைஞ்சுதலில் தம்மையே மறந்து ஈடுபட்டிருந்ததாகும். அதனால் அவர்களுக்குத் தம் தோள்மீது கிடந்த துண்டு நழுவி விழுந்தது கூடத் தெரியவில்லை. அபூபக்ர் (ரலி) அவர்கள் அந்தத் துண்டை எடுத்து அவர்களின் தோள்மீது போட்டுவிட்டு அவர்களின் கைகளை எடுத்துத் தம் முகத்தில் வைத்து முத்தமிட்டு விட்டு மொழிந்தார்கள், ''அல்லாஹ் வின் தூதர் அவர்களே! நீங்கள் கேட்டது போதுமானதாகும், அமைதி யாயிருங்கள்! அல்லாஹ் உங்களுக்கு வழங்கிய வாக்குறுதிகளை நிச்சயம் நிறைவேற்றுவான்.'' இந்தச் சொற்களும் கூட அண்ணல் நபி (ஸல்) அவர்களின் செவியைச் சேர்ந்தனவா என்று தெரியவில்லை. ஏனெனில், இப்பொழுது அவர்களைச் சிறு உறக்கம் ஒன்று ஆட்கொண்டது. அந்த உறக்கம் அத்தகைய அபாய வேளையில் வரக் கூடியதல்ல. அல்லாஹ் அவர்களுக்கு ஆர்வம் அளிக்கும் செய்தி ஒன்றை அறிவிக்கவே, அதனை வரச் செய்திருந்தான். முகம் முழுமதியாக, இதழ்ப் பூ இன்னகை சிந்த விழிமலர்ந்தார்கள் அவர்கள். தாம் ஆறுதலாய்க் கூறிய வார்த்தைகளை அவர்கள் கேட்டிருக்க மாட்டார்கள் என்னும் எண்ணத்தில் அபூபக்ர் (ரலி) அவர்கள், ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! அல்லாஹ் தன் வாக்கை நிச்சயம் நிறைவேற்றுவான்'' என்று கூறினார்கள். அதைக் கேட்டதும் அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ''அபூபக்ரே! அல்லாஹ்வின் உதவி வந்து விட்டது. ஜிப்ரயீல் தம் குதிரையின் கடிவாளத்தைப் பிடித்துக் கொண்டு வந்து விட்டார். காபிர்களின் தலைமீது புழுதி படிந்திருக் கிறது'' எனத் தாம் உறக்கத்தில் கண்ட காட்சியை உரைத்தனர்.

இப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இருந்த குடிலின் வாயிலில் நின்று அவர்களைப் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்பவர் எவர் என்னும் கேள்வி எழுந்தது. தாக்குதலின் குறியாய் இருக்கப் போகும், அவர்களைக் காக்கும் பொறுப்பை ஏற்க எல்லோருமே தயங்கிய போது, ''ஏற்கிறேன் நான்'' என முன் வந்தவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்கள் தாம். இந்தத் தீரம் பிறகு வீரத்திற்குப் பேர் போன அலீ (ரலி) அவர்களாலேயே பெரிதும் போற்றப்பட்டது.

ஒரு நாள் அலீ (ரலி) அவர்கள் தம் தோழர்களைப் பார்த்துக் கேட்டார்கள். ''வீரத்தில் முதலாமவரும், அதில் சிறப்பானவரும்,

மனித குலத்திலே எவர்''? என்று. உடனே ஒருவர் ''தாங்கள் தாம்'' எனத் தயங்காமல் கூறினார். அலீ (ரலி) அவர்களைப் போன்ற ஆன்ற சான்றவர் ஒருவர் இந்தப் பதிலைப் பெறவா அந்த கேள்வியைக் கேட்டிருப்பர் என அவர் எண்ணிப் பார்க்கவில்லை. அது அவரின் குற்றமும் ஆகாது. ஏனெனில், அலீ (ரலி) அவர்களும், வீரத்தில் அத்தகைய ஒருவராய்த்தான் இருந்தார்கள். ஆனால் அவர்கள் கூறியது தோழர்களை ஆச்சரியத்தில் ஆழ்த்தவில்லை. ''ஆம், ஆம்'' எனக்கூற வைத்தது. ''அதற்கு உரிமையானவர்கள் அபூபக்ர் அவர்கள் தாம். அவர்களைப் போல் வேறு எவரும் அல்லாஹ்வுக்கு அர்ப்பணமாக அவ்வளவு ஆயத்தமாக இருந்ததில்லை'' என்றார்கள் அலீ (ரலி) அவர்கள். பத்ர் களத்திற்குப் புறப்படுமுன் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்களிடம், வந்திருக்கும் ஆபத்தின் அளவை விளக்கிக் கூறியபோது, அபூபக்ர் (ரலி) அவர்கள் இயம்பியது இதுதான் : ''எதுவரினும் சரி, அல்லாஹ்வின் பாதையில் என் உயிரை அர்ப்பணிக்க நான் ஆயத்தமாகிவிட்டேன்.'' அவர்கள், பத்ருக் களத்தில் போர் புரிந்ததைப் பார்த்த போது அவர்கள் தம் சொல்லைச் செயலாக்கத் தீர்மானித்து விட்டது போல்தான் தெரிந்தது.

### தந்தையும் தனயரும்

பத்ர் வெளியில் அல்லாஹ்வுக்கும், அவன் பகைவருக்கு மிடையே மூர்க்கப் போர் மூண்டு மும்முரமாக நடந்து கொண் டிருக்கிறது. அப்பொழுது அபூபக்ர் (ரலி) அவர்கள், பகைவர் பக்கத்தில் தம் மகன் அப்துர் ரஹ்மானும் இருப்பதை அறிகிறார்கள். அவரைப் பெற்ற அவர்களின் நெஞ்சில் பெருந் தீப் பற்றுகிறது. அந்தக் கொதிப்பில் அப்துர் ரஹ்மானின் தலை அரிந்திடும் பொறுப்பு தம்முடையது என முடிவு செய்கிறார்கள். அதற்கு ஏற்றாற் போலவே, பகைவர் பக்கம் நின்ற அப்துர் ரஹ்மானும் தம்முடன்பொருத ஒருவரை அனுப்பி வைக்குமாறு அறைகூவல் விடுகிறார். ஐம்பத்திரண்டு வயதை அடைந்திருந்த அபூபக்ர் (ரலி) அவர்கள், வாலைப்பருவத்தின் வாயிலில் நின்று கொண்டிருந்த அப்துர் ரஹ்மான் விட்ட அறை கூவலை ஏற்கத் தயாராகிறார்கள். இது அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்குத் தெரிந்துவிடுகிறது. ''அபூபக்ரே! உறையிடும் உம்வாளை! உம் நப்ஸைக்கொண்டு, எங்களுக்கு சுகம் அளியும்! நீர் என் கண்களும், காதுகளும் போன்றவர் ஆவீர்'' எனக் கூறித் தந்தை தனயர் போருக்குத் தடை விதிக்கிறார்கள். அருமையுடன் பெற்று, ஆசையுடன் வளர்த்த செல்வச் சீர் மகன் தான் அப்துர் ரஹ்மான்.

ஆயினும் அல்லாஹ்வுக்காக அவர் சிரம் கொய்ய அபூபக்ர் (ரலி) அவர்களின் உடலிலிருந்த ஒவ்வோர் அணுவும் துடிக்கிறது. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் போட்ட தடையைக் கேட்ட பிறகும் கூட, அந்தத் துடிப்பு அடங்க வில்லை. போர் நடுவில் அப்துர் ரஹ்மானை அபூபக்ர் (ரலி) அவர்கள் பார்க்க நேரிடுகிறது. அவர்களின் நெஞ்சில் எரிந்த நெருப்பு கண்களில் கொழுந்து விடுகிறது. 'கீழானவனே! உன்னிடம் எனக்கு இருக்கும் உரிமைகள் பற்றி என்ன கூறுகிறாய்?'' என்று அவர்கள் கேட்கிறார்கள். உருவ வழிபாட்டில் ஊறி, ஆகா நெறிக்காகப் போராட வந்திருக்கும் அந்தத் திருமகனார் சொல்கிறார். ''எதுவும் எஞ்சியிருக்கவில்லை இந்த அம்பு, அதை எய்பவர், கிழவயதின் தவறுகளை நொறுக்கும் இந்த வாள் இவற்றைத் தவிர்த்து'' என்று. அந்தச் சொற்களை கேட்டதும் அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு அடங்காச்சினம் ஏற்பட்டு விடுகிறது. அவருக்குத் தம் சொத்தில் யாதொரு பங்கும் கிடையாது என அவர்கள் ஆணையிடு கிறார்கள். பிறகு அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள், இஸ்லாத்தில் இணைந்ததும், இது ஒரு பிரச்சினையாகி விடுகிறது. ஆணையிட்டுக் கூறினாலும், அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களுக்குப் பங்கு உண்டு என இறை அறிவிப்பு வருகிறது.

## பகைவருக்காகப் பரிந்துரை

இரத்த உறவால் ஏற்பட்ட பந்தபாசங்களையெல்லாம் இப்படித் தம் இதயங்களிலிருந்து பறித்து எறிந்து விட்டு, வந்தவர்களுக் கிடையேதான் பத்ருப்போர் நடந்து முடிந்தது. அல்லாஹ்வும், தன் தூதருக்கு அளித்த வாக்கைக் காத்தான். முஸ்லிம்கள் வாகை பெற்றனர். அதற்கு ஆதாரம் பகைவர் எழுபது பேர் முஸ்லிம்களின் கைகளில் விழுந்து கைதிகளாகி இருந்தது. போர்க்களத்திற்கு வாளைக் கையில் பிடித்துக் கொண்டு வந்த அவர்கள், இப்பொழுது தம் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு நின்றார்கள். அவர்கள் அறிந் திருந்தனர் இளகிய மனமும், இரக்க குணமும், அழகிய நல்லியல்பு களும் அமைந்தவர் ஆவார் அபூபக்ர் என்று. அத்துடன் அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களின் வீரத்தையும் விஞ்சி, அவர்களின் இதயத்தில் இருந்த ஈரத்தையும் அறிந்திருந்தனர். எனவே அவர்கள் தங்கள் விடுதலை விஷயத்தில் தலையிடும்படி அபூபக்ர் (ரலி) அவர்களிடம் கெஞ்சினார்கள். மீட்புப் பணம் பெற்றுக் கொண்டோ, அது இல்லாமலோ தங்களை விடுதலை செய்யும்படி பரிந் துரைக்கவேண்டுமென வேண்டினார்கள். அவர்களின் வேண்டுகோள்

தம் செவியில் விழுந்ததுமே தம் தலை அரிய வந்த பகைவர் அவர்கள் என்பது மறந்து போய் விட்டது அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு. எனவே, அவர்களின் கைதிகளின் விடுதலை விஷயத்தில் தலையிடுவதற்கு இணங்கினார்கள். இது கைதிகளின் கவலையைப் பெரிதும் போக்கி விட்டது.

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் கவனத்திற்கு இந்தப் பிரச்சினை இறுதியில் வந்தது. கைதிகளுக்குத் தாம் அளித்த வாக்கை அபூபக்ர் (ரலி) அவர்கள் மறந்து விடவில்லை. ''எப்படி இருந்தாலும், அவர்கள் நம் உற்றவர், உறவினர், அவர்கள் நம் உதிரம், ஊன். அவர்கள் மீது பரிவு கொள்ளுங்கள்! அல்லாஹ் நம்மீது பரிவு கொள்வான். மீட்புப் பணம் பெற்றுக் கொண்டு அவர்களுக்கு விடுதலை வழங் குங்கள்! அந்தப் பணத்தால் முஸ்லிம்கள் வளமுறட்டும்! அவர்களை அழிப்பதற்குப் பதிலாக, அவர்களை வாழவிடுவோம். அவர்களின் பாதைக்கு இறைவன் ஒளிபாய்ச்சுவான். இது முதற் கொண்டு அவர்கள் நேர்வழி நடக்கட்டும்! அவர்கள் செய்த தவற்றிற்காக இறக்க, அல்லாஹ்வுக்காக வழிவகுக்க வேண்டாம்! ஏனெனில், அவர்கள் என்றென்றும் நரக நெருப்பிற்கு இரையாக நேரும்.'' அறிவில் படவும், இதயம் தொடவும் அபூபக்ர் (ரலி) அவர்கள் இவ்விதம் பேசினார்கள். ஆனால் உமர் (ரலி) அவர்களின் கருத்தோ நேர் எதிராக இருந்தது.

இரு துருவ கருத்துக்களைத் தம் அருகிலிருந்த அருமைத் தோழர்கள் அறிவிக்க அவற்றை மௌனமாய்க் கேட்டு விட்டு அண் ணல் நபி (ஸல்) அவர்கள் சற்று வெளியே எழுந்து சென்றனர். அவர்கள் இவ்விதம் செய்தது தம் தோழர்கள் தங்களுக்குள் பேசி ஒரு முடிவிற்கு வரட்டும் என்பதற்காகத் தான். சிறிது நேரத்தில் அவர்கள் திரும்பி வந்தனர். தம் தோழர்களைப் பார்த்துப் பின் வருமாறு பேசினர்: ''அல்லாஹ் சிலர் மனத்தைப் பாறை போன்று கடினமானதாயும், சிலர் மனத்தை வெண்ணெய் போன்று மிக மென்மையானதாயும் அமைத்திருக்கிறான். அமரர்களில் அபூபக்ர் போன்றவர் மீக்காயீல். அவர், தம் அடியார் மீது பரிவு காட்டுமாறு அல்லாஹ்விடம் வாதிட்டார். இறை தூதர்களில் அபூபக்ர் போன்றவர்கள், இப்ராஹீம் (அலை) அவர்கள். அவர்கள் தம்மை எரி குண்டத்தில் எறிந்த போதும், 'எனக்கு மாறுபட்டவர்களை மன்னிக்கவும், அவர்கள் மீது கருணை காட்டவும் அல்லாஹ் போதுமானவன்' என்று கூறினார்கள். இறை தூதர்களில் அபூபக்ர் போன்ற இன்னொருவர் ஈஸா (அலை) அவர்கள்.

அவர்கள் இறைவனிடம் இறைஞ்சினர். 'நீ அவர்களைத் தண்டித்தால், அவர்கள் உன் ஊழியர்கள். நீ அவர்களை மன்னித்தால் நீ புகழுக் குரியவன் அறிவானவன்' என்று. இறை தூதர்களில் உமரைப் போன்றவர் நூஹ் (அலை) அவர்கள். அவர்கள், தம் பகைவர் வெள்ளத்தில் அழிய வேண்டும் என வேண்டினர். இறை தூதர்களில் உமரைப் போன்ற மற்றொருவர் மூஸா (அலை) அவர்கள். அவர்கள், தம் பகைவர் கடலில் மூழ்க வேண்டும்'' என்று இறைஞ்சினர். அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இந்த உரை, அவர்களின் உளக்கருத்தின் உறையை விலக்கியது. அதன்படி கைதிகள் அனைவரும் விடுதலையா யினர்.

## உஹதுப் போர்

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இந்தத் தகைமை, பகைவர் மனத்தில் பற்றி எரிந்த குரோதத் தீயைக் கொஞ்சமும் குறைக்க வில்லை. எனவே அவர்கள் பத்ருப் போர் முடிந்து, ஆண்டு ஒன்றே ஆவதற்குள், அபூசுப்யான் தலைமையில் அடுத்த போர் புரியப் புறப்பட்டு வந்து, உஹத் மலையின் அடிவாரத்தில் முகாமிட்டனர். அவர்களை எதிர்க்க அண்ணல் நபி (ஸல்) அவர்களுடன் சென்ற படையில், அபூபக்ர் (ரலி) அவர்களும் இருந்தனர். வலப்புற அணி அவர்கள் வசம் ஒப்படைக்கப்பட்டது.

போர் மூண்டு, மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. முஸ்லிம் களின் மூர்க்கத்தாக்குதலுக்கு முன் நிற்க முடியாமல் பகைவர் பின்வாங்கத் தொடங்கினர். வெற்றி வெகு அருகில் என்னும் அந்நிலையில் முஸ்லிம்கள் கொள்ளைப் பொருள்கள் மேல் கொண்ட ஆசையால், அல்லாஹ்வின் தூதர் அவர்களின் சொல்லை மீறித் தம் நிலைகளை விட்டுப் பெயர்ந்தனர். அந்த நிலைகளை நிரப்பிக் கொண்டு பகைவர் தாக்கத் தொடங்கிய போது முஸ்லிம்கள் பொறிக்குள் அகப்பட்டவர் போல் ஆயினர். இதுதான் சமயமெனப் பகைவர் அல்லாஹ்வின் தூதர் அவர்களைச் சூழ்ந்து கொண்டு, அவர்கள் மீது அம்பு மழையை அரைக் கணமும் நிறுத்தாமல் பொழிய ஆரம்பித்தார்கள். ஒருவன் எறிந்த கல் அவர்களின் பல்லில் பட அது உடைந்தது. அடுத்து அவன் எறிந்த கற்களில் ஒன்று அவர்களின் முகத் திலும் பட்டன. கல் பட்டுப் பிளந்த கவசத் துண்டு ஒன்று, அவர்களின் கன்னத்தில் பதிந்தது. அவை உண்டு பண்ணிய காயங்களில் இருந்து இரத்தம் அதிகம் கழிந்ததால் அவர்கள் நினைவிழந்து அருகில் இருந்த

பள்ளம் ஒன்றில் விழுந்தார்கள். இது முஸ்லிம்களின் கவனத்திலிருந்து தப்பியது, பகைவரின் கண்களில் போய் அப்பியது. அவல் கிடைத்து விட்டது அவர்களின் வெறும் வாய்க்கு. அவர்கள் 'முகம்மது கொல்லப் பட்டு விட்டார்' என்னும் புரளியைக் கிளப்பி விட்டார்கள். இது முஸ்லிம்களை முடமாக்கியது. பகைவர் வேகத்தைப் பல மடங் காக்கியது. பள்ளத்தில் விழுந்து கிடந்த அல்லாஹ்வின் தூதர் அவர்கள் உயிருடன் இருக்கிறார்கள் என்பதை அறிந்ததும், பகைவர் உஹத் களம் விட்டு ஓட்டம் பிடிக்கலானார்கள். அவர்களை அப்படி எளிதாகத் தப்ப விடுவது அறிவுடைமை ஆகாது. அவர்களைச் சிறிது தொலைவாவது விரட்டிச் செல்வதே விவேகமானது என்று தீர்மானிக்கபட்ட போது, அதற்காகத் தேர்ந்தெடுக்கப்பட்ட எழுபது பேர்களில் ஒருவராய் அபூபக்ர் (ரலி) அவர்கள் இருந்தனர்.

இதன்பின் நிகழ்ந்த அகழ்ப் போரிலும் அவர்கள் அஞ்சா நெஞ்சுடன் நின்று அமராடினார்கள். ஆட்படை அணி ஒன்றிற்குத் தலைமை தாங்கி, பகைவர் அகழி கடந்து வந்து விடாமல் தடுத்த அவர்களின் வீரத்தின் நிலைவாக, அந்த இடத்தில் அவர்கள் நின்ற அந்த நிலத்தில், நிலைத்து நின்று அவர்களின் பெருவீரம் கால மெல்லாம் பேசிக்கொண்டிருக்கட்டும் என்பதற்காக எழுப்பப்பட்டது ஒருபள்ளி. அதுவே மஸ்ஜிதெ சித்தீக் ஆகும்.

இந்தப் போர் நடந்து ஆண்டு ஒன்று கடந்த பின், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தம் ஆயிரத்து நானூறு தோழர்களுடன் உம்ரா என்னும் சின்ன ஹஜ்ஜுச் செய்வதற்காக மக்கா புறப்பட்டார்கள். ஆனால், அங்கு அவர்கள் வருவதை குறைஷிகள் மனம் கொஞ்சமும் விரும்ப வில்லை. இதை அறிவிக்க வந்த உர்வா பின் மஸ்வூத், அச்சுறுத்தல் களால் அல்லாஹ்வின் தூதர் அவர்களைப் பணிய வைத்து விடலாம் என மனப்பால் குடித்துக் கொண்டிருந்தவர். அவர் அல்லாஹ்வின் தூதர் அவர்களைப் பார்த்துப் பகர்ந்தார் : ''மக்கா நகர் ஒரு முட்டையை ஒத்திருக்கிறது. அது உம்முடைய பிடிவாதத்தினால் உடைக்கப்படு மானால், உம்மைப் பின்பற்றுவதாகக் கூறுபவர்கள் உம்மை விட்டும் ஓடிப்போய் விடுவார்கள். நீர் தனித்து நின்று போரிட வேண்டியது இருக்கும். உம்முடைய தவறான போக்கின் பலனை அனுபவிக்க வேண்டியிருக்கும்.'' இதை உர்வாபின் மஸ்வூத் உரைத்த போது, அப்படி ஒன்றும் மேக மூட்டம் இருக்கவில்லை. ஆயினும் அவர் பின் புறமிருந்து இடி இடித்தது. அந்த இடி மேகத்திலிருந்து வந்தல்ல, ஒரு மனிதரின் வேகத்திலிருந்து வந்தது.

''ஒரு போதும் நாங்களும் அல்லாஹ்வின் தூதர் அவர்களை விட்டு விட்டு ஓடமாட்டோம், ஒரு போதும் அவர்களும் எங்களின் விசுவாசத்தை இழக்கமாட்டார்கள்.'' இவ்விதம் இடியாய் முழங்கி விட்டு அபூபக்ர் (ரலி) அவர்கள் தங்களுக்கும் அல்லாஹ்வின் தூதர் அவர்களுக்கும் இடையே பிளவேற்படுத்த அவர் பண்ணும் அடாத முயற்சியை கடுமையாகச் சாடினார்கள்.

அபூபக்ர் (ரலி) அவர்களின் சொல் அம்புகள் உர்வா பின் மஸ்வூதின் உள்ளத்தில் பாய்ந்து, அவரின் ஆத்திரத்தை அதிகம் கிளறி விட்டன. கொடு நாவால் தமக்கு அப்படி ஓர் அடி கொடுப்பவர் யார் என அறிய அவர் திரும்பிப் பார்த்தார். அபூபக்ர் (ரலி) அவர்களை அவரால் அறிந்து கொள்ள இயலவில்லை. அல்லாஹ்வின் தூதர் அவர் களைப் பார்த்து, ''அவர் யார் ?'' எனக் கேட்டார். ''அபூகுஹாஃபாவின் மகன்'' என அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அறிவித்ததைக் கேட்டதும், உர்வா பின் மஸ்வூதின் கொதிமனம் குளிர்ந்தது.

''நானும் அவருக்கு பதிலடி கொடுத்திருப்பேன். அவர் முன்பு என் மீது சொறிந்த தாராள உதவிகளுக்காக நான் கடன் படாதவனாய் மட்டும் இருந்திருந்தால். இப்பொழுதும் கூட, அவற்றைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும் என எவ்வளவோ விரும்பினாலும் கொடுக்க முடியாதவனாய் இருக்கிறேன்'' என்று உர்வா பின் மஸ்வூத் உரைத்தார். அறியாமைக் காலத்தில் அவர் ஒருவரின் இறப்பிற்குப் பகரமாய்ப் பணம் கொடுக்க வேண்டியிருந்தது. அதனை அவர் கொடுக்க இயலாதிருப்பதை அறிந்து அபூபக்ர் (ரலி) அவர்கள் அவருக்கு இரு பகமாடுகளைக் கொடுத்து உதவினார்கள். தம் நினைவில் பகமையாயிருந்த இதைத்தான் உர்வாபின் மஸ்வூத் இப்பொழுது குறிப்பிட்டார்.

அண்ணல் நபி (ஸல்) அவர்களையும் அவர்களின் தோழர் களையும், மக்காவுக்குள் அனுமதிப்பதில்லை என்பதில் குறைஷி களின் உறுதி கொஞ்சமும் குறைவில்லை. எனினும் நீண்ட பேச்சு வார்த்தைகளுக்குப் பின் உடன்பாடு ஒன்று உருவாகியது. அதன்படி முஸ்லிம்கள் அவ்வாண்டு மக்கா வராமல் திரும்பிச் செல்லவேண்டும். அடுத்த ஆண்டு வந்து மூன்று நாட்கள் மட்டும் தங்கியிருந்து விட்டுப் போய்விட வேண்டும். அத்துடன் பத்தாண்டுப் போர் ஓய்வு காலத் தில், மக்காவிலிருந்து அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வருப வர்கள் மக்காவுக்கே திருப்பி அனுப்பிவிட வேண்டும். மதீனாவி

லிருந்து மக்கா வரும் முஸ்லிம்களைத் அப்படித் திருப்பி அனுப் பாதிருக்கக் குறைஷிகளுக்கு உரிமை உண்டு.

ஒரு சொட்டு இரத்தம் கூட அவசியம் இல்லாமல் சிந்தப் படக் கூடாது என்னும் கொள்கையைச் சிந்தையில் கொண்டவர்களாய் இருந்ததால், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இந்த விதிகளுக்கு இணங் கினர். இந்த விதிகள், வென்றவர் தோற்றவருக்கு விதிப்பவை போல் இருந்தன. அதனால் இவை வெற்றி முகத்தில் இருப்பவர்கள் முஸ்லிம்களா, குறைஷிகளா என்னும் ஐயத்தையும் எழுப்பி விட்டனர்.

பகைவருக்குச் சாதமானது போலும், முஸ்லிம்களுக்குப் பாதக மானது போலும், இருந்த இந்த உடன்பாட்டை ஏற்றுக் கொள்ள உமர் (ரலி) அவர்களின் மனம் ஒரு சிறிதும் உடன்படவில்லை. எனவே அவர்கள் உடன்படிக்கை கையெழுத்தாகு முன்பே, அபூபகர் (ரலி) அவர்களிடம் வந்து, ''முஸ்லிம்களுக்குப் பாதகமானது அது. எனவே அதனை ஏற்றுக் கொள்ளக் கூடாது'' என்றனர். அதற்கு அபூபக்ர் (ரலி) அவர்கள் அளித்த பதில் உமர் (ரலி) அவர்களின் உள்ளத்தைத் திருப்திப் படுத்தவில்லை. எனவே அவர்கள் ஆவேசம் கொள்கிறார்கள். அந்த ஆவேசத்துடன் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, ''நீங்கள் அல்லாஹ்வின் தூதர் இல்லையா?'' என்று கடுமையாகக் கேட்கிறார் கள். அக்கணமே அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ''நிச்சயமாக'' என்று அமைதியாகப் பதில் கூறுகிறார்கள். ''உங்கள் மார்க்கம் நேரான தில்லையா?'' என்று உமர் (ரலி) அவர்கள் கேட்கிறார்கள். ''உண் மையாக'' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உரைக்கிறார்கள். ''அவ்விதமானால் நாம் ஏன் இதைப்போல் நம்மைத் தாழ்த்திக்கொள்ள வேண்டும்? சாதகத்துடன் அவர்கள் செல்ல அனுமதிக்கவேண்டும்?'' என்று உமர் (ரலி) அவர்கள் விரக்தியுடன் கேட்கிறார்கள். ''நான் அல்லாஹ்வின் தூதன். அவன் ஆணைப்படி செயலாற்றுவது தான் என் கடமை. அவன் என்னைக் கைவிடமாட்டான்'' என அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அறிவிக்கிறார்கள். ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! உம்ரா செய்வோம் என நீங்கள் உரைக்கவில்லையா?'' என உமர் (ரலி) அவர்கள் கேட்கிறார்கள். ''ஆம். இவ்வாண்டே செய்வோம் என நான் எப்போது கூறினேன்?'' என்னும் கேள்வியைக் கொண்டு, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பதில் கூறுகிறார்கள். பிறகு, ''உமரே!'' என விளித்துவிட்டு விளம்புகிறார்கள், ''நிச்சயமாக நாம் உம்ரா செய்வோம்'' என இப்போதும் கூறுகிறேன்.

இந்த இதமான பதில்களை ஏற்றுக் கொள்ள உமர் (ரலி) அவர்களின் மனம் மறுக்கிறது. அதனல் ஆறுதலுக்குப் பதிலாக அவர்களின் மனத்தில் ஆத்திரம் மேலோங்கியது. அபூபக்ர் (ரலி) அவர்களிடம் அவர்கள் வருகிறார்கள். ''நம் கட்சி நியாயமானதாய் இருக்கும் போது, இவ்வளவு அவமானகரமான நிபந்தனைகளுக்கு நாம் இணங்கத்தான் வேண்டுமா?'' என அபூபக்ர் (ரலி) அவர்களைப் பார்த்துக் கேட்கிறார்கள். அதற்கு அபூபக்ர் (ரலி) அவர்கள் அமைதியாக ''அல்லாஹ்வின் தூதர் அவர்கள் அல்லாஹ்வின் விருப்பப்படியே தான் செய்திருப்பர். அவர்கள் எது செய்தாலும், அது நம் நன்மைக்கே ஆகும்'' என்று பதில் கூறுகிறார்கள். அதுபற்றி அவர்கள் அதற்கு மேல் அதிகம் பேச விரும்பவில்லை. உமர் (ரலி) அவர்களின் உளம் திமிரிக் கொண்டிருக்கிறது. அது அடக்கப்பட வேண்டும் என எண்ணியோ என்னவோ, உமர் (ரலி) அவர்களின் கவனத்தைத் திருப்புபவதற்காக, ''அல்லாஹ்வின் தூதர் புரவி திமிருகிறது. அதன் சேணத்தைப் பிடித்து அமைதிப் படுத்தும் !'' என்கிறார்கள். ஆனால் உமர் (ரலி) அவர்களால் அதிலேயெல்லாம் தம் மனத்தைத் திருப்ப அறவே இயலவில்லை.

எனவே அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களைப் பார்த்து ''அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் இல்லையா?'' என்று கேட்கிறார்கள். ''நிச்சயமாக'' என்று அபூபக்ர் (ரலி) அவர்கள் பதில் அளிக்கிறார்கள். ''அவர்களின் மார்க்கம் நேரானதில்லையா?'' என்று அவர்கள் கேட்கிறார்கள். ''உண்மையாக'' என அபூபக்ர் (ரலி) அவர்கள் பதில் புகலுகிறார்கள். ''அவ்விமானால் நாம் ஏன் இதைப் போல் நம்மைத் தாழ்த்திக் கொள்ளவேண்டும்? சாதகத்துடன் அவர்கள் செல்ல அனுமதிக்கவேண்டும்?'' என அவர்கள் கேட்கிறார்கள். ''உமரே! நான் என் முழு மனத்துடன் அவர்களை அல்லாஹ்வின் தூதர் என ஏற்றுக் கொள்கிறேன். அவர்கள் அனைத்தையும் அல்லாஹ்வின் ஆணைப்படியே தான் செய்கிறார்கள். அவன் அவர்களைக் கைவிடமாட்டான்'' என உமர் (ரலி) அவர்களைப் பார்த்து அபூபக்ர் (ரலி) அவர்கள் உறுதியுடன் உரைக்கிறார்கள். உடனே, ''உம்ரா செய்வோம் என்று அல்லாஹ்வின் தூதர் அவர்கள் உரைக்கவில்லையா?'' என உமர் (ரலி) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களைப் பார்த்துக் கேட்கிறார்கள். ''இவ்வாண்டே செய்வோம் என்று எப்போது கூறினார்கள்?'' என அவர்களைப் பார்த்து அபூபக்ர் (ரலி) அவர்கள் கேட்கிறார்கள். இதன் பிறகு தான் உமர் (ரலி) அவர்களின் உள்ளம் சற்று அமைதி கொள்ள ஆரம்பிக்கிறது. உமர் (ரலி) அவர்கள் கேட்ட கேள்விகளுக்கு

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் என்ன பதில் கூறினார்கள் என்பது எதுவும் அபூபக்ர் (ரலி) அவர்களுக்குத் தெரியாது. ஆயினும் அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறிய அதே பதில்களையே சொற்களில் கூட ஒரு சிறிதும் மாற்றம் இல்லாமல் சொன்னது, ஆச்சரியப் படத்தக்கது என்பதில் ஐயமில்லை. இந்த விஷயத்திலும் அவர்கள் இருவரும் ஒரே மாதிரியே சிந்தித்தார்கள். அதனால் தான் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் பரிசுத்த மனமும், அபூபக்ர் (ரலி) அவர்களின் பாக்கிய மனமும் ஒன்றுபட்டிருந்தன என ஹாபிஸ் இப்னு ஹஜர் (ரஹ்) அவர்கள் கூறியிருக்கின்றனர்.

இதன்பின் நிகழ்ந்த கைபர் போரிலும் அபூபக்ர் (ரலி) அவர்கள் கலந்துக் கொண்டு தம் கடமையைப் புரிந்தனர். பனீ கலாஸ், பனூ ஃபஸாராஹ் கூட்டத்தவர் மீது முஸ்லிம்கள் படையெடுத்த போதும், அவர்கள் பங்கு கொண்டு பகை எதிர்த்தனர். மக்கா வெற்றி கொள்ளப் பட்ட போது, அதற்குள் நுழைந்த அண்ணல் நபி (ஸல்) அவர்களின் பின் சென்றவர்களில் முதலாமவர் அபூபக்ர் (ரலி) அவர்கள் தாம். அந்தத் தகுதி அவர்களுக்கு அவசியம் கொடுக்கப்பட வேண்டியது தான். ஏனெனில் அபாயமிக்க குகைக்குள் அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு முன் சென்றவர்கள் அல்லவா அவர்கள்? அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு வலப்புறத்திலும், உஸைது (ரலி) அவர்கள் இடப்புறத்திலும் சென்றனர். இவர்களுக்குப் பின்னால் பிலால் (ரலி) அவர்களும், உஸாமா (ரலி) அவர்களும் வந்தனர்.

அபூபக்ர் (ரலி) அவர்களின் தந்தை அபூகுஹாஃபா இது வரை இஸ்லாத்தில் இணையவில்லை. தம் தள்ளாத வயது வரையிலும், அவர் இஸ்லாத்தைத் தழுவுவதைத் தள்ளி வைத்துக்கொண்டே வந்தார். அவரின் இணை விழிகளில் இருள் இருந்தாலும், அகவிருளாவது அகன்று விடட்டும் என அபூபக்ர் (ரலி) அவர்கள் விரும்பினார்கள். மக்கா வெற்றி கொள்ளப்பட்டதையும், மக்களுக்கு இஸ்லாத்தைத் தழுவுவதைத் தவிர்த்து வேறு மார்க்கம் இல்லை என்பதையும் அவர்கள் அவரிடம் எடுத்துக் கூறினார்கள். இறுதியாக அவர் இஸ்லாத்தை ஏற்க இணங்கினார். வயதின் சுமை முதுகை வளைக்க பார்வை இல்லாப் பலவீனத்துடன் இருந்த தம் தந்தையின் தளர் கரங்களைப் பற்றிக் கொண்டு அழைத்து வந்தார்கள் அபூபக்ர் (ரலி) அவர்கள். தனயர் கையைப் பிடித்துக் கொண்டு, நரைத்த தாடியுடன் தள்ளாடிக் கொண்டு கஷ்டத்துடன் தம்மை நோக்கி அவர் வருவதைக் கண்டதும், தம் தோழரைப் பெற்ற தந்தை என்பதால்,

மகிழ்ந்தாலும், அவர் அங்கு அழைத்து வரப்பட்டதை அறிந்து அண்ணல் நபி (ஸல்) அவர்கள் வருந்தினார்கள். ''இளையவரை நேசியாதவரும், முதியவரை மதியாதவரும் என்னைச் சேராதவர்'' என இயம்பியவர்கள் அல்லவா அவர்கள்? அபூபக்ர் (ரலி) அவர்களைப் பார்த்து அவர்கள், ''அவருக்குத் தொந்தரவு கொடுத்து விட்டீரே, அவர் இருக்கும் இடத்திலேயே (அவரை இருக்கச் செய்து) விட்டு வந்திருக்கக்கூடாதா? அவரிடம் நானே வந்திருப்பேனே'' என்று கூறினார்கள். அதற்கு அபூபக்ர் (ரலி) அவர்கள், ''இல்லை. நீங்கள் அவரிடம் செல்வதை விட அவர் உங்களிடம் வருவதே உகந்தது'' என உரைத்தார்கள். அதன்பின் அபூகுஹாஃபாவை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தம் அருகில் அமர வைத்து, அவர் நெஞ்சில் தம் கையை அகல வைத்து, அதன் மூலம் அவர் நெஞ்சின் இருளை அகல வைத்து ''ஏற்றுக் கொள்ளுங்கள் இஸ்லாத்தை, நீங்கள் வெற்றியடைந்து விடுவீர்கள்'' என்று கூறினார்கள். அவரும் அக்கணமே இஸ்லாத்தின் மூலக் கொள்கையை மொழிந்து, முஸ்லிமானார். அப்பொழுது அவருக்கு வயது தொண்ணூறு. முதுமையின் காரணமாக முகத்தில் திரையும், முடிகளில் நரையும் அவருக்கு அதிகம் இருந்தன. தம் முடிகளுக்கு அவர் மருதாணியைக் கொண்டோ வேறு பொருளைக் கொண்டோ தாராளமாக சாயமிட்டுக் கொள்ளலாம் என அவர்கள் ஆலோசனை கூறினார்கள். ஆனால் கருப்பு மை தடவ வேண்டாம் என தடை விதித்தார்கள்.

தம் தள்ளாத தந்தையும், அல்லாஹ்வின் தூதரும் மகிழ்ச்சியுடன் அமர்ந்து அளவளாவிக் கொண்டிருப்பதைக் கண்டதும் அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு ஆனந்தம் மேலிடுகிறது. ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! என்னுடைய தந்தை இஸ்லாத்தை ஏற்றுக் கொள்வதை விடத் தங்களுடைய பெரிய தந்தை அபூதாலிப் அவர்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்னும் ஆசையே எனக்கு அதிகம். அதற்குக் காரணம், அபூதாலிப் அவர்களின் மதமாற்றத்தால் தாங்கள் அதிகம் மகிழ்ந்திருப்பீர்கள் என்பதுதான்'' என அவர்கள் கூறினார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்களின் மகிழ்ச்சி தான் தம் மகிழ்ச்சி என அபூபக்ர் (ரலி) அவர்கள் கொண்டிருந்தனர் என்பதை இந்த நிகழ்ச்சி மூலம் தெரிந்து கொள்ள முடிந்தது.

அபூபக்ர் (ரலி) அவர்களின் தாய் எப்பொழுதோ இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டுவிட்டார்கள். தந்தையார் இப்பொழுது ஏற்றுக் கொண்டுவிட்டார்கள். இதை அறிந்து அலீ (ரலி) அவர்கள் இப்படி

அறிவித்தனர். : ''தாய், தந்தை இருவரும் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்ட பெருமையை அபூபக்ர் அவர்களைத் தவிர்த்து, முஹாஜிர் களில் வேறு எவரும் பெறவில்லை.'' இப்படி அறிவித்து அலீ (ரலி) அவர்கள் அக மகிழ்ந்தாலும், அவர்களால் மிக மகிழ முடியவில்லை. அதற்குக் காரணம் இது: அவர்களின் தாய் இஸ்லாத்தைத் தழுவினாலும், தந்தை இஸ்லாத்தைத் தழுவவில்லை.

இதன்பின் நிகழ்ந்த ஹுனைன் போரிலும், அபூபக்ர் (ரலி) அவர்கள் பங்கு கொண்டனர். பத்ருப் போரில் முஸ்லிம்கள் பெரும் வெற்றி பெற்றனர். அதன்பின் நடந்த உஹதுப் போரில் வெற்றியும் இல்லை. தோல்வியும் இல்லை என்னும் நிலை ஏற்பட்டது. அல்லாஹ் புகட்ட நினைத்த பாடமாகும் அது. அதன்பின் மக்கா வெற்றி மாபெரும் வெற்றியாக அமைந்தது. அடுத்து நிகழ்ந்த ஹுனைன் போரில் தோல்விக்குப்பின் வெற்றி என்னும் நிலை உருவா கியது. பெரும் எண்ணிக்கையினர் என்பதால் ஏற்பட்ட பெருமைக் காகவும், அல்லாஹ்வின் அருளின்றி, எதையும் ஆற்ற இயலாது என்பதை உணர்த்துவதற்காகவும், அல்லாஹ் புகட்ட நினைந்த பாடமாகும் அது. போரின் போது ஒரு கட்டத்தில் முஸ்லிம்கள் அண் ணல் நபி (ஸல்) அவர்களை விட்டு ஓடியபோது அவர்களை விட்டு அணுவளவும் அடி பெயர்க்காமல் அப்படியே நின்று அரண் அமைத்த ஒரு சிலரில் அபூபக்ர் (ரலி) அவர்களும் ஒருவர்.

அப்பொழுது உலகாண்ட வல்லரசுகளில் ஒன்றாக இருந்தது உரோமப் பேரரசு. அதன் அரசர் ஹிராக்லியஸ் இஸ்லாத்தின் வளர்ச் சியை அழுக்காறுடன் பார்த்துக் கொண்டிருந்தார். இஸ்லாத்தை இனியும் வளரவிட்டுக் கொண்டு வாளாவிருப்பது அறிவுடைமை ஆகாது என அவர் எண்ணினார். எனவே அவர் அரபிக் கிறிஸ்தவர் களின் ஆதரவுடன் முஸ்லிம்கள் மீது படையெடுக்க ஆயத்தமானார். பேரரசின் மன்னன் ஒருவர், ஒரு பேரீத்தம் பழத்தை இருவர் உண்ண வேண்டியிருந்த பஞ்ச காலத்தில் படையெடுக்கவிருப்பதை அறிந்த போது, அதிரவில்லை அண்ணல் நபி (ஸல்) அவர்கள். அல்லாஹ் மீது அவர்கள் கொண்டிருந்த அசைக்க முடியாத நம்பிக்கை இவ்வித அதிர்ச்சிகளைத் தாங்கும் கேடயமாக அவர்களுக்கு அமைந்திருந்தது. எனவே அவர்கள் உரோமரைச் சந்திக்கத் தயாரானார்கள். அப்பொழுது அவர்கள் தம் தோழர்களிடமிருந்து போருக்காகப் பொருள் உதவி கோருவது அவசியமாகியது.

## வழங்குவதில் போட்டி

அபூபக்ர் (ரலி) அவர்களை இஸ்லாத்திற்குப் பணி புரிவதில் மிகைக்கவேண்டும் என்னும் ஆசை உமர் (ரலி) அவர்களின் உள்ளத்தில் வெகுகாலத்திற்கு முன்பிருந்தே இருந்து கொண் டிருந்தது. 'ஆகா ஆசை அல்ல அது' என்று எண்ணி, அவர்களும் அதற்குத் தம் இதயத்தில் இடம் கொடுத்திருந்தனர். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் போருக்காகப் பொருள் உதவி கோரிய போது, அதற்கான பொன்னான வாய்ப்பு வந்து விட்டதாக அவர்கள் கருதினார்கள். ''அப்பொழுது நான் செல்வ நிலையில் அபூபக்ரை விட மேலாக இருந்தேன். எனவே அவரை அன்று எவ்விதத்திலும் மிகைத்துவிட உறுதி கொண்டி ருந்தேன்.'' என அவர்களே உரைத்தனர். அவர்கள் தம் உடைமைகளில் ஒரு பாதியை எடுத்துக் கொண்டு, அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வந்தார்கள். அதிகப் பொருள் அவர்கள் கொண்டு வந்திருப்பதைப் பார்த்ததும் தமக்கென உமர் எதையாவது எஞ்சவிட்டிருப்பாரா என்னும் ஐயம் ஏற்பட்டுவிட்டது, அண்ணல் நபி (ஸல்) அவர் களுக்கு. ''உமரே! உம் குடும்பத்திற்கு ஏதாவது வைத்து விட்டு வந்தீரா?'' என அவர்களைப் பார்த்து அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கேட்டனர். ''ஆம் அல்லாஹ்வின் தூதர் அவர்களே! இங்கு எவ்வளவு கொண்டு வந்திருக்கிறேனோ, அவ்வளவு அங்கு வைத்து வந்துள்ளேன்'' என உமர் (ரலி) அவர்கள் உரைத்தார்கள்.

அடுத்து அண்ணல் நபி (ஸல்) அவர்கள் சமுகம் அபூபக்ர் (ரலி) அவர்கள் வந்தனர். தம் பங்காக 4000 திர்ஹங்களையும், தம் புழக்கப் பொருள்களையும் கொண்டு வந்து அவர்கள் குவித்தார்கள். அவர்கள் கொண்டு வந்து குவித்தப் பொருள்களைப் பார்த்ததும், அபூபக்ர் வீட்டையே வழித்துக் கொண்டு வந்து வந்திருப்பாரோ என்னும் அச்சம் ஏற்பட்டு விட்டது அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு. ''அபூபக்ரே! உம் குடும்பத்திற்கு ஏதாவது வைத்து வந்திருக்கிறீரா?'' என அவர்களைப் பார்த்து அண்ணல் நபி (ஸல்) அவர்கள் வினவினர். ''என் குடும்பத்தாருக்கு, நான் அல்லாஹ்வையும், அவன் தூதரையும் வைத்து விட்டு வந்திருக்கிறேன்'' என அபூபக்ர் (ரலி) அவர்கள் அறிவித்தனர். தம் வசமிருந்த பொருள்களையெல்லாம் கொண்டு வந்து விட்டதைத்தான் அபூபக்ர் (ரலி) அவர்கள் இவ்விதம் சூசகமாகக் குறிப்பிட்டார்கள். இதனால் தான் அண்ணல் நபி (ஸல்) அவர்களும், ''தாராளத் தன்மையில் அபூபக்ரை மிகைக்கக் கூடிய மனிதர் ஒருவரை நான் அறிய மாட்டேன்'' என வெளிப்படையாகவே அறிவித்தனர்.

இஸ்லாத்திற்காகப் பொருளுதவி செய்வதில் அபூபக்ர் (ரலி) அவர்களை மிகைக்க விரும்பி, அதில் தோற்று விட்ட உமர் (ரலி) அவர்கள், பிறிதொரு சமயம் இது பற்றிப் பேசும் போது பகர்ந்தனர். ''அதிலாவது அபூபக்ரை மிகைக்க எண்ணினேன். ஆனால், அதிலும் நான் பெரும் ஏமாற்றத்துடன் தோற்றேன்'' என்று.

இவ்விதம் போட்டி போட்டுக் கொண்டு தம் தோழர்கள் தந்த பொருளைக் கொண்டு போர்க் கருவிகளும், போருக்கான சாமான்களும் வாங்கிக் கொண்டு தான் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தபூக் போருக்குப் புறப்பட்டார்கள். போகும் போது அவர்கள் மதீனாவின் அருகில் உள்ள தனியத்துல் வதா என்னும் இடத்தில் வைத்துத் தம் படையணிகளை ஏற்றுக் கொள்ளும் வரை, படையணிகளைப் பார்த்துக் கொள்ளும் பணியும், தொழுகை நடத்தும் கடமையும் அபூபக்ர் (ரலி) அவர்களிடமேயே அவர்கள் ஒப்படைத்தனர். இஸ்லாத்தின் கொடியைப் பிடித்திருக்கும் பொறுப்பும் அபூபக்ர் (ரலி) அவர்களிடமே ஒப்படைக்கப்பட்டது.

போருக்குப்பின் போர் நிகழ்ந்து ஹிஜ்ரி ஒன்பதாம் ஆண்டில் ஓரளவு அமைதி ஏற்பட்டது. அவ்வாண்டு தான் ஹஜ் கட்டாயக் கடமைகளில் ஒன்றாக ஆக்கப்பட்டது. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மக்கா சென்று ஹஜ்ஜுக் கடமைகளை ஆற்றிவர அதிகம் விரும்பினார்கள். ஆயினும் அவ்வாண்டு இணை வைப்பவர்கள் கஃபாவைத் தம் ஆடைகளைக் களைந்து போட்டு விட்டு, அம்மணத்துடன் இடம் சுற்றப் போகிறார்கள் என்னும் செய்தி அண்ணல் நபி (ஸல்) அவர்களின் செவியை அடைந்தது. அம்மணத்துடன் இடம் சுற்றும், அம் மானமற்ற மக்களுடன் இடம் சுற்ற அண்ணல் நபி (ஸல்) அவர்களின் மனம் இடம் தரவில்லை. எனவே அவர்கள் அவ்வாண்டு தமக்குப் பதிலாக மக்களை மக்காவுக்கு ஹிஜ்ஜுச் செய்ய அழைத்துச் செல்வதற்குத் தேர்ந்தெடுத்தது அபூபக்ர் (ரலி) அவர்களைத் தாம். அதனால் அபூபக்ர் (ரலி) அவர்களே, இஸ்லாமிய வரலாற்றில் முதல் அமீருல் ஹஜ் ஆனார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தம் சார்பில் பலியிட இருபது ஒட்டகைகளை அபூபக்ர் (ரலி) அவர்களிடம் ஒப்படைத்தனர். தம் பங்கிற்குப் பலியிட அபூபக்ர் (ரலி) அவர்கள் ஐந்து ஒட்டகைகளைக் கொண்டு சென்றனர்.

அபூபக்ர் (ரலி) அவர்கள் மக்கா நோக்கி புறப்பட்டுப் போனதும், அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு இறை செய்தி ஒன்று இறங்கியது.

இந்தச் செய்தியுடன் அவர்கள் அலீ (ரலி) அவர்களை மக்காவுக்கு அனுப்பி வைத்தனர். அபூபக்ர் (ரலி) அவர்கள் தம்முடன் வந்த முஸ்லிம்களுடன் அரீஜ் என்னும் இடத்தை அடைந்து, அங்குக் காலைத் தொழுகைக்காக கை கட்டி வரிசையாக நிற்கும் போது, அண்ணல் நபி (ஸல்) அவர்களின் ஒட்டகைக் குரலைக் கேட்டு உணர்ச்சி வசப்பட்டுக் கூறினார்கள். "அல்லாஹ்வின் தூதர் அவர்கள் வந்து கொண்டிருப்பது போல் தோன்றுகிறது. அவர்கள் வரும்வரை நாம் தாமதிப்போம் அவர்கள் வந்து நமக்குத் தொழுகை நடத்தட்டும்!" என்று.

விரைவில் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் ஒட்டகையில் அமர்ந்து கொண்டு அலீ (ரலி) அவர்கள் வந்து சேர்ந்தார்கள், "என் சம்பந்தமாக ஏதாவது இறைவசனம் வந்ததா?" எனக் கேட்டார்கள். "இல்லை. அல்லாஹ்வின் தூதர் அவர்கள் சமீபத்தில் வெளிவந்த சூரா பராஅத்தை இணைவைப்பவர்களுக்குப் படித்துக் காட்டும்படி என்னை அனுப்பி வைத்தனர்" என அலீ (ரலி) அவர்கள் கூறினர். பிறகு எல்லோரும் மக்கா விரைந்து சென்றடைந்தனர். துல்ஹஜ் மாதம் ஏழாம் நாள் அபூபக்ர் (ரலி) அவர்கள், ஹஜ்ஜின் கடமைகளை மக்களுக்குக் கற்றுக் கொடுத்தார்கள். அலீ (ரலி) அவர்கள் சூரா பராஅத்தையும் ஓதிக்காட்டினார்கள். அல்லாஹ்வின் தூதர் அவர்களின் கட்டளையையும் எடுத்துக் கூறினார்கள். பிறகு தம் வாளை உருவி அம்மணத்துடன் இனிமேல் கஃபாவை இடம் சுற்றுபவர் எவரும் பிணமாவர் என எச்சரித்தனர்.

## அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இறுதி ஹஜ்

அடுத்த ஆண்டு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்கள் தொடர, தம் ஆயுளின் இறுதி ஹஜ்ஜைச் செய்யப் பிறந்த பொன்னகர் நோக்கிப் புறப்பட்டார்கள். இறுதி ஹஜ்ஜின் கடமைகளை இனிதே நிறைவேற்றும்போது, அரஃபாத் வெளியில் வைத்து அவர்கள் அற்புத சொற்பொழிவு ஒன்றைச் செய்தனர். "மக்களே! உலகின் இறுதிநாளில் இறைவன் உங்களைப் பார்த்து, 'நான் அவனுடைய செய்தியை உங்களுக்கு வழங்கினேனா? என்னிடம் ஒப்படைக்கப்பட்ட புனிதப் பொறுப்பை முறையாக நிறைவேற்றினேனா?,' எனக் கேட்டால் நீங்கள் என்ன கூறுவீர்கள்?" எனக் கேட்டனர். "நிச்சயமாக நாங்கள் உங்களுக்கு சாட்சியாக இருப்போம்" என மக்கள் கடல் மறுமொழி பகர்ந்தது. உடனே அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அளவற்ற மகிழ்ச்சி

யுடன், தம்முடைய உச்ச குரலில் மூன்று முறை உரக்கக் கூறினர். ''இறைவனே! அவர்கள் என்ன கூறுகிறார்கள் என்பதற்கு நீயே சாட்சியாக இருக்க வேண்டிக் கொள்கிறேன்.''

அரஃபாத் வெளியில் வைத்துக் கூறியது அக்கணமே அர்ஷை அடைந்துவிட்டது. எனவே அவர்கள் இவ்விதம் கூறிய சிறிது நேரத்தில் இறைவனின் இந்த இறுதிச் செய்தி வந்து விட்டது. ''நான் உங்களுக்கு உங்களுடைய மார்க்கத்தை இன்றைய தினம் பரிபூரண மாக்கி வைத்து விட்டேன். உங்களுக்காக இஸ்லாம் மார்க்கத்தையும் தேர்ந்தெடுத்து (உங்களுக்கு அருள் செய்து அங்கீகரித்து)க் கொண்டேன்'' என அல்லாஹ் அச்செய்தியில் அறிவித்தான். இந்த அறிவிப்பைக் கேட்டதும் மக்கள் ஆனந்தத்தில் மூழ்கினார்கள். ஆனால் அபூபக்ர் (ரலி) அவர்கள் மட்டும் ஆற்றொண்ணாத் துயரத்தில் ஆழ்ந்தார்கள். ''நம் அன்பிற்குரிய அல்லாஹ்வின் தூதர் அவர்கள் நம்மை விட்டுப் பிரியப் போகிறார்கள். அவர்கள் தம் கடமையைப் புரிந்து விட்டார்கள்'' என்னும் சொற்களைக் கூறும் போது அபூபக்ர் (ரலி) அவர்களின் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வழிந் தோடியது. இது அங்கிருந்த மக்களுக்கு ஆச்சரியத்தை அளித்தது. ''மகிழ வேண்டிய இந்நேரத்தில் இம் முதியவர் ஏன் அழுகிறார் ?'' என அவர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டனர். ஆனால், அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ''நீர் கூறுவது சரி'' என அபூபக்ர் (ரலி) அவர் களைப் பார்த்துக் கூறி, அவர்கள் கூறியதை ஆமோதித்தனர். இறை வனின் இறுதிச் செய்தியின் ஊடே மறைந்திருந்த இந்த உண்மையை அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் நுண்ணறிவால் உணர்ந்து, உரைத்த போது தான், அண்மி வரும் அவலத்தை மற்றவர்கள் அறியலானார்கள். அதன்பின் என்ன? அம்மக்கட் கடலைச் சோகக் கடல் சூழ்ந்தது.

இதன்பின் மதீனா திரும்பிய அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இரண்டரை மாதங்கள் தாம் சற்று உடல் நலத்துடன் இருந்தனர். ஆனால் அவர்கள் அவ்வுலகப் பயணத்திற்கு ஒவ்வொரு கணமும் ஆயத்தமாகிக் கொண்டிருந்தார்கள் என்பது அவர்களின் ஒவ்வொரு நடவடிக்கையிலிருந்தும் தெரிந்தது. எங்கு அவர்களைப் பார்த்தாலும், எப்பொழுது அவர்களைப் பார்த்தாலும் அவர்கள் இறைவனை வணங்கிக் கொண்டே இருந்தார்கள். இறைவனின் அழைப்பை அறிவிக்க வருவது இறப்பு நோய். அது அவர்களைப் பற்றியது. அதனால் அவர்களின் உடல் நாளுக்கு நாள் இற்று வந்தது. ஒரு நாள்

நள்ளிரவு அவர்கள் புதைந்து புகழுருவாய் ஆகியிருந்த தம் அருமைத் தோழர்களின் நினைவு வர, அவர்கள் அடக்கப்பட்டிருக்கும் 'ஜன்னத்துல் பக்கீ' என்னும் இடத்திற்குச் சென்றார்கள். ''புதைகுழி மக்களே! அல்லாஹ்வின் சாந்தி உங்கள் மீது உண்டாவதாக! நீங்கள் எங்களை முந்திக் கொண்டு போய் விட்டீர்கள். நீங்கள் விட்டுச் சென்ற இடத்தை விட, நீங்கள் போயிருக்கும் இடம் ஆசீர்வதிக்கப்பட்ட தாகும். நீங்கள் விட்டுச் சென்ற இடத்தில் மக்கள் பேதங்களாலும், விரோதங்களாலும் சூழப்பட்டிருக்கிறார்கள். பேதங்களும், விரோதங் களும் அலைக்குப் பின் அலையாய் வந்து கொண்டிருக்கின்றன. கடைசி அலை முதல் அலையை விட மிகவும் மோசமானதாக இருக்கிறது. விரைவில் நாங்கள் உங்களைச் சந்திப்போம்'' என்று அங்கு அடங்கப்பட்டிருப்பவர்களிடம் கூறினார்கள்.

இதன்பின் அவர்களுக்கு இஸ்லாத்திற்காக வாழ்ந்து, அல்லாஹ் வுக்காக வீழ்ந்த உஹத் தியாகிகளின் உயிர்த் தியாகம் நினைவு வந்தது. எனவே அவர்கள் எட்டு ஆண்டுகளுக்குப் பின் அங்கு அடி எடுத்து வைத்தார்கள். ''இஸ்லாத்திற்காக உயிர் துறந்த அருள் தியாகிகளே! விரைவில் நீங்கள் உங்கள் மத்தியில் என்னைக் காண்பீர்கள்'' எனப் பலமுறை உரைத்தார்கள். ''புதைகுழியில் இருப்பவர்களே! நான் உங்களுக்கு சாட்சியாவேன்'' எனப் பலமாகக் கூறினார்கள். அது கேட்டு அருகில் இருந்த அபூபக்ர் (ரலி) அவர்கள், ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! நாங்களும் அவர்களின் இஸ்லாமியச் சகோதரர் இல்லையா? அவர்கள் இஸ்லாத்தைத் தழுவியது போல் தானே நாங்களும் இஸ்லாத்தைத் தழுவினோம்? அவர்கள் போர் புரிந்தது போலத்தானே, நாங்களும் அல்லாஹ்வுக்காகப் போர் புரிந்தோம்?'' என்று கேட்டனர். ''ஆம்'' என்று கூறி விட்டு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அறிவித்தார்கள் : ''எனக்குப்பின் நீங்கள் என்னவென்ன புதுமைகள் புரியப் போகிறீர்கள் என்பதை நான் அறிய மாட்டேன்.'' இதைக் கேட்டது தான் தாமதம், அபூபக்ர் (ரலி) அவர்கள் துடித்துப் போய்விட்டார்கள். கண்களில் நீர் கரை புரள ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! உங்களுக்குப் பிறகுமா, நாங்கள் உயிர் வாழ்வோம்?'' என அழுது கொண்டே கேட்டார்கள்.

உஹதிலிருந்து ஊர் திரும்பி வீட்டிற்கு வந்த அண்ணல் நபி (ஸல்) அவர்களைப் பார்த்து ஆயிஷா (ரலி) அவர்கள் ''என் தலை என் தலை'' என்று கூறினர். அதற்குக் காரணம் ஆயிஷா (ரலி) அவர்களுக்கு அப்பொழுது இருந்த தலைவலி. அப்பொழுது அண்ணல் நபி (ஸல்)

யுடன், தம்முடைய உச்ச குரலில் மூன்று முறை உரக்கக் கூறினர். ''இறைவனே! அவர்கள் என்ன கூறுகிறார்கள் என்பதற்கு நீயே சாட்சியாக இருக்க வேண்டிக் கொள்கிறேன்.''

அரஃபாத் வெளியில் வைத்துக் கூறியது அக்கணமே அர்ஷை அடைந்துவிட்டது. எனவே அவர்கள் இவ்விதம் கூறிய சிறிது நேரத்தில் இறைவனின் இந்த இறுதிச் செய்தி வந்து விட்டது. ''நான் உங்களுக்கு உங்களுடைய மார்க்கத்தை இன்றைய தினம் பரிபூரண மாக்கி வைத்து விட்டேன். உங்களுக்காக இஸ்லாம் மார்க்கத்தையும் தேர்ந்தெடுத்து (உங்களுக்கு அருள் செய்து அங்கீகரித்து)க் கொண்டேன்'' என அல்லாஹ் அச்செய்தியில் அறிவித்தான். இந்த அறிவிப்பைக் கேட்டதும் மக்கள் ஆனந்தத்தில் மூழ்கினார்கள். ஆனால் அபூபக்ர் (ரலி) அவர்கள் மட்டும் ஆற்றொண்ணாத் துயரத்தில் ஆழ்ந்தார்கள். ''நம் அன்பிற்குரிய அல்லாஹ்வின் தூதர் அவர்கள் நம்மை விட்டுப் பிரியப் போகிறார்கள். அவர்கள் தம் கடமையைப் புரிந்து விட்டார்கள்'' என்னும் சொற்களைக் கூறும் போது அபூபக்ர் (ரலி) அவர்களின் கண்களிலிருந்து நீர் தாரை தாரையாக வழிந் தோடியது. இது அங்கிருந்த மக்களுக்கு ஆச்சரியத்தை அளித்தது. ''மகிழ வேண்டிய இந்நேரத்தில் இம் முதியவர் ஏன் அழுகிறார் ?'' என அவர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டனர். ஆனால், அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ''நீர் கூறுவது சரி'' என அபூபக்ர் (ரலி) அவர் களைப் பார்த்துக் கூறி, அவர்கள் கூறியதை ஆமோதித்தனர். இறை வனின் இறுதிச் செய்தியின் ஊடே மறைந்திருந்த இந்த உண்மையை அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் நுண்ணறிவால் உணர்ந்து, உரைத்த போது தான், அண்மி வரும் அவலத்தை மற்றவர்கள் அறியலானார்கள். அதன்பின் என்ன? அம்மக்கட் கடலைச் சோகக் கடல் சூழ்ந்தது.

இதன்பின் மதீனா திரும்பிய அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இரண்டரை மாதங்கள் தாம் சற்று உடல் நலத்துடன் இருந்தனர். ஆனால் அவர்கள் அவ்வுலகப் பயணத்திற்கு ஒவ்வொரு கணமும் ஆயத்தமாகிக் கொண்டிருந்தார்கள் என்பது அவர்களின் ஒவ்வொரு நடவடிக்கையிலிருந்தும் தெரிந்தது. எங்கு அவர்களைப் பார்த்தாலும், எப்பொழுது அவர்களைப் பார்த்தாலும் அவர்கள் இறைவனை வணங்கிக் கொண்டே இருந்தார்கள். இறைவனின் அழைப்பை அறிவிக்க வருவது இறப்பு நோய். அது அவர்களைப் பற்றியது. அதனால் அவர்களின் உடல் நாளுக்கு நாள் இற்று வந்தது. ஒரு நாள்

நள்ளிரவு அவர்கள் புதைந்து புகழுருவாய் ஆகியிருந்த தம் அருமைத் தோழர்களின் நினைவு வர, அவர்கள் அடக்கப்பட்டிருக்கும் 'ஜன்னத்துல் பக்கீ' என்னும் இடத்திற்குச் சென்றார்கள். ''புதைகுழி மக்களே! அல்லாஹ்வின் சாந்தி உங்கள் மீது உண்டாவதாக! நீங்கள் எங்களை முந்திக் கொண்டு போய் விட்டீர்கள். நீங்கள் விட்டுச் சென்ற இடத்தை விட, நீங்கள் போயிருக்கும் இடம் ஆசீர்வதிக்கப்பட்ட தாகும். நீங்கள் விட்டுச் சென்ற இடத்தில் மக்கள் பேதங்களாலும், விரோதங்களாலும் சூழப்பட்டிருக்கிறார்கள். பேதங்களும், விரோதங் களும் அலைக்குப் பின் அலையாய் வந்து கொண்டிருக்கின்றன. கடைசி அலை முதல் அலையை விட மிகவும் மோசமானதாக இருக்கிறது. விரைவில் நாங்கள் உங்களைச் சந்திப்போம்'' என்று அங்கு அடங்கப்பட்டிருப்பவர்களிடம் கூறினார்கள்.

இதன்பின் அவர்களுக்கு இஸ்லாத்திற்காக வாழ்ந்து, அல்லாஹ் வுக்காக வீழ்ந்த உஹத் தியாகிகளின் உயிர்த் தியாகம் நினைவு வந்தது. எனவே அவர்கள் எட்டு ஆண்டுகளுக்குப் பின் அங்கு அடி எடுத்து வைத்தார்கள். ''இஸ்லாத்திற்காக உயிர் துறந்த அருள் தியாகிகளே! விரைவில் நீங்கள் உங்கள் மத்தியில் என்னைக் காண்பீர்கள்'' எனப் பலமுறை உரைத்தார்கள். ''புதைகுழியில் இருப்பவர்களே! நான் உங்களுக்கு சாட்சியாவேன்'' எனப் பலமாகக் கூறினார்கள். அது கேட்டு அருகில் இருந்த அபூபக்ர் (ரலி) அவர்கள், ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! நாங்களும் அவர்களின் இஸ்லாமியச் சகோதரர் இல்லையா? அவர்கள் இஸ்லாத்தைத் தழுவியது போல் தானே நாங்களும் இஸ்லாத்தைத் தழுவினோம்? அவர்கள் போர் புரிந்தது போலத்தானே, நாங்களும் அல்லாஹ்வுக்காகப் போர் புரிந்தோம்?'' என்று கேட்டனர். ''ஆம்'' என்று கூறி விட்டு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அறிவித்தார்கள் : ''எனக்குப்பின் நீங்கள் என்னவென்ன புதுமைகள் புரியப் போகிறீர்கள் என்பதை நான் அறிய மாட்டேன்.'' இதைக் கேட்டது தான் தாமதம், அபூபக்ர் (ரலி) அவர்கள் துடித்துப் போய்விட்டார்கள். கண்களில் நீர் கரை புரள ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! உங்களுக்குப் பிறகுமா, நாங்கள் உயிர் வாழ்வோம்?'' என அழுது கொண்டே கேட்டார்கள்.

உஹதிலிருந்து ஊர் திரும்பி வீட்டிற்கு வந்த அண்ணல் நபி (ஸல்) அவர்களைப் பார்த்து ஆயிஷா (ரலி) அவர்கள் ''என் தலை என் தலை'' என்று கூறினர். அதற்குக் காரணம் ஆயிஷா (ரலி) அவர்களுக்கு அப்பொழுது இருந்த தலைவலி. அப்பொழுது அண்ணல் நபி (ஸல்)

அவர்களுக்கும் தலைவலி இருந்து கொண்டிருந்தது. இதிலிருந்து அவர்களுக்கு நோய் நாளுக்கு நாள் கூடிக் கொண்டே சென்றது. அந்நிலையிலும் அவர்கள் அல்லாஹ்வின் பள்ளிக்குச் சென்று, மேடை மீது அமர்ந்து கொண்டு, உஹதுப் போரில் உயிர் துறந்த உயர் தியாகிகளுக்காகப் பிரார்த்தித்த பின், "இறைவன் தன் அடியாரிடம், தன்னிடம் இருப்பதையோ, உலகத்தையோ எடுத்துக் கொள்ளும் படிக் கூறினான். அடியார் அவனிடம் இருப்பதையே தேர்ந்தெடுத்துக் கொண்டார்" என்று கூறினார்கள்.

இந்தச் சொற்களில் இருந்த கருத்தும் நெருங்கி வருகிறது. அல்லாஹ்வின் தூதர் அவர்களின் இறப்பு என்னும் வருத்தும் விஷயத்தை உணர்த்தியதும், அபூபக்ர் (ரலி) அவர்களின் கண்கள் ஊற்றுக் கண்களாக உருமாறி விட்டன. "இல்லை; நாங்கள், எங்கள் குழந்தைகள், எங்கள் குடும்பத்தவர்கள், எங்கள் உறவினர்கள், அத்தனை பேரின் உயிரும், உடைமைகளும், தங்களுக்கு அர்ப்பபணமாகுக!" எனக் கூறி அபூபக்ர் (ரலி) அவர்கள் கதற ஆரம்பித்து விட்டார்கள். தம் உயிருக்குப் பகரமாக அபூபக்ர் (ரலி) அவர்கள் கொண்டு வந்து நிறுத்தத் துணிந்த உயிர்களை நினைத்ததும், அண்ணல் நபி (ஸல) அவர்களின் உள்ளம் உருகிவிட்டது. அவர்கள் ஆங்கிருந்த மக்களைப் பார்த்து, "என்னைப் படைத்தவனைத் தவிர்த்து வேறொருவரை நான் தோழராய்த் தேர்வதாய் இருந்தால் அது அபூகுஹாஃபாவின் மகனாய்த்தான் இருப்பார். ஆனால் இஸ்லாம் நம் அனைவரையும் சகோதரத் தளையால் பிணைத்திருக்கிறது" என்றும், "தம் உடலாலும், பொருளாலும் எனக்கு உதவி செய்ததில் அபூகுஹாஃபின் மகனை விட அதிகம் செய்தவர் மனிதரில் இல்லை" என்றும் அளவற்ற நன்றி உணர்ச்சியுடன் அறிவித்தார்கள்.

இதன்பின் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பள்ளியை நோக்கியிருந்த அபூபக்ர் (ரலி) வீட்டு வாயிலைத் தவிர்த்து, மற்ற அனைவர் வீட்டு வாயில்களையும் அடைத்து விடும்படி உத்தரவிட்டனர். இவ்வுத்தரவு பற்றி அவர்களின் சிறிய தந்தை அப்பாஸ் (ரலி) அவர்கள், அவர்களிடம் கேட்ட போது, "அதனை நானாகச் செய்யவில்லை. அல்லாஹ்வின் ஆணையின் பேரில் தான் செய்தேன்" என அவர்கள் கூறினர். உமர் (ரலி) அவர்கள், அவர்களைக் கண்டு, அவர்கள் வீட்டிலிருந்து வெளிப்படும்போது, அவர்களைப் பார்ப்பதற்கு ஒரு துளை வைத்துக் கொள்ளவாவது தம்மை அனுமதிக்க வேண்டும் என வேண்டிய போது, தம் தலையை அசைத்து, அதற்கு அவர்கள்

அனுமதி மறுத்துவிட்டனர். உடனே அபூபக்ர் (ரலி) அவர்களை வீட்டு வாயில் தவிர்த்து மற்ற அனைவர் வீட்டு வாயில்களும் மாற்றப் பட்டன. அபூபக்ர் (ரலி) அவர்கள் வீட்டின் வாயில் பள்ளியின் மேற்கிலும், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் வீட்டு வாயில் பள்ளியின் கிழக்கிலும் அமைந்திருந்தன.

அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு இறுதி நோய் வந்து, இப் பொழுது பத்து தினங்கள் ஆகிவிட்டன. இதுவரை அவர்கள் கஷ்டமாக இருந்தாலும், பள்ளி செல்வதையும், தொழுகை நடத்து வதையும் தவிர்ந்து கொள்ளவில்லை. பதினொன்றாம் நாள் அன்று வியாழக்கிழமை, நான்கு வேளைத் தொழுகையையும் நடத்தி விட்டாலும், ஐந்தாம் வேளைத் தொழுகையை நடத்த அவர்களால் இயலவில்லை. படுக்கையில் அவர்கள் மயங்கிய நிலையில் கிடந்தார்கள். நள்ளிரவு நேரத்தில் அவர்களுக்கு நினைவு திரும்பியது. தம்மைச் சுற்றித் துயரமே உருவாய் அமர்ந்திருந்த தம் தோழர்களைப் பார்த்து, ''உங்களின் இரவுத் தொழுகையை முடித்துக் கொண்டு விட்டீர்களா?'' என ஆவலுடன் கேட்டார்கள். ''இல்லை, இன்னும் இல்லை. நீங்கள் வருவதைத்தான் நாங்கள் எதிர்பார்த்துக் கொண்டி ருக்கிறோம்'' எனத் தோழர்கள் பதில் கூறியதும், அவர்கள் பள்ளிக்குச் செல்வதற்காக உடனே எழுந்தார்கள். ஆனால் அவர்களுக்கு மீண்டும் மயக்கம் வந்துவிட்டது.

சற்றுநேரம் சென்ற பின் அவர்களுக்குச் சிறிது மயக்கம் தெளிந் தது. தண்ணீர் கொணரும்படிக் கூறினார்கள். தண்ணீர் வந்ததும், குளித்தார்கள். குளித்ததும் எழ முயன்றார்கள். மறுபடியும மயக்கம் வந்து விட்டது. மும்முறை அவர்கள் இவ்விதம் எழ முயன்றார்கள். மும்முறையும் அவர்களால் எழ முடியவில்லை. இறுதியில் தம்மால் பள்ளி செல்ல இயலாது எனத் தெரிந்து கொண்டதும், அவர்கள் தம் அன்பிற்குரிய மனைவி ஆயிஷா (ரலி) அவர்கள் பக்கம் திரும்பி, ''சொல்லும் உம் தந்தையிடம் முஸ்லிம்களுக்குத் தொழுகை நடத்தும் படி!''என்று கூறினார்கள். ஆயிஷா (ரலி) அவர்களோ, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியதை ஏற்றுக் கொள்ளவில்லை. ''நிச்சயமாக அவர்கள் இளகிய மனம் அமைந்தவர்கள். தொழுகையில் அல்லாஹ் வின் வசனங்களை ஓதும் போது அழுது விடுவார்கள். மேலும் தாங்கள் தொழவைத்த இடத்தில் நின்றால் அவர்களால் அழுகையை அடக்க இயலாது. அதனால் அவர்கள் ஓதுவது பிறருக்குக் கேட்காமல் போய்

விடும்'' என ஆயிஷா (ரலி) அவர்கள் கூறினார்கள். ஆயிஷா (ரலி) அவர்கள் என்னதான் கூறினாலும் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அபூபக்ரே, அபூபக்ர் மட்டுமே தொழுகை நடத்த வேண்டும் என்பதை வலியுறுத்தினார்கள்.

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இந்த ஆணை மாற்ற முடியாதது என்பதை அறிந்து கொண்டதும் ஆயிஷா (ரலி) அவர்கள், ஹஃப்ஸா (ரலி) அவர்களை, அவர்களின் தந்தை உமர் (ரலி) அவர் களுக்கு ஆதரவாகப் பேசும்படியும் தம் தந்தை அபூபக்கர் (ரலி) அவர்களை இந்த இக்கட்டிலிருந்து காக்கும்படியும் கேட்டுக் கொண்டனர். அதன்படி ஹஃப்ஸா (ரலி) அவர்கள் தம் தந்தைக்கு ஆதரவாகப் பேசியபோது, அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ஹஃப்ஸா (ரலி) அவர்களைப் பார்த்து, ''நீர் யூசுப் (அலை) அவர்களுடன் இருந்த பெண்களைப் போல் (ஆலோசனை கூறுவதில்) இருக்கிறீர். அபூ பக்ரைத் தொழுகை நடத்தும்படிக் கூறும்!'' என்று கண்டிப்புடன் கூறினர்.

உடனே அபூபக்ர் (ரலி) அவர்களிடம், ''நிச்சயமாக அல்லாஹ் வின் தூதர் அவர்கள் தங்களை மக்களுக்குத் தொழுகை நடத்தும்படிப் பணித்தனர்'' என்னும் செய்தி அறிவிக்கப்பட்டது. அபூபக்ர் (ரலி) அவர்கள் தம்மீது சுமத்தப்பட்டிருக்கும் பொறுப்பினை உணர்ந்து, அதனை நிறைவேற்ற அதிகத் தயக்கத்துடன் எழுந்தனர். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் நின்று தொழவைக்கும் இடம் வெறுமனே இருந்ததைப் பார்த்ததுமே அவர்களின் கண்களில் நீர் பெருகி கன்னங் களில் வழிந்தோடியது. அளவிற்கதிகமான துக்க உணர்ச்சி அவர்களை மயக்கமுறச் செய்து விட்டது. அவர்களின் நிலை கண்டதும் மற்றவர் மனங்களும் கலங்கலாயின. அவர்களில் பலர் அழுதும் விட்டனர். மயக்கம் சற்றுத் தெளிந்ததும் அபூபக்ர் (ரலி) அவர்கள், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் நின்று தொழவைக்கும் இடத்திற்கு நடந்து சென்று அடக்கத்துடன் தொழவைத்து முடித்தனர். இதன்பின் அபூபக்ர் (ரலி) அவர்களே, அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்குப் பதிலாகத் தொழ வைத்தனர். அவ்விதம் அவர்கள் தொழ வைத்தவை பதினேழு வக்துத் தொழுகைகளாகும். அந்தப் பதினேழு வக்துகளில், மூன்று வக்து களில் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பங்கு கொண்டனர். அபூபக்ர் (ரலி) அவர்கள் தொழவைத்த முதல் தொழுகை இரவுத் தொழுகை, இறுதித் தொழுகை இளங்காலைத் தொழுகை.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உடல் நலம் குன்றியிருந்த சமயத்தில், ஒரு நாள் தொழுகை நடத்த அபூபக்ர் (ரலி) அவர்கள் அகப்படவில்லை என்றும், எவரோ ஒருவர் உமர் (ரலி) அவர்களைத் தொழுகை நடத்தும்படிக் கூறினார் என்றும் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உமர் (ரலி) அவர்களின் குரலைக் கேட்டு, ''யார் தொழ வைக்கின்றார்?'' என்று கேட்டனர் என்றும், அபூபக்ர் (ரலி) அவர்கள் தொழுகை நடத்தவில்லை என்று தெரிந்ததும், ''அபூகுஹாஃபா மகனைத் தவிர்த்து வேறு எவரும் தொழுகை நடத்தக்கூடாது'' என்று கூறினர் என்றும் அபூபக்ர் (ரலி) அவர்கள் வருவதற்குள் உமர் (ரலி) அவர்கள் தொழுகையை முடித்து விட்டனர் என்றும் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் ஆணைப்படி அபூபக்ர் (ரலி) அவர்கள் மீண்டும் அத்தொழுகையைத் தொழவைத்தனர் என்றும் கூறப்படுகிறது. இந்தச் செய்தி ஆதாரமானதாகத் தோன்றவில்லை. அதற்குக் காரணம் தொழுகை நடத்தும் பொறுப்பேற்றிருந்த அபூபக்ர் (ரலி) அவர்கள் தொழுகை நேரத்தில் பள்ளியில் ஆஜராகாமல் இருக்கவும் மாட்டார்கள். அந்தச் சமயத்தில் உமர் (ரலி) அவர்கள் தொழவைக்கத் துணிந்திருக்கவும் மாட்டார்கள். ஆரம்பத்தில் உமர் (ரலி) அவர்கள், அபூபக்ர் (ரலி) அவர்களை முந்த முயன்றதுண்டுதான். ஆனால் அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு அடுத்தவர் தாம் என்பதை, எப்பொழுதோ ஏற்றுக் கொண்டு விட்டார்கள்.

ஒரு நண்பகல் தொழுகைக்கு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அப்பாஸ் (ரலி), அலி (ரலி) ஆகியோர் ஆதரவில் பள்ளிக்குப் புறப்பட்டனர். அப்பொழுது அபூபக்ர் (ரலி) அவர்கள் தொழுகை நடத்திக் கொண்டிருந்தனர். போகும் போது வழியில் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தம்மைத் தாங்கிக் கொண்டு வரும் ஒருவர் காதில், ''அல்லாஹ் எனக்குத் தொழுகையில் புத்துணர்ச்சியைத் தந்துள்ளான்'' என்று கூறினர். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் வருவதை உணர்ந்ததும், அபூபக்ர் (ரலி) அவர்கள் தாம் நின்று தொழுகை நடத்திக் கொண்டிருந்த இடத்திலிருந்து, பின்புறம் வர எத்தனித்தனர். ஆனால் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அவ்விதம் செய்ய வேண்டாம் என அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு சாடை செய்து காட்டிவிட்டு, தம்மை அபூபக்ரின் அருகில் கொண்டு போய் அமர்த்தும்படிக் கூறினர். அண்ணல் நபி (ரலி) அவர்கள் வருவதை அறிந்ததும், மக்களும் அவர்களுக்கு வழி விட்டார்கள். அவர்கள் அப்பொழுது தமக்கிருந்த தலைவலியைத் தணிப்பதற்காகத் தம் தலையைச் சுற்றித் துணி ஒன்றைக் கட்டியிருந்தனர். அகலாப் பிணியாலும், அப்பொழுதிருந்த

வலியாலும், அவர்கள் அதிகம் களைத்துக் காணப்பட்டனர். ஆயினும் மக்கள், அபூபக்ர் (ரலி) அவர்களின் தலைமையில் அணி அணியாய் நின்று அல்லாஹ்வைப் பணிவுடன் தொழுவதைப் பார்த்ததும் அவர் களின் மனத்தில் மகிழ்ச்சி மண்டியது. அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு வலப்புறமாக* அமர்ந்து அவர்கள் தொழத் தொடங்கினார்கள். அபூபக்ர் (ரலி) அவர்களும் தாம் ஓதிக் கொண்டிருந்த சூராவை விட்ட இடத்திலிருந்து தொடர்ந்தார்கள். தொழுகை முடிந்ததும், அண்ணல் நபி (ஸல்) அவர்கள், அபூபக்ர் (ரலி) அவர்கள் தாம் வந்ததை உணர்ந்து தொழ வைத்துக் கொண்டிருந்த இடத்திலிருந்து நகர முயன்றதை மனத்திற் கொண்டு, ''உம் நிலையில் உறுதியாய் இருக்கும் படி உமக்கு உணர்த்தியும், உம்மைப் பின் வாங்க வைத்தது எது?'' என்று கேட்டனர். அதற்கு அபூபக்ர் (ரலி) அவர்கள் அடக்கத்துடன், ''அல்லாஹ்வின் தூதர் முன் நிற்க அபூகுஹாஃபா மகனால் எப்படித் துணிய முடியும்?'' என்று கூறினர்.

சில நாட்கள் சென்றன. அன்று ரபீவுல் அவ்வல் பிறை பன்னி ரன்டு, திங்கட்கிழமை, அண்ணல் நபி (ஸல்) அவர்களை இதுவரை பிடித்திருந்த பிணியின் பிடி, அன்று சற்றுத் தளர்ந்திருந்தது. உண்மை யில் அது அணையப் போகும் விளக்குக் காட்டும் அதிக வெளிச்சம் அன்றி வேறில்லை. பள்ளிக்குப் பக்கத்தில் தான் இருந்தது அவர்களின் அறை. பள்ளியையும், அறையையும் பிரிக்கும் திரையை அவர்கள் கொஞ்சம் தூக்கிப் பள்ளிக்குள் பார்த்தனர். அப்பொழுது மக்கள் அபூபக்ர் (ரலி) அவர்கள் தலைமையில் தொழுவது, அவர்களின் பார்வையில் பட்டது. அந்தக் காட்சியில் சற்று நேரம் தம் பார்வையைப் பதித்துக் கொண்டிருந்த போது, அவர்களின் மனத்தில் மகிழ்ச்சியும், முகத்தில் மலர்ச்சியும் ஏற்பட்டன. திரை தூக்கப்பட் டதால் ஏற்பட்ட அசைவை உணர்ந்த மக்கள், மனத்தில் அல்லாஹ்வின் தூதர் அவர்கள் தொழுகையில் கலந்து கொள்ளப் போகிறார்களோ, என்னும் எண்ணம் ஊசலாடியது. அதனால் அபூபக்கர் (ரலி) அவர் களின் கவனமும் கலைந்தது. அதை அறிந்து கொண்ட அல்லாஹ்வின் தூதர் அவர்கள் தொழுகையைத் தொடரும்படி அவர்களுக்கு சமிக்ஞை செய்துவிட்டுத் திரையைத் தணித்தனர்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் நலம் அடைந்து வருகிறார்கள் என நம்பி ஆறுதல் அடைந்து கொண்டிருந்தனர் மக்கள். அவர்களில்

* இடப்புறமாக அமர்ந்து தொழுதனர் என்னும் ஒரு கருத்தும் உண்டு.

ஒருவராக அபூபக்ர் (ரலி) அவர்களும், இருந்தனர். எனவே அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் சென்று, ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! நாங்கள் எல்லோரும் எப்படி இருக்கவேண்டும் என விரும்பினோமோ அப்படி இருக்கிறது உங்களின் உடல் நிலை. எனவே நான் சுன்ஹ் வரை சென்று வர அனுமதி தந்தால் செல்வேன்'' என்று கூறினார். அதற்கு அண்ணல் நபி (ஸல்) அவர்கள், அக்கணமே அனுமதி வழங்கினர். சுன்ஹில் அபூபக்ர் (ரலி) அவர்களின் மனைவி ஹபீபா (ரலி) அவர்கள் இருந்து கொண்டிருந்தனர்.

நண்பலுக்குச் சற்று முன்வரை நன்றாக இருந்த அண்ணல் நபி (ஸல்) அவர்களின் உடல்நிலை, அதன் பின்தான் மோசமாகத் தொடங்கியது அப்பொழுது அவர்கள் தம் அன்பு மனைவி ஆயிஷா (ரலி) அவர்களின் கைகளில் சாய்ந்து கொண்டிருந்தார்கள். அவர் களைத் தாங்கிக் கொண்டிருந்த ஆயிஷா (ரலி) அவர்களின் கைகள் அவர்களின் உடல் கனம், கனத்திற்குக் கணம் அதிகரித்துக் கொண்டி ருப்பதை உணர்த்தின. அறிவு மிக்க ஆயிஷா (ரலி) அவர்கள், அல்லாஹ்வின் தூதர் அவர்களுக்கு என்ன நேர்ந்து கொண்டிருக்கிறது என்பதை ஒரளவு ஊகித்துக் கொண்டனர். அல்லாஹ்வின் தூதர் அவர்களின் உடல் குளிர்ந்து கொண்டிருந்தது. அவர்களின் நெற்றியில் வியர்வை முத்து ஒளிர்ந்து கொண்டிருந்தது. திடும் என அவர்களின் செங்கைகள் உயர்ந்தன, செவ்விதழ்கள் திறந்தன. ''மேலான நண்பனான அல்லாஹ்வுடன்'' என்று அவர்கள் கூறினார்கள். அதையே இரண்டாம் முறையும் கூறினார்கள். அதையே மூன்றாம் முறை கூறும் போது, அந்த வார்த்தைகள் மிகவும் மென்மையாகி விட்டன. அதன்பின் மெதுவாக அவர்களின் கைகள் அவர்களின் விலாப்புறங்களில் விழுந்தன. அவர்களின் உடல் நேராகியது. அவர்களின் நாடித்துடிப்பு அடங்கியது.

அகிலத்தின் இறப்பை ஒத்த அல்லாஹ்வின் தூதரின் இறப்புச் செய்தி கூர்வேல் போல் தம் செவியில் விழுந்து உள்ளத்தைக் குத்திக் கூறாக்க, உயிரில் ஒரு பகுதியை இழந்தவர்களாய் துடிதுடித்த வண்ணம் அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் புரவியில் ஏறிக்கொண்டு சுன்ஹிலிருந்து மதீனா விரைந்து வந்தார்கள். அல்லாஹ்வின் தூதர் அவர்கள் இறந்து விட்டார்கள் என்னும் பொல்லாச் செய்தியைக் கேட்டதும், அனலில் விழுந்த புழுப்போல் ஆன மதீனா மக்கள் அனைவரும் அழுது புரண்டு கொண்டு, அல்லாஹ்வின் தூதர் அவர்களின் இல்லம் முன் திரண்டு கொண்டிருந்தனர். அவர்கள் முன்

நின்று உமர் (ரலி) அவர்கள் பேசிக் கொண்டிருப்பதைப் பார்த்தாலும், அது அபூபக்ர் (ரலி) அவர்களின் மனத்தில் பதியவில்லை. அதை கவனிக்கக் கூடிய நிலையில் அவர்களின் மனம் இருக்கவில்லை. எனவே அவர்கள் தம் ஆவியிலும் ஆயிரம் மடங்கு மேலான தோழரின் உயிர் அடங்கிய உடல் உறையும் அறையின் உள்ளே நுழைந்தார்கள். அமைதியுற்றிருந்த அந்த அழகுத் தோழரின் நிலவு முகத்தை மறைத்திருந்த யமன் நாட்டுத் துகிலை நீக்கினார்கள். அந்த மனிதப் புனிதரின், மனித உருவில் வந்த அந்த மறையவன் தூதரின் மகிதலமே எவருக்காகப் படைக்கப்பட்டதோ, அந்தப் புண்ணியரின், கண்ணியரின் எழில் தவழும் இனிய முகத்தில், தம் இதழ் பதித்து முத்தமிட்டார்கள். அசையும் போதெல்லாம் அறிவுரைகளை வழங்கிய அந்த இதழ்கள் இனி அசையமாட்டா, நோக்கும் போதெல் லாம் நெஞ்சைக் குளிர்வித்த அந்த விழிகள் இனி திறக்கமாட்டா என நினைத்ததுமே அபூபக்ர் (ரலி) அவர்களின் மனம் வெடித்துவிடும் நிலைக்குள்ளாகியது. உடைப்பெடுத்துக் கொண்ட ஊருணிகள் போல் இரு விழிகளிலிருந்தும் நீர் பெருக அபூபக்ர் (ரலி) அவர்கள் கூறினார் கள் : ''எந்தை தாய் உயிர்கள் உங்களுக்கு அர்ப்பணம்! உங்களின் வாழ்வும் புனிதமானதாயிருந்தது. உங்களின் இறப்பும் புனிதமானதாய் இருக்கிறது. இறைவனால் உங்களுக்கு விதிக்கப்பட்ட இறப்பைத் தாங்கள் சுவைத்துவிட்டீர்கள். அதனை இரு முறை சுவைக்க இறைவன் ஒரு போதும் செய்யமாட்டான்.'' இதன்பின் அவர்கள், அல்லாஹ்வின் தூதர் அவர்களின் எழில் முகத்தை இனி என்று காண்போம் என்னும் ஏக்கத்துடன் மொய்த்துக் கொண்டிருந்த தம் முகத்தை, அந்த முத்து முகத்திலிருந்து விலக்க மனமில்லாமல் விலக்கி, அதே துணி கொண்டு மூடிவிட்டு, நெஞ்சை நெருப்பையும் விஞ்சிய வெந்தீ எரிக்க அந்த அறையை விட்டும் அரைப் பிணமாய் வெளியே வந்தார்கள்.

## உமர் (ரலி) அவர்களின் உரை

உமர் (ரலி) அவர்கள் தம் முன் திரண்டு நிற்கும் மக்களுக்கு இவ்விதம் உரையாற்றிக் கொண்டிருப்பது, அப்பொழுது தான் அபூபக்ர் (ரலி) அவர்களின் செவியில் விழுந்தது : ''நயவஞ்சகர்கள் கூறுகின்றனர். அல்லாஹ்வின் தூதர் அவர்கள் இறந்து விட்டனர் என்று. நான் கூறுகிறேன் அல்லாஹ் மீது ஆணையிட்டு, அவர்களை அல்லாஹ் நிச்சயம் எழச் செய்வான் என்று மூஸா (அலை) அவர் களைப் போலவே, அவர்களும் அல்லாஹ்விடம் சென்றிருக்கிறார்கள்.

மக்கள் இப்படித்தான் மூஸா (அலை) அவர்கள் இறந்து விட்டனர் என்று அப்பொழுது கூறினர். ஆனால் அவர்கள் நாற்பது நாட்களுக்குப் பின் திரும்பி வந்தார்கள்''. உமர் (ரலி) அவர்கள் இவ்விதம் உரைத்ததுடன் நில்லாமல், ''அல்லாஹ்வின் தூதர் அவர்கள் இறந்து விட்டார்கள் என்று கூறுவோரைக் கொல்லாது விடப்போவதில்லை'' எனச் சூளுரைக்கவும் செய்தார்கள்.

அன்பு மிகுதியால் உமர் (ரலி) அவர்கள் உண்மையை உணர்ந்து கொள்ளாமல் புரியும் பெரும்பிழையை அபூபக்ர் (ரலி) அவர்கள், அரைக் கணத்தில் அறிந்து கொண்டார்கள். அல்லாஹ்வின் தூதர் அவர்கள் அமர்ந்து உரையாற்றும் மேடையை நோக்கிப் போகும் போது, அவர்கள் உமர் (ரலி) அவர்களைப் பார்த்து. ''ஆணையிட்டுக் கூறுபவரே! அப்படியே அமரும்! உம் நாவைக் கட்டுப்படுத்திக் கொள்ளும்!'' என்று கூறினார்கள். இது உமர் (ரலி) அவர்களின் செவியில் விழவே செய்தது. ஆயினும் அவர்கள் தம் பேச்சை நிறுத்தத் தயாராய் இல்லை. அது கண்டு அபூபக்ர் (ரலி) அவர்கள், ''மக்களே!'' என மக்களை அழைத்தார்கள். உடனே மக்கள் அபூபக்ர் (ரலி) அவர்கள் பக்கம் திரும்பினர். மக்களின் உடலைத் திருப்பியது போதாது, உளத்தையும் திருப்ப வேண்டும் எனத் தீர்மானித்து அபூபக்ர் (ரலி) அவர்கள், எச்சரிக்கையுடன் இவ்விதம் கூறினார்கள் : ''எவர் முகம்மதை வணங்கிக் கொண்டு வந்தாரோ, அவர் இதோ முகம்மது இறந்து விட்டார்கள் என்பதை உணர்ந்து கொள்வாராக! எவர் அல்லாஹ்வை வணங்கி வந்தாரோ அவர் அல்லாஹ் இருக்கிறான். அவன் என்றும் இருப்பவன் அவன் இறப்பவன் அல்லன் என்பதை அறிந்து கொள்வாராக! நீங்கள் முகம்மதை வணங்குகிறீர்களா, முகம்மதின் இறைவனை வணங்குகிறீர்களா? முகம்மதின் இறைவன் என்றென்றும் வாழ்பவன். முகம்மது நம்மைப் போல் இறக்கக் கூடியவர்களே. அவர்கள் முன்னறிவிப்புச் செய்ததுபோலவே, எல்லோருக்கும் பொதுவான இறப்பு விதியை நுகர்ந்திருக்கின்றனர்.'' இதன் பின் அபூபக்ர் (ரலி) அவர்கள், தம் கூற்றிற்கு ஆதாரமாக இறைவனின் இந்த வசனத்தையும் எடுத்துக் கூறினார்கள் : ''முகம்மது (ஸல்) ஒரு தூதரேயன்றி (இறக்காமல் இருக்கக் கூடிய) ஆண்டவன் அல்ல. அவருக்கு முன்னரும் (இவ்வாறே) தூதர்கள் பலர் சென்றிருக்கின்றனர். அவர் இறந்து விட்டால் அல்லது வெட்டப்பட்டு விட்டால், நீங்கள் புறங்காட்டிச் சென்று விடுவீர்களோ? (அவ்வாறு) எவனேனும் புறங்காட்டிச் சென்று விட்டால், அதனால் அவன் அல்லாஹ்வுக்கு

ஒன்றும் தீங்கிழைத்து விடமாட்டான். நன்றியறிவோருக்கு அல்லாஹ் அதிசீக்கிரத்தில் (நற்) கூலியைத் தருவான்.'' (3:144)

இறைவனின் இந்தச் சொற்கள் மந்திரச் சொற்களைப் போல் வேலை செய்தன. மக்கள் இதற்கு முன் இந்தச் சொற்களைக் கேட்டுத்தான் இருந்தார்கள். ஆனால், அவற்றின் உண்மைக் பொருளை அவர்கள் இதுவரை புரிந்து கொள்ளவில்லை. ''அபூபக்ர் (ரலி) அவர்கள் குறிப்பிட்ட இறைவசனம் அப்பொழுதுதான் இறக்கப் பட்டது போல் எங்களுக்குத் தோன்றியது. எத்தனையோ முறை அதனை நாங்கள் இதற்குமுன் ஓதிய போதிலும்'' என அப்துல்லாஹ் இப்னு அப்பாஸ் (ரலி) அவர்கள் அறிவித்தனர். இந்த இறை வசனத்தை அபூபக்ர் (ரலி) அவர்கள் எடுத்துக் காட்டி, விரித்துக் கூறியதைக் கேட்டதும், ஆங்கிருந்த மக்கள் அனைவரும் 'கோ' வெனக் கதறினார்கள். உண்மையில் அவர்கள் உமர் (ரலி) அவர்களின் உரை கேட்டு அல்லாஹ்வின தூதர் அவர்கள் இறக்கக் கூடியவர்கள் அல்லர், அவர்கள் மயங்கியிருக்கிறார்களே தவிர மரிக்கவில்லை என நம்பிக் கொண்டிருந்தனர். அதனால் தான் அவர்களால் அபூபக்ர் (ரலி) அவர்கள் எடுத்துக் கூறிய இறை மொழியைக் கேட்டதும், அழுகையை அடக்க இயலவில்லை. உரத்துப் பேசிக் கொண்டிருந்த உமர் (ரலி) அவர்களே, இந்த உண்மையை உணர்ந்த போது நிலை குலைந்தார்கள். நீள நிலம் தம் காலுக்கடியில் நழுவுவதாய் உணர்ந் தார்கள், ஊமையானார்கள், உணர்விழந்தார்கள். தாம் அப்பொழுது உற்ற நிலை பற்றி, தமக்கு அப்பொழுது ஏற்பட்ட இற்ற நிலை பற்றி, உமர் (ரலி) அவர்களே பின்பொரு சமயம் இவ்வாறு குறிப்பிட்டனர்: ''இறைமறையின் இந்த உரைகளைக் கேட்டதும் என் கால்கள் முறிந்து விட்டன. நிற்கவும் இயலாதவனாய் நான் ஆகி விட்டேன். தரையில் சாய்ந்து வீழ்ந்த போதுதான், அல்லாஹ்வின் தூதர் அவர்கள் இறந்து விட்டார்கள் என்னும் நம்பிக்கை எனக்கு ஏற்பட்டது.



# 4. தலைவர்

அல்லாஹ்வின் தூதர் அவர்கள் இறக்கக் கூடியவர்களே, அவர்கள் இறந்து விட்டார்கள். இறப்பில்லாதவன் அல்லாஹ் ஒருவனே என்னும் உண்மையை உணர்ச்சியின் ஊற்றுக் கண் உடைத்துக் கொண்டு, ஆற்றொணா அவலம் ஆறாகப் பெருகி நின்ற நேரத்தில் அறிவித்து அதனை மக்கள் ஏற்கவும் செய்து, திரும்பியபின் அபூபக்ர் (ரலி) அவர்களும் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் நெருங்கிய தோழர்களும், அவர்களைக் குளிப்பாட்டுவது பற்றியும், அடக்குவது பற்றியும் ஆலோசனை செய்ய ஆரம்பிக்கும் போது, அங்கு அவசரமாக வந்த முகைரா பின் ஷுஃபா என்னும் அன்ஸாரி, உமர் (ரலி) அவர்களைப் பார்த்து, ''கத்தாபின் மகனே! ஒரு நிமிடம் வெளியே வாருங்கள்!'' என்றார். அதற்கு உமர் (ரலி) அவர்கள் தம்மை விட்டு விடும் படியாயும், தாம் அலலாஹ்வின் தூதருக்கு இறுதிக் கடன் புரியும் வேலையில் ஈடுபட்டிருப்பதாயும் கூறினார்கள். உடனே அந்த அன்ஸாரி, ''ஒரு சம்பவம் நடந்திருக்கிறது. அன்ஸாரிகள் – மதீன நகர் மக்கள் – சகீபா பனி அல்சாயிதாவில் திரளாகக் கூடியிருக்கிறார்கள். நிலைமை மோசமாயிருக்கிறது. நீங்கள் உடனே அங்குபோய் அதனை கவனிக்க வேண்டியது அவசியம். இல்லையேல் அன்ஸாரிகள் ஏதாவது செய்து விடுவார்கள். அது போரைக் கூட மூட்டி விடலாம்'' என எச்சரித்தார். இதைக் கேட்டதும் உமர் (ரலி) அவர்கள், அபூபக்ர் (ரலி) அவர்களைப் பார்த்து, ''நாம் போவோம்!'' என்றார்கள். அன்ஸாரிகள், அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்குப் பின் ஆட்சிக்கு வரக் கூடிய ஒருவரைத் தேர்ந்தெடுப்பதைப் பற்றித்தான் அங்குப் பேசிக் கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிந்ததும், அபூபக்ர் (ரலி) அவர்கள்

அதிர்ந்தார்கள். அந்நியரை உடன் பிறப்புக்கு ஒப்பானவராய் ஏற்றுக் கொண்ட அன்ஸாரிகள் அவசரப்பட்டு விட்டது, அபூபக்ர் (ரலி) அவர்கள் மனத்தை வருத்தியது. இந்தச் சந்தர்ப்பத்தில் புரியப்படும் மயிரிழைப் பிழையும் மாபெரும் தீமை இழைத்துவிடும் என அவர்கள் அஞ்சினார்கள். எனவே அவர்கள் ஆவியை இழந்து விட்டு அமைதி யுற்றிருக்கும் தம் அருமைத் தலைவரின் பக்கம் இருக்கும் பாக்கியத்தை இழக்கத் துணிந்தார்கள். கணப்பொழுது தாமதமும் காலமெல்லாம் நினைந்து வருந்தக்கூடிய பாதகத்திற்குப் பாதை அமைத்து விடலாம் என எண்ணித்தான் உமர் (ரலி) அவர்களையும், தம்முடன் அழைத்துக் கொண்டு, ஊர்பொது மன்றம் நோக்கி நடந்தார்கள். அவர்களை அபூ உபைதா பின் ஜர்ராஹ் (ரலி) அவர்கள் பின் தொடர்ந்தனர்.

இப்பொழுது அவர்களை இரு அன்ஸாரிகள் சந்திக்கிறார்கள் : ''எங்கே போகிறீர்கள்?'' என்று கேட்கிறார்கள். அன்ஸாரிகளின் கூட்டம் ஒன்றிற்குப் போவதாக உமர் (ரலி) அவர்கள் கூறுகிறார்கள். அதைக் கேட்டு அந்த அன்ஸாரிகள் அவர்கள் அங்குப் போகாதிருப்பது அவர்களுக்கு நல்ல தென்றும், 'அன்ஸாரிகளே தங்களுக்குள் தங்கள் விஷயங்களைத் தீர்த்துக் கொள்ளவிட்டு விடுங்கள்' என்றும் கூறு கிறார்கள். அதைக் கேட்டு உமர் (ரலி) அவர்கள் பிரமாணம் செய்து தாங்கள் அங்குப் போகத் தான் வேண்டும் என்கின்றனர். உள்ளத்தில் உறுதியும் உரமும் உள்ளவர்கள் தாம் அபூபக்ர் (ரலி) அவர்கள். ஆயினும் ஏற்பட்டிருந்த நெருக்கடி நிலையை உணர்ந்ததும் அவர்களின் நெஞ்சம் கூடச் சற்று நடுங்குகிறது.

முன்பு அகபா வெளியில் வைத்து அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு மதீனாவில் அடைக்கலம் தர ஒப்புக் கொண்டவர்களில் ஒருவர் தாம் ஸஃத் பின் உபாதா. நோய் வாய்ப்பட்டிருந்த அவரைக் கலிபாவாக ஆக்க அன்ஸாரிகள் ஒருமித்துத் தீர்மானித்து அவரை வீட்டிலிருந்து அழைத்து வந்திருந்தனர். அவர் இப்பொழுது அன் ஸாரிகள் முன் உரையாற்றிக் கொண் டிருக்கிறார்; அல்ல, விரோதத்தின் வித்துக்களை வேகமாக அள்ளி வீசிக் கொண்டிருக்கிறார். அவை அன்ஸாரிகளின் செவியில் விழுந்து கொண்டிருக்கின்றன. அவர்களின் மனம் கெட்டுக் கொண்டிருக்கிறது. ஸஃத்பின் உபாதா விதைத்த வித்துக் கள் இவை தாம் : ''அன்ஸாரிகளே! அல்லாஹ்வின் தூதர் அவர்கள் பத்தாண்டுகள் வரை அழைத்தும் அவர்களின் அழைப்பை ஒரு சிலர் தவிர்த்து வேறு எவரும் ஏற்றுக் கொள்ளவில்லை. அந்த ஒரு சிலராலும் அல்லாஹ்வின் தூதர் அவர்களைக் காக்கவும் இயலவில்லை,

இஸ்லாத்தின் மதிப்பை உயர்த்தவும் முடியவில்லை. இறுதியில் அல்லாஹ் அன்ஸாரிகளாகிய உங்களுக்கு மேன்மையை வழங்கினான். அல்லாஹ்வின் மீதும், அவன் தூதர் மீதும் உங்களை விசுவாசம் கொள்ள வைத்தான்; அல்லாஹ்வின் தூதர் அவர்களுக்கும், அவர் களின் தோழர்களுக்கும் அடைக்கலம் அளிக்கும் அரும்பேற்றை அளித்தான். நீங்கள் அல்லாஹ்வின் தூதருடைய பகைவருடன் புனிதப்போர் புரிந்து, அல்லாஹ்வின் தூதர் நிலையையும், இஸ் லாத்தின் மதிப்பையும் உயர்த்தினீர்கள். அவர்களின் பகைவர் வலிமையை, உங்களின் வலிமை மிகைத்திருந்தது எண்பிக்கப்பட்டது. அதனால் இறுதியாக அரபு நாட்டு மக்கள் அல்லாஹ்வின் ஆணைமுன் பணிய வேண்டியதாயிற்று. அவர்களை, உங்களின் வாள், அடிபணிய வைத்தது. இப்பொழுது அல்லாஹ்வின் ஆணைப் படி, அல்லாஹ் வின் தூதர் அவர்கள் இறந்து விட்டார்கள். அவர்கள் உங்கள் மீது பூரண திருப்தி கொண்டிருந்தார்கள். அதனால் அவர்களுக்குப் பிறகு வருபவர் விஷயத்தில் நீங்கள் உறுதியாக இருக்கவேண்டும். இது உங்களின் உரிமை, வேறு எவருடையதுமல்ல.''

உணர்ச்சியைக் கிளறி விட்டு அறிவை அதற்கு அடிமைப் படுத்தும் இந்தப் பேச்சு அவர் எதிர்பார்த்த பலனை அளிக்கத் தவற வில்லை. அவர் கூறியதைக் கூர்ந்து கவனித்த அன்ஸாரிகளின் உள்ளங் களை அது ஊடுருவிச் சென்று, அந்நியரை உடன் பிறப்புக்கு ஒப்பான வர்களாய்க் கருதிய உதாரகுணத்திற்கு உலை வைத்தது. எனவே அவர்கள், அவர் தம் பேச்சை முடித்த போது, அவர் கூறியதை ஏற்பதுபோல் பெரிய ஆரவாரம் செய்தார்கள். அத்துடன் கூட நிற்க வில்லை அவர்கள். அவர் ஆலோசனைப்படி நடப்பதாயும், அந்தப் பதவிக்கு அவரையே தேர்ந்தெடுக்க இணங்குவதாயும் தெரிவித் தார்கள். அதன்பின் அன்ஸாரி ஒருவர் எழுந்து, சஃத் பின் உபாதாவின் உரைக்கு உரம் சேர்ப்பது போல பேசினார். அடுத்துப் பேசியவர்களும் அதேவிதமே பேசினார்கள். அப்பொழுது ஒருவர் ஒரு வினாவை எழுப்பினர். ''இஸ்லாத்தை முதலில் ஏற்றவர்கள் அன்ஸாரிகளே யாயினும், அல்லாஹ்வின் தூதருடன் தங்களுக்கிருக்கும் உறவு முறைகளைக் கூறி, முஹாஜிரீன்கள் – மக்க நகர் அகதிகள் – தம் உரிமையைக் கோரினால் நாம் என்ன விளக்கம் கூறுவது?'' என்பதே அவர் எழுப்பிய வினா. உடனே ஓர் அன்ஸாரி. ''அவர்களிடமிருந்து ஓர் அமீர் நம்மிலிருந்து ஓர் அமீர் என வைத்துக் கொள்வோம்'' என்றார். ''ஆம் இதைத் தவிர்த்து வேறு எந்த நிபந்தனையும் ஏற்கத்

தக்கதல்ல' என்றார் இன்னொரு அன்ஸாரி. அதைக்கேட்டு சஃத் பின் உபாதா, ''இதுவே நீங்கள் வெளிப்படுத்தும் முதல் பலவீனம்'' என்று கூறினார்.

இப்பொழுது அபூபக்ர் (ரலி) அவர்கள், உமர் (ரலி) ஆகியோர் அங்கு வந்து சேர்ந்தனர். அங்கு ஒருவர் போர்வையால் போர்த்திக் கொண்டு படுத்திருந்தார். ''அவர் யார்?'' என உமர் (ரலி) அவர்கள் கேட்டார்கள். ''சஃத் பின் உபாதா'' என பதில் உரைக்கப்பட்டபோது, ''அவர் ஏன் இப்படிப் படுத்திருக்கிறார்?'' என உமர் (ரலி)அவர்கள் வினவினர். ''அவருக்கு உடல் நலமில்லை'' என விடை அளிக்கப் பட்டது. அதன்பின் அவர்கள் மூவரும் அமர்ந்தனர். உடனே ஓர் அன்ஸாரி தங்களின் உரிமைகளை எடுத்து விளக்கினார். அவரைத் தொடர்ந்து மற்றவர்களும் அப்படியே பேசினர். அவர்களுக்குப் பதில் அளிக்க உமர் (ரலி) அவர்கள் முனைந்தார்கள். ஆனால் அவர்களைச் சற்று அமைதியாயிருக்கும்படிக் கேட்டுக் கொண்டு விட்டு அபூபக்ர் (ரலி) அவர்கள் பேச ஆரம்பித்தார்கள். இதைப் பற்றி உமர் (ரலி) அவர்கள் பிறகு ஒரு சமயம் பேச நேர்ந்த போது, ''அந்தக் கூட்டத்தில் நான் பேச எழுந்தது ஒரு முக்கிய விஷயத்தைக் கூறத்தான். அபூபக்ர் அதனை விட்டு விடக் கூடும் என நான் அஞ்சினேன். ஆனால், நான் என்ன கூற நினைந்தேனோ அவற்றையெல்லாம் அவர்கள் கூறினர். அழகாகவும் கூறினர். எதையும் கூட்டவுமில்லை, குறைக்கவு மில்லை'' என்று குறிப்பிட்டனர்.

அபூபக்ர் (ரலி) அவர்கள் அப்பொழுது பேசியது இது தான் : ''தங்கள் மூதாதையரின் மதத்தை விடுவது அரபிகளுக்கு மிகவும் கடினமானதாக இருந்தது. ஆனால், அல்லாஹ் தன் தூதரின் மக்களில், முஹாஜிரீன்கள் மீது இந்தக் கௌரவத்தைச் சொரிந்தான். அவர்கள், அவர்களை அல்லாஹ்வின் தூதர் என அங்கீகரித்தார்கள். அவர்களின் மார்க்கத்தை ஏற்றுக்கொண்டார்கள். அவர்களுக்கு ஆறுதல் அளித் தார்கள். எல்லாவிதமான துன்பங்களையும், துயரங்களையும் சகித்துக் கொண்டார்கள். தங்கள் மக்களின் ஏசலையும் எதிர்ப்பையும் தாங்கிக் கொண்டார்கள். எண்ணிக்கையில் மிகவும் குறைவானவர்களாய் இருந் தாலும் அவர்கள், தங்கள் மக்களின் அவமதிப்பையும், வெறுப் பையும், விரோதத்தையும் பொருட்படுத்தவில்லை. அல்லாஹ்வின் தூதர் குடும்பத்தைச் சேர்ந்த முஹாஜிரீன்களே இந்த மண்ணில் அல்லாஹ்வை வணங்கியவர்கள். இவ்விதம் கூற எனக்கு எந்தவிதத் தயக்கமும் இல்லை. முதலில் முஹாஜிரீன் குழுவினரே கலீபத்திற்கு

மிகவும் உரிமையுள்ளவர்கள். நியாயமற்றவர்களைத் தவிர்த்து, மற்ற வர்கள் அனைவரும் என் கருத்தை ஏற்றுக் கொள்வர். அன்ஸாரிகளே! மார்க்கத்தில் உங்கள் நிலையின் மேன்மையையும், இஸ்லாத்தில் உங்கள் உயர்வையும், எவரும் மறுக்க முடியாது. அல்லாஹ்வால், நீங்கள் உங்கள் மார்க்கத்திற்கும், அதன் தூதருக்கும் ஆதரவாளர்களாய்த் தேர்ந் தெடுக்கப்பட்டிருக்கிறீர்கள். அல்லாஹ்வின் தூதர் அவர்கள் மக்கா விட்டு அனுப்பப்பட்டது உங்களிடம் தான். அல்லாஹ்வின் தூதரு டைய தோழர்களில் அதிகமானவரும், அவர்களின் துணைவர்களில் அதிகமானவர்களும் உங்களிடமிருந்தே வந்தனர். உண்மையில் ஆரம்ப முஸ்லிம்களுக்கு அடுத்த தகுதி, உங்களுக்குத்தான் உண்டு. எனவே நாங்கள் அமீர்களாகவும், நீங்கள் அமைச்சர்களாகவும் இருப் பதே நியாயமாகும். நீங்கள், உங்களின் கோரிக்கையில் பிடிவாதமாய் இல்லாதிருந்தால், நாங்கள் உங்களுடன் ஆலோசியாமல் ஒன்றுமே செய்ய மாட்டோம்.''

அபூபக்ர் (ரலி) அவர்கள் இவ்விதம் கூறியதும் கப்பாப் பின் முன்திர் என்பவர் எழுந்தார் : ''அன்ஸாரிகளே!'' என அழைத்தார்; ''கலீபாவைத் தேர்ந்தெடுக்கும் அதிகாரத்தை உங்கள் கைகளிலிருந்து எடுத்துக் கொள்ள அனுமதிக்காதீர்கள்! மற்றவர்களால் நீங்கள் ஆளப்படுவதற்கு இணங்காதீர்கள்! அவர்கள் இதை ஏற்காவிடில் அவர்களில் ஒருவரும், உங்களில் ஒருவரும் இருக்கட்டும்!'' என்றார். அதையே அங்கீகரிப்பது போல் அங்குப்படுத்திருந்த சஃத் பின் உபாதாவும் முணுமுணுத்தார்கள். உடனே, ''அல்ல, நாங்கள் அமீர்கள், நீங்கள் அமைச்சர்கள்'' என்றார்கள் அபூபக்ர் (ரலி) அவர்கள். ''இரு அமீர்கள் ஒத்து வரமாட்டார்கள்'' என்றார்கள் உமர் (ரலி) அவர்கள். அதற்குக் கோபத்துடன கப்பாப் பின் முன்திர் மறுப்புக் கூறினார். அவருக்கு உமர் (ரலி) அவர்கள் தக்க பதில் அளித்தனர்.

இதன்பின் அபூபக்ர் (ரலி) அவர்கள், தாம் அவ்விதம் கோருவது அதிகார ஆசையால் அல்ல என்றும், அரபு நாட்டு மக்கள் குறைஷிகள் அல்லாத ஒருவருக்குப் பணிய மறுக்கும் இயல்பு உள்ளவர்கள் என்றும், எடுத்துக் கூறினார்கள். ஆதரவாளர்களைக் குறைத்து, அகதிகளை உயர்த்திவிட்டது அபூபக்கர் (ரலி) அவர்களின் வாதம் என எவராவது கருதினால், அது தவறாகும். அரபு மக்களின் இதயத்தை அறிந்தவர்களாதலால் தான் அபூபக்கர் (ரலி) அவர்கள் முஸ்லிம்களின் ஒற்றுமையைக் காக்க இதைச் சொல்ல நேர்ந்தது. உண்மையில் அரபு

மக்கள் ஒரு போதும், ஒருவருக்கு அடிபணிந்து இருந்ததில்லை. அரசர் ஒருவருக்கு அடிபணிவதை அரபு மக்கள் இயல்பிலேயே எதிர்ப் பவர்கள். அரசு ஒன்றிற்குக் கட்டுப்படும் நிலைமை வந்தால், அவர்கள் குறைஷிகள் அல்லாத ஒருவரை ஏற்க ஒரு போதும் இணங்க மாட்டார்கள். குறைஷிகளை அரபு மக்கள் மதிப்பது, அன்றோ அதற்குச் சற்று முன்னரோ ஏற்பட்டதல்ல. அவ்விதம் குறைஷிகளை அவர்கள் மதிக்கக் காரணம், அரபு அவனியின் ஆன்மீக மையமான கஃபாவின் காவலராயிருக்கும் புனிதப் பொறுப்பை அவர்கள் பெற்றிருந்ததாகும். இதையெல்லாம் அபூபக்ர் (ரலி) அவர்கள் இதமாக எடுத்துக் கூறிவிட்டு, "உமரிடமோ, அபூ உபைதாவிடமோ கைபிடித்துப் பிரமாணம் செய்யுங்கள்!" என வேண்டிக் கொண் டார்கள். இதன் பிறகும் அன்ஸாரிகள் உணர்ச்சியுடன் தங்கள் உரிமையை வற்புறுத்தியபோது, ஆங்கிருந்த அபூ உபைதா (ரலி) அவர்கள், "அன்ஸாரிகளே! உதவி செய்வதிலும், ஊக்குவிப்பதிலும் நீங்கள் முந்தினீர்கள். எனவே குதர்க்கம் பண்ணுவதிலும், முரண்படு வதிலும் முந்திவிடாதீர்கள்!" என வேண்டிக் கொண்டனர்.

அபூபக்ர் (ரலி) அவர்களின் உரையில் இருந்த உண்மையை உணர்ந்ததும், அன்ஸாரிகளான ஜைத் பின் தாபித் (ரலி) அவர்களும், பஷீர் பின் ஸஃது (ரலி) அவர்களும் மதீன நகர் மக்களுக்கு நிலைமையை விளக்க எழுந்தனர். ஜைத் பின் தாபித் (ரலி) அவர்கள் கூறினர் : "அல்லாஹ்வின் தூதர் அவர்களே, அகதிகளின் ஒருவர் தாம். எனவே, இமாமும் (தலைவரும்) அகதிகளில் இருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட ஒருவராக இருப்பது அவசியமாகும். அல்லாஹ்வின் தூதர் அவர் களுக்கு உதவியாளராய் ஆனது போல், இமாமுக்கும் உதவியாளராக ஆவோம்." அவரின் கருத்தையே எதிரொலிப்பது போல் பஷீர் பின் ஸஃது (ரலி) அவர்களும் பகர்ந்தனர் : "இறைவனுடைய மகிழ்ச்சிக் காகவும், அவனுடைய விருப்பத்திற்கு அடிபணிந்துமே நாம் உயிர் களையும் உடைமைகளையும் அர்ப்பணித்தோம். இப்பொழுது இஸ்லாத்தின் நலத்திற்காக இத்தகைய ஓர் அர்ப்பணம் அவசிய மாயின், நாம் குறைஷிகளில் ஒருவரைத் தேர்வதற்கு இணங்குவோம். எவ்வாறு அல்லாஹ்வின் தூதர் அருகில் நின்றோமோ, அவ்வாறே அவர்களின் பிரதிநிதியின் பக்கமும் நிற்பதாய்ப் பிரமாணம் பண்ணுவோம்."

இப்பொழுதும் அபூபக்ர் (ரலி) அவர்கள், உமரையோ, அபூ உபைதாவையோ தேர்ந்தெடுத்துக் கொள்ளும்படி மீண்டும் வேண்டி

னார்கள். ஆனால், அவர்கள் இருவரும், "இல்லை. இந்த விஷயத்தில் உங்களை முந்தி, எங்களுக்கு உயர் இடம் கொடுக்க முடியாது. முஹாஜிரீன்களிலேயே மிகவும் சிறப்பானவர்கள் தாங்கள் தாம். குகையிலிருந்த இருவரில் இரண்டாமவர், தாங்கள் தாம். அல்லாஹ் வின் தூதருக்குப் பதிலாகத் தொழுகை நடத்தியவர்கள் தாங்கள் தாம். தொழுகையே நம் மார்க்கத்தில் மிகவும் சிறப்பானதாகும். எனவே, இந்த விஷயத்தில் தங்களை முந்த எவருக்குத் தகுதி இருக்கிறது? உங்களின் முன்னிலையில் அந்தப் பதவியை அடைய எவருக்குத் தகுதி இருக்கிறது? நீங்கள் தாம் அல்லாஹ்வின் தூதரின் பிரதிநிதி ஆவீர்கள். உங்களுக்குப் பிரமாணம் செய்வது, அல்லாஹ்வின் தூதருக்கு மிகவும் அன்பானவருக்குச் செய்யும் பிரமாணமாகும். உங்கள் கையை நீட்டுங்கள். நாங்கள் பிரமாணம் எடுத்துக்கொள்கிறோம்!" என்றார்கள்.

## இறை தூதரின் பிரதிநிதி

இவ்விதம் உமர் (ரலி) அவர்களும், அபூ உபைதா (ரலி) அவர்களும் உரைத்ததும் உடனே பஷீர் பின் சஃத் (ரலி) அவர்கள் தாம் புரிவதை மற்றவர்கள் ஏற்பாரா, மாட்டாரா என்றெல்லாம் பாராமல், "இறைவன் மீது பிரமாணம் செய்கிறேன். விசுவாசப் பிரமாணம் செய்யும் இந்தச் செயலில் எவரும் என்னை முந்தக்கூடாது" என்று கூறிக்கொண்டே தம் கையை நீட்டி அபூபக்ர் (ரலி) அவர்களின் கையைப் பற்றி 'பைஅத்' என்னும் பிராமணத்தை எடுத்துக் கொண்டு விட்டனர்.* 'அடுத்து உமர் (ரலி) அவர்களும், அபூ உபைதா (ரலி) அவர்களும் அதனைச் செய்தனர். கப்பாப் பின் முன்திர் கடும் சினத்துடன் பஷீர் பின் சஃது (ரலி) அவர்களைப் பார்த்து, "சஃத் பின் உபாதாவை நீர் ஏன் கைவிட்டீர்? அவர், தம் உரிமையை ஏன் இழக்க வைத்தீர்? இதற்கெல்லாம் காரணம் அவர் மீது உமக்கு இருக்கும் அழுக்காறு தான்" என்று கூறினார். ஆனால் பஷீர் பின் சஃத் (ரலி) அவர்கள் அதை மறுத்தனர். உடனே கப்பாப் பின் முன்திர் தம் வாள் பிடியில் கை வைத்தார். அன்ஸாரிகள் அவரைப் பிடித்துக் கொண்டு, ஆறுதல் படுத்தினர். "என்னை ஆறுதல் செய்து என்ன பயன்? நம் சந்தர்ப்பம் போய்விட்டது உங்கள் குழந்தைகள் இவர்கள் (முஹா ஜிரீன்கள்) வீட்டு வாயிலில் தண்ணீர் கேட்பதையும், அதைக்கூட அவர்கள் பெறாததையும் காண்கிறேன்" என்றார். அதைக்கேட்டு

* முதலில் பிரமாணம் செய்தவர் இவரா, உமர் (ரலி) அவர்களா என்பதில் கருத்து வேறுபாடு உள்ளது.

அபூபக்ர் (ரலி) அவர்கள், ''என்னிடமிருந்தோ, என்னைப் போன்ற வரிடமிருந்தோ, அவ்விதச் செயல் வரும் என நீர் அஞ்சவேண்டாம்!'' என்றனர். அதைக் கேட்டு அவர், ''நாம் உயிர் வாழும் வரை நட்பையும், அடக்கத்தையும் வளர்த்துக் கொள்வோம். அடுத்த தலைமுறையின்போது அப்படி இருக்காது. எனினும் அல்லாஹ் அவனை நம்பியவர்க்கு உதவுவான்'' என்று கூறி முடித்தார்.

முஹாஜிரீன்களும், அன்ஸாரிகளில் அவ்ஸ் கோத்திரத்தாரும் கூட்டம் கூட்டமாக வந்து அபூபக்ர் (ரலி) அவர்களின் கையைப் பற்றி 'பைஅத்' செய்ய ஆரம்பித்தனர். ஆனால், கஸ்ரஜ் கோத்திரத்தாருக்கு தங்கள் தலைவர் சஃஅத் பின் உபாதா தேர்ந்தெடுக்கப்படவில்லை என்பது வருத்தத்தை அளித்தது. தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவரிடம் தம் விசுவாசத்தைத் தெரிவித்து, 'பைஅத்' செய்வது அரபு நாட்டு வழக்கமாகும். அதனைப் பெறாதவரை தேர்ந்தெடுக்கப்பட்ட தலைவரின் பதவி அங்கீகரிக்கப்பட்டதாகாது. அந்த இடத்தில் இருந்தும், பிரமாணம் செய்யாத ஒருவர் சஃஅத் பின் உபாதா தான். உடல் நலக் குறைவால் அங்குப் படுத்திருந்த அவர் பிரமாணம் செய்யப் பாய்ந்த மக்களின் காலடியில் மிதிபட்டுக் காலமானார் என்று சிலரும், குற்றுயிராய்க் கிடந்த அவர் வீட்டிற்குத் தூக்கிச் செல்லப்பட்டார் என்று, இன்னும் சிலரும் கூறுகின்றனர். சுருக்கமாகக் கூறுவதென்றால், சஃஅத் பின் உபாதா நிலைக்கும், அவர் விதைத்த வேற்றுமையின் நிலைக்கும் அதிக வேறுபாடு இருக்கவில்லை.

இஸ்லாத்தின் ஒற்றுமையைக் குலைக்கவிருந்த அபாயத்தை அகற்றிவிட்டு, அபூபக்ர் (ரலி) அவர்கள், ஆவி இழந்திருந்த தம் ஆருயிர்த் தலைவரின் அருகிருந்து ஆகவேண்டிய காரியங்கள் செய்ய ஓடிவந்தார்கள். அன்றிரவு அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இறுதிப் பயணத்திற்கு வேண்டிய வேலைகள் செய்வதில் கழிந்தது. அடுத்த நாள் புலரவே கூடாது என மாந்தர் மனம் நினைந்த பொல்லாத நாள். ஆனால், அல்லாஹ்வின் ஆணைப்படி அது புலர்ந்தது. அண்ணல் நபி (ஸல்) அவர்களை எந்த இடத்தில் அடக்குவது என்னும் பிரச்சினை இப்பொழுது எழுந்தது. சிலர் மக்காவில் என்றார்கள். சிலர் மதீனாவில் என்றார்கள். சிலரோ பைத்துல் முகத்தஸில் அடக்கப்பட வேண்டும் என்றார்கள். இந்த விவாதத்தை முடிவிற்குக் கொணர அபூபக்கர் (ரலி) அவர்கள் செய்த அறிவிப்பு, எல்லோர் வாயையும் மூட வைத்தது. ''ஒரு நபி இறந்த இடத்திலேயே நல்லடக்கம் செய்யப்பட வேண்டும்'

என அல்லாஹ்வின் தூதர் அவர்கள் நவின்றதை நான் கேட்டிருக்கிறேன்'' என்றார்கள் அவர்கள். இதன்பின் அண்ணல் நபி (ஸல்) அவர்களை மதீனாவில் அடக்கும் இடத்தையும் எல்லோரும் ஏற்கும் விதத்தில் தேர்ந்தொடுத்தனர். இது அண்ணல் நபி(ஸல்) அவர்கள் இறந்ததும், அபூபக்ர் (ரலி) அவர்கள் தீர்த்த இரண்டாவது பிரச்சினையாகும். அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ஆயிஷா (ரலி) அவர்கள் குடியிருந்த இல்லத்தில் நல்லடக்கம் செய்யப்பட்டனர். அவர்களை அடக்கிய பிறகும், மக்கள் ஒருவித ஏக்கத்துடன் இந்த இடத்திலேயே நின்று கொண்டிருந்தார்கள். பெண்மடியிலிருந்து பிறந்தவர்கள் அனைவரும் மண்மடிக்குள் போகத்தான் வேண்டும் என்பதை அறிந்திருந்தாலும், மக்கள் மனத்தை விட்டும் ஏக்கம் அவ்வளவு எளிதாக விலகுவதாகவில்லை.

## பொதுப் பிரமாணம்

அடுத்த நாள் மக்களின் பிரமாணத்தைப் பெற அபூபக்ர் (ரலி) அவர்கள் தயாராயினர். அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இறப்புச் செய்தி கேட்டு, மதீனா வந்த மக்கள் அனைவரும் அங்குத் திரண்டிருந்தனர். அவர்களைப் பார்த்து உமர் (ரலி) அவர்கள் பிவருமாறு பேசினர்: ''நான் எதிர்பார்த்தேன், அல்லாஹ்வின் தூதர் அவர்கள், நமக்கெல்லாம் பிறகும் கூட உயிர் வாழ்ந்து கொண்டு இருப்பார்கள் என்று. ஆனால், அவர்கள் இறந்து விட்டார்கள். அல்லாஹ் உங்களுக்கு வழி காட்ட ஒளி (குர்ஆன்) ஒன்றைத் தந்திருக்கிறான். அந்த ஒளியைக் கொண்டே அல்லாஹ் தன் தூதருக்கு வழிகாட்டினான். இப்பொழுது உங்களுக்கு அபூபக்ர் கிடைத்திருக்கிறார்கள். அவர்கள் அல்லாஹ்வின் தூதருடைய தோழர்; குகையிலிருந்த இருவரில் இரண்டாமவர். உங்களின் காரியங்களைக் கவனிக்க நிச்சயமாக அவர்கள் உங்களில் மிகவும் தகுதியானவர்கள்.''

அரிய உண்மை ஒன்றைக் கூறிவிட்டு, அழகிய அறிமுகம் ஒன்றைச் செய்து விட்டு உமர் (ரலி) அவர்கள், அபூபக்ர் (ரலி) அவர்களை மின்பருக்கு வருமாறு அழைத்தார்கள். அபூபக்ர் (ரலி) அவர்களோ, அதனை மறுத்து விட்டு மௌனமாய் அமர்ந்திருந்தனர்; உமர் (ரலி) அவர்கள் பலமுறை அழைத்த பின்னர் தான் தம் தகுதிக்கு மேற்பட்ட பதவி ஒன்று, தமக்கு வந்திருப்பதாய்க் கருதி, அதனால் ஏற்பட்ட அடக்கத்துடன் எழுந்து, தயக்கத்துடன் நடந்து, அண்ணல் நபி(ஸல்) அவர்கள் பயன்படுத்திய படிக்குக் கீழிருந்தபடி மீது

அச்சத்துடன் அமர்ந்தார்கள். அப்பொழுது மக்கள் அப்பதவிக்கு அவர் களிலும் தகுதியானவர் எவர் என வினவுகிறாற்போல், திரள் திரளாய் வந்து நீட்டப்பட்டிருந்த அவர்களின் கைகளைப் பற்றிப் பிரமாணம் செய்தார்கள். கை இணைத்து இப்படிப் பிரமாணம் செய்தவர்களின் எண்ணிக்கை 33000 ஆகும். பிரமாணம் செய்யாதவர்களில் ஒருவர் அலீ (ரலி); ஆயினும் அவர்கள் பிறகு பிரமாணம் செய்யத் தவறவில்லை.

மக்களின் இந்தக் தேர்வு உண்மையில் அல்லாஹ்வின் தேர்வு, அல்லாஹ்வின் தூதரின் தேர்வு என்பதற்கு ஆதாரம் ஆயிஷா (ரலி) அவர்களின் இந்தச் சொற்கள்;

''.........அபூக்ருக்கும், அவருடைய மகனுக்கும் (ஆள்) அனுப்பி (எனக்குத்தான் கிலாபத் பதவி வேண்டும் என்று) சொல்பவர்கள் சொல்லாமலும்,(கிலாபத் பதவிக்கு) ஆசைப் படுபவர்கள் ஆசைப்படாமலும் இருப்பதற்காக (கிலாபத் பதவிக்கு ஒருவரை) நியமனம் செய்து விட விரும்பினேன் அல்லது நாடினேன். பின்னர் (அவரைத் தவிர்த்து வேறு எவருக்கும் அப்பதவியை அளிக்க) அல்லாஹ் மறுக்கிறான். முஃமின்களும் (வேறு ஒருவருக்குக் கிலாபத் பதவி அளிப்பதை) அல்லாஹ் அங்கீகரிக்க மாட்டான்,முஃமின்களும் (அளிக்க) மாட்டார்கள் என அல்லாஹ்வின் தூதர் அவர்கள் கூறினர்.''

அல்லாஹ்வின் தூதரின் தேர்வு அதுதான் என்பதற்கு இன்னொரு ஆதாரம், ஜுபைர் இப்னு முத் இம் (ரலி) அவர்கள் கூறும் இந்த நிகழ்ச்சி: ''அண்ணல் நபி (ஸல்) அவர்கள் சமூகம் ஒரு பெண்மணி வந்தார். அவரிடம், மீண்டும் வந்து தம்மைச் சந்திக்கும்படி அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அதற்கு அந்தப் பெண்மணி, 'நான் வந்து தங்களைக் காண வில்லையாயின் என் செய்வது?' என்று கேட்டார். அவர் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இறப்பைக் குறித்து இப்படிக் கேட்டிருக்கலாம். அதை உணர்ந்து கொண்டு அண் ணல் நபி (ஸல்) அவர்கள், 'என்னை நீர் காணவில்லையாயின் அபூபக்ரிடம் செல்லும்!' என்று கூறினர்.''

இந்தக் தேர்வை அலீ (ரலி) அவர்களும் அங்கீகரித்தனர் என்பதற்கு ஆதாரம், அவர்களின் இவ்வார்த்தைகள். ''எவருக்கு அல்லாஹ் ஜிப்ரயீல் (அலை), முகம்மது (ஸல்) ஆகியோர் மூலம் சித்தீக் என்னும் பெயர் சூட்டினானோ, எவரைத் தொழவைக்க இமாமாக,தங்களின் பிரதிநிதியாக அல்லாஹ்வின் தூதர் அவர்கள் ஆக்கினார்களோ,

அவர்களை (அபூபக்ர் அவர்களை) உலகிற்காக, (கிலாபத்திற்காக) நாமும் பிரியப்படுகிறோம்''

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இறப்புப் படுக்கையில் இருக்கும்போது, அப்பாஸ் (ரலி) அவர்கள், அலீ (ரலி) அவர்களிடம் கிலாபத்திற்கு உரிமை கோரும்படிக் கூறியதும் உண்மை, அதை அலீ (ரலி) அவர்கள் மறுத்ததும் உண்மை. ஆனால் பிறகு, அலீ (ரலி) அவர்கள் அப்பாஸ் (ரலி) அவர்கள் சொன்னபடி செய்யாமல் போனதற்காகவும், அதன் காரணமாகக் கிலாபத்தை இழந்ததற்காகவும் வருந்தியதாக ஒரு செய்தி வரலாற்றில் வருகிறது. ஆனால் அதற்கு ஆதாரம் இல்லை.

## அரிய உரை

திரண்டு வந்திருந்த மக்கள் பிரமாணம் செய்து முடித்ததும், அபூபக்ர் (ரலி) அவர்கள் எழுந்தார்கள்; அமருமுன் இருந்ததை விட அதிகப் பொறுப்பு இப்பொழுது தம் தோள் மீது அமர்ந்திருப்பதை உணர்ந்தார்கள்; அந்த உணர்ச்சியால் ஏற்பட்ட அடக்கத்துடன், அல்லாஹ்வைப் புகழ்ந்தார்கள். அதன்பின் மக்களைப் பார்த்துப் பின்வரும் உரையை ஆற்றினார்கள்: ''மக்களே! அல்லாஹ்வின் ஆணையாகச் சொல்கிறேன். ஒருபோதும் நான் இந்தப் பதவியை விரும்பவில்லை. ஒரு பகல் ஓர் இரவுக்குக் கூட நான் அதற்கு ஆசைப் படவில்லை. அதனை எனக்கு அளிக்கும்படி இறைவனிடம் நான் பகிரங்கமாகவோ, மறைமுகமாகவோ வேண்டியதும் கிடையாது. அதனை அடைந்ததில் நான் மகிழவும் இல்லை. ஆனால், நான் ஏதாவது ஒன்று எற்படலாம் என அஞ்சினேன்.அல்லாஹ்வின் உதவி இன்றி ஆற்ற இயலாத பெரும் பொறுப்பு ஒன்று, உண்மையில் என் னிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது. ஆனால் என்னுடைய இடத்தில், என்னைவிட வன்மை வாய்ந்த ஒருவர் இருக்க வேண்டும் என நான் விரும்பினேன்.

''மக்களே! அரசின் பொறுப்புகள் சுமத்தப்பட்டிருக்கும் என்னைப் பாருங்கள்! நான் உங்களில் சிறந்தவன் அல்ல, எனக்கு உங்கள் ஆலோசனை தேவை, உதவி தேவை. நான் சரியாக நடந்தால், என்னை ஆதரியுங்கள்! நான் தவறு செய்தால் அறிவுரை பகருங்கள்! ஆளுவதற்கு ஏற்படுத்தப்பட்ட மனிதரிடம் உண்மையைக் கூறுவது விசுவாசம், உண்மையை மறைப்பது துரோகம். என் பார்வையில் பலமுள்ளவரும்

பலமற்றவரும் ஒரே மாதிரியே. இருவருக்கும் நீதி வழங்க நான் விரும்புகிறேன்''

இதன்பின் அபூபக்ர் (ரலி) அவர்கள் அதிகாரம் அனைத்தும் மக்களுடையது என்னும் மக்களரசுக் கொள்கையை வலியுறுத்தினார்கள். ஓர் அரசின் முக்கியப் பொறுப்பு அமைதி காப்பது, ஒழுங்கைப் பேணுவது, மக்களின் உரிமைகளைக் பாதுகாப்பது தான் என விளக்கினார்கள். இறுதியாக, ''நான் அல்லாஹ்வுக்கும், அவன் தூதருக்கும் அடிபணியும் வரை நீங்கள் எனக்குத் கீழப் படியுங்கள்! ஒருகால், நான் அல்லாஹ்வுக்கும், அவன் தூதருக்கும் அடிபணியா விட்டால், உங்களின் கீழ்ப்படிதலைப் பெறும் உரிமையை இழந்து விடுகிறேன்'' என்றார்கள். அறிவுமிக்க இந்த உரையை அவர்கள் முடிக்கும் போது, தொழுகை நேரம் வந்துவிட்டது. உடனே அவர்கள் அனைவரையும் அல்லாஹ்வைத் தொழ வருமாறு அழைத்தார்கள்.

அல்லாஹ்வின் தூதர் அவர்களுக்கு அடுத்தவராக இதுவரை இருந்தும், இப்பொழுது அவர்களின் பிரதிநிதியாக கலீபாவாக எல்லோராலும் எற்றுக்கொள்ளப்பட்ட போதும், அடக்கம் என்னும் அழகிய குணம் அவர்களை விட்டும் அகலவில்லை. அவர்களை ஒருவர் அல்லாஹ்வின் கலீபா என அழைத்து விட்டார். அதனைப் பிழை என எடுத்துக் கூறி அவ்விதம அழைத்தவரை இவ்விதம் திருத்தினார்கள். ''நான் அல்லாஹ்வின் கலீபா அல்ல, அவன் தூதரின் கலீபாதான். அதிலேயே நான் அதிகம் திருப்தியுறுகிறேன். வேத வெளிப்பாடுகளைப் பெறுவதும், பாவங்களிலிருந்து பாதுகாப்புப் பெறுவதும், அல்லாஹ்வின் தூதர் அவர்கள் ஒருவருக்கே உரியவை. அவற்றை என்னிடமிருந்து எதிர்பார்க்க வேண்டாம்!'' இந்தக் கருத்தை மக்கள் மனத்தில் நிறுத்த வேண்டும் என்பதற்காக இதனைத் தம் உரைகளில் அவர்கள் அடிக்கடிக் குறிப்பிட ஆரம்பித்தார்கள். அவர்கள் ஒருபோதும், கிலாபத்திற்கும், நுபுவ்வத்திற்கும் இடையிலிருந்த வேறுபாட்டை மறந்ததில்லை. அவர்கள், தாம் அல்லாஹ்வின் பிரதிநிதி அல்ல, அவன் தூதரின் பிரதிநிதி தான் எனக் கூறியதில் அடக்கம் மட்டுமல்ல, அறிவும் இருந்தது. அல்லாஹ்வின் தூதர் அவர்கள், தாம் உயிர் வாழும்போது, தம் கடமையில் சிலவற்றைப் பிறரைக் கொண்டு செய்தார்கள். அவர்கள் இறந்தபோது, அவ்விதக் கடமைகளைச் செய்பவர் தாம் கலீபா என்பதை அபூபக்ர் (ரலி) அவர்கள் தெளிவாகத் தெரிந்திருந்தார்கள்.

## சிறுமிகளின் வருத்தம்

அபூபக்ர் (ரலி) அவர்கள் கலீபாவாகத் தேர்ந்தெடுக்கப் பட்டது அறிந்து, மதீனா மூதூரே மகிழ்ச்சியில் மூழ்கியது. ஆனால், அந்த மகிழ்ச்சியில் அங்கிருந்த இரு சிறுமிகள் மட்டும் பங்கு கொள்ள வில்லை. அதற்குக் காரணம் இதுதான். அபூபக்ர் (ரலி) அவர்கள், தம் வீட்டின் அருகில் வாழ்ந்த அந்தச் சிறுமிகளுக்கு, அவர்களின் ஆடுகளிலிருந்து பால் கறந்து கொடுப்பது வழக்கம். அவர்கள் கலீபாவாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட செய்தி அறிந்தபோது, அந்தச் சிறுமிகள் ஐயுற்றார்கள். இனிமேல் அவர்கள் வழக்கம்போல் தங்களுக்குப் பால் கறந்து தருவார்களா என்று. இது பற்றி அந்தச் சிறுமிகள் பேசிக் கொண்டிருந்த போது, அபூபக்ர் (ரலி) அவர்கள், அவ்வழியே சென்றார்கள்.அது அவர்களின் செவிகளில் விழுந்தது. உடனே அவர்கள் அச்சிறுமிகள் பக்கம் திரும்பி, ''இல்லை, நிச்சயமாக நான் உங்களுக்கு வழக்கம் போல் பால் கறந்து தருவேன். அல்லாஹ் வின் அருளால் என் பதவி என்னுடைய வழக்கமான வேலைகளை மாற்றி விடாது என நம்புகிறேன்'' என்று உறுதி கூறினார்கள். அதன்பின் அவர்கள் அவ்வழியே செல்லும் போதெல்லாம், ''உங்கள் ஆடுகளில் பால் கறக்க வேண்டுமா? அல்லது அவற்றை மேய அழைத்துச் செல்ல வேண்டுமா?'' என்று கேட்பார்கள். அவர்கள் எதைச் செய்யச் சொல்கிறார்களோ, அதைச் செய்ய அவர்கள் ஒரு போதும் தவறமாட்டார்கள்.

அவர்கள் இவ்விதம் இந்தச் சிறுமிகள் சொல்லும் வேலைகளை மட்டும் செய்யவில்லை. எவர் வேலை ஏவினாலும், செய்து கொடுக்க அவர்கள் எப்பொழுதும் தயாராகவே இருந்தார்கள். ஏழை எளிய பெண்கள் கடைத் தெருவில் ஏதாவது சாமான்கள் வாங்கிக் கொண்டு வரும்படிக் கூறினால், அதனை அவர்கள் தட்டாமல் செய்வார்கள். சின்ன வேலைகள் சொன்னாலும், தாம் கலீபாவாயிற்றே என்று கருதாமல் செய்து கொடுக்கும் பண்பு அவர்களை விட்டும் விலகி யிருந்ததில்லை.

ஒரு நாள் அவர்கள் இப்படித்தான் ஒருவர் வாங்கிக் கேட்ட சாமான்களை வாங்கிக் கொண்டு வரும்போது, அவர்களை ஒருவர் பார்த்தார். ''இப்பொழுது நீங்கள் கலீபாவாக நியமனம் பெற்றுள் ளீர்கள். உங்களின் நேரம் பொன்போன்றது. நீங்கள் ஏழைப் பெண் களுக்குச் சாமான்கள் வாங்கிக் கொடுத்துக் கொண்டிருந்தால் எப்படி

அரசுக் காரியங்கள் நடக்கும்?'' என்று கேட்டார். அதற்கு அவர்கள் அளித்த பதில் இது; ''எனக்கு எல்லாம் தெரியும். சிறிய வேலைகளை நான் ஏன் செய்து கொடுக்கிறேன் என்றால், நாம் ஆட்சியாளனாக ஆகிவிட்டோம் என்றும் எண்ணம் மனத்தில் வேர் பிடித்து, அகந்தை கொள்ளாமல் இருப்பதற்காகத்தான். நான் முன்பும் மக்களுக்குத் தொண்டு செய்தேன். இப்போழுதும் நான் ஒரு தொண்டனே.''

கலீபாவாக ஆன பிறகும், நோயாளிகளைக் கண்டு அவர்களின் உடல் நலம் கேட்டு, அவர்களுக்கு ஆறுதல் கூறும் அழகிய குணம் அவர்களை விட்டும் அகலவில்லை.

அபூபக்ர் (ரலி) அவர்கள் பதவி ஏற்றதை அவ்வளவாக விரும்பாத இன்னொருவரும் இருந்தார். அவர் பெயர் ராபிவு பின் உமர். அவர் அபூபக்ர் (ரலி) அவர்களிடம்,''இப்பொழுது நீங்கள் பதவியை ஏற்றுக் கொண்டு விட்டீர்களா? ஆச்சரியமாயிருக்கிறதே, பதவியை ஏற்க வேண்டாம் என்று என்னிடம் நீங்கள் ஒரு காலத்தில் சொன்னதை மறந்து விட்டீர்களா?'' என்று கேட்டார்.

அதற்கு அபூபக்ர் (ரலி) அவர்கள், ''இல்லை. நான் மறக்க வில்லை. உம்மிடம் நான் அப்படிக் கூறியதற்குக் காரணம் உண்டு. நேர்மையற்றவர்கள், அதிகாரத்தில் அமரும்போது, அவர்கள் இறைவனின் சினத்திற்கு இலக்காகிவிடுகிறார்கள்'' எனப் பதிலிறுத் தனர்.

அபூபக்ர் (ரலி) அவர்கள் பதவி ஏற்றதும், தம் சொந்தச் சொத்தின் கணக்கை எடுக்கும்படிக் கூறினார்கள். தம்மீது ஐயுறுபவர் அரபு அவனியில் இல்லை என்பதை அறிந்திருந்தும், தாம் பதவி விட்டு விலகும் போது, அது தம் நேர்மையைக் காட்ட உதவும் என்றே அபூபக்ர் (ரலி) அவர்கள் இவ்விதம் செய்யச் சொன்னார்கள். அப்பொழுது ஓர் உண்மை தெரிய வந்தது. அதாவது அவர்களின் சொத்துக்கள் பெரிதும் குறைந்திருந்தன.

## முதல் நடவடிக்கை

அரசியல் கடமைகள் இப்பொழுது அபூபக்ர் (ரலி) அவர்களை எதிர்நோக்க ஆரம்பித்தன. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் நோய் வாய்ப்பட்டிருந்தபோது, மூத்தா என்னும் இடத்தில் மூன்று ஆண்டுகளுக்கு முன் முஸ்லிம்கள் உரோமரிடம் பெற்ற இழப்புக்குப் பழி வாங்குவதற்காகப் படை ஒன்று திரட்டினர்; அந்தப் படைக்குத்

தலைவராக உஸாமா பின் ஜைத் (ரலி) அவர்களையும் நியமித்தனர். பத்தோடு எட்டு வயதையே எட்டியிருந்த இளம்பிள்ளை உஸாமா (ரலி) அவர்களுக்கு அப்படையின் தலைமைப் பதவியை அளித்த தற்குக் காரணம், அவர்களின் தந்தை ஜைத் (ரலி) அவர்கள் உரோமரு டன் நடந்த போரில் உயிர்துறந்ததால் அவர்களின் உயிருக்கு அவர் களின் தனயரால் தான் பழி வாங்கப்பட வேண்டும் என எண்ணியதாகும்.

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் உடல் நிலை மோசமாய் இருந் ததால் உரோமரை எதிர்க்க இந்தப் படை புறப்படாமல் தயங்கிக் கொண்டு நின்றது. அவர்கள் இறந்ததும், அவர்களின் புனிதக் கைகள் வழங்க, தாம் பெற்ற கொடியை உஸாமா (ரலி) அவர்கள் திரும்பக் கொணர்ந்து ஆயிஷா (ரலி) அவர்களின் இல்லத்தின் அருகிலிருந்த பள்ளியின் முற்றத்தில் ஊன்றினார். அல்லாஹ்வுடைய தூதரின் கலீபாவாகப் பிரமாணம் பெற்ற அடுத்தநாளே, அபூபக்ர் (ரலி) அவர்கள், அந்தக் கொடியை எடுத்து இளம்பிள்ளை உஸாமா (ரலி) அவர்களின் உறுதி மிக்க கைகளில் ஒப்படைத்தார்கள். அத்துடன், ''உஸாமாவின் படை மீண்டும் தயாராக வேண்டும். அதைச் சேர்ந்தவர் எவரும் மதீனாவில் தங்கிவிடக்கூடாது. அவர்கள் அனைவரும் சிரியா செல்லும் சாலையில் இருக்கும் ஜுர்ஃப் வெளியில் வந்து திரள வேண்டும்'' என்னும் பிரகடனமும் செய்தார்கள். இதுவே அபூபக்ர் (ரலி) அவர்கள் கலீபா என்னும் முறையில் வெளியிட்ட முதல் பிரகடனமாகும். அந்தப் பிரகடனத்தை அறிந்ததும், உஸாமா (ரலி) அவர்களின் படையில் இடம் பெற்று இருந்தவர்கள், அனைவரும் ஜுர்ஃப் வெளியில் வந்து திரளலாயினர்.

## குழப்பங்களின் துவக்கம்

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் உடல் நலக்குறைவால் தடுக்கப்பட்டிருந்த இந்தப் படையின் பயணம், இப்பொழுது அவர்களின் இறப்பிற்குப் பிறகு எழுந்த வதந்திகளால் தாமதப்பட்டது. உண்மையில், அந்த வதந்திகளில் பல உண்மையானவை. இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டிருந்தாலும், அதன் கொள்கைகள் சிலவற்றை ஏற்க மறுத்தனர் சிலர். இறைதூதர் தாம் தாங்களும் எனக் கூறிக்கொண்டு, மக்களை ஏய்க்கக் கிளம்பினர் இன்னும் சிலர். இஸ்லாம் என்னும் இணையில் பேரொளி, உலகை அளாவுவது கண்டு அழுக்காறு கொண்ட யூதர்களும், முஸ்லிம்களுடன் உடன்பாடு செய்து கொண்டு அமைதியாக வாழ்ந்து வந்த கிறிஸ்தவர்களும்,

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இறப்பை இஸ்லாத்தையும், அதன் இளைய அரசையும் ஒழிக்கக் கிடைத்த ஒப்பற்ற வாய்ப்பாகக் கருதி, ஆங்காங்கே கலகம் செய்ய ஆரம்பித்தனர். இதனை இஸ்லாத்திற்கும், அதன் இளைய அரசிற்கும் ஏற்பட்ட பெரிய சோதனை என்றே கூற வேண்டும். போரின் நடுவில் தலைவனை இழந்து தவிக்கும் தானையை ஒத்திருந்தது இஸ்லாமிய சமூகம் அன்று. அப்துல்லாஹ் பின் மஸ்வூத் (ரலி) அவர்களின் கருத்துப்படி, ''மாரிக்கால இருள் இரவில் பெரும்புயல், மழையில் மாட்டிக் கொண்ட, தலைவரற்ற ஆட்டுக் கூட்டம்போல் இருந்தனர் முஸ்லிம்கள், அப்பொழுது.'' ஆனால் இந்த அவலநிலை அதிக காலம் நீடிக்கவில்லை. அந்தக் தானைக்குத் தேவையான, அந்த ஆட்டுக் கூட்டத்திற்கு அவசியமான தலைவர் தாம் தாம் என்பதை கலீபா அபூபக்ர் (ரலி) அவர்கள் அதி விரைவில் எண்பித்தனர். இதுவரை அவசியப் படாதிருந்த அவர்களின் திறன்கள் பலவும், இப்பொழுது வெளிவர ஆரம்பித்தன. அதனால் தான் அவர்களால் அகிலத்தின் இறப்பையொத்த அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இறப்பைத் தாங்கிக் கொள்ளவும், அதன்பின் ஏற்பட்ட சோதனைகளை வெற்றி கொள்ளவும் இயன்றது.

இஸ்லாமிய அரசை நோக்கிப் பல உருவங்களில் பாய்ந்து வந்த ஆபத்துக்களை உணர்ந்த உஸாமா (ரலி) அவர்கள், படைவீரர் அனைவரும் ஜுர்ஃப் வெளியில் திரண்டு விட்ட பிறகும், உமர் (ரலி) அவர்களை கலீபா அபூபக்ர் (ரலி) அவர்களிடம் ஒரு செய்தியுடன் அனுப்பி வைத்தனர். ''நாங்கள் புறப்பட்டவுடன், மாற்று மதக்காரர்கள் கலீபா மீது பாய்வர், அல்லாஹ்வின் தூதருடைய வீட்டாரையும், முஸ்லிம்களையும் தாக்குவர் என நான் அஞ்சுகிறேன். உங்களின் அனுமதி கிடைத்தால் நான் மதீனா திரும்புவேன்'' என அந்தச் செய்தியில் உஸாமா (ரலி) அவர்கள் குறிப்பிட்டிருந்தனர். உமர் (ரலி) அவர்களும், அவர்களுடன் வந்த தோழர்களும், இருக்கும் சிறு படையையும் தொலை நாடு ஒன்றிற்கு அனுப்ப, பாதுகாப்பற்றுப் போகும் மதீனாவின் மீது பாய கலகக்காரர்களுக்கு அழைப்பு விடுக்கும் எனக் கூறினார்கள். அந்தப் படையில், இழந்தால் ஈடுகட்ட முடியாத பீடுடைய வீரர்கள் பலர் இடம் பெற்றிருக்கின்றனர் எனவும் தெரிவித்தார்கள். அந்த அபாய வேளையில், ஒரு சிறிய சமூகம் பல பகுதிகளாகப் பிரிவது உகந்ததல்ல எனவும் உரைத்தார்கள். இறுதியாக அவர்கள் சிரியா எல்லைப் படையெடுப்பை நிறுத்துங்கள் என ஆலோசனை கூறினார்கள்.

உமர் (ரலி) அவர்களும், அவர்களுடன் வந்தவர்களும், உரைத்த வற்றை எல்லாம் கவனத்துடன் கேட்டு, உண்மைகளை உறுதியின் பெயரால் உதறி விடாமல் சிந்தித்துவிட்டு, சீர் தூக்கிப் பார்த்துவிட்டு, கலீபா அபூபக்ர் (ரலி) அவர்கள் அழுத்தமாகக் கூறிய பதில், ''அல்லாஹ்வின் தூதர் அவர்கள் உத்தரவிட்ட ஒன்றை நிறுத்த நான் யார்?'' என்னும் வினாதான். அந்த ஒரே ஒரு வினாவுடன் அவர்கள் நின்றுவிடவில்லை. ''எவனுடைய கையில் என் உயிர் உள்ளதோ, அவன்மேல் ஆணையாக, உஸாமா தலைமையிலுள்ள படை சென்றே ஆகவேண்டும், என்னை விலங்குகள் தூக்கிச் செல்லும் என உறுதியாக நான் நம்பினாலும் சரிதான், மதீனாவில் நான் ஒருவன் மட்டும் தனித்து விடப்பட்டாலும் சரிதான், அல்லாஹ்வின் தூதர் ஆணையை நான் நிறைவேற்றியே தீருவேன்!'' எனக் கலீபா அபூபக்ர் (ரலி) அவர்கள் ஆவேசத்துடன் கூறினார்கள். அண்ணல நபி (ஸல்) அவர்களின் ஆணையை, அவர்கள் இறந்து இருபது நாட்கள் கூட ஆவதற்குள் மாற்ற முனைந்த மனங்களை நினைத்த போது தான், அவர்களுக்கு இவ்வித ஆவேசம் வந்தது. எந்தத் தலைவரின் சொல்லை ஏற்றதால், அணு வளவு பாதகமும் அதுவரை அடையவில்லையோ, அந்தத் தலைவரின் ஆணையை மாற்ற இப்பொழுது என்ன அவசியம் வந்து விட்டது என அவர்கள் எண்ணினார்கள்.

கலீபா அபூபக்ர் (ரலி) அவர்கள் உஸாமா (ரலி) அவர்களின் தலைமையிலுள்ள படையை அவசியம் அனுப்பியே தீர்வர் என்பதை உணர்ந்ததும், உமர் (ரலி) அவர்களும், உடன் வந்த தோழர்களும் சற்றுக் கீழே இறங்க ஆரம்பித்தார்கள். படை அனுப்பும் விஷயத்தில் தளர்ந்து கொடுக்கத் தயாரில்லை என்றால், படைத் தலைமையையாவது மாற்ற வேண்டும் என்றார்கள் உமர் (ரலி) அவர்கள். உண்மையில் உமர் (ரலி) அவர்களின் உள்ளம் அத்தகைய கருத்தை கொள்ளக் கூடியதல்ல. அன்ஸாரிகளில் சிலர் கொண்டிருந்த கருத்தை உமர் (ரலி) அவர்கள் எதிரொலித்தார்கள்.

இந்தக் கோரிக்கைக்குப் பின்புறம் மறைந்திருந்த மனத்தைக் கணத்தில் கண்டுகொள்கிறது கலீபா அபூபக்ர் (ரலி) அவர்களின் அறிவு. ''உஸாமா இளம் பிள்ளை, அனுபவத்தில் முதிர்ந்த மூத்த தலை வர்கள் இருக்கும் போது, அவரை அனுப்ப வேண்டிய அவசியம் என்ன?'' என்னும் உமர் (ரலி) அவர்களின் வினா, அடிமை ஒருவரின் கீழ் செல்ல அரபு வீரர்கள் இணங்காததால் எழுந்தது என்பதை அபூபக்ர் (ரலி) அவர்கள் அறிந்து கொள்கின்றனர். ஏனெனில் இந்த எண்ணத்

துடன் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடமே வேண்டுகோள் விடுக்கப் பட்டதையும், அவர்களால் அது மறுக்கபட்டதையும் அறிவார்கள் அவர்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் பலிக்காததை, அவர்களின் கலீபாவிடம் கெலிக்க முயலுவது தெரிந்து விடுகிறது அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு ஆண்டான், அடிமை என்றிருந்த வேற்றுமைகளையெல்லாம் வேரறுத்து வீழத்திய அண்ணல் நபி (ஸல்) அவர்கள், உலகு துறந்து ஒரு சில நாட்களுக்குள் அவர்களின் பாதம் தொடர்ந்த உமர், இத்தகைய பாதக எண்ணத்திற்கு எப்படிப் பலியானார் என எண்ணியே கலீபா அவர்கள் அடக்க முடியாத ஆத்திரம் கொள்கிறார்கள். உமர் (ரலி) அவர்களின் தாடியைப் பிடித்துக் கொண்டு, ''உம் அன்னை, பிள்ளை இல்லாமல் போகட்டும்! கத்தாபின் மகனே! படைக்குத் தலைமை தாங்க அல்லாஹ்வின் தூதர் அவர்கள் ஒருவரை நியமிக்க, அவரை நீக்கிவிட்டு நான் அவர் இடத்தில் இன்னொருவரை அமர்த்துவதா?'' எனக் கடுஞ்சினத்துடன் கேட்டுவிட்டு, ''என் தலைவரின் இதழ்களிலிருந்து வெளிவந்த ஒரு சொல்கூட நிறைவேற்றப் படாமல் இருக்கக் கூடாது'' என்கிறார்கள். உடனே உமர் (ரலி) அவர்கள் தம்முடன் வந்தவர்களுடன் ஏமாற்றத்தோடு எழுந்து செல்கின்றனர்.

### படை பயணம்

அந்தப் படையை வாழ்த்தி வழி அனுப்பிவைக்க கலீபா அபூபக்ர் (ரலி) அவர்கள், தாமே ஜுர்ஃப் வெளிக்கு வருகிறார்கள். எதிர்ப்பட்ட தடைகளை எல்லாம் வென்று, இனி எதிர்ப்படும் படைகளையெல்லாம் வெல்லும் அறிகுறியாக, அத்தடைகளைக் கொண்டு, உஸாமா (ரலி) அவர்களின் தலைமையில் அந்தப் படை புறப் படுகிறது. இளந் தலைவர் உஸாமா (ரலி) அவர்கள் அமர்ந்திருந்த புரவி அமைதியாக நடைபோடுகிறது. இளத் தலைவர் அபூபக்ர் (ரலி) அவர்கள்,தம் புரவியை அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி) அவர்களிடம் ஒப்படைத்து விட்டு, உஸாமா (ரலி) அவர்கள் அமர்ந்திருந்த புரவியின் பக்கல் நடந்து செல்கிறார்கள். இருவருக்கும் வயதிலும், தகுதியிலும் இருந்தது எவ்வளவோ வேறுபாடு! எனினும் பெருந்தன்மையின் பிறந்தகமான கலீபா அவர்கள், அதையெல்லாம் ஒரு சிறிதும் பொருட்படுத்தவில்லை.அவர் எவராயிருந்தால் என்ன, எவ்வளவு இளையவராயிருந்தால் என்ன, அல்லாஹ்வின் தூதர் அவர்களால் நியமிக்கப்பட்ட படைத் தலைவர் அவர். அவரை கண்ணியப்படுத்துவது தம் கடன் என அவர்கள் கருதுகிறார்கள்.

படையொன்றிற்கு, அதுவும் உமர் (ரலி), காலித் இப்னுவலீத் (ரலி) போன்றவர்களெல்லாம் இடம் பெற்றிருக்கும் படையொன் றிற்குத் தலைமை தாங்க, அண்ணல் நபி (ஸல்) அவர்களாலேயே தேர்ந்தெடுக்கப்பட்ட உஸாமா (ரலி) அவர்களுக்கு இந்த மரியாதை கூடவா தெரியாது? தகுதி சம்பந்தப்பட்ட மட்டில் தம்மால் அணுகக் கூட இயலாத அளவு உயரத்தில் உள்ளவர்கள் ஆவர் கலீபா அவர்கள் என்பதை அறிவார்கள் அவர்கள். எனவே அவர்கள், ''கலீபா அவர்களே! தாங்கள் நடந்து வருகிறீர்கள், நாங்கள் வாகனத்தின் மீது இருக்கிறோம். தாங்களாவது குதிரைமீது ஏறிக்கொள்ளுங்கள்! இல்லையேல், என்னையாவது குதிரையை விட்டிறங்க அனுமதி யுங்கள்!!'' என வேண்டுகின்றனர்.

அந்தச் சிறுபிள்ளை உறும் சங்கடத்தை அறியாமல் இல்லை கலீபா அவர்களும். ஆயினும் அவர்கள்,''வேண்டாம்! நானும் என் குதிரை மீது ஏறமாட்டேன், உம்மையும் குதிரை விட்டிறங்க விட மாட்டேன். அல்லாஹ்வின் பாதையில் ஒரு கணம் நடந்ததால், என் பாதங்களில் படியும் புழுதி, என் பதவியை பாதித்துவிடுமா? அல்லாஹ்வின் ஊழியம் என்னும் அரங்கில் நுழையும் காஜியின் தரத்தை எழு நூறு மடங்கு அல்லாஹ் உயர்த்துகிறான். அவரின் பாவங்களில் எழுநூறை அவன் மன்னிக்கிறான். அவர் கணக்கில் எழுநூறு நற்செயல்களை அவன் எழுதுகின்றான். அல்லாஹ்வின் பாதையில் எடுத்து வைக்கும் ஒவ்வோர் அடியும், பல நற்செயல்களின் தரத்திற்குச் சமமானது, பாவங்களில் பெரும் எண்ணிக்கையைக் கழுவுவது'' என்று கூறுகிறார்கள். மேலும் ''என்னுடைய இந்தப் பாதங்களால், என்னுடைய பாவங்களுக்கு மன்னிப்பு கிடைக்கச் செய்து கொண்டிருக்கிறேன். என்னுடைய இந்தக் கால்கள், அல்லாஹ் வின் பாதையில் அல்லவா அடி எடுத்து வைக்கின்றன! அல்லாஹ்வின் சேவையில், வாகனத்தில் இருப்பவரும் (காலால்) நடப்பவரும் தரத்தில் சமமானவர்களே'' என்றும் அறிவிக்கிறார்கள்.

அந்தப் படையில் இடம் பெற்றிருந்த உமர் (ரலி) அவர்கள் தம்முடன் இருந்தால் உதவியாய் இருக்கும் எனக் கலீபா அவர்கள் கருதினர். அவர்களுக்கு, உமர் (ரலி) அவர்களை அழைத்துக் கொள்ள அதிகாரம் இருக்கவே செய்தது. ஆயினும் படையின் தலைவர் உஸாமா வாதலால், அந்தப் படையில் உள்ள ஒருவரை அவரின் அனுமதி இன்றி அழைத்துக் கொள்வது அழகல்ல, அது நல்ல முன் மாதிரியுமாகாது எனக் கருதிய கலீபா அவர்கள், மிகவும் தயக்கத்துடன் உஸாமா (ரலி)

அவர்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்களிடமே வேண்டுகோள் விடுக்கப் பட்டதையும், அவர்களால் அது மறுக்கப்பட்டதையும் அறிவார்கள் அவர்களின் கலீபாவிடம் கெலிக்க முயலுவது பலிக்காததை, அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு ஆண்டான், அடிமை என்றிருந்த வேற்றுமைகளையெல்லாம் வேரறுத்து வீழ்த்திய அண்ணல் நபி (ஸல்) அவர்கள், உலகு துறந்து ஒரு சில நாட்களுக்குள் அவர்களின் பாதம் தொடர்ந்த உமர், இத்தகைய பாதக எண்ணத்திற்கு எப்படிப் பலியானார் என எண்ணியே கலீபா அவர்கள் அடக்க முடியாத ஆத்திரம் கொள்கிறார்கள். உமர் (ரலி) அவர்களின் தாடியைப் பிடித்துக் கொண்டு, ''உம் அன்னை, பிள்ளை இல்லாமல் போகட்டும்! கத்தாபின் மகனே! படைக்குத் தலைமை தாங்க அல்லாஹ்வின் தூதர் அவர்கள் ஒருவரை நியமிக்க, அவரை நீக்கிவிட்டு நான் அவர் இடத்தில் இன்னொருவரை அமர்த்துவதா?'' எனக் கடுஞ்சினத்துடன் கேட்டுவிட்டு, ''என் தலைவரின் இதழ்களிலிருந்து வெளிவந்த ஒரு சொல்கூட நிறைவேற்றப் படாமல் இருக்கக் கூடாது'' என்கிறார்கள். உடனே உமர் (ரலி) அவர்கள் தம்முடன் வந்தவர்களுடன் ஏமாற்றத்தோடு எழுந்து செல்கின்றனர்.

**படை பயணம்**

அந்தப் படையை வாழ்த்தி வழி அனுப்பிவைக்க கலீபா அபூபக்ர் (ரலி) அவர்கள், தாமே ஜுர்ஃப் வெளிக்கு வருகிறார்கள். எதிர்ப்பட்ட தடைகளை எல்லாம் வென்று, இனி எதிர்ப்படும் படைகளையெல்லாம் வெல்லும் அறிகுறியாக, அத்தடைகளைக் கொண்டு, உஸாமா (ரலி) அவர்களின் தலைமையில் அந்தப் படை புறப் படுகிறது. இளந் தலைவர் உஸாமா (ரலி) அவர்கள் அமர்ந்திருந்த புரவி அமைதியாக நடைபோடுகிறது. இளைத் தலைவர் அபூபக்ர் (ரலி) அவர்கள்,தம் புரவியை அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃப் (ரலி) அவர்களிடம் ஒப்படைத்து விட்டு, உஸாமா (ரலி) அவர்கள் அமர்ந்திருந்த புரவியின் பக்கல் நடந்து செல்கிறார்கள். இருவருக்கும் வயதிலும், தகுதியிலும் இருந்தது எவ்வளவோ வேறுபாடு! எனினும் பெருந்தன்மையின் பிறந்தகமான கலீபா அவர்கள், அதையெல்லாம் ஒரு சிறிதும் பொருட்படுத்தவில்லை.அவர் எவராயிருந்தால் என்ன, எவ்வளவு இளையவராயிருந்தால் என்ன, அல்லாஹ்வின் தூதர் அவர்களால் நியமிக்கப்பட்ட படைத் தலைவர் அவர். அவரை கண்ணியப்படுத்துவது தம் கடன் என அவர்கள் கருதுகிறார்கள்.

படையொன்றிற்கு, அதுவும் உமர் (ரலி), காலித் இப்னுவலீத் (ரலி) போன்றவர்களெல்லாம் இடம் பெற்றிருக்கும் படையொன்றிற்குத் தலைமை தாங்க, அண்ணல் நபி (ஸல்) அவர்களாலேயே தேர்ந்தெடுக்கப்பட்ட உஸாமா (ரலி) அவர்களுக்கு இந்த மரியாதை கூடவா தெரியாது? தகுதி சம்பந்தப்பட்ட மட்டில் தம்மால் அணுகக் கூட இயலாத அளவு உயரத்தில் உள்ளவர்கள் ஆவர் கலீபா அவர்கள் என்பதை அறிவார்கள் அவர்கள். எனவே அவர்கள், ''கலீபா அவர்களே! தாங்கள் நடந்து வருகிறீர்கள், நாங்கள் வாகனத்தின் மீது இருக்கிறோம். தாங்களாவது குதிரைமீது ஏறிக்கொள்ளுங்கள்! இல்லையேல், என்னையாவது குதிரையை விட்டிறங்க அனுமதியுங்கள்!!'' என வேண்டுகின்றனர்.

அந்தச் சிறுபிள்ளை உறும் சங்கடத்தை அறியாமல் இல்லை கலீபா அவர்களும். ஆயினும் அவர்கள்,''வேண்டாம்! நானும் என் குதிரை மீது ஏறமாட்டேன், உம்மையும் குதிரை விட்டிறங்க விடமாட்டேன். அல்லாஹ்வின் பாதையில் ஒரு கணம் நடந்ததால், என் பாதங்களில் படியும் புழுதி, என் பதவியை பாதித்துவிடுமா? அல்லாஹ்வின் ஊழியம் என்னும் அரங்கில் நுழையும் காஜியின் தரத்தை எழு நூறு மடங்கு அல்லாஹ் உயர்த்துகிறான். அவரின் பாவங்களில் எழுநூறை அவன் மன்னிக்கிறான். அவர் கணக்கில் எழுநூறு நற்செயல்களை அவன் எழுதுகின்றான். அல்லாஹ்வின் பாதையில் எடுத்து வைக்கும் ஒவ்வோர் அடியும், பல நற்செயல்களின் தரத்திற்குச் சமமானது, பாவங்களில் பெரும் எண்ணிக்கையைக் கழுவுவது'' என்று கூறுகிறார்கள். மேலும் ''என்னுடைய இந்தப் பாதங்களால், என்னுடைய பாவங்களுக்கு மன்னிப்பு கிடைக்கச் செய்து கொண்டிருக்கிறேன். என்னுடைய இந்தக் கால்கள், அல்லாஹ்வின் பாதையில் அல்லவா அடி எடுத்து வைக்கின்றன! அல்லாஹ்வின் சேவையில், வாகனத்தில் இருப்பவரும் (காலால்) நடப்பவரும் தரத்தில் சமமானவர்களே'' என்றும் அறிவிக்கிறார்கள்.

அந்தப் படையில் இடம் பெற்றிருந்த உமர் (ரலி) அவர்கள் தம்முடன் இருந்தால் உதவியாய் இருக்கும் எனக் கலீபா அவர்கள் கருதினர். அவர்களுக்கு, உமர் (ரலி) அவர்களை அழைத்துக் கொள்ள அதிகாரம் இருக்கவே செய்தது. ஆயினும் படையின் தலைவர் உஸாமாவாதலால், அந்தப் படையில் உள்ள ஒருவரை அவரின் அனுமதி இன்றி அழைத்துக் கொள்வது அழகல்ல, அது நல்ல முன் மாதிரியுமாகாது எனக் கருதிய கலீபா அவர்கள், மிகவும் தயக்கத்துடன் உஸாமா (ரலி)

அவர்களிடம் கேட்டுக்கொண்டார்கள், "உமக்கு உசிதமாகத் தோன் றினால், எனக்கு உதவியாக உமரை மதீனாவில் விட்டுச் செல்லும்!" என்று. உடனே அதற்கு உஸாமா (ரலி) உவப்புடன் இணங்கினர். இது வரை மெதுவாய் நடை போட்டுக்கொண்டிருந்த படை கலீபாவை அதிகம் நடக்கவிடக் கூடாது என்பதற்காக நின்றது. அதற்கு விடை கொடுக்கு முன், இறப்பிற்கு விடை கொடுத்து விட்ட சில அறிவுரை களை, படை வீரர்களுக்கு அவர்கள் வழங்கினார்கள்.

"மக்களே! நில்லுங்கள்! நான் உங்களுக்குப் பத்துக் கட்டளை களை வழங்கப்போகிறேன். அவற்றை நீங்கள் மனத்தில் தங்க வைத்துக் கொள்ளுங்கள்! நேர்மை நெறி தவறி ஒரு போதும் இரா தீர்கள்! ஒரு போதும் ஒரு பொய்யும் சொல்லாதீர்கள்! எப்பொழுதும் உங்கள் வாக்குகளைக் காப்பாற்றுங்கள்! எவரையும், எக்காரணத் திற்காகவும் சித்திரவதை செய்யாதீர்கள்! பழம் தரும் மரங்களை வெட்டாதீர்கள், வெந்நீக்கும் இரையாக்காதீர்கள்! பயிர்களை அழிக்காதீர்கள்! உங்களின் உணவுகளுக்காக அல்லாமல், ஆடு களையோ, பசுக்களையோ, ஒட்டகைகளையோ கொல்லாதீர்கள்! மடாலயங்களில் தம் வாழ்வைக் கழிக்கும் மக்களை நீங்கள் சந்திப் பீர்கள்; அவர்களை அவர்களின் நிலையிலேயே விட்டு விடுங்கள்! பாத்திரங்களில் பலவகை உணவுகளை உங்களுக்குக் கொணரும் மக்களையும் நீங்கள் சந்திப்பீர்கள். அந்த உணவுகளை ஒருவருக்குப் பின் ஒருவராக அருந்தும்போது, அல்லாஹ்வின் பெயரைச் சொல் லுங்கள்! தலையை மொட்டை அடித்துக் கொண்டிருக்கும் குருமார்கள் உங்களுக்கு ஒரு தீங்கும் செய்யா விட்டால், அவர்களுக்கு நீங்களும் ஒரு தீங்கும் புரியவேண்டாம்! இனி இறைவனின் பெயரைக் கூறி முன்னேறிச் செல்லுங்கள்! அல்லாஹ் உங்களைப் பகைவரின் தாக்குதலிலிருந்தும், கொள்ளை நோய்களிலிருந்தும் காப்பானாக!" இந்த அற்புத உரையில் அவர்கள் மனிதர்களை மட்டுமல்ல, விலங்குகள், தாவரங்கள் ஆகியவற்றையும் மதிக்கும்படியும், காக்கும்படியும் கட்டளையிட்டனர்.

இதன்பின் கலீபா அவர்கள் உமர் (ரலி) அவர்களுடன் மதீனா திரும்பி வரும்போது, அந்தப் படை தென் சிரியா பக்கமிருந்த தூமா நோக்கிப் போய்க் கொண்டிருந்தது. அது எடுத்து வைத்த ஒவ்வோர் அடியும் 'முகம்மதின் இறப்பிற்குப்பின் வலுவிழந்து விட்டன இஸ்லாமும், அதன் இளைய அரசும்' என எண்ணிக் கொண்டிருந்தவர் மனத்தில் விழுந்த அடியாயிருந்தது. 'இருந்த படையும், பெரிய

பகைவருடன் போரிடச் சிரியா எல்லை சென்றதென்றால், உண்மையில் மதீனா நாம் நினைத்ததுபோல் பலவீனத்துடன் இருக்கவில்லை'' என்னும் கருத்தைப் பகைவர் மனத்தில் அது விதைத்தது.

இவ்வித அறிவான, உறுதியான நடவடிக்கைகளால், மதீனாவுக்கு வரவிருந்த ஆபத்தைக் கலீபா அவர்களால் சற்றுத் தள்ளி வைக்கத்தான் இயன்றது. ஆனால் அதற்கு எளிதாக முற்றுப்புள்ளி வைக்க முடியவில்லை. மதீனாவின் வலிமையைச் சோதித்துப் பார்ப்பதுபோல் இப்பொழுது இறை தூதர்கள் எனக் கூறிக் கொண்டு பொய்யர்கள் சிலர் ஆங்காங்கு கிளம்பிக் கொண்டிருந்தனர். அறியாமைக் கால அரேபியாவில் பொய்யர்கள் நிறைய இருந்ததுண்டு. ஆனால் தம்மை இறைதூதர் எனக் கூறிக்கொண்ட பொய்யர்கள் இருந்ததில்லை. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அடைந்த அற்புத வெற்றி, எப்படியாவது புகழடைய வேண்டும் என விரும்பியவர்கள் மனத்தில் இந்த ஆகாத ஆசையைக் கிளறி விட்டுவிட்டது. எப்பொழுதுமே மெய்யை விடப் பொய்க்கு அதிகக் கவர்ச்சி உண்டு. மேலும் உண்மைக்குக் கால்களே இல்லாத போது, பொய்க்குச் சிறகுகள் அதிகம். இதனால் உண்மை தவழ்ந்தபோது, பொய் பறந்தது. இந்தப் பொய்யர்கள் வெகு விரைவில் தம்மை பின்பற்றப் பலரை உண்டு பண்ணிக் கொண்டார்கள். மக்கா, மதீனா ஆகியவற்றின் மீது அழுக்காறு கொண்டு, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அடைந்த வெற்றிகளை வெறுப்புடன் பார்த்துக் கொண்டிருந்த சில கோத்திரத்தவர்கள், தம் கோத்திரத்தைச் சேர்ந்தவன் என்பதற்காக அவன் கூறுவது உண்மையா, அல்லவா என்று கூடப் பாராமல், அவனை ஆதரித்தார்கள். இறுதியில் மெய், மெய்தான், பொய், பொய்தான் என்பது ஐயத்திற்கிடமின்றி நிருபணமாயினும், அதற்கு மிகவும் அதிகவிலை கொடுக்க வேண்டியதாயிற்று. எத்தனையோ நல்ல காரியங்களுக்குப் பயன்படவேண்டிய கலீபாவின் கவனத்திலும், காலத்திலும் ஒரு பெரும் பகுதியை இது பறித்துக் கொண்டது.

## பொய்த் தூதர்கள்

இந்தப் பொய்யர்களில் முதலாமவர் அஸ்வத் அன்ஸீ என்பவர். யமனிலிருந்து கிளம்பிய அவர் பிறந்த ஊர் சன் ஆ. இவர் ஓர் அரபுக் கோத்திரத்தின் தலைவர், பெரிய செல்வந்தரும் கூட. ஆவி உலகுடன் தமக்குத் தொடர்பு இருப்பதாகக் கூறி அவர் மக்களை மயக்கினார். அவர் கூற்றை பல அரபுக் கோத்திரத் தலைவர்களும் நம்பி

னார்கள். உண்மையில் அவர் சாதாரண மனிதரிலும் மிகவும் கேவல மானவர். முஸ்லிமாயிருந்த அவர் மனைவி அவரைப் பற்றிக் கூறினார், ''அவரையும் விட மோசமான மனிதரை நான் பார்த்த தில்லை. இரவு முழுதும் அவர் குடிக்கிறார், இரவு உணவு நேரம் வரை உறங்குகிறார். உடல் உறவுக்குப்பின் அவர் உளூச் செய்வது கூடக் கிடையாது'' என்று. ஆனால் அவர் தம் வலிமை வளர்ந்த போது, அதனைப் பயன்படுத்தாமல் இருக்கவில்லை. அவர் ஹிஜ்ரி 10-ஆம் ஆண்டு நஜ்ரான் மீது பாய்ந்து, அதனைக் கைப்பற்றினார். அத்துடன் அவர் ஆளுநர் மனைவியை மணந்தார். இவ்விதம் அவர் யமனையும், தென் அரேபியா முழுவதையும் தம் வசப்படுத்திக் கொண்டார். அவர் அதிகாரம் மூன்று மாதங்கள் வரை சென்றுகொண்டிருந்தது. இது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உயிர் வாழ்ந்தபோது நிகழ்ந்தாகும். அஸ்வத்தின் எழுச்சியை அடக்க, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் முஆத் இப்னுஜபல் (ரலி) அவர்களை அனுப்பி வைத்தனர். ஆனால் அவர்கள் வருவதற்குள் அஸ்வத், ஆளுநரின் உறவினர் ஒருவரால் கொல்லப்பட்டார். இது அண்ணல் நபி(ஸல்) அவர்கள் இறப்பதற்கு இரண்டு நாட்களுக்கு முன் நடந்தது. ஆனால் இந்தச் செய்தி அபூபக்ர் (ரலி) அவர்கள் கலீபாவாக ஆன பிறகே மதீனா வந்து சேர்ந்தது. அஸ்வத்தின் இறப்பால் தளர்ந்திருந்த இந்தக் குழப்பம் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இறப்பால் வளர ஆரம்பித்தது.

அஸ்வத்திற்கு அடுத்தபடியாய் பொய்வாதம் பேசி மக்களை ஏய்த்தவர் முஸைலமா என்பவர். அவர் மத்திய அரேபியாவில் இருந்த யமாமா பகுதிக் கிறிஸ்தவர்; பனூஹனீபா கோத்திரத்தில் பிறந்தவர். அண்ணல் நபி(ஸல்) அவர்கள் உயிர் வாழும்போது, அவர்களைப் பார்க்க வந்த பனூஹனீபா தூதுக் குழுவில் அவரும் இருந்தார். ஆனால் அவர், அண்ணல் நபி (ஸல்) அவர்களைக் காணும் பேறு பெற்றாரா என்பதில் கருத்து வேறுபாடு உள்ளது. அந்தக் தூதுக் குழுவினர் இஸ்லாத்தை ஏற்றனர். அவர்களைத் தொடர்ந்து பனூஹனிபா கோத்திரம் முழுவதும் இஸ்லாத்தைத் தழுவியது. அவர்களுக்கு இஸ்லாத்தை எடுத்து விளக்க, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களை அனுப்பி வைத்தனர். அங்கு சென்று அலீ (ரலி) அவர்கள், தொழுகைக்குத் தலைமை தாங்கினர்; விழுமிய இஸ் லாமியக் கொள்கைகளை எடுத்து விளக்கினர். அதனால் ஹமதான் முழுவதும் இஸ்லாத்தின் ஒளி பாய்ந்தது. ஆனால் அந்த ஒளி முஸைலமா மனத்தில் மட்டும் பாயவில்லை. அவர் தம் மாநிலம்

திரும்பிச் சென்றதும், தம்மை ஓர் இறைதூதர் எனப் பிரகடனம் செய்தார்; தமக்கு இறைவனிடமிருந்து செய்தி வருகிறது எனப் பொய்யுரைத்தார். பிற பெண்களின் கற்பைக் களவாடுவதும், மது அருந்துவதும், தீதானவை அல்ல என்பது அவர் போதம். அவர் சஜா என்னும் பொய்வாதம் பண்ணிய பெண்ணை மணந்துகொண்ட போது, அவளுக்கு மஹராக இளங் காலை, இரவுத் தொழுகைகளை வஜா செய்தார். ''இவ்விரு தொழுகைகளும், மக்களுக்குச் சுமையானவை'' என அவர் கூறினார். இவை அவருக்கு அதிகச் செல்வாக்கு ஏற்பட வழிகோலின. அத்துடன் அவர் தமக்கு அற்புதங்கள் ஆற்ற இயலும் எனவும் பிதற்றினார். அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு அவர் எழுதிய கடிதத்தில் இறைதூதில் இருவரும் பங்காளிகள் என்றும், அரபு நாட்டை ஆளுக்கு ஒரு பாதியாய்ப் பிரித்துக் கொள்ளலாம் என்றும் பேரம் பேசினார். அவருக்கு நேர்வழி காட்ட அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஒருவரை அனுப்பி வைத்தனர். அவரிடம் கோத்திர உறவைக் கூறித் தம்முடன் சேர்த்துக் கொண்டார்.

தம்மை இறை தூதர் எனக் கூறிக்கொண்ட இன்னொருவர் துலைகா. அவர் பனீ அஸத் கோத்திரத் தலைவர். அத்துடன் நஜ்ரானின் புகழ்மிக்க போர் வீரரும்கூட. ஒருமுறை அவர் பாலைவனத்தில் பயணம் செய்யும்போது ஓர் இடத்தைச் சுட்டிக் காட்டி அங்குத் தண்ணீர் கிடைக்கும் என்றார். அவர் சொன்னபடியே அங்குத் தண்ணீர் கிடைத்தது. உடனே அவர் தம்மை இறைதூதர் எனக் கூறிக்கொள்ளத் தொடங்கினார். அவர் மாநிலத்தவரும், அடுத்திருந்த கோத்திரத் தவரும் 'குறைஷி குலத் தூதுவரைவிட நமக்கென ஒரு நபி இருப்பது நல்லதுதானே', எனக் கருதினார்கள். 'முகம்மது இறந்துவிட்டார், துலைகா இருந்துகொண்டிருக்கிறார். இறந்தவரைத் தொடர்வதைவிட இருப்பவரைப் பின்பற்றுவோம்' எனத் தீர்மானித்தார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இறந்ததை அறிந்ததும், துலைகா துணிவுடன் கலகம் செய்ய ஆரம்பித்தார்.

'பொய் வாதம் பண்ண ஆண்களுக்கு மட்டும் தானா தெரியும், எங்களுக்குத் தெரியாதா?' என்று கேட்கிறாற் போல சஜா கிளம்பினாள். அவள் கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்தவள், பனீயர்பூ கோத்திரத்தில் பிறந்தவள். அவளுக்குக் கடின விஷயங்களையும் விளக்கிக்கூறும் திறனும், தாம் கூறுவதை நம்ப வைக்கும் சொல்லாற்றலும் அமைந் திருந்தன. இந்தத் திறன்களும், இதயத்தில் மறைந்திருந்த அதிகார

னார்கள். உண்மையில் அவர் சாதாரண மனிதரிலும் மிகவும் கேவல மானவர். முஸ்லிமாயிருந்த அவர் மனைவி அவரைப் பற்றிக் கூறினார், ''அவரையும் விட மோசமான மனிதரை நான் பார்த்த தில்லை. இரவு முழுதும் அவர் குடிக்கிறார், இரவு உணவு நேரம் வரை உறங்குகிறார். உடல் உறவுக்குப்பின் அவர் உளூச் செய்வது கூடக் கிடையாது'' என்று. ஆனால் அவர் தம் வலிமை வளர்ந்த போது, அதனைப் பயன்படுத்தாமல் இருக்கவில்லை. அவர் ஹிஜ்ரி 10-ஆம் ஆண்டு நஜ்ரான் மீது பாய்ந்து, அதனைக் கைப்பற்றினார். அத்துடன் அவர் ஆளுநர் மனைவியை மணந்தார். இவ்விதம் அவர் யமனையும், தென் அரேபியா முழுவதையும் தம் வசப்படுத்திக் கொண்டார். அவர் அதிகாரம் மூன்று மாதங்கள் வரை சென்றுகொண்டிருந்தது. இது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உயிர் வாழ்ந்தபோது நிகழ்ந்தாகும். அஸ்வத்தின் எழுச்சியை அடக்க, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் முஆத் இப்னுஜபல் (ரலி) அவர்களை அனுப்பி வைத்தனர். ஆனால் அவர்கள் வருவதற்குள் அஸ்வத், ஆளுநரின் உறவினர் ஒருவரால் கொல்லப்பட்டார். இது அண்ணல் நபி(ஸல்) அவர்கள் இறப்பதற்கு இரண்டு நாட்களுக்கு முன் நடந்தது. ஆனால் இந்தச் செய்தி அபூபக்ர் (ரலி) அவர்கள் கலீபாவாக ஆன பிறகே மதீனா வந்து சேர்ந்தது. அஸ்வத்தின் இறப்பால் தளர்ந்திருந்த இந்தக் குழப்பம் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இறப்பால் வளர ஆரம்பித்தது.

அஸ்வத்திற்கு அடுத்தபடியாய் பொய்வாதம் பேசி மக்களை ஏய்த்தவர் முஸைலமா என்பவர். அவர் மத்திய அரேபியாவில் இருந்த யமாமா பகுதிக் கிறிஸ்தவர்; பனூஹனீபா கோத்திரத்தில் பிறந்தவர். அண்ணல் நபி(ஸல்) அவர்கள் உயிர் வாழும்போது, அவர்களைப் பார்க்க வந்த பனூஹனீபா தூதுக் குழுவில் அவரும் இருந்தார். ஆனால் அவர், அண்ணல் நபி (ஸல்) அவர்களைக் காணும் பேறு பெற்றாரா என்பதில் கருத்து வேறுபாடு உள்ளது. அந்தக் தூதுக் குழுவினர் இஸ்லாத்தை ஏற்றனர். அவர்களைத் தொடர்ந்து பனூஹனிபா கோத்திரம் முழுவதும் இஸ்லாத்தைத் தழுவியது. அவர்களுக்கு இஸ்லாத்தை எடுத்து விளக்க, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அலீ (ரலி) அவர்களை அனுப்பி வைத்தனர். அங்கு சென்று அலீ (ரலி) அவர்கள், தொழுகைக்குத் தலைமை தாங்கினர்; விழுமிய இஸ் லாமியக் கொள்கைகளை எடுத்து விளக்கினர். அதனால் ஹமதான் முழுவதும் இஸ்லாத்தின் ஒளி பாய்ந்தது. ஆனால் அந்த ஒளி முஸைலமா மனத்தில் மட்டும் பாயவில்லை. அவர் தம் மாநிலம்

திரும்பிச் சென்றதும், தம்மை ஓர் இறைதூதர் எனப் பிரகடனம் செய்தார்; தமக்கு இறைவனிடமிருந்து செய்தி வருகிறது எனப் பொய்யுரைத்தார். பிற பெண்களின் கற்பைக் களவாடுவதும், மது அருந்துவதும், தீதானவை அல்ல என்பது அவர் போதம். அவர் சஜா என்னும் பொய்வாதம் பண்ணிய பெண்ணை மணந்துகொண்ட போது, அவளுக்கு மஹறாக இளங் காலை, இரவுத் தொழுகைகளை வஜா செய்தார். ''இவ்விரு தொழுகைகளும், மக்களுக்குச் சுமையானவை'' என அவர் கூறினார். இவை அவருக்கு அதிகச் சொல்வாக்கு ஏற்பட வழிகோலின. அத்துடன் அவர் தமக்கு அற்புதங்கள் ஆற்ற இயலும் எனவும் பிதற்றினார். அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு அவர் எழுதிய கடிதத்தில் இறைதூதில் இருவரும் பங்காளிகள் என்றும், அரபு நாட்டை ஆளுக்கு ஒரு பாதியாய்ப் பிரித்துக் கொள்ளலாம் என்றும் பேரம் பேசினார். அவருக்கு நேர்வழி காட்ட அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஒருவரை அனுப்பி வைத்தனர். அவரிடம் கோத்திர உறவைக் கூறித் தம்முடன் சேர்த்துக் கொண்டார்.

தம்மை இறை தூதர் எனக் கூறிக்கொண்ட இன்னொருவர் துலைகா. அவர் பனீ அஸத் கோத்திரத் தலைவர். அத்துடன் நஜ்ரானின் புகழ்மிக்க போர் வீரரும்கூட. ஒருமுறை அவர் பாலைவனத்தில் பயணம் செய்யும்போது ஓர் இடத்தைச் சுட்டிக் காட்டி அங்குத் தண்ணீர் கிடைக்கும் என்றார். அவர் சொன்னபடியே அங்குத் தண்ணீர் கிடைத்தது. உடனே அவர் தம்மை இறைதூதர் எனக் கூறிக்கொள்ளத் தொடங்கினார். அவர் மாநிலத்தவரும், அடுத்திருந்த கோத்திரத் தவரும் 'குறைஷி குலத் தூதுவரைவிட நமக்கென ஒரு நபி இருப்பது நல்லதுதானே', எனக் கருதினார்கள். 'முகம்மது இறந்துவிட்டார், துலைகா இருந்துகொண்டிருக்கிறார். இறந்தவரைத் தொடர்வதைவிட இருப்பவரைப் பின்பற்றுவோம்' எனத் தீர்மானித்தார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இறந்ததை அறிந்ததும், துலைகா துணிவுடன் கலகம் செய்ய ஆரம்பித்தார்.

'பொய் வாதம் பண்ண ஆண்களுக்கு மட்டும் தானா தெரியும், எங்களுக்குத் தெரியாதா?' என்று கேட்கிறாற் போல சஜா கிளம்பினாள். அவள் கிறிஸ்தவ மதத்தைச் சேர்ந்தவள், பனீயர்பூ கோத்திரத்தில் பிறந்தவள். அவளுக்குக் கடின விஷயங்களையும் விளக்கிக்கூறும் திறனும், தாம் கூறுவதை நம்ப வைக்கும் சொல்லாற்றலும் அமைந் திருந்தன. இந்தத் திறன்களும், இதயத்தில் மறைந்திருந்த அதிகார

ஆசையும், அவளைப் போதை கொள்ளச்செய்தன. அவள் தன்னை ஓர் இறைதூது எனக் கூறிக் கொள்ளலானாள். அவள் ஜகாத்வரி கொடுக்க வேண்டாம் என்றாள், பன்றிக்கறி சாப்பிடுவதில் தவறில்லை என்று கூறினாள். பனீதக்லிபின் உதவியால் தன் வலிமை வளர்ந்த போது, அவள் அரபு கோத்திரங்கள் பலவற்றிற்கும் அழைப்பு விடுத்து, தன் வாளுக்கு வெற்றி கிடைத்தால்,அவர்களின் தலைக்கு மணிமுடி கிடைக்கும் என்றாள். பனீதமீம்களில் சிலர் தன்னை இறைதூது என ஏற்காதபோது, அவர்களைத் தாக்கத் தொடங்கினாள். அந்த முயற்சி யில் வெற்றி பெற இயலாத போது, அவர்களுடன் உடன்பாடு செய்து கொண்டு முஸைலமாவைத் தாக்கக் கிளம்பினாள். இறுதியாக மதீனாவைத் தாக்குவது அவளின் திட்டமாயிருந்தது. அவளை இறைதூது என ஏராளமான மக்கள் நம்பினர். அவர்களில் ஒருவன் முஸ்லிமாயிருந்த மாலிக்பின் நுவைராஹ் என்பவன். அவன் பனீதமீம் கோத்திரத் தலைவன்.

**கலகக்காரர்கள்**

இந்தப் பொய்யர்களின் எழுச்சியுடன் கலகங்களும் பல பக்கங் களிலிருந்தும் கிளம்பியது கண்டு கலீபா அவர்கள் கலங்கிப் போய் விடவில்லை. இப்பொழுது தான் அவர்கள் ஆக்கப்பட்டது எவ்வளவு உறுதியான உருக்கு என்பது நன்கு தெரிய வந்தது. பல ஆண்டுகளாக, எடுத்து வைக்கும் ஒவ்வோர் அடிக்கும் வழிகாட்டிய ஒரு தலைவர் உயிர் துறந்ததும், சுற்றியிருந்தவரில் ஒரு சிலரைத் தவிர்த்து மற்றவர் அனைவரும் கலகக் கொடி தூக்கியதை அறிந்து, கலங்காக ஒரு சிலரைத்தான் உலகம் கண்டிருக்கிறது. அவர்களில் ஒருவராகக் கலீபா அவர்கள் இருந்தார்கள்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் காலமானதும் ஏற்பட்ட இந்தக் கலங்களைப் பார்த்து மக்கள் மீது இஸ்லாத்திற்கு இருந்த பிடிப்பு இவ் வளவுதானா என அதன் எதிரிகள் கருதினர். உண்மையில், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இறப்பதற்குச் சற்று முன்னர், இஸ்லாத்தை ஏற்ற மக்கள் மத்தியில் தான் இந்தப் பொய்யர்கள் கிளம்பினர். இஸ்லாம் என்னும் ஒளிப் பிழம்பு ஆழப் பாய்ந்திராத, அண்மையில் முஸ்லிமான கோத்திரத்தவர்கள் தாம் இந்தப் பொய்யர்களைப் பின் தொடர்ந்தனர். இவர்களைத் தவிர்த்து மற்றவர் அனைவரும் இஸ்லாத்தை விட்டு அணுவளவும் விலகாமல் அப்படியே இருந்தார்கள். அவர்களின் உறுதியைச் சோதிக்கத் தோன்றிய ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும்

அவர்கள் தளர்ச்சி என்பதைச் சற்றும் காட்டவில்லை. ஈராண்டுகளுக்கு முன் இஸ்லாத்தைத் தழுவியவர்களிடம் கூட இந்த இரும்பு நிகர் உறுதி இம்மி அளவும் குறையாதிருந்தது. இஸ்லாத்தை ஏசுவதில், எதிர்ப்பதில், அதனை ஒழிப்பதில், தொலைப்பதில் ஓய்வதில்லை என்னும் உறுதியோடு நின்றதில், மக்காவுக்கு நிகராக மற்றொன்றைக் கூற முடியுமா? இஸ்லாத்தை அது இதயத்தால் ஏற்காதிருந்தால், அதனை உதறுவதில் அது அல்லவா முன் நின்றிருக்க வேண்டும்? அவ்விதம் செய்ய அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இறப்பைப் போன்ற பொன்னான வாய்ப்பு ஒன்று, அதற்கு இன்னொரு முறை கிடைக்கவா போகிறது? ஆனால், மக்கா அதனைப் பயன்படுத்த வில்லை. அங்கிருந்து ஒரு கீச்சுக்குரல் கூட இஸ்லாத்திற்கு எதிராக எழவில்லை. அதற்கு மாறாக மக்கா இஸ்லாத்தைக் காப்பதற்காக அதன் எதிரிகளுடன் போரிடத் தயாராகிக் கொண்டிருந்தது.

கல்வி அறிவற்ற பாலைவன அரபிகளைப் பண்பாடுடைய மார்க்கம் ஒன்றிற்கு மாற்றுவது என்பது அவ்வளவு எளிதான செயல் அல்ல. அவர்களையும், அரபு அவனியில் வாழ்ந்த மற்ற மக்களையும், ஒரு சில யூத, கிறிஸ்தவரைத் தவிர்த்து, இஸ்லாத்தில் இணைத்து இணையில் அற்புதம் ஒன்றைப் புரிந்தவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள். அந்த மக்களின் மனங்களில் இஸ்லாத்தின் கொள்கை களைக் குடி கொள்ளச் செய்து, அவர்களை இஸ்லாத்திற்காக எந்த அர்ப்பணமும் செய்ய முந்தக் கூடியவர்களாக ஆக்க அண்ணல் நபி(ஸல்) அவர்களால் முடிந்தே இருக்கும். ஆனால், அதற்குள் அவர்களை அல்லாஹ் தன்பால் அழைத்துக் கொண்டு விட்டான்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள், தாம் உயிர் வாழும்வரை இத்தகைய மக்களுக்குப் போதனை செய்ய அறிஞர்களை அடிக்கடி அனுப்பிக்கொண்டு தான் இருந்தனர். ஆனால் இஸ்லாத்தை ஏற்பவர் எண்ணிக்கை அதிகரித்தபோது, அவர்களிடமெல்லாம் அனுப்பி வைக்கப் போதிய ஆட்களில்லை. இருப்பவர்களையும் மதீனா விட்டு அனுப்புவதை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் விரும்பவில்லை. அதற்குக் காரணம், இப்பொழுது மதீனாவை நோக்கி ஒவ்வொரு நாளும் ஏராளமானவர்கள் இஸ்லாத்தைப் பற்றி அறிவதற்காக் வந்துகொண்டிருந்ததாகும். அவர்களுக்கு இஸ்லாத்தைப் பற்றி எடுத்துக் கூறவே அதிக அறிஞர்கள் தேவைப்பட்டனர். இந்தக் குறை யையும் நிறைவு செய்வதற்குள் அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு அல்லாஹ்வின் அழைப்பு வந்துவிட்டது.

அரைகுறை நம்பிக்கை கொண்டவர்களுக்கு அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இறப்பு அடைதற்கரிய பெரிய வாய்ப்பாக இருந்தது. அவர்கள் அரபு அவனி எங்கும் கலகம் செய்ய ஆரம்பித்தார்கள். யமனில் இருந்தவர்கள் கலகம் செய்வதில் முன் நின்றார்கள். முஸ்லிம் ஆமில்கள் அங்கிருந்து விரட்டப்பட்டனர். அஸ்வத் அன்ஸீ இறந்தாலும், அவரைப் பின் பற்றியவர்கள் ஒன்று சேர்ந்து, படையாகி கலகங்களின் வலிமை தளர்ந்துவிடாமல் பார்த்துக் கொண்டனர். பனீ ஆமிர் கோத்திரத்தைச் சேர்ந்த ஆமிர்பின் அல்துபைல் என்பவன், தான் அரேபியா முழுவதற்கும் அமீர் ஆக விரும்புவதாயும், தான் ஒரு குறைஷியை ஒருபோதும் பின்பற்றப் போவதில்லை என்பதாயும் கூறி, மக்களைக் குழப்பிவிட்டான். பனீ அஸதுடன் நட்புறவு கொண்டிருந்த கத்பான் கோத்திரத்தவர்கள், "ஏன் நாம் குறைஷி நபியைப் பின்பற்ற வேண்டும், நம் நண்பர்களான பனீ அஸதைச் சேர்ந்த நபி இருக்க?" எனக் கூறித் தம் மக்களை இஸ்லாதிற்கு எதிராகக் கிளப்பிவிட்டனர். இவர்கள் வெறுத்தது ஜகாத்தை, அதிகம் வெறுத்தது அதனை வசூலிப் பவர்களை. எனவே இவர்களின் முதல் தாக்குதலுக்கு இலக்கான வர்கள் ஜகாத் வசூலிப்பவர்கள் தாம். அவர்கள் தம் இடம் விட்டுத் தாமாக ஓடினார்கள் அப்படி ஓடாதவர்கள் அடித்து விரட்டப்பட் டார்கள்.

அண்ணல் நபி (ஸல்) அவர்களால் ஜகாத் வசூலிக்க உம்மானுக்கு அனுப்பப்பட்டவர் அமர்மத்ர் என்பவர். அவர் மதீனா வந்து, அரபு அவனி இருக்கும் நிலையை விவரித்தார். யமனிலிருந்து கலீபாவுக்கு வந்த கடிதங்களும் அங்கிருந்த நிலையை அறிவித்தன. வரப் போவதை கலீபா அவர்களின் கூர்மதி நன்கு கண்டுகொண்டது. அவர்கள் மக்களைப் பார்த்து, அதையும்விட மனத்துயர் தரும் செய்தி களை அறியத் தயாராக இருக்கும்படிக் கேட்டுக் கொண்டார்கள். அதைக் கேட்டு மக்கள் அதிகக் கவலை அடைந்தனர். உய்விக்க வந்த இஸ்லாத்தின் ஒழுங்கு, கட்டுப்பாடுகளை உதறி விட்டு, அரபு மக்கள் விலங்கு வாழ்க்கைக்கு விரைவது அவர்களின் மனத்தை அதிகம் வருத்தியது.

மதீனாவிலிருந்து யமன்வரை இருந்த பகுதி எங்கணும் கலகக் காரர்கள் நிரம்பினார்கள். மக்காவின் குறைஷிக் கோத்திரத்தாரும், தாயிபின் தகீஃப் கோத்திரத்தாருமே இப்பொழுது இஸ்லாத்தில் இருந்தார்கள். மற்றவர்கள், முற்றிலுமோ ஒரு பகுதியோ இஸ்

லாத்தைத் துறந்தனர்.இவ்வாறு இஸ்லாத்தைத் துறந்து கலகக் கொடியைத் தூக்கிய கோத்திரங்கள் இருபத்து நான்குக்குக் குறைவானவை அல்ல என இப்னு அதீர் கூறுகிறார். இவர்கள் ஜகாத் கொடுக்க மறுக்கும் செய்தியும், முஸ்லிம் அதிகாரிகளைக் கொல்லும் தகவலும், மதீனா வந்து மண்டலாயின. உதவி கோரி வரும் வேண்டு கோளுக்கு, ''விசுவாசமுள்ள முஸ்லிம்களைக் கொண்டு சமாளி யுங்கள்!'' எனக் கலீபா பதில் அனுப்பிக் கொண்டிருந்தனர். உஸாமா (ரலி) அவர்கள் தலைமையில் சென்ற படை திரும்பும்வரை இவ்விதம் கூறுவதைக் தவிர்த்து கலீபா அவர்களுக்கு வேறு வழி இருக்கவு மில்லை. ஆயினும் ஆவி கொடுத்தேனும் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உறங்கும் மதீனாவைக் காக்க உறுதி பூண்டார்கள்.

## தூதுக் குழுவினர்

மதீனாவின் அருகில் வாழ்ந்த கோத்திரத்தவர்கள்,தம் எண்ணிக் கையையும், ஏற்ற சூழ்நிலையையும் மனத்திற் கொண்டு, மதீனாவை நோக்கி வர ஆரம்பித்தனர். அவர்களில் பனீ அஸத்கள், சுமைரா என்னுமிடத்தில் முகாமிட்டனர். பொஸாராக்களும், கத்ஃபானில் ஒரு பகுதியினரும் தெற்கே தங்கினர். தஃலபா, முர்ராஹ், அப்ஸ் கோத்திரத்தைச் சேர்ந்த சிலர் அப்ரகில் முகாமிட்டனர். மற்றவர்கள் துல்கஸ்ஸாவில் தங்கினர். இப்பொழுது மதீனா வந்து சேர்ந்த அம்ர் பின் ஆஸ் (ரலி) அவர்கள், தாபாவிலிருந்து மதீனா வரை கலகக் காரர்கள் மண்டி நிற்கின்றனர் என்னும் தகவலைத் தந்தார்கள். மதீனாவை மண்டியிட வைக்கவேண்டும் என்னும் கெடு நோக்குடன் இவர்கள் மதீனாவைச் சூழ்ந்துகொண்டு, கலீபாவிடம் தூதுக்குழு ஒன்றை அனுப்பி வைத்தனர். இவர்கள் பத்து நாட்களுக்கு முன்பு தான் மதீனா வந்து அபூபக்ர் (ரலி) அவர்களிடம் 'பை அத்' எனும் விசுவாசப் பிரமாணம் செய்து திரும்பியவர்கள்.

அந்தக் தூதுக்குழுவினர் மதீனா வந்து, அதில் வசித்த மதிப்பிற் குரிய பெருமக்கள் பலரையும் பார்த்தனர். அவர்களுக்கு அப்பாஸ் (ரலி) அவர்கள் தம் வீட்டில் தங்கக்கூட இடம் கொடுக்கவில்லை. இறுதியாக அவர்கள் கலீபாவிடம் வந்தார்கள். தாங்கள் தொழு கையை விட விரும்பவில்லை என்றும், ஆனால் தங்களுக்கு ஜகாத் திலிருந்து விலக்கு அளிக்கப்பட வேண்டும் என்றும் கோரினார்கள். அவர்களின் கோரிக்கை பற்றி ஆலோசிக்கக் கலீபா தம் தோழர்களான உமர் (ரலி), உதுமான் (ரலி), அலீ (ரலி), காலித்பின் வலீத் (ரலி),

அம்ர்பின் ஆஸ் (ரலி), சுபைர் (ரலி), தல்ஹா (ரலி),அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃபு (ரலி) ஆகியோரை அழைத்தனர். அழைப்பேற்று வந்த இவர்கள் அத்தனை பேரும், ''உறுதி உகந்ததாயினும், இந்தச் சந்தர்ப்பத்தில் அது சற்றுத் தளர்த்தப் படவேண்டியது அவசியம் தான்'' என்று ஆலோசனை கூறினார்கள். இத்தகைய சமயங்களில் உருக்கைப் போல் இருக்கக்கூடிய உமர் (ரலி) அவர்களே இளகினார்கள். ''இந்த மக்களுடன நேசமாய் இருங்கள்! இவர்களை மென்மையாய் நடத்துங்கள்!'' என இயம்பினார்கள். ''இறைவன் ஒருவன் என்றும், அவன் தூதர் முகம்மது (ஸல்) ஆவர் என்றும் இந்த மக்கள் ஒப்புக் கொள்கின் றனர். ஆனால் ஜகாத் கொடுக்க மறுக்கின்றனர். அவர்கள்மீது போர் தொடுக்க வேண்டாம்!'' என வேண்டினார்கள். ''எவர் லாஇலாஹ இல்லல்லாஹ் என்று கூறிவிட்டாரோ, அவருடைய உடைமையும் உயிரும் அதற்குரிய கடமைப்படி அல்லாமல் என்னைவிட்டுத் தப்பிக் கொண்டன. அவரைப் பற்றிய விசாரணை அல்லாஹ் மீது இருக்கிறது' என அல்லாஹ்வின் தூதர் அவர்கள் கூறியிருக்கையில் மக்களை எதிர்த்து எவ்வாறு தாங்கள் போரிடமுடியும்?'' என வினவினார்கள்.

இதைக் காதுற்றதும் கடுஞ்சினம் கொண்ட கலீபா அவர்கள் உமர் (ரலி) அவர்களைப் பார்த்து உரத்த குரலில், ''உமரே! உம் உதவி எனக்குக் கிடைக்கும் என நான் நம்பினேன். ஆனால் அதனை நீர் தரவில்லை. அறியாமைக் காலத்தில் நீர் கடுமையானவராய் இருந்தீர். இஸ்லாத்திற்கு வந்தபின் ஏன் இப்படி ஆகிவிட்டீர்?'' என்று கேட்டனர். அதன்பின், ''இறை செய்தி வருவது இப்பொழுது நின்று விட்டது. மார்க்கம் நிறைவு அடைந்து விட்டது. நிறைவு அடைந்த அதனைக் குறைவு படுத்த நீர் கூறுகிறீரா? அது என் வாணாளில் நடக்க நான் ஒரு போதும் அனுமதிக்கமாட்டேன். அல்லாஹ்மீது ஆணையாக நான் கூறுகிறேன். ஒட்டகை கட்டுவதற்கான ஒரு கயிற்றுத் துண்டு ஜகாத் வரியில் பாக்கிப்பட்டாலும் நான் அவர்கள் மீது போர் தொடுப்பேன். அதனை அவர்கள் தரும் வரை போரிட்டுக் கொண்டே இருப்பேன்'' என்றோ, ''அல்லாஹ்மீது ஆணையாக, தொழுகைக்கும் ஜகாத்திற்கும் இடையில் பிரிவினை செய்பவர்களை எதிர்த்து நான் நிச்சயம் போர் செய்வேன். ஜகாத் என்பது பொருளுக்குரிய கடமை. அல்லாஹ்மீது பிரமாணமாக அல்லாஹ்வின் தூதர் அவர்களிடத்தில் (ஜகாத் வகைக்காகக்) கொடுத்துக் கொண்டிருந்த ஆட்டுக் குட்டியை எனக்கு (க் கொடுக்க) மறுப்பார்களாயின், அதனை மறுத்ததற்காக அவர்களுடன் நான் போரிடுவேன்'' என்றோ கூறினர்.

கலீபா அவர்கள் உரைத்த உறுதிமிக்க சொற்கள் உமர் (ரலி) அவர்களின் உள்ளத்தைப் பிடித்து உலுக்கி விட்டன. அதனால் அவர்கள் சற்று நேரம் வாயடைத்து நின்றார்கள். ஆனால், அவர்கள் அறிவு அடைத்து நின்று விடவில்லை. அவர்களின் அறிவு அவர் களுக்குக் கலீபா அவர்களின் சொல் எவ்வளவு அறிவு நிறைந்தது என்பதை உணர்த்தியது. எனவே அவர்கள், ''அல்லாஹ் மீது பிரமா ணமாக, இது கலீபா அவர்களின் இருதயத்தை அல்லாஹ் போருக் காகத் திறந்து விட்டதைக் தவிர்த்து வேறில்லை. அது தான் நியாயம் என்பதை நான் உணர்ந்தேன்'' என்று குறிப்பிட்டு விட்டு, கலீபா அவர் களைப் பார்த்து ''இறை தூதரின் கலீபாவே! உங்களின் உள்ளத்தை அல்லாஹ் எவ்வளவு உரப்படுத்தி வைத்திருக்கிறான்!'' என்றும், தம்முடன் இருந்தவர்களைப் பார்த்து, ''நம் எல்லோரையும் விட கலீபா அவர்களே அதிக நம்பிக்கையுள்ளவர்களாய் இருக்கின்றனர்'' என்றும் கூறினர். பிற்காலத்தில் அவர்கள் இதுபற்றிக் குறிப்பிடும் போது, ''அபூபக்ர் அவர்களை, என்னைவிட உறுதியில் மிகைத்தவர் களாகப் பெற்றேன். அவர்கள் மக்களை இதுபோன்ற விஷயங்களில் பழக்கப்படுத்திச் சென்றது, என் ஆட்சியின் போது எனக்குப் பெரும் உதவியாக ஆகியது'' என்று கூறினர்.

இந்த விஷயத்தில் கலீபா அவர்கள் இவ்வளவு உறுதியாக இருந்ததற்குக் காரணம் இல்லாமல் இல்லை. ஜகாத்திற்கு விலக்கு அளிப்பது என்பது இஸ்லாத்தைத் தாங்கிக் கொண்டிருக்கும் தூண் களில் ஒன்றை இடித்து வீழ்த்துவதை ஒக்கும் என்று அவர்கள் கருதினார்கள். எனவே, அவர்களால் அல்லாஹ் விதித்த ஒன்றை, அவன் தூதர் வலியுறுத்திய ஒன்றை, அது, உறுத்தும் வலி எங்களுக்கு எனச் சிலர் உரைப்பதற்காக விலக்குவது என்பதை எண்ணியும் பார்க்க இயலவில்லை. தாம் சூழ்நிலைகளின் நெருக்குதலினால் அதற்கு மட்டும் இணங்கி விட்டால், இஸ்லாத்தின் பாழ் நிலையைப் பார்க்க அதிக நாள் காத்திருக்க வேண்டியதில்லை என்றும், அவர்கள் அஞ்சி னார்கள். ஒன்றிற்கு அளிக்கப்படும் விலக்கு, மார்க்கத்தில் கடுமை யாகத் தோன்றும் கடமைகளுக்கெல்லாம் விலக்கு அளிக்க வேண்டும் என்னும் விருப்பமாக விரியலாம் எனவும், அவர்கள் காலத்தை முந்திப் பார்த்துக் கண்டு கொண்டார்கள்.

அதனால்தான் ''அன்று ஒரு பகலில் அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் உறுதியினால் தேடிக் கொண்ட நன்மை தாம், தம் வாணாளின் எல்லாப்

பகல்களிலும் தேடிக் கொண்ட நன்மைகளுக்கு ஈடாகும்'' என உமர் (ரலி) அவர்கள் உரைத்தனர்.

''(அன்று) அபூபக்ர் (ரலி) அவர்கள் இப்படி அடக்காதிருந் திருந்தால், உலகின் இறுதி நாள் வரை மக்கள் ஜகாத் விஷயத்தில் 'முல்ஹித்' (மார்க்கம் விட்டுப் புரண்டோர்)களாகவே இருந்திருப்பர்'' என ஹஸன் (ரலி) அவர்கள் கூறினர்.

''அல்லாஹ்வின் வரியான ஜகாத்தை வசதியுள்ளவர்களிட மிருந்து வசூலித்தே தீருவேன், எவ்விதப் பயனையும் அச்சுறுத்தல் அளிக்காது'' என்னும் கலீபா அவர்களின் பதிலைப் பெற்றுக் கொண்டு, தூதுக் குழுவினர் திரும்பத் தொடங்கினர். அப்பொழுது அவர்களின் கழுகுக்கண்கள் சிரியா எல்லைக்கு தீரம் செறிந்த வீரர்களை அனுப்பி விட்டுப் பலவீனப்பட்டிருந்த மதீனாவைக் காணத் தவற வில்லை. ஏற்க முடியாத கோரிக்கை ஒன்றைக் கூறி, அது மறுக்கப்பட்டதும், அந்தச் சாக்கில் மதீனாவைக் கொள்ளையிடத் திட்டமிட்டிருந்த அவர்களின் ஆகா விருப்பிற்குச் சாதகமாய் இருந்தது அதன் பலவீன நிலை. எனவே, அவர்கள் தம் கோத்திரத்தார் தங்கியிருந்த இடம் சேர்ந்ததும், மதீனாவின் நிலையைக் குதூகலத்துடன் சொல்லி, அதனைத் தாக்க ஏற்ற சமயம் அதுதான் என எடுத்துரைத்தார்கள். ஆனால், அனைத்தையும் கூறிய அவர்கள், ஒன்றை மட்டும் கூறத் தவறினார்கள். அதுதான் மதீனாவின் பலவீனத்தை ஈடுகட்ட கலீபாவின் இரும்பு நிகர் இதயம் இருந்து கொண்டிருக்கிறது என்பது.

## அருகில் வந்த ஆபத்து

ஆபத்து, மிகவும் அண்மித்து வந்து விட்டதை அறிந்ததும், கலீபா அவர்கள் எச்சரிக்கையை இரட்டிப்பாக்கினார்கள். மக்களை உடனே அழைத்தார்கள். ''இறை தூதர் எனத் தம்மைக் கூறிக்கொள்வோர் தொகை கூடிக்கொண்டே போகிறது. நகர் வந்த தூதுவர்கள் அதன் பாதுகாப்பற்ற நிலையை நேரில் பார்த்துச் சென்றிருக்கின்றனர். அவர்கள் மதீனாவைத் தாக்குவதை எந்த நேரத்திலும் எதிர்பார்க்கலாம். ஏனெனில், அவர்கள் என் அமைதிக் கோரிக்கையை மறுத்துவிட்டுச் சென்றிருக்கின்றனர். எனவே நாம் ஆயுத பாணிகளாய், போருக்கு ஆயத்தமாய் இருக்க வேண்டும்'' எனக் கலீபா மக்களைப் பார்த்துக் கூறினார்கள். அத்துடன் இஸ்லாத்திற்கு விசுவாசமாயிருக்கும் கோத் திரத்தவர்களுக்கும் கடமை புரியக் கடுகி வரும்படி அழைப்பு

விடுத்தார்கள். மதீனாவைக் காப்பதற்குப் புரிய வேண்டிய முதல் வேலை, அதற்கு வரும் வாயில்களைக் காப்பது என்பதைக் கலீபா உணர்ந்தனர். எனவே உஸாமா (ரலி) அவர்களின் படையில் செல்லாமல் எஞ்சியிருந்த அடலேறு போலும் வீரர்களான அலீ (ரலி), சுபைர் (ரலி), தல்ஹா (ரலி) அப்துல்லாஹ் இப்னு மஸ்ஊத் (ரலி) ஆகியவர்களிடம் அந்தப் பொறுப்பை ஒப்படைத்தார்கள். மதீனாவின் பள்ளியிலும் ஆபத்திற்கு ஆபத்து உண்டுபண்ணத்தக்க விதம் வீரர்களை, ஆயத்தமாய்த் திரட்டி வைத்திருந்தார்கள்.

கலீபா எதிர்பார்த்தது எதுவோ அதுவே நடந்தது. தூதுவர்கள் திரும்பி வந்ததும், கலகக்காரர்கள் மதீனாவைத் தாக்கத் தயாரா னார்கள். அவர்கள் தம் படைத் தொகுதிகளைப் பல பகுதிகளாகப் பிரித்து, ஒரு பகுதியை ரபதாவுக்கும், மற்றொரு பகுதியை துல்கஸ் ஸாவுக்கும் அனுப்பி வைத்தனர். துல்கஸ்ஸா, மதீனாவிலிருந்து நஜ்த் செல்லும் சாலையில் முதல் தங்குமிடமாக இருந்தது. அங்கிருந்த மக்களைக் கலகம் செய்யத் தூண்டி விடுவதற்காகப் பொய்த் தூதர் துலைகா தம் உடன் பிறந்தவனையே அனுப்பி வைத்திருந்தார். தூதுவர் திரும்பிச் சென்ற மூன்றாம் நாள், கலீபா அவர்கள் எதிர் பார்த்தபடி, கலகக்காரர்கள் துல்கஸ்ஸாவிலிருந்து மதீனா நோக்கி வர ஆரம்பித்தனர். அதை அறிந்ததும், ஆவியை, பாதத் தூசாகக் கருதித் தூக்கி எறியத் துணிந்த வீரர்கள் மதீனாவுக்கு வரும் வழிகளில் நிலை கொள்ளலாயினர். கலகக்காரர்கள் தம்மை நெருங்குவதை அறிந்ததும், அதனை அவர்கள் கலீபாவுக்குத் தெரியப்படுத்தினார்கள். அவர்கள், தம் நிலைகளை விட்டுப் பெயரக்கூடாது என்றும், தாமே அங்கு அவசியம் வருவதாயும், கலீபா, வீரர்களுக்குச் செய்தி அனுப்பினர்.

அதன்படியே அவர்கள் புயல்போல் புறப்பட்டுச் சென்று, கலகக் காரர்கள் மீது காட்டாற்று வெள்ளம்போல் வீழ்ந்து, வேழக் கூட்டம் போல் தாக்கி,அவர்களை மறிக் கூட்டமாய் மாற்றினர். காவலற்ற மதீனாவின் காவலர் இத்தகைய கடுந்தாக்குதலை தொடுப்பார் எனக் கலகக்காரர்கள் சிறிதும் எதிர்பார்க்கவில்லை. எனவே அவர்கள், கல கலத்துப்போய் பின்புற அணி நோக்கி, பிடரியில் கால்பட ஓட ஆரம் பித்தனர். அடி தாங்க முடியாமல் ஓடிய அவர்களைக் கலீபா தீஹஸ்ஸி வரை விரட்டிச் சென்றார்கள். ஆனால், இடையில் அவர்களின் தொடர்ந்த முன்னேற்றத்திற்கு ஒருதடை வந்தது. தோல்வியைத் தழுவிக் கொண்டு ஓடிய கலகக்காரர்கள் தம் தோல் பைகளில் காற்றை நிரப்பி, தரையில் போட்டுக் கொண்டே சென்றனர். அவை புதுமை

யான பொருள்களாய்த் தோன்றவே, அவற்றைக் கண்டு கலீபாவின் ஒட்டகைகள் மிரண்டுவிட்டன. பயிற்சி அளிக்கப் பட்டு, போருக்குப் பழக்கப்பட்ட ஒட்டகைகள் எல்லாம் உஸாமா (ரலி) அவர்களின் படையில் சிரியா எல்லை சென்றிருந்ததாலும் தண்ணீர் இறைக்கப் பயன்பட்ட ஒட்டகைகள் படைக்கு வந்ததாலும், ஏற்பட்ட பாதக மாகும் இது. இந்த நடவடிக்கையில் முஸ்லிம்கள், எவரும் இறக்கவு மில்லை. காயமடையவுமில்லை. ஆனால், இது, கலீபா அஞ்சி ஓடி விட்டார்கள் என்னும் எண்ணத்தைக் கலகக்காரர்கள் மனத்தில் ஏற்படுத்தியது. அந்த அச்சத்தை அதிகப்படுத்தி, ஒட்டத்தை உறுதிப் படுத்தி துல்கஸ்ஸாவிலிருந்த தம் வீரர்களை தீஹஸ்ஸிக்கு வரவழைத் தனர். அச்சம், முஸ்லிம்கள் அறியாதது என்பதையோ, ஓடியவை முஸ்லிம்களின் ஒட்டகைகளே ஒழிய அவர்களின் உள்ளத் துணிவு அல்ல என்பதையோ கலகக்காரர்கள் அறியவில்லை.

## முதல் வெற்றி

முதல் நாள் நிகழ்ச்சி கலீபா அவர்களின் மனத்தில் சிறிதளவும் தளர்ச்சியை ஏற்படுத்தவில்லை. அவர்கள் அடுத்த தாக்குதலுக்கு மதீனா திரும்பியதுமே ஆயத்தமானார்கள். அன்று பொழுது விடியும் வரை கூட அவர்களால் பொறுத்திருக்க இயலவில்லை. எனவே அவர்கள், வாளெடுக்கத் தெரிந்தவர்கள் அனைவரையும் வரவழைத் துக்கொண்டு, இரவிற்கிரவே கலகக்காரர்களைத் தாக்கக் கிளம்பிச் சென்றார்கள். 'விரட்டி விட்டோம் முஸ்லிம்களை' என மனப்பால் குடித்து விட்டிருந்தவர்கள் மீது பொழுது எழும்போது, கலீபா விழுந்து தாக்கினார்கள். அவ்வளவு இளங்காலையிலேயே முஸ்லிம் கள் வந்து தம்மைத் தாக்குவர் எனக் கலகக்காரர்கள் சிறிதும் எதிர் பார்க்கவில்லை. பொழுது புலர்ந்து கொண்டிருந்தபோது, போர் மும்முரமாக நடந்து கொண்டிருந்தது. சின்னேரத்தில் கலகக்காரர் களின் அணி கலகலத்தது. அவர்களைக் கலீபா நிர்மூலமாக்கினார்கள். துஞ்சியவர்போக, எஞ்சியவர்கள் மானம் போயினும் ஆவியாவது மிஞ்சட்டும் என ஒட்டம் பிடிக்க ஆரம்பித்தனர். அவர்களைக் கலீபா துல்கஸ்ஸாவரை விரட்டிச் சென்றார்கள். இந்தச் சண்டையில் துலைகாவின் சகோதரனும்,தோற்ற படையின் தலைவனுமான ஹப்பால் மாண்டான். துல்கஸ்ஸாவில் கலீபா நுஃமான் பின் மக்ரானை ஒரு சிறு படையுடன் நிறுத்தி வைத்துவிட்டு, மதீனா திரும்பினர். இந்த நடவடிக்கை சிறியது தான். ஆனால் அதனால் ஏற்பட்ட பலன் பெரியதாகும். இதில் மட்டும் கலீபா அவர்கள்

தோற்றிருந்தால், இஸ்லாம் உலகுவிட்டே அடியோடு அழிந்து விட்டிருக்கும். ஆனால் அவர்கள் அதில் அடைந்த வெற்றி, இஸ்லாத்திற்குப் பெரும் பலனைப் பெற்றுத் தந்தது. அதுவே படையின்றியே கலீபா, பெரும் பகைவென்று மதீனாவைக் காப்பாற்றி விட்டார்கள் என்னும் எண்ணம் ஏற்பட்டதாகும்.

போரில் தோற்ற பகைவர் களத்தில் காட்ட முடியாத 'கைவரிசை' யைத் தம் கோத்திரங்களைச் சேர்ந்த முஸ்லிம்கள் மீது காட்டத் தொடங்கினர். ஆங்காங்கு அவர்கள் அகப்படும் முஸ்லிம்களைக் கொன்றனர். அவர்களின் சடலங்களைத் தீயிலிட்டுப் பொசுக்கினர். பனீ அப்ஸ், திப்யான் கோத்திரங்களே இந்தக் கொடுமைகளைத் துவக்கியவை. அவற்றை மற்ற கோத்திரங்களும் பின்பற்றின. இதனால் எங்கும் முஸ்லிம்களைக் கொல்வதும், அவர்களைக் கொடுமைப்படுத்துவதும் சர்வ சாதாரணமாகியது. இதை அறிந்த போது, கலீபா அவர்களின் நெஞ்சிலிருந்து செந்நீர் கசிந்தது. எனவே, அவர்கள் விரைவில் அக்கொடுமைகளுக்கு முடிவு காண விரதம் பூண்டார்கள். ''முஸ்லிம்களுக்கு இழைக்கப்படும் இந்தத் துன்பங்களுக்கு பழி வாங்கப்பட்டே தீரும்'' எனச் சூளுரைத்தார்கள்.

இவ்வநியாயச் செயலுக்குக் காரணம் கலகக்காரர்களுக்குத் தம் ஆற்றாமையால் ஏற்பட்ட வெறியேயாகும். முஸ்லிம்களின் படை சிரியா சென்றிருந்ததால் மதீனா காப்பவர் அற்றுக் கிடக்கும் என அவர்கள் தப்புக் கணக்குப் போட்டுவிட்டனர். ஆனால், ஆபத்து என்றால், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உறங்கும் மதீனாவில் வாழும் அத்தனை பேரும் அரியாக மாறுவர் என்பதை அறியவில்லை அவர்கள். இதன்பின் முஸ்லிம்களுக்கு 'நாம் பலவீனரோ,நம் பகைவர் பலவான்களோ அல்லர்' என்னும் நம்பிக்கை ஏற்பட்டுவிட்டது. அதனால் முஸ்லிம்களின் உறுதி வளர்ந்தபோது, பகைவர்களின் மனம் தளர்ந்தது. கலகம் செய்த கோத்திரங்களும், பொய்த் தூதர்களை நம்பிய கூட்டங்களும் முஸ்லிம்களின் வலிமையை அறிந்ததும், ஜகாத் பணத்தை வலிய வந்து கொடுக்க ஆரம்பித்தன. இப்படிச் செய்த கோத்திரங்களும், கூட்டங்களும் எண்ணிக்கையில் குறைவுதான் என்றாலும், ஒளி மிக்க வருங்காலம் ஒன்று இஸ்லாத்தை எதிர் நோக்குகிறது என்பதற்கான அறிகுறியாக இருந்தது இது. ஜகாத் பணத்துடன் வந்த பனீ தமீம், பனீதை கோத்திரத் தூதுவர்களை கலீபா, 'தூதுவர்களிலும் அதிகமானவர்கள்' எனப் புகழ்ந்தார்கள். 'அவர்கள் ஜகாத் பணம் கொணர்ந்த தூதுவர்கள் மட்டுமல்ல மகிழ்ச்சிமிக்க

செய்தியைக் கொணர்ந்த தூதுவர்கள், அவர்கள் உண்மையாளர்கள். உண்மை மார்க்கத்தின் காவலர்கள்' எனக் கலீபா வர்ணித்தார்கள். அந்தத் தூதுவர்களில் ஒருவராக புகழ்மிக்க வள்ளல் ஹாத்திமின் மகன் அதீயும் இருந்தார்.

இந்த அற்புத விளைவுக்கு முற்றிலும் பொறுப்பானவர்களாய்க் கலீபா அவர்களைத்தான் குறிப்பிட வேண்டும். தோள் கொடுக்க வேண்டிய தோழர்களே, தணிந்து போக வேண்டும் எனத் தயங்காமல் கூறியபோது, மறுத்து மலைபோல் நின்று உறுதி நிறுத்திய பெருமை கலீபா அவர்களுக்கே உரிமையானது. அபாயமிக்க அந்தச் சமயத்தில் இஸ்லாத்தைக் காத்தது கலீபா அவர்களிடமிருந்த இந்த உறுதிதான். இந்த உறுதியே அவர் களைத் தம் தலைவரின் சொல்லிலிருந்து சிறிதும் வழுவாமல் தடுத்தது. இந்த உறுதி மட்டும் மற்றவர்கள் மனத்திலிருந்து நழுவியது போன்று, அவர்களின் உளத்திலிருந்தும் வழுவி இருக்கு மானால், ஜகாத் விஷயத்தில் விட்டுக் கொடுத்ததிலே இஸ்லாம் உருக்குலைந்து போயிருக்கும். அதனால் தானோ, என்னவோ, அண்ணல் நபி (ஸல்) அவர்களின் தோழர்களில் ஒருவரான அபூ ஹுரைரா (ரலி) அவர்கள், ''மதம் மாறிய துரோகிகளுடன் அபூபக்ர் (ரலி) அவர்கள், ஒரு நபியின் நிலையில் நின்று போர் புரிந்தனர்'' என்றும், ''அல்லாஹ் மீது ஆணையாக, அபூபக்ர் (ரலி) அவர்கள் மட்டும் கலீபாவாக வராவிட்டால், ஒரே இறை வணக்கம் புரிய ஒரு மனிதன் கூட எஞ்சியிருக்கமாட்டான்'' என்றும் கூறினர்.

உஸாமா (ரலி) அவர்கள் தம் தந்தை கொல்லப்பட்ட இடம் வரை சென்றார்கள். அவர் இறப்பிற்குப் பொறுப்பானவர்களைப் பழிவாங்கி விட்டு வெற்றிகரமாகத் திரும்பி வந்தார்கள். ஏற்ற கடமையை வெற்றிகரமாக முடித்துத் திரும்பிய ஏறு நிகர்த்த வீரரான அவர்களைக் கலீபா மதீனா மூதூரின் வாயில் வரை சென்று வரவேற்றனர். உஸாமா (ரலி) அவர்களும், அவர்களுடன் சென்ற வீரர்களும் மதீனா பள்ளிக்கு வந்தார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தம் புனிதக்கரங்களால் கொடுத்த கொடியை உஸாமா (ரலி) அவர்கள் பிரித்துப் பிடித்தார்கள். அவர்கள் மதீனா விட்டுச் சென்றிருந்த நாற்பது நாட்களில் நடந்து விட்ட சம்பவங்கள் அனைத்தும், கலீபா அவர்களுக்குக் கனவு போல் தோன்றின. உஸாமா (ரலி) அவர்களிடம், கலீபா அவர்கள் மதீனா வைக் காக்கும் கடமையை ஒப்படைத்தனர். ''இப்பொழுது நீர் ஓய்வு எடுத்துக் கொள்ளும்! நாங்கள் பகைவரை எதிர்த்துப் போரிடச் செல்கிறோம்'' என்றும் கூறினர்.

இதன்பின் கலீபா தம்மால் இயன்ற அளவு வீரர்களைத் திரட்டிக் கொண்டு, முஸ்லிம்களைக் கொன்றும் கொடுமைப் படுத்தியும் அநியாயம் புரிந்தவர்களை அடக்கவும்,தாம் அடைந்திருந்த வெற் றியை உறுதிப்படுத்தவும் புறப்பட்டுச் சென்றார்கள். அவர்களே போருக்குப் போனது, அவர்களின் தோழர் சிலருக்குப் பிடிக்க வில்லை. போருக்கென எழுந்து அவர்கள் அலீ (ரலி) அவர்கள் தலைமையில் திரண்டு வந்து, கலீபாவைக் கண்டு, ''போரில் தளபதி ஒருவர் கொல்லப்பட்டால், அவர் இடத்தில் இன்னொருவரை இட்டு நிரப்பி விடலாம்.கலீபா அவர்களுக்கு அப்படி ஒன்று ஏற்படுமானால், நாங்கள் எங்கள் தலைவரை இழக்க நேருமே'' என்று கூறினர். அரசின் கண் போன்ற அவர்களுக்கு ஏற்படும் சிறு புண்ணும் ஆட்சிப் பொறி ஒழுங்காக இயங்குவதற்கு ஊறு செய்யும். போரில் அவர்களுக்கு ஏதாவது ஏற்பட்டுவிட்டால் அவர்களின் இடத்தை இன்னொருவரைக் கொண்டு நிரப்ப இயலாது என்பதே அந்தத் தோழர்களின் கருத்தாய் இருந்தது.

தோழர்களின் வேண்டுகோள் அன்பாலும், அவசியத்தாலும் ஏற்பட்டது என்பதை உணர்ந்தாலும், கலீபா அவர்களால் அதனைக் கடமையாலும்,காவல் பொறுப்பாலும் ஏற்றுக் கொள்ள இயல வில்லை. எனவே அவர் ''நான் போயே ஆக வேண்டும். என் பொறுப்பைப் பிறர் மேல் சுமத்தி நிச்சயமாக நான் தொந்தரவு கொடுக்க மாட்டேன்'' எனக் தம் தோழர்களைப் பார்த்துக் கூறினார்கள். அதன் பிரகாரம் அங்கிருந்து புறப்பட்டு துல்கஸ்ஸா வழியாக ரப்தாஹ் பர்கானாவிலிருந்த அப்ரக் வந்து, கலகக்காரர்களைத் தாக்கித் தோற்கடித்தார்கள். கலீபாவே நேரடியாக நின்று போரிட்ட முதல் போர் இதுதான். முஸ்லிம்களுக்குக் கொடுமைகள் புரிந்த பனீ அப்ஸ், திப்யான் கோத்திரத்தவர்கள் தோல்வியைச் சுமந்து கொண்டு ஓடி 'நானும் நபி' என்று கூறிக் கொண்டு திரிந்த துலைகாவிடம் புகல் தேடினர். அக்கோத்திரத்தவர்களின் அகன்ற அப்ரக் மேய்ச்சல் நிலங்கள், இப்பொழுது கலீபாவின் கையில் விழுந்து, அவர்களின் காலடியில் கிடந்தன. துரோகம் செய்யத் தயங்காதவர்கள் ஆதலால், பனீ அப்ஸ், திப்யான் கோத்திரத்தவர்களைக் கலீபா அவர்கள் அப்ரக்கிலிருந்து அப்புறப்படுத்தினர்.

### அவசியமான நடவடிக்கை

இனிமேல் அரபு அவனியில் அமைதி காண வேண்டுமானால், இன்னும் பல போர்கள் புரிந்தாகவேண்டும் எனக் கலீபா உணர்ந்தனர்.

ஜகாத் பணம் வந்து சேர்ந்தாலும், மதீனாவுக்கு வந்த ஆபத்து அகன்றாலும், பொய்த் தூதர்களின் பின்புறம் மக்கள் போவதுமட்டும் நிற்கவில்லை. எனவே கலீபா அவர்கள், அப்ரக் அருகில் சில நாட்கள் தங்கியிருந்து கொண்டு, பொய்வாதங்களுக்கு எவ்விதம் புதை குழி காண்பது என்பது பற்றி ஆலோசனை நடத்தி ஒரு முடிவிற்கு வந்தார்கள்.

இஸ்லாத்திற்காகத் தம் இன்னுயிர் கொடுக்கத் தயங்காத அடல் வீரர்கள் அங்கு வரவழைக்கப்பட்டனர். அவர்களிலிருந்து பதினோரு அமீர்களைக் கலீபா தேர்ந்தார்கள். அவர்கள் தாம் காலித் இப்னு வலீத் (ரலி), இக்ரிமா (ரலி), அம்ர் பின் ஆஸ் (ரலி), முஹாஜிர் பின் அபீ உமைய்யா (ரலி), காலித் பின் சயீத் (ரலி), அலாபின் அல் ஹல்ரமி (ரலி), சுவைத் பின் மக்ரான் (ரலி), அரத்தாபின் சர்சமா (ரலி), ஹஸீபா பின் முஹாஸின் (ரலி), துரிஃபத்தாஹ் பின் ஹாஜிஸ் (ரலி), ஷுரஹ்பீல் பின் ஹஸனா (ரலி) ஆகியோர் ஆவர். இவர்களின் கைகளில் கொடி களைக் கொடுத்து இவர்களின் கீழ் நின்று போரிட வேண்டிய கோத்தி ரங்களையும் கலீபா குறிப்பிட்டனர். அதே சமயம் பொய்த் தூதர்களின் பின்புறம் போன கோத்திரத்தவர்களுக்கு, ''பொது மன்னிப்பு அருளப்படும், நீங்கள் இஸ்லாத்தின்பால் திரும்பி விட்டால்'' என்றும் அவர்கள் கடிதம் எழுதினர். ''இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டு அதன் அழைப்பிற்கு அடிபணிந்தால், அவர்களைத் தாக்க வேண்டாம்'' என்றும் கலீபா தம் அமீர்களுக்குக் கட்டளையிட்டனர்.

அமீர்களிடம் அவர்களின் கடமைகள் என்ன, திட்டங்கள் என்ன என்பதை விளக்கும் பத்திரம் கொடுக்கப்பட்டது. அவர்கள் எவரை எதிர்த்துப் போரிட வேண்டும்; அது முடிந்த பின் எங்கு செல்ல வேண்டும்; அதன் பின் எவர் உதவிக்குப் போகவேண்டும் என்னும் ஆலோசனைகளும் அதில் அடங்கியிருந்தன. முஸைலமாவை முறியடிக்க இக்ரிமா (ரலி) அவர்களும்; ஷுரஹ்பீல் (ரலி) அவர்களும் அஸ்வத் அன்ஸீயை அடக்க சுபைர் (ரலி) அவர்களும் அனுப்பப் பட்டனர். துலைகாவைத் தொலைக்க கலீபா தாமே செல்லத் தயாராயினர். யமன், ஹள்ரமௌத் ஆகிய இடங்களில் இருந்த கலகங்களை ஒடுக்க ஹுதைபா (ரலி) போனார்கள். சிரியா எல்லையைக் காக்க ஒரு படை சென்றது. குஸாஆ கோத்திரத்தைத் தாக்க ஒரு படை புறப்பட்டது. பனீ சலீம், ஹவாஸின் கோத்திரங் களுக்குப் பாடம் கற்பிக்க ஒரு படை போனது. இவர்கள் அடக்க வேண்டிய மக்கள், பிடிக்க வேண்டிய இடங்கள் ஆகியவற்றைக் கலீபா

தெளிவாக வரையறுத்துக் கூறினர். இந்தத் திட்டத்தில் அடங்காமல் அரபு அவனியின் எந்தப் பகுதியும் விடப்படவில்லை. மதீனாவில் சிறு படையொன்று நிறுத்தப்பட்டது. இப்பொழுது அதுவே மதீனாவுக்கு அதிகமாகி இருந்தது.

அறிவான இந்தத் திட்டத்தை அமல்படுத்த நாட்டின் பல பகுதி களுக்கும் அமீர்களை அனுப்பி வைத்து விட்டுக் கலீபா துலைகாவைத் தொலைக்கப் புறப்பட்டுச் சென்றார்கள். அவர்கள் துல்குலைபா என்னும் இடத்தை அடைந்த போது, அவர்களின் ஒட்டகையை ஒருவர் வந்து பிடித்து நிறுத்தினார். அவரைப் பார்த்து, அவரின் அச் செயலைப் பார்த்து கலீபா அவர்களுக்குச் சினம் ஏற்படவில்லை. ஏனெனில் அவ்விதம் செய்தவர், அவர்களின் தோழர்களில் ஒருவரான அலீ (ரலி) அவர்கள். அபாயம் மலிந்த அந்தச் சூழ்நிலையில் கலீபா அவர்கள் மதீனாவை விட்டுச் செல்வது உகந்தது அல்ல என்றும், துலைகாவைத் தொலைக்க வேற்றொருவரை அனுப்புவதே விவேகமானது என்றும், அலீ (ரலி) அவர்கள் கலீபா அவர்களிடம் கூறினர். அந்தச் சொற்களின் பின்புறம் இருந்த அன்பையும் அறி வையும் உணர்ந்த கலீபா அவர்கள், அதற்கு இணங்கி மதீனா திரும்பினர்.

இதன்பின் அவர்கள் துலைகாவைத் தொலைக்க எவரை அனுப்புவது என்பது பற்றித் தம் தோழர்களுடன் ஆலோசனை நடத்தினார்கள். தோழர்களால் ஒரு முடிவிற்கு வர முடியாத போது, சிலரின் பெயர்களை எழுதிக் குலுக்கிப் பார்த்தார்கள். அதில் காலித் இப்னு வலீத் (ரலி) அவர்களின் பெயர் குறிக்கப் பட்டிருந்தது. அதன் படி காலித் இப்னுவலீத் (ரலி) அவர்கள் அப்பணிக்கு அனுப்பப் பட்டனர். இதன்பின் கலீபா படை நடத்தி மதீனா விட்டு எங்கும் செல்லவில்லை. ஆனால், அது அவர்களுக்கு மகிழ்ச்சியை அளிக்க வில்லை என்பது உண்மை. அந்தச் சமயத்தில் கலீபா தங்கியிருப்பதற்கு உகந்த இடமாக மதீனாதான் இருந்தது. அங்கிருந்து கொண்டு அமீர் களின் தலைமையில் அரபு அவனி எங்கும் படர்ந்து கொண்டிருக்கும் படைகளை இயக்குவது எளிதாகும்.

இந்த நடவடிக்கைகள் அவசியமானவையா, அடாதவையா என்னும் எண்ணம் சிலருக்கு ஏற்படலாம். நாடு பிடிக்க வேண்டும் என்னும் விருப்பமோ, அந்நாடுகளில் வாழ்வோரை முஸ்லிம்களாக ஆக்க வேண்டும் என்னும் ஆசையோ அவற்றிற்குக் காரணம் அல்ல.

இஸ்லாத்தைத் காக்க வேண்டுமாயின், இந்த நடவடிக்கைகளை எடுத்தே ஆகவேண்டும் என்னும் அவசியம் இப்பொழுது கலீபா அவர்களுக்கு ஏற்பட்டிருந்தது. உண்மையில் இந்த நடவடிக்கைகளை எடுக்க அவர்கள் சற்றுத் தயங்கியிருந்தாலும், தாமதித்திருந்தாலும், அரபு அவனியிலிருந்து இஸ்லாம் அழிக்கப்பட்டிருக்கும். இத்தகைய விபரீத விளைவு ஏற்படாமல் தடுக்க இஸ்லாமியக் கலீபா என்ன, இன்று நாகரீக அரசு எனத் தன்னைப் பீற்றிக்கொள்ளும் எதுவுமே பின் வாங்கியிராது.

இப்பொழுது காலித் இப்னு வலீத் (ரலி) அவர்கள் துலைகா இருக்குமிடம் நெருங்கினர். துலைகாவின் நிலை பற்றி ஒற்றறிந்து வர, உக்காஸா, தாபித் என்னும் இரு நபித்தோழர்களை அவர்கள் அனுப்பி வைத்தனர். அவர்கள் இருவரையும் துலைகாவும் அவர் சகோதரர் சல்மாவும் சேர்ந்து கொன்று விட்டார்கள். போர் நடக்கும் இடம் வந்தடைந்த போது இந்தச் செய்தியை அறிந்த முஸ்லிம்கள் மனம் தளர்ந்து விட்டனர். ஆனால் காலித் (ரலி) அவர்கள் மனம் தளரவில்லை. அவர்கள் அமரை விரும்பாது, அமைதியை விரும்பி துலைகாவுக்கு ஒரு வேண்டுகோள் விடுத்தனர். அதில் அவர்கள், விரோதச் செயலை விட்டு விடும் படியும், வீணான அந்தப் போரைத் தவிரும்படியும் துலைகாவிடம் கேட்டுக் கொண்டனர். ஆனால் துலைகா அதனை ஏற்றுக் கொள்ளாமல் தம்முடைய பனீ அஸத் அணியுடன் கத்ஃபான் கோத்திரக் கிளைகளாகிய பனீ அப்ஸ், பனீ திப்யான் அணிகளையும் கொண்டு வந்து, பொஸாகா என்னு மிடத்தில் நிறுத்தினர். இரு தரப்பினருக்கும் இதன்பின் போர் மூண்டபோது ஏனோ அதில் அவர் கலந்து கொள்ளாமல், தலை மீது ஒரு துண்டைப் போட்டுக் கொண்டு ஓர் இடம் பார்த்து உட்கார்ந்தார். அதற்கு அவர், தாம் ஜிப்ரயீலின் வருகையை எதிர்ப்பார்ப்பதாய்த் தம் ஆட்களிடம் காரணம் கூறினார்.

முதன் முதலாக பனீகுராரா கோத்திரத்தலைவன் உயைனா காலித் (ரலி) அவர்களுடன் மோதினான். இவனே, ''குறைஷிகளின் தூதுவரை விட, நம் இனத் தூதுவர் ஒருவர் இருப்பது நல்லது'' எனக் கூறியவன். காலித் (ரலி) அவர்கள் முன் அதிக நேரம் நிற்க அவனால் முடியவில்லை. எனவே அவன், தாக்குதலை நிறுத்திவிட்டு, துலைகா விடம் வந்து, ''ஜிப்ரயீல் வந்து விட்டாரா?'' என வினவினான். ''இல்லை'' என்றார் துலைகா. மூன்று முறை களத்தில் அடிதாங்க முடியாமல் போகும் போதெல்லாம், இப்படி வந்து கேட்டான் அவன்.

இறுதியில்தான் துலைகா அவன் கேள்விக்கு ''ஆம்'' என்று பதில் கூறினார். ஆவலுடன் அவன், ''ஜிப்ரயீல் என்ன சொன்னார்?'' எனக் கேட்ட போது ''உம்முடைய நம்பிக்கை காலிதுடைய நம்பிக்கையால் ஒளிபெறப்போவதில்லை. உங்களுக்கிடையில் ஒரு சம்பவம் நிகழப் போகிறது. அதனை நீர் மறக்கவே முடியாது'' என ஜிப்ரயீல் சொன்னதாக துலைகா கூறினார். அதைக் கேட்டதும் தலைவன் ஏளனத்துடன் கத்தினான். ''ஆம் இறைவன் மீது ஆணையாகக் கூறுகிறேன், உமக்கு ஒரு சம்பவம் நிகழப்போகிறது. அதனை நீர் ஒரு போதும் மறக்கவே மாட்டீர்'' என்று. அத்துடன் அவன் களத்தில் நின்ற தம் கோத்திரத்தவரிடம் ஓடி, ''பனீகுராராக்களே! எடுங்கள் ஓட்டத்தை! இந்த ஆதாரமற்ற பொய்யன் தவறானவற்றைக் கூறினான்'' என்று கத்தினான். உடனே அவர்கள் உயிர் பிழைத்தால் போதும் என ஓட்டமெடுத்தார்கள். அதைக் கண்டு துலைகா, ''என்ன செய்யப் போகிறீர்?'' என்று கேட்டார். ''போரிட எங்கள் கெடு முடிந்துவிட்டது. ஜிப்ரயீலிடம் கூறும்! அவர்தாம் இனி போரிடவேண்டும். இப்பொழுது அவர் கெடுதான்'' என்றான் உயைனா.

பனீகுராராக்கள் ஓட்டமெடுத்ததைக் கண்டதும் பனீ அஸத், கத்பான் கோத்திரத்தவரின் நெஞ்சங்களிலிருந்து துணிவும் ஓட்டமெடுத்தது. அவர்களால் இப்பொழுது இஸ்லாமியப்படை முன் நிற்கவே இயலவில்லை. அதனால் அவர்களை வெகு எளிதில் காலித் (ரலி) அவர்கள் முறியடித்தார்கள். வெற்றி, முஸ்லிம்களுக்கு முகமன் கூறிவிட்டது என்பதை அறிந்ததும், போர் தொடங்கு முன் தலை மீது போட்டுக் கொண்டிருந்த துண்டை முகத்தில் இழுத்துப் போட்டுக் கொண்டு, துலைகா தம் மனைவியுடன் தலை தப்பி ஓடினார். அவர் தம் ஓட்டத்தை சிரியா சேரும் வரை நிறுத்தவில்லை. அங்கிருந்த ஒரு கோத்திரத்தார், அவரின் அவல நிலை கண்டு உளமிரங்கி, அவருக்கு அபயம் அளித்தனர். பிறகு அவர் பனீ அஸத் கோத்திரத்தாருக்குப் பொது மன்னிப்பு அருளப்பட்ட போது, இஸ்லாத்தைத் தழுவி, தாம் செய்த பிழைக்கு கழுவாய் தேடிக் கொண்டார். ஒரு சமயம் அவர் புனித ஹஜ்ஜுச் செய்ய மதீனா வழியே சென்ற போது, அவரை இனம் கண்டுகொண்ட முஸ்லிம்கள் சிலர் அவரைப் பிடித்துக் கொண்டு வந்து கலீபா முன் நிறுத்தினார்கள். அவரை விட்டு விடும்படியும், அல்லாஹ் அவருக்கு நேர் வழிகாட்டி விட்டான் என்றும் கலீபா கூறினர்.

இந்தப் போர் முடிந்ததும், காலித் (ரலி) அவர்கள் பாரசீக வளைகுடா பக்கம் வாழ்ந்த பனீ தமீம் கோத்திரத்தார் மீது படை

எடுத்துச் சென்றார்கள். பனீ தமீம்களில் ஒரு பகுதியினர் கிறிஸ் தவர்கள், மறுபகுதியினர் உருவ வழிபாடு உடையவர்கள். அவர் களுக்கு யமாமாவிலிருந்து யூப்ரடீஸ் நதிவரை இருந்த மேய்ச்சல் நிலங்கள் சொந்தமாய் இருந்தன. இஸ்லாத்தை ஏற்றிருந்த இவர்கள், அதில் உறுதியுடன் நில்லாமல், உதறியதுடன் நில்லாமல், அதனை அழிக்கவும் ஆயத்தமானார்கள். இந்தக் கோத்திரத்தைச் சேர்ந்ததுதான் பனீயர்பூவும். அதனை காலித் (ரலி) அவர்கள் தாக்கித் தோற்கடித்தனர். அதன் தலைவனான மாலிக் பின் நுவைராஹ் சிறைப்பட்டான். அவனை முஸ்லிம் காவலாளிகள் கொன்று விட்டனர். சிறைப்பட்ட வரைக் கொல்வது கலீபா அவர்களுக்குச் சிறிதும் பிடிக்காத ஒன்று. எனவே அச்செயலை அநியாயம் என எண்ணிய கலீபா வெற்றிகளை ஈட்டித் தரும் வீரத் தளபதி காலித் என்பதற்காக அவர்களைத் தண்டியாது விடுவதை விரும்பாமல், உடனே அவர்களை மதீனாவுக்கு வரவழைத்தார்கள். ''நிகழ்ந்தது என்ன?'' என அவர்களிடம் கலீபா கடுமையுடன் கேட்டார்கள். தம் சொல்லைத் தவறாகப் புரிந்து கொண்ட காவலாளிகள் செய்த தவறு அது என காலித் (ரலி) அவர்கள் கலீபாவுக்கு இவ்விதம் விளக்கிக் கூறினர்: ''அது குளிர் இரவாயி ருந்ததால், 'சிறைப்பட்டோரைப் போர்த்துங்கள்' என்னும் தம் உத்தரவை சிறைப்பட்டோரைக் கொல்லுங்கள்' எனத் தவறாகப் புரிந்து கொண்டு திரார் இதைச் செய்துவிட்டார். அவர் பகுதியில் இருந்த வழக்கு 'போர்த்துங்கள்' என்பதற்கு 'கொல்லுங்கள்' எனப் பொருள் கொள்வது.'' இந்த விளக்கம் கலீபா அவர்களின் மனத்திற்கு திருப்தி அளித்தது. காலித் (ரலி) அவர்கள் செய்த குற்றம் உறுதிப் படுத்தப்படின் கலீபா, காலித் (ரலி) அவர்களுக்கு மரண தண்டனை கொடுக்கத் தயாராய் இருந்தார்கள். இது அவர்களின் வளையாத நீதிக்கு ஒரு நிலையான உதாரணமாகும்.

இறைதூது எனக் கூறிக்கொண்டு, மெஸபடோமியாவிலிருந்து கிளம்பிய சஜாஹ்விடம், அவளின் தளபதிகள், ''எவருடன் முதலில் பொருதவேண்டும்?'' எனக் கேட்டனர். பனீரபாவைத் தாக்கும்படித் தமக்கு இறைவனிடமிருந்து செய்தி வந்திருக்கிறது என்றாள் அவள். அவளின் ஆட்களில் அறிவும், அனுபவமும் பெற்றிருந்த சிலர், ''முதலில் முகம்மதின் மனிதர்களுடன் பொருதுவது மேல்'' என்றனர். ஏனெனில், ''அவர்களை வென்றுவிட்டால், மற்றவர்கள் தாமே வீழ்வது உறுதி'' என்றார்கள் அவர்கள். அதற்குத் தான் இறைவனின் அனுமதியை எதிர்பார்ப்பதாய் சஜாஹ் கூறினாள். அடுத்த நாள்

காலையில், அவள் தன் தளபதிகளைப் பார்த்து, முதலில் யமாமா வுக்குச் செல்லவேண்டும் எனவும் முஸைலமாவின் நிலையை அறிய வேண்டும் எனவும் தெரிவித்தாள். அவள் கருத்தை எல்லோரும் அங்கீகரித்தனர். அவளை அடக்க அனுப்பப்பட்ட ஷுரஹ்பீல் (ரலி) இக்ரிமா (ரலி) ஆகியோரின் உதவிக்குப் போகும்படி காலித் (ரலி) அவர்களுக்குப் கலீபா அவர்களின் கட்டளை வந்தது. ஆனால் இவர்கள் மூவரும், 'அவளுக்கும் முஸைலமாவுக்கும் இடையே என்ன நிகழுகிறது என்பதைப் பார்க்கலாம்' என எண்ணி சற்று அமைதியாய் இருந்தனர்.

இதற்கிடையில் தன்னைக் காண வந்த முஸைலமாவின் தூதுவர் களிடம், சஜாஹ் அவரைத் தாக்கும்படித் தனக்கு இறைவனிடமிருந்து ஆணை வந்திருக்கிறது என்று சொல்லி அனுப்பினாள். முஸ்லிம் களின் தாக்குதல் விரைவில் வரலாம் என முஸைலமா நம்பியதால், அவர் சஜாஹ்வுடன் நட்புறவு கொள்வது நல்லது என எண்ணினார். சஜாஹ் முஸைலமாவை வந்து சந்தித்தாள்.

இருவரும் தங்களுக்கு இறைவனிடமிருந்து வந்த செய்திகள் எனப் பொய்யுரைகளைப் புகன்று கொண்டனர். முஸைலமா, சஜாஹ்வைப் பார்த்து ''நீர் இறைதூதர் என்றார்'' சஜாஹ் முஸைல மாவைப் பார்த்து ''உண்மையில் நீர் இறை தூதர் தாம்'' என்றாள். இப்பொழுது முஸைலமாவின் அழகிய தோற்றத்தில் தம் உளத்தைப் பறிகொடுத்த சஜாஹ், ''ஏன் நாம் தடைகளைத் தள்ளி வைத்து விட்டுப் பாலும், சர்க்கரையும் போல் ஒன்று கலக்கக் கூடாது?'' என்று கேட்டாள். ''இன்றிரவு உம்மிடம் என் மென்னுடலை அர்ப்பணிக் கிறேன்'' என்றும் கூறினாள். அவ்விதமே அவள் தன்னை, அவரிடம் ஒப்படைத்தாள். இவ்விதம் அவர்கள் இருவரும் மூன்று நாட்கள் வரை உலகை மறந்து கிடந்தனர்.

இதன்பின் அவள், தன் தளபதிகளிடம் திரும்பி வந்தாள். அவள் முஸைலமாவைக் கண்டு பேசியது பற்றி அவளிடம் அவர்கள் கேட்டார்கள். ''அவரும் என் போன்றே இறை தூதராய் இருப்பதை அறிந்தேன். அவரை மணந்து கொள்ள இறை இணக்கம் எனக்குக் கிடைத்துவிட்டது'' என்றாள் அவள். முஸைலாமாவிடம் தன்னை இழந்து விட்டு வந்திருக்கிறாள் அவள் என்பதை உணர்ந்ததும், அவளுடன் வந்தவர்கள் அவளையும், அவள் தூதையும் நம்பியதற்காக வருந்தினார்கள். உடனே அவர்கள் முஸ்லிம் படையுடன் மோத

விரும்பாமல், ஊர் திரும்பிச் சென்று, தாம் செய்த தவற்றிற்கு மன்னிப்புக் கோரிக் கலீபாவுக்குக் கடிதம் எழுதினர். சஜாஹ் ஊர் திரும்பினாள். அத்துடன் எரி வெள்ளி போல் எழுந்த அவளின் இறை தூதர் வாழ்வு ஒளி இழந்து ஓடி மறைந்தது.

முஸைலமா தம் மூன்று நாள் மனைவியைப் பார்த்தும் பாடம் கற்றுக் கொள்ளவில்லை. அவர் காலித் (ரலி) அவர்களை எதிர்பார்த்து அக்ரபா என்னுமிடத்தில் முகாமிட்டார். அவரைச் சந்திக்க கலீபா, இக்ரிமா (ரலி) அவர்களை அனுப்பி வைத்தனர். பிறகு அவர் உதவிக்கு ஷுரஹ்பீல் (ரலி) அவர்களை அனுப்பினர். வெற்றி தாம் பெற்றதாக இருக்கவேண்டும் என்னும் ஆவலில் இக்ரிமா (ரலி) அவர்கள் அவசரப் பட்டுப் போரைத் துவக்கித் தோல்வியைத் தழுவிக் கொண்டனர். அதை அறிந்து கலீபா, இக்ரிமா (ரலி) அவர்களுக்குக் கடுஞ்சினத் துடன் கடிதம் எழுதினர். ''நான் உம்முடைய முகத்தைப் பார்க்கவும் விரும்பவில்லை. நீரும் என் முகத்தைப் பார்க்கவேண்டாம்! மக்கள் மனத்தைத் தளர்விக்கிறாற் போன்று, நீரும் இங்கு வரவேண்டாம்! தொலைவில் உள்ள கடற்கரைப் பக்கம் நீர் செல்லும்! அங்கு கிழக்கு, தெற்குத் திக்குகளிலிருந்து வரும் படையினருடன் சேர்ந்து கொள்ளும்!''. கலீபாவின் இந்தக் கடிதம் கண்டதும் உளம் விண்டு வேதனைப்பட்டவர்களாய் இக்ரிமா (ரலி), யமாமாவைச் சுற்றிக் கொண்டு, உம்மான் சென்றனர். ஷுரஹ்பீல் (ரலி) அவர்கள் மட்டும் அங்குத் தங்கியிருக்க வேண்டும், காலிதின் வருகைக்காகக் காத்திருக்க வேண்டும் என்பது கலீபா அவர்களின் கட்டளை. மாலிக் பின் நுவைராஹ் கொல்லப்பட்டது சம்பந்தமாய் விளக்கம் சொல்ல வந்த காலித் (ரலி) அவர்களைக் கலீபா யாமாமாவுக்கு அனுப்பி வைத்தனர். அங்குக் கடும்போர் ஏற்படலாம் என எதிர்பார்த்துக் கலீபா காலித் (ரலி) அவர்களின் உதவிக்கு கைஸ் பின் தாபித் (ரலி) ஜைத் பின் கத்தாப் (ரலி) ஆகியோரையும் போகுமாறு பணித்தனர்.

**யமாமா போர்**

இப்பொழுது முஸைலமாவிடம் நாற்பதாயிரம் வீரர் கொண்ட படை இருந்தது. ஆனால் காலித் (ரலி) அவர்களிடம் இருந்ததோ மிகவும் சிறிய படை ஒன்றுதான். இருவர் படைகளுக்கும் இடையில் அக்ரபாவின் மணல் வெளியில் கடும் போர் தொடங்கியது. இது இஸ்லாமிய வரலாற்றில் ஒரு முக்கியமான போராகும். வரலாற்றா சிரியர் தபரி, ''இது போன்ற போரை முஸ்லிம்கள் என்றுமே புரிந்த

தில்லை'' என்று கூறுகிறார். இரு படைகளும் எதிரும் புதிருமாக நிற்கும் போது, நஹ்ஹார்* என்பவன் தம்முடன் பொருத வருபவர் எவர் என அறை கூவல் விட்டான். அதனை ஏற்று அவனைக் கொன்றார்கள் ஜைத் பின் கத்தாப் (ரலி) அவர்கள். முதலில் முஸ்லிம்களால் முஸைலமாவின் வீரர்கள் தொடுத்த தாக்குதல் முன் கால் ஊன்றி நிற்க முடியவில்லை. முஸ்லிம்களை அவர்கள் விரட்டி, விரட்டி அடித்தார்கள். முஸைலமா, காலித் (ரலி) அவர்களின் முகாம் வரை வந்து விட்டார். அவரின் வீரர்கள் காலித் (ரலி) அவர்களின் மனைவி உம்மு தமீமைக் கொல்லவும் துணிந்துவிட்டனர். ஆனால் அவர்கள் அவ்வாறு செய்யாததற்குக் காரணம், முஜா. அவர் முஸ்லிம்களிடம் கைதாகி இருந்தார். அவரை காலித் (ரலி) அவர்கள் மனைவி பரிவுடன் நடத்தியது, அவர் மனத்தை மாற்றியது. உம்மு தமீம் அவர்களைக் கொல்ல வந்த தம் தோழர்களைப் பார்த்து முஜா கூறினார், ''இவர் மிகவும் நல்ல பெண்மணி. ஏன் பெண்களைக் கொல்கிறீர்கள்? அவர்களின் ஆண்களுடன் போரிடுங்கள்!'' என்று. அன்று இஸ்லாம் தன் அழிவைக் கண்டுவிடுமோ என அஞ்சும் நிலைகூட வந்து விட்டது.

உண்மை நிலையை உணர்ந்து கொண்ட காலித் (ரலி) அவர்கள் போரில் திருப்பம் ஒன்றை உண்டு பண்ண ஓர் உபாயம் செய்தனர். பாலைவன அரபிகளுக்கும், நகர்ப்புற அரபிகளுக்கும், இடையே இருந்த விரோத உணர்ச்சியை அவர்கள் கிளறி விட்டார்கள். அது அவர்கள் எதிர்பார்த்த பலனை அளிக்கத் தவறவில்லை. பாலைவன அரபிகள், ''எவ்விதம் சண்டை போடுவது என்பதை நாங்கள் கற்றுத் தருகிறோம் உங்களுக்கு'' எனக் கத்திக் கொண்டு கடுந்தாக்குதல் தொடுக்கத் தொடங்கினர். கைஸ் பின் தாபித் (ரலி) அவர்களும், ''முஸ்லிம்களே! நீங்கள் உங்களின் மனத்திற்குக் கெட்ட பழக்கங்களைக் கற்றுக் கொடுத்து விட்டீர்கள். இறைவனே! நான் யமாமா மக்கள் வணங்கும் தெய்வங்களையும், இந்த முஸ்லிம்களின் செயலையும் மனமார வெறுக்கிறேன்'' எனக் கூறிக்கொண்டு, பகைவர் முன் பாய்ந்தார். அவரின் காலை வெட்டினான் ஒருவன். அது துண்டானது. உடலுடன் தனக்கிருந்த உறவை அறுத்துக்கொண்ட அதனை எடுத்து அவர் பகைவர் மீது வேகத்துடன் வீசி எறிந்தார். அது தன் மீது பட்டது தான் தாமதம், பகை வீரன் ஒருவன் அக்கணமே பட்டு வீழ்ந்தான். இந்தப் போரில் இவ்வித வீரம் காட்டப் போராடிய இன்னொருவர்

* இவனே அண்ணல் நபி (ஸல்) அவர்களால் இஸ்லாத்தைப் போதிக்க அனுப்பப்பட்டவன்.

விரும்பாமல், ஊர் திரும்பிச் சென்று, தாம் செய்த தவற்றிற்கு மன்னிப்புக் கோரிக் கலீபாவுக்குக் கடிதம் எழுதினர். சஜாஹ் ஊர் திரும்பினாள். அத்துடன் எரி வெள்ளி போல் எழுந்த அவளின் இறை தூதர் வாழ்வு ஒளி இழந்து ஓடி மறைந்தது.

முஸைலமா தம் மூன்று நாள் மனைவியைப் பார்த்தும் பாடம் கற்றுக் கொள்ளவில்லை. அவர் காலித் (ரலி) அவர்களை எதிர்பார்த்து அக்ரபா என்னுமிடத்தில் முகாமிட்டார். அவரைச் சந்திக்க கலீபா, இக்ரிமா (ரலி) அவர்களை அனுப்பி வைத்தனர். பிறகு அவர் உதவிக்கு ஷுரஹ்பீல் (ரலி) அவர்களை அனுப்பினர். வெற்றி தாம் பெற்றதாக இருக்கவேண்டும் என்னும் ஆவலில் இக்ரிமா (ரலி) அவர்கள் அவசரப் பட்டுப் போரைத் துவக்கித் தோல்வியைத் தழுவிக் கொண்டனர். அதை அறிந்து கலீபா, இக்ரிமா (ரலி) அவர்களுக்குக் கடுஞ்சினத் துடன் கடிதம் எழுதினர். ''நான் உம்முடைய முகத்தைப் பார்க்கவும் விரும்பவில்லை. நீரும் என் முகத்தைப் பார்க்கவேண்டாம்! மக்கள் மனத்தைத் தளர்விக்கிறாற் போன்று, நீரும் இங்கு வரவேண்டாம்! தொலைவில் உள்ள கடற்கரைப் பக்கம் நீர் செல்லும்! அங்கு கிழக்கு, தெற்குத் திக்குகளிலிருந்து வரும் படையினருடன் சேர்ந்து கொள்ளும்!''. கலீபாவின் இந்தக் கடிதம் கண்டதும் உளம் விண்டு வேதனைப்பட்டவர்களாய் இக்ரிமா (ரலி), யமாமாவைச் சுற்றிக் கொண்டு, உம்மான் சென்றனர். ஷுரஹ்பீல் (ரலி) அவர்கள் மட்டும் அங்குத் தங்கியிருக்க வேண்டும், காலிதின் வருகைக்காகக் காத்திருக்க வேண்டும் என்பது கலீபா அவர்களின் கட்டளை. மாலிக் பின் நுவைராஹ் கொல்லப்பட்டது சம்பந்தமாய் விளக்கம் சொல்ல வந்த காலித் (ரலி) அவர்களைக் கலீபா யாமாமாவுக்கு அனுப்பி வைத்தனர். அங்குக் கடும்போர் ஏற்படலாம் என எதிர்பார்த்துக் கலீபா காலித் (ரலி) அவர்களின் உதவிக்கு கைஸ் பின் தாபித் (ரலி) ஜைத் பின் கத்தாப் (ரலி) ஆகியோரையும் போகுமாறு பணித்தனர்.

**யமாமா போர்**

இப்பொழுது முஸைலமாவிடம் நாற்பதாயிரம் வீரர் கொண்ட படை இருந்தது. ஆனால் காலித் (ரலி) அவர்களிடம் இருந்ததோ மிகவும் சிறிய படை ஒன்றுதான். இருவர் படைகளுக்கும் இடையில் அக்ரபாவின் மணல் வெளியில் கடும் போர் தொடங்கியது. இது இஸ்லாமிய வரலாற்றில் ஒரு முக்கியமான போராகும். வரலாற்றா சிரியர் தபரி, ''இது போன்ற போரை முஸ்லிம்கள் என்றுமே புரிந்த

தில்லை'' என்று கூறுகிறார். இரு படைகளும் எதிரும் புதிருமாக நிற்கும் போது, நஹ்ஹார்* என்பவன் தம்முடன் பொருத வருபவர் எவர் என அறை கூவல் விட்டான். அதனை ஏற்று அவனைக் கொன்றார்கள் ஜைத் பின் கத்தாப் (ரலி) அவர்கள். முதலில் முஸ்லிம்களால் முஸைலமாவின் வீரர்கள் தொடுத்த தாக்குதல் முன் கால் ஊன்றி நிற்க முடியவில்லை. முஸ்லிம்களை அவர்கள் விரட்டி, விரட்டி அடித்தார்கள். முஸைலமா, காலித் (ரலி) அவர்களின் முகாம் வரை வந்து விட்டார். அவரின் வீரர்கள் காலித் (ரலி) அவர்களின் மனைவி உம்மு தமீமைக் கொல்லவும் துணிந்துவிட்டனர். ஆனால் அவர்கள் அவ்வாறு செய்யாததற்குக் காரணம், முஜா. அவர் முஸ்லிம்களிடம் கைதாகி இருந்தார். அவரை காலித் (ரலி) அவர்கள் மனைவி பரிவுடன் நடத்தியது, அவர் மனத்தை மாற்றியது. உம்மு தமீம் அவர்களைக் கொல்ல வந்த தம் தோழர்களைப் பார்த்து முஜா கூறினார், ''இவர் மிகவும் நல்ல பெண்மணி. ஏன் பெண்களைக் கொல்கிறீர்கள்? அவர்களின் ஆண்களுடன் போரிடுங்கள்!'' என்று. அன்று இஸ்லாம் தன் அழிவைக் கண்டுவிடுமோ என அஞ்சும் நிலைகூட வந்து விட்டது.

உண்மை நிலையை உணர்ந்து கொண்ட காலித் (ரலி) அவர்கள் போரில் திருப்பம் ஒன்றை உண்டு பண்ண ஓர் உபாயம் செய்தனர். பாலைவன அரபிகளுக்கும், நகர்ப்புற அரபிகளுக்கும், இடையே இருந்த விரோத உணர்ச்சியை அவர்கள் கிளறி விட்டார்கள். அது அவர்கள் எதிர்பார்த்த பலனை அளிக்கத் தவறவில்லை. பாலைவன அரபிகள், ''எவ்விதம் சண்டை போடுவது என்பதை நாங்கள் கற்றுத் தருகிறோம் உங்களுக்கு'' எனக் கத்திக் கொண்டு கடுந்தாக்குதல் தொடுக்கத் தொடங்கினர். கைஸ் பின் தாபித் (ரலி) அவர்களும், ''முஸ்லிம்களே! நீங்கள் உங்களின் மனத்திற்குக் கெட்ட பழக்கங்களைக் கற்றுக் கொடுத்து விட்டீர்கள். இறைவனே! நான் யமாமா மக்கள் வணங்கும் தெய்வங்களையும், இந்த முஸ்லிம்களின் செயலையும் மனமார வெறுக்கிறேன்'' எனக் கூறிக்கொண்டு, பகைவர் முன் பாய்ந்தார். அவரின் காலை வெட்டினான் ஒருவன். அது துண்டானது. உடலுடன் தனக்கிருந்த உறவை அறுத்துக்கொண்ட அதனை எடுத்து அவர் பகைவர் மீது வேகத்துடன் வீசி எறிந்தார். அது தன் மீது பட்டது தான் தாமதம், பகை வீரன் ஒருவன் அக்கணமே பட்டு வீழ்ந்தான். இந்தப் போரில் இவ்வித வீரம் காட்டப் போராடிய இன்னொருவர்

* இவனே அண்ணல் நபி (ஸல்) அவர்களால் இஸ்லாத்தைப் போதிக்க அனுப்பப்பட்டவன்.

உமர் (ரலி) அவர்களின் உடன் பிறந்த ஜைத் பின் கத்தாப் (ரலி). "அல்லாஹ்வின் மீது ஆணையாக, நான் பகைவரைத் தோற்கடிக்க வேண்டும் அல்லது இறை சமூகம் சென்று ஏதாவது சமாதானம் கூற வேண்டும். இவ்விரண்டில் ஒன்றைச் செய்யாதவரை பேச மாட்டேன்" எனச் சூளுரைத்தார்கள். அதன் பின் முஸ்லிம்களைப் பார்த்து, "முன்னேறிச் செல்லுங்கள்! நீங்கள் நிச்சயமாக இறைவனின் வீரர்கள். உங்கள் பகைவர்கள் ஷைத்தானின் படைவீரர்கள். வெற்றி அல்லாஹ்வுக்கும், அவன் தூதருக்கும், இவன் படை வீரர்களுக்கும் தான். என்னைப் பாருங்கள்! என்போன்றே நீங்களும் வீரத்துடன் போரிடுங்கள்!" என முழங்கிக் கொண்டு மூர்க்கமாகத் தாக்கினார்கள். இதேபோல் அபூஹுதைபா (ரலி) அவர்களும், "திருகுர் ஆனை வேத மாகப் பெறும் பேறு பெற்றவர்களே! உங்கள் செயல் மூலம் திருகுர் ஆனை அழகுப்படுத்துங்கள்!" என உரத்துக் கூறிக்கொண்டே பகை அணியை உழக்கினர். இவ்விருவரும் இவ்விதம் அஞ்சா நெஞ்சுடன் போரிட்டு அன்று அமர வாழ்வடைந்தனர்.

இந்தப் போரில் ஈடுபட்டிருந்தவர்களில் ஒருவர் அனஸ் (ரலி) அவர்களின் உடன் பிறந்த பரா பின் மாலிக் (ரலி) அவர்கள். அசாதாரண வீரம் அமைந்தவர்கள் களத்தில் புகும் வண்ணம் எழுந் ததும், அவர்களுக்கு உடல் முழுதும் ஓர் ஆட்டம் ஏற்படும். அது சற்று நேரம் நீடிக்கும். அது அடங்கியதும் அவர்கள் அடங்காச்சினத்துடன் பகைவர் மீது பாய்வர். இப்பொழுது அவர்களுக்கு அவ்வித ஆட்டம் ஏற்பட்டு அடங்கியது. அவர்கள், பின் வாங்கிக் கொண்டிருந்த முஸ்லிம்களைப் பார்த்து, "நீங்கள் எங்கே செல்கிறீர்கள்? நான் பரா பின் மாலிக் ஆவேன். என் பக்கமாக வாருங்கள்!" எனக் கூவி அழைத்துக் கொண்டே, களத்தில் பாய்ந்தனர். முஸ்லிம்கள் பலமுறை பின்வாங்க நேர்ந்ததற்குக் காரணம், அப்பொழுது எழுப்பிய புழுதிக் காற்று முஸ்லிம்களின் கண்களில் மண்ணை வாரிப்போட்டதாகும். ஆனால் இந்த நிலை அதிக நேரம் நீடிக்கவில்லை. வளியின் திசை மாறியதும், முஸ்லிம்களின் விதியின் திசையும் மாறியது. முடிவில் முஸைலாமவின் படைகள் முஸ்லிம்கள் முன் நிற்க முடியா நிலை வந்தது. அவர்கள் இப்பொழுது முஸைலமாவின் ஆதரவாளனும் பனீ ஹனீபாக்களின் தலைவனுமான முஹ்கம் நின்ற இடத்திற்குப் பின்வாங்கிச் சென்றனர். முஹ்கம், தன் ஆட்களை அழைத்து முஸ்லிம்களைத் தாக்குமாறு ஆணையிட்ட போது, அம்பு ஒன்று பாய்ந்து வந்து அவன் பிடரியில் தைத்தது. அக்கணமே முஹ்கம் முக்கி

முனகிக் கொண்டு வீழ்ந்திறந்தான். மலைபோலும் முஹ்கத்தை மண்மீது விழவைத்த அம்பை எய்தவர் அபூபக்ர் (ரலி) அவர்களின் புதல்வர் அப்துர் ரஹ்மான் (ரலி) ஆவர். முஹ்கமின் இறப்பு முஸ்லிம்களின் உள்ளத்தில் உற்சாக வெள்ளத்தை உண்டு பண்ணியது. எனவே அவர்கள் பகைவரை விரட்டிக்கொண்டு ஹதீகா வரை சென்றனர். முஸைலமாவின் வீரர்கள் உயிர் தப்ப, உயர்ந்த சுவர்கள் அமைந்த பூங்கா ஒன்றிற்குள் ஓடி ஒளிந்து கொண்டார்கள். அங்கு முஸைலமாவும் பத்திரமான இடமாகப் பார்த்துப் பதுங்கிக் கொண்டார்.

முஸ்லிம்கள் அதன் சுவர்களைச் சூழ்ந்துகொண்டு அதன் வாயில் கதவுகளைத் தாக்கத் தலைப்பட்டார்கள். பரா பின் மாலிக் (ரலி) அவர்கள் இதுவரை எவரும் எதிர்பாராத வீரச் செயல் ஒன்றைச் செய்தனர். அகபா வெளியில் அன்று ஒரு நாள் அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்குக் கையடித்துக் கொடுத்துப் பிரமாணம் செய்த வீரத்திற்கு அடுத்தபடியாக, இதைத் தான் கூறவேண்டும். அவர்கள் தம் தோழர்களிடம் தம்மைத் தூக்கி சுவர் மீது விட்டுவிடும்படி வேண்டினர். அவ்விதமே அவர்கள் செய்ததும், அவர்கள் அஞ்சா நெஞ்சுடன் சிங்கத்தின் குகையுள் நுழைவதுபோல், அந்தப் பூங்காவுக்குள் குதித்தனர். அவர்களைப் பல நூறு பகைவீரர்கள் சூழ்ந்து கொண்டு வாள் வீசத் தொடங்கினார்கள். இம்மாதிரி சமயங்களில் தம் வாளை மின்னலாக மாற்றும் ஆற்றல் அவர்களுக்கு இருந்தது. அவர்களின் வாள் வீச்சில், இல்லை மின்னல் வீச்சில் பகைவரின் தலைகள் பந்துகளைப் போல் உருள ஆரம்பித்தன. இவ்விதம் அவர்கள் பகைவரின் தலைகளைப் பந்தாடிக் கொண்டே, வாயில் வரை வந்து அதன் தாழ்பாளைத் தள்ளி கதவைத் திறந்து விட்டனர். கதவு திறக்கப் பட்டதும், முஸ்லிம்கள் காட்டாற்று வெள்ளம் போல் உள் நுழைந்து உழக்கத் தொடங்கினார்கள். இப்பொழுது அந்தப் பூங்கா மரணப் பூங்காகாவாக மாறியது. மறைந்து கொள்ள உதவும் எனப் பகைவர் கருதிய மரங்கள், அவர்களை மாட்டிக் கொள்ள வைத்தன. இந்த இக்கட்டான இடத்தில் நின்று பகைவர்களால், முஸ்லிம்களை ஏறி வந்து தாக்கித் தள்ள இயலவில்லை. ஆயினும் பகைவர் தம் தாக்கு தலைத் தளர்த்த வில்லை. முஸைலமா, உறுதி தளராமல் ஓர் இடத்தில் நின்று கொண்டிருந்தார்.

இந்த நிலையை மாற்ற முஸைலமாவைக் கொல்வதே ஒரே வழி என உணர்ந்த காலித் (ரலி), தம்முடன் நேருக்கு நேராக போரிடப் பகைவர்களை அழைத்தார்கள். அப்படி வந்தவர்கள் அனைவரையும்

அவர்கள் தம் வாளுக்கு இரையாக்கினார்கள். இவ்விதம் தம் வாளுக்கு விருந்து வைத்துக் கொண்டே அவர்கள், முஸைலமாவின் அருகில் வந்தார்கள். அவருடன் பேசினார்கள். அதன் பின் முஸ்லிம்களைப் பார்த்துக் கூறினார்கள், ''ஒரு மூச்சுப் பிடித்தால் போதும், பகைவரை வீழ்த்திவிடலாம்'' என்று. அவ்விதமே முஸ்லிம்கள் செய்தனர். பகைவர் முஸ்லிம்களின் தாக்குதலைத் தாங்க இயலாமல் தாள் பெயர்க்க ஆரம்பித்தனர். அப்பொழுது அவர்கள் முஸைலமாவைப் பார்த்து, ''உமக்கு அளிக்கப்பட்ட இறைவன் உறுதி மொழிகள் பற்றி நீர் என்ன கூறுகிறீர்?'' என்று கேட்டனர். ''உங்கள் மானத்தைக் காத்துக் கொள்ளுங்கள், அப்படிக் காத்துக் கொள்ளவேண்டும் என்னும் ஆசை இருந்தால்'' என்றார் அவர். இதனை அலர் வாய் சொல்லி முடிக்குமுன் அதனை மூடவைக்க ஈட்டி ஒன்றுபாய்ந்து வந்தது. அது அவரைத் தாக்க, வேரற்ற மரம் போல் விழ்ந்தார் முஸைலமா. அவர் தலையை அன்ஸார் இளைஞர் ஒருவரின் வாள் அரிந்தது.

பெருமைக் குணம் மிகுந்த முஸைலமாவைக் கொன்றவர், கருமை நிறத்து ஹபஷீயான வஹ்ஷீ என்பவர். இந்த வஹ்ஷீ தான் இஸ்லாத்தை ஏற்பதற்கு முன், பத்ர் களத்தில் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் சிறிய தந்தை ஹம்ஸா (ரலி) அவர்களைக் கொன்றவர். பின்பொரு சமயம் அதைப் பற்றி அவர் பேசும் போதும் கூறினார்: ''அறியாமைக் காலத்தில் நான் அல்லாஹ்வின் தூதர் அவர்களுக்கு அடுத்தபடியான மிகவும் மேலான மனிதரைக் கொன்றேன். இஸ்லாத்தின் காலத்தின் மனிதர்களில் மிகவும் கீழான ஒருவனைக் கொன்றேன்.'' அவர், தாம் முஸைலமாவை ஈட்டியால் தாக்கிக் கொன்ற விதத்தை இப்படிக் கூறுகிறார் : ''ஹம்ஸா (ரலி) அவர்களைக் கொன்றபின் மதீனாவுக்குத் திரும்பி, அல்லாஹ்வின் தூதர் அவர்கள் முன் சென்று இஸ்லாத்தைத் தழுவினேன். ஆனால், என்னைப் பார்க்க அல்லாஹ்வின் தூதர் அவர்களுக்கு விருப்பம் இல்லை என்பதை அறிந்ததும், அதிகம் வருந்தினேன். அதன்பின் அவர்கள் சமூகம் செல்வதைத் தவிர்ந்து கொண்டேன். அல்லாஹ்வின் தூதர் அவர்கள் இறந்ததும், இஸ்லாமியப் படை யமாமா புறப்பட்டதை அறிந்து, நான் தூக்கி எறிந்து விட்டிருந்த என் ஈட்டியை எடுத்துக் கொண்டு முஸ்லிம் வீரர்களைப் பின் தொடர்ந்து சென்று, போர் நடக்கும் இடம் வந்து சேர்ந்தேன். பகைவர் நிர்மூலமாக்கப்பட்டு, அவர்கள் ஒரு பூங்கா விற்குள் பதுங்கிக் கொண்டபோது, நானும் முஸ்லிம் வீரர்களுடன் சேர்ந்து அதனுள் நுழைந்தேன். அப்பொழுது முஸைலமா உருவிய

வாளுடன் நின்று கொண்டு வீரர்களை உற்சாகப்படுத்திக் கொண்டிருந்தார். சபிக்கப்பட்ட அவர் மீது என் பார்வை விழுந்ததும், அவரை நான் அணுகினேன். அவரும் என்னை நெருங்கி வந்தார். அந்தச் சமயத்தில் இப்னு அம்மாரா என்னும் அன்ஸார், மற்றொரு திக்கிலிருந்து வந்து முஸைலமா பக்கம் திரும்பினார். உடனே நான் என் ஈட்டியை எடுத்துக் குறிப்பார்த்து, அவரின் மிருதுவான இடத்தில் தாக்கினேன். இப்னு அம்மாராவும் இந்தச் சமயத்தில் தம் வாளை வீசினார். எங்கள் இருவரைத் தவிர்த்து முஸைலமாவைக் கொன்றவர் வேறு எவரும் கிடையாது என்பதை இறைவன் அறிவான்.''

முஸைலமா இறந்துவிட்டார் என்பதை அறிந்ததும், காலித் (ரலி) அவர்கள், அவரை அடையாளம் தெரிந்து கொள்ள, அவரின் தளபதி குஜாவுடன் களம் நடுவில் வந்தார்கள். ஆங்கு ஆஜானுபாகுவாய்க் கிடந்த ஒரு சடலத்தைக் கட்டிக் காட்டி ''இவர் யார் ?'' எனக் காலித் (ரலி) அவர்கள் கேட்ட போது, முஜா, ''இவர் தாம் வீரம் செறிந்த முஹ்கம். கலீபாவின் புதல்வரால் கொல்லப்பட்டார்'' என்று கூறினார். பிறகு அவர் பிணக் குவியலில் முஸைலமாவின் சடலத்தை அடையாளம் காட்டி, ''இவர் தாம், தமக்கும், எங்களுக்கும் நன்மை செய்யாத முஸைலமா'' என்றார். அதைக் கேட்டு காலித் (ரலி) அவர்கள். ''இந்த இழிந்த மனிதனுக்கா இஸ்லாத்தைத் துறந்து இந்தத் துன்பத்திலும் துயரத்திலும் வீழ்ந்தீர்கள்'' என மொழிந்தனர். தம்மை நம்பி வந்த பதினாயிரம் வீரர்களைப் பலி கொடுத்து விட்டு, சலனம் இழந்து கிடந்தார் முஸைலமா. அவரின் சடலத்தைப் பார்த்த அவர் அபிமானி ஒருவர். ''நீர் இறை தூதர்களில் ஒருவர் என சாட்சியம் கூறுகிறேன். ஆனால் அவர்களில் துரதிருஷ்டமானவர்'' என்றார்.

இறுதியில் முஸ்லிம்கள் வெற்றி அடைந்தாலும் அதற்கு அவர்கள் மிகவும் அதிக விலை கொடுக்கவேண்டியதாயிற்று. இதில் இறந்த 1200 பேர்களில் இறை மறையை மனனம் செய்தவர்கள் மட்டும் எழுநூறு பேர்கள் ஆவர். அண்ணல் நபி (ஸல்) அவர்களின் முக்கியத் தோழர்கள் முப்பத்தொன்பது பேர் இதில் இறந்தனர். இந்தப் போர் முடிந்தபோது அழுகுரல் எழாத ஒரு வீட்டைக்கூட மதீனாவில் காணமுடியவில்லை.

போர் ஓய்ந்ததும் தம்மைக் காண வந்த பனீ ஹனீபா தூதுக் குழுவினரை காலித் (ரலி) அவர்கள் கலீபாவிடம் அனுப்பி வைத்தனர். அவர்களைப் பார்த்து கலீபா, 'பவ வாழ்க்கையை நீங்கள் எடுத்துக்

கொண்டதற்காக நான் உங்கள் மீது இரக்கப்படுகிறேன்' என்று கூறினார்கள். அது கேட்டுத் தூதுக் குழுவினர் தம் செயலுக்கு நாணி, ''தாங்கள் கேள்வியுற்றது சரியானதே'' என்றார்கள். அதன்பின் கலீபா ''அந்தப் பொய்யன் முஸைலமா எப்படி உங்களை வழி கெடுத்தான்?'' என வினவி விட்டு, அவன் செய்த போதனைகள் சிலவற்றைச் சொல்லிக் காட்டும்படிக் கூறினார்கள். ''தவளையே! நீ பரிசுத்தத்துடன் இருக்கிறாய். நீ, நீர் அருந்துவோரைத் தடுப்பதில்லை. நீரைக் கலக்குவதும் கிடையாது. பூமியில் ஒரு பாதி எங்களுக்கும், மறுபாதி குறைஷிகளுக்கும் உரிமையானவை. ஆனால், குறைஷிகளோ, அநியாயக்காரர்கள் ஆவர்.'' இது அவர் கூறியவற்றில் ஒன்று என்றனர் தூதுக் குழுவினர்.

அதைக் கேட்ட கலீபா அவர்கள், இந்த அபத்தங்களை இறைவனின் சொற்கள் என எப்படித்தான் இந்த மக்கள் நம்பினார்களோ? என எண்ணி வியந்தனர். அதன்பின் அவர்கள் தூதுக் குழுவினரைப் பார்த்து, ''அல்லாஹ்வே புகழுக்குரியவன். நீங்கள் பரிதாபப்படத் தக்கவர்கள். இவையா இறைவனின் சொற்கள்? இவை இறை தன்மையின் கம்பீரத்தைப் பெற்றிருக்கவில்லையே. எத்தகைய இழிநிலைக்கு அவன் உங்களை இழுத்துச் சென்று விட்டான்'' என்று கூறினார்கள். இந்தப் போரில் பிடிக்கப்பட்ட கைதிகளில் ஒரு பெண்ணும் இருந்தார். அவரை கலீபா, அலீ (ரலி) அவர்களிடம் அனுப்பி வைத்தனர். அதற்குக் காரணம் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உயிர் வாழும்போது ஒருநாள் அலீ (ரலி) அவர்களைப் பார்த்து இவ்விதம் கூறியதேயாகும்: ''பனீ ஹனீபா கோத்திரப் பெண் ஒருவர் உமக்குக் கிடைப்பார் அவர் மூலம் ஒருபிள்ளை பெறுவீர். அதை என் பெயர்கொண்டு அழையும்!'' அந்தப் பெண்மணிக்குப் பிறந்தவர்களே முகம்மது ஹனீபா (ரஹ்) ஆவார்கள்.

**கலகங்கள் அடங்கின**

இப்பொழுது முஸ்லிம்கள் பெற்ற வெற்றிச் செய்திகள் பல இடங்களிலிருந்தும் மளமளவென வந்து மதீனாவில் குவிந்து கொண்டிருந்தன. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் காலமான அவலச் செய்தி கிடைத்த சில நாட்களுக்குள், பஹ்ரைனிலிருந்த முஸ்லிம் ஆளுநர் இறந்தார். அதனால் அங்கு குழப்பம் எழ ஆரம்பித்தது. பனீ பக்ர் என்னும் கோத்திரத்தார் இஸ்லாத்திற்கு எதிராக எழுந்தவுடன், பாரசீகத்திடமிருந்து உதவியும் கோரினர். அதே சமயம் இஸ்லாத்தில்

இணைந்திருந்த பனீ அப்துல் கைஸ் கோத்திரத்தார், மதீனாவின் உதவியை நாடினார்கள். உடனே கலீபா, அலா இப்னுல் ஹல்ரமி தலைமையில் அவர்களின் உதவிக்குப் படை ஒன்றை அனுப்பி வைத்தனர். அவர், பனீபக்ர், பாரசீகர் இணைந்த படையைத் தோற் கடித்தார். இதன்பின் பஹ்ரைனில் அமளி அடங்கி அமைதி நிலவ ஆரம்பித்தது.

உம்மான், மஹ்ரா ஆகிய இடங்களில் ஏற்பட்ட குழப்பங்களை ஒடுக்க முதலில் அனுப்பப்பட்டவர் ஹுதைபா (ரலி) தான். அதன்பின் அவர்களின் உதவிக்கு இக்ரிமா (ரலி) அவர்கள் சென்றார்கள். உம்மானில் லக்கீத் இப்னு மாலிக் என்பவன் தன்னை ஓர் இறை தூதன் எனக் கூறிக் கொண்டதுடன், கலகம் செய்ய, தபா என்னுமிடத்தில் ஒரு படையுடனும் நின்றான். அவனை முஸ்லிம் படை அடக்கியது. உம்மானில் ஹுதைபா (ரலி) அவர்களை நிறுத்திவிட்டு, இக்ரிமா (ரலி) அவர்கள் மஹ்ராவுக்குச் சென்று அங்கு அமைதியை ஏற்படுத்தினர்.

அண்ணல் நபி (ஸல்) இறந்ததை அறிந்ததும், அஷ்அத் இப்னு கைஸ் என்பவன் தன் கோத்திரத்தாருடன் இஸ்லாத்திற்கு எதிராக எழுந்தான். அவனை, ஹள்ரமௌத்தில் ஜகாத் வசூலிப்பவராயிருந்த சியாத் பின் லபீத் (ரலி) எதிர்த்தனர். ஆனால் அவர்களால் அஷ்அத்தை அடக்க இயலவில்லை. மதீனாவுக்கு ஓடிய அவர்களை, முஹாஜர் என்பவருடன் மறுபடியும் ஹள்ரமௌத்திற்கு அனுப்பி வைத்தனர் கலீபா. அத்துடன், அவர்களின் உதவிக்குப் போகுமாறு இக்ரிமா (ரலி) அவர்களுக்கும் ஆணை அனுப்பினர். அஷ் அத் அயராமல் தான் நின்று போரிட்டான். ஆயினும் அவனால் இக்ரிமா (ரலி) அவர்களின் இடித் தாக்குதலுக்கு ஈடுகொடுக்க இயலவில்லை. ஒன்பது பேர்களை உயிருடன் விட ஒப்புக்கொண்டால் தான் பணிவதாய் இக்ரிமா (ரலி) அவர்களிடம் அவன் கூறினான். அதற்கு இக்ரிமா (ரலி) அவர்கள் இணங்கினர். அஷ் அத் தனக்கு ஏற்பட்டிருந்த பரபரப்பில் அந்த ஒன்பது பேர்களின் பெயர் கொண்ட பட்டியலில் தன் பெயரை எழுதத் தவறிவிட்டான். அதைக் கண்டு முஹாஜர், "இறைவன் உன்னைக் கொண்டே உனக்குத் தண்டனை அளித்து விட்டான்" என்றார். இந்தக் இக்கட்ட ான நிலையை இக்ரிமா (ரலி) அவர்கள் கலீபாவுக்குத் தெரியப்படுத்தினர். "தன் மக்களை வழி நடத்தத் திறமையுமில்லை, அவர்களைக் காக்கக் துணிவுமில்லை அவனுக்கு." என அஷ் அத்தைப் பற்றிக் குறிப்பிட்டுவிட்டு அவனுக்குக் கலீபா மன்னிப்பு

அருளினார்கள். ஆனால் அது தாம் செய்த தவறுகளில் ஒன்று எனப் பிறகு கலீபா அவர்கள் கூறி வருந்தினர். இப்பொழுது கலீபா தாம் ஆட்சிப் பொறுப்பு ஏற்றுக் கழிந்த இந்த ஒன்பது மாதங்களில் கலகங்களை அடக்கி, பொய்த் தூதர்களைப் புறம் கொண்டு, கொலைக் காரர்களை, கொள்ளைக்காரர்களை அடக்கி அமைதி ஏற்படுத்தும் அற்புதத்தை ஆற்றிக் காட்டினார்கள். இது அவர்களுக்கு சாத்திய மானது, அல்லாஹ்வின் அருளுடன், வற்றாத அளவு அவர்களிடம் இருந்த தைரியம், அறிவு, திறமை ஆகியவற்றாலும் தான். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் காலமாகி ஆண்டு ஒன்று ஆனபோது, அரபு அவனி முழுவதும் கலீபா அவர்களின் கையில் இருந்தது. இதன்பின் கலீபா பாரசீக, சிரியா எல்லைப் பாதுகாப்பில் தம் கவனத்தைத் திருப்பலானார்கள்.

## திருமறை தொகுப்புப் பணி

இதற்கிடையில் அவர்களின் கவனத்தை இன்னொரு கடமை தன்பால் இழுத்தது. அதுதான் இறைவனின் திருமறை உரைகளை ஒன்று சேர்க்கும் உத்தமப் பணி. திருமறை அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு இருபத்து மூன்றாண்டு கால இடைவெளியில் வெளி யிடப்பட்டது. அது வெளிப்பட, வெளிப்பட அவர்களின் தோழர்கள், அதனை மனனம் செய்து கொண்டனர். திருமறை முழுவதையும் மனனம் செய்திருந்தவர்களை விட அதன் பகுதிகளை மனனம் செய்திருந்தவர்களே அதிகம் பேர் ஆவர். இறை செய்தி வந்ததும், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் காதிப் எனப்படுவோரை அழைத்து அவர்களிடம் அதனைக் கூறுவர். அதனை காதிப்கள் மனனம் செய்து கொள்வர். இப்படி அடிக்கடி அழைக்கப்பெறும் பேற்றைப் பெற்றவர் ஜைத் பின் தாபித் (ரலி) அவர்கள் தாம். இவர்கள் போன்றோர் நெஞ்சங் களிலும், தோல், ஈச்சம் பட்டை, ஒட்டகையின் எலும்பு, கல் ஆகியவற்றிலும் திருமறை உரைகள் இருந்து கொண்டிருந்தன.

இந்நிலையில் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இறந்தனர். அதன் பின் நிகழ்ந்த யமாமா போரில் திருமறையை மனனம் செய்திருந்த பலர் மரித்தார்கள். இதனை உணர்ந்த உமர் (ரலி) அவர்கள், இனிமேல் பல போர்கள் புரியவேண்டியிருப்பதால், யமாமாவில் போல் திரு மறையை மனனம் செய்தோர் அதிகம் மரித்தால், குர்ஆனை இறைவன் தான் காப்பாற்றவேண்டும் என்று கூறி, உடனே திருமறை திரட்டப்பட ஆணையிட வேண்டும் எனக் கலீபாவுக்கு ஆலோசனை கூறினர். அது

கேட்டு கலீபா அவர்கள் அல்லாஹ்வின் தூதர் அவர்களே, 'செய்யாத ஒன்றைத் தாம் எப்படிச் செய்வது, என ஆரம்பத்தில் அதிகம் தயங்கினர். ''இறைவன் மீது ஆணையாக, இது மேலான செயல்'' என உமர் (ரலி) அவர்கள் பலமுறை வலியுறுத்திக் கூறவே, அதற்குக் கலீபா இணங்கி ''இறைவன், உமரின் உள்ளத்தை திறந்துவிட்டது போன்று, என் உள்ளத்தையும் திறந்துவிட்டான். எனவே அதில், உமர் கண்ட நன்மையை நானும் காண்கிறேன்'' என்றார்கள். உண்மையில் 'ஒரு புத்தகம்' என்று குர்ஆனைக் குறிப்பிடும் சொற்றொடர் குர் ஆனில் பல இடங்களில் வருகிறது. உதாரணம் 'இந்தப் புத்தகம்' (2:2) இதை அறிந்திருந்தாலும், அதிகப் பேணுதலின் காரணமாகவே கலீபா அவர்கள் உமர் (ரலி) அவர்களின் ஆலோசனையை ஏற்க அஞ்சினார்கள்.

இந்தப் பொறுப்பு மிக்க பணியை எவரிடம் ஒப்படைப்பது என எண்ணிய கலீபா அவர்களின் மனக் கண்முன் வந்தவர் ஜைத் பின் தாபித் (ரலி) அவர்கள் தாம். அவர்களைக் கலீபா அழைத்து வரச் சொல்லி, அவர்கள் வந்ததும், அவர்களிடம் தாம் உமர் (ரலி) அவர்களுடன் செய்த ஆலோசனை பற்றி எடுத்துரைத்தார்கள். ''நீர் நுண்ணறிவுள்ள இளைஞர். உம்மிடம் ஒரு குறையையும் நாங்கள் காணவில்லை. அல்லாஹ்வின் தூதர் அவர்கள் காலத்திலேயே, திருமறை உரைகள் எழுத ஒப்படைக் கப்பட்டது உம்மிடத்தில் தான். எனவே குர்ஆன் முழுவதையும் தேடித் திரட்டி எழுதும்படி உம்மைக் கேட்டுக் கொள்கிறேன்'' என்றார்கள் கலீபா. இதனை உரைத்தவர்கள் கலீபா என்றாலும், தம் மனத்தில் உதித்ததை மறைக்க விரும்பாமல் ஜைத் பின் தாபித் (ரலி) கேட்டார்கள். ''அல்லாஹ்வின் தூதர் அவர்கள் செய்யாத ஒன்றைச் செய்ய எவ்வாறு துணிந்தீர்கள்?'' என்று. அதற்குக் கலீபா, ''இறைவன் மீது ஆணையாக, இது மிகவும் மேலான செயலாகும்'' எனப் பதிலிறுத்தனர். ஆயினும் ஜைத் பின் தாபித் (ரலி) அவர்கள் தம்மீது ஏற்றப்பட்ட பொறுப்பை ஏற்பது எப்படி எனத் தயங்கினர். இறுதியில் அதனை ஏற்றுக் கொண்டு. ''இருக்கும் இடத்திலிருந்து மலையொன்றைப் பெயர்த்து, மற்றோர் இடத்தில் வைக்கும்படி என்னிடம் கூறினால் அதனை என்னிடம் ஒப்படைக்கப் பட்டிருக்கும் வேலையைவிட எளிதாகக் கொள்வேன்'' என்று கூறினர்.

## கடமை நடுவில்

முதலில் ஜைத் (ரலி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இல்லத்திலிருந்து திருக்குர்ஆன் பகுதிகளை எடுத்துக் கொண்டனர். அவற்றிலும் கூட தவறு இருக்கலாம் என அஞ்சி, அவற்றைத் திருகுர்ஆன் முழுவதையுமோ, அதன் பகுதியையோ மனனம் செய்திருந்தவர்களின் உதவியுடன் ஒப்பிட்டுப் பார்த்தனர். இவ்விதம் அச்சத்துடனும், அறிவுடனும் ஒச்சமற்ற ஒரு குர்ஆனைத் தொகுத்து, அதற்கு முஸ்ஃஹஃப் என்று பெயரிட்டுத் தம் பாதுகாப்பில் வைத்துக் கொண்டார்கள் கலீபா.

கலகங்களை அடக்குவது, குர்ஆனை ஒன்று சேர்ப்பது போன்ற பணிகளைச் செய்ததுடன் கலீபா அவர்கள், தம் காவலில் எவரும் ஆதரவின்றி அவதிப்படக்கூடாது என்பதிலும் அக்கறை காட்டி னார்கள். அப்படி ஒரு மூதாட்டி, ஜிஹாதில் தன் ஒரே மகனையும் இழந்து விட்டு, மதீனாவுக்கு அருகிலிருக்கும் குடிலில் இருக்கிறாள் எனக் கலீபா அறிகிறார்கள். அவளுக்கு இனி மேல் அல்லாஹ்வுக்கு அடுத்தபடியாகத் தாமே ஆதாரமாக இருக்கத் தீர்மானிக்கிறார்கள். அதன்படி ஒவ்வொரு நாளும் இளம் காலையில் எழுந்து சென்று, அந்த மூதாட்டி இருந்த குடிலைப் பெருக்கி சுத்தம் செய்வதுடன், அவளுக்கு வேண்டிய உணவுப் பொருள்களும் வழங்கிவிட்டு வருகிறார்கள். இது அவர்களின் அன்றாட வழக்கமாகி விடுகிறது.

அருமை மகனை இழந்துவிட்டு ஆதரவற்ற நிலையில் அவள் இருப்பதாக, எவரோ உமர் (ரலி) அவர்களிடம் உரைக்கின்றனர். அவளுக்கு உதவ உமர் (ரலி) அவர்கள் ஒரு நாள் இளம் காலையில் எழுந்து சென்று பார்க்கும் போது, அவளுக்கு வேண்டிய பணிகள் செய்யப்பட்டும், உணவுகள் வழங்கப்பட்டும் இருப்பது தெரிய வருகிறது. 'இவ்வளவு அக்கறையுடன் நமக்கு முன்பே இந்தக் காலையில் எழுந்து வந்து இவளுக்குப் பணிவிடை புரிந்துவிட்டுப் போவது யார்?' எனும் ஆச்சரியம் மேலிடுகிறது உமர் (ரலி) அவர் களுக்கு. அடுத்த நாள் அவர்கள் நள்ளிரவு கழிந்ததுமே எழுந்து வந்து, அந்தக் குடிலின் பின்புறமாய் மறைந்து நின்று கொள்கிறார்கள். இளங்காலை வந்ததும், கலீபா அவர்கள் வருகிறார்கள். அவளுக்கு வேண்டிய பணிகள் செய்கிறார்கள். பண்டங்கள் வழங்குகிறார்கள். அடுத்த நாள் வருவதாக அவளிடம் கூறி, விடை பெற்றுக் கொண்டுக் கிளம்புகிறார்கள். இவ்வளவு கவலைக்கிடையிலும் காவல் கடமை

களுக்கிடையிலும், கலீபா அவர்கள் இந்தக் கடமையையும் தவறாமல் புரிவது உமர் (ரலி) அவர்களை உண்மையிலேயே ஆச்சரியத்தில் ஆழ்த்திவிடுகிறது.

இப்பொழுது கலீபா உரோம, பாரசீகப் பேரரசுகளினால் ஏற்பட விருந்த ஆபத்தை அகற்றும் பணியில் தம் கவனத்தைத் திருப்பலா யினர். இந்தச் சமயத்தில் ஒருவர், தம் கோத்திரம் சம்பந்தமான வழக்கொன்றை விசாரித்துத் தீர்ப்பு வழங்கும்படிக் கலீபாவிடம் வேண்டிக் கொண்ட போது ''முஸ்லீம்களை ஒழிப்பதற்குக் காத்துக் கொண்டிருக்கும் இரு சிங்கங்களை அழிப்பதற்கான திட்டங்கள் பற்றி நான் சிந்தித்துக் கொண்டிருக்கும் போது, இந்தச் சிறிய விஷயத்திற்கு என் கவனத்தைத் திருப்புகிறீரே'' என்றார்கள் கலீபா. எனினும் அவர் விவகாரத்தைக் கவனிக்க அவர்கள் தவறவில்லை. 'இரு சிங்கங்கள்' என அவர்கள் குறிப்பிட்டது உரோம, பாரசீகப் பேரரசுகளைத்தாம். இவ்விரு வல்லரசுகளும் புறவுக் குஞ்சுபோலும் இஸ்லாமிய அரசைக் கொல்ல, வல்லூறுகள் போல் வந்து கொண்டிருந்தன. இதனைப் பார்த்துக்கொண்டு தன்மானமுள்ள எந்த மனிதரும், தற்காப்பு பற்றிக் கவலைப்படும் எந்தக் காவலரும், கையைக் கட்டிக் கொண்டு இருக்க மாட்டார். அரசு ஒன்றிற்கு அவசியமானவை பத்திரமான எல்லைகள் என்பதை அறிந்திருந்த கலீபா அவர்கள், தம் கடமையைப் புரியத் தயாரானார்கள்.

இந்த நடவடிக்கையில் இருந்த ஆபத்தின் அளவை அவர்கள் அறியாமல் இல்லை. பற்றாத படை, பயிற்சி முற்றாத வீரர், போதாத போர்க்கருவிகள், இவற்றைக்-கொண்டு அன்று அகிலமாண்ட இரு பெரும் வல்லரசுகளை கலீபா எதிர்க்க வேண்டியிருந்தது. அது அவசியம் தான் என உணர்ந்த போது, கலீபா இந்தக் குறைகளைப் பற்றி அதிகம் கவலைப்படவில்லை. அதற்குக் காரணம், அவர்களின் உட்புறம் இருந்த ஈமான், பின்புறம் நின்ற முஸ்லிம்கள். அந்த முஸ்லிம்கள் பிறரின் உரிமைகளில் தலையிட விரும்பாதவர்களா யினும், தம் உரிமைக்கு ஊறு நேரும் போது, அதனைப் புரிவது முழு உலகமேயானாலும், அதற்காகச் சற்றும் அஞ்சாது அதனை எதிர்க்க எண்ணுபவர்கள். கடமை அழைக்கும்போது அவர்களுக்கு கொழுந்து விட்டெரியும் நெருப்புக்கொப்பரையும் ஒன்று தான்; மணம் விட்டெறியும் மலர்க்காவும் ஒன்றுதான். அரியணையில் அமர விரையும் அதே வேகத்தில் அவர்கள், அமர்க்களத்துள்ளும் குதிக்கத் தயாராயிருப்பவர்கள். முஸ்லிம்களிடம் இருந்த இந்த உணர்வுதான்,

அவர்களின் பெரும் பகைவர் பலத்திற்கு ஈடாக அமைந்தது. அல்லாஹ்வையும், அவன் முஸ்லிம்களுக்கு அளித்திருந்த இந்த உணர்வையும் நம்பித்தான் கலீபா அவர்களும் அந்த அபாயமிக்க சோதனைக்குத் தம்மை ஆளாக்கிக் கொண்டனர்.

பஹ்ரைனில் இஸ்லாத்திற்கு எதிராக எழுந்த கலகக்காரர்கள் தன் உதவியை நாடியபோது, அதனைத் தயங்காமல் அளித்தது பாரசீக அரசு. அதன் வீரர்கள் கலகக்காரர்களுடன் சேர்ந்து கொண்டு முஸ்லிம்களை எதிர்த்தனர். இது உண்மையில் பாரசீக அரசு இஸ்லாமிய அரசிற்கு எதிராகப் போர்ப் பிரகடனம் செய்வதை ஒக்கும். அத்துடன் அது தன் ஆட்சிக்குட்பட்டிருந்த பகுதியிலிருந்து கிளம்பிய சஜாவை மதீனாவைத் தாக்கத் தூண்டி விட்டது. அதன் தூண்டுதல் இல்லாவிடில் ஒரு பெண்ணிற்கு, தன்னை இறை தூது என்று கூறிக் கொள்ளவும், மதீனாவைத் தாக்கப் படையுடன் கிளம்பவும் துணிவு ஏற்பட்டிராது. இந்நிலையில் பாரசீக அரசு செய்யும் பாதகமான காரியங்களைக் கையைக் கட்டிக் கொண்டு பார்த்திருப்பது விபரீத விளைவை ஏற்படுத்தும், பலவீனமாகிவிடும் எனக் கலீபா அவர்கள் கருதினார்கள். அதனால்தான் முஸ்லிம்களும் கலீபாவின் ஆணை பிறந்ததும் இஸ்லாத்தையும், அதன் இளைய அரசையும் காக்கக் கையில் வாளெடுத்தனர்.

பஹ்ரைன் கலகத்தை அடக்குவதற்கு அனுப்பப்பட்டவர்கள் முதன்னா (ரலி) அவர்கள். அதனைச் செய்ததும் அவர்கள் பாரசீகத்திற்கு விரோதமாயிருந்த பல கூட்டத்தவரையும் தம்முடன் அழைத்துக் கொண்டு, பாரசீக வளைகுடா வழியாக முன்னேறி, காதிபைக் கைப்பற்றினர். யூப்ரடீஸ் நதியின் டெல்டா வரை சென்றனர். அவர்களின் வெற்றிச் செய்தி மதீனா வந்தபோது கலீபா, ''இறைவன் பாதையில் போரிட்டுக் கொண்டே செல்லும்!'' என்னும் ஆணையை முதன்னா (ரலி) அவர்களுக்கு அனுப்பி வைத்தார்கள். அவர்களிடம் இப்பொழுது எண்ணாயிரம் வீரர்கள் இருந்தனர், ஆனால் பகை வீரர்களின் எண்ணிக்கை, முஸ்லிம் படைவீரர்களின் எண்ணிக்கையை விடப் பதின்மடங்கு அதிகமாகும். அதனால் முதன்னா (ரலி) ஒருவரால் மட்டும் பாரசீகருக்கு ஈடு கொடுக்க இயலாதென எண்ணிய கலீபா, 'இறைவனின் வாள்' மறுபடியும் உறையிலிருந்து உருவப்பட வேண்டும் என விரும்பினர். உடனே இறைவனின் வாள் ஆன காலித் (ரலி) அவர்களுக்கு உபுல்லா செல்லும்படியும், சால்டியாவைப் பணிய வைக்கும் படியும், அதன் தலைநகர் ஹீரா நோக்கி முன்னேறும்

படியும், கலீபா கட்டளையிட்டனர். அதே சமயம் அயாத் (ரலி) தலைமையில் மற்றொரு படையை செங்கடல் முகப்புக்கும், பாரசீக வளைகுடாவுக்கும் இடையில் இருந்த தூமா நோக்கிப் போகும் படியும், அதன் பின் ஹீரா நோக்கி முன்னேறும்படியும் ஆணை அனுப்பினர். அயாத் (ரலி) தூமா அருகில் வைத்தே பகைவரால் தடுக்கப்பட்டனர். ஆனால், அது போன்ற தடை காலித் (ரலி) அவர் களுக்கு ஏற்படவில்லை. அப்படி ஏற்பட்டாலும், அதனை உடைக் காமல் விடுபவர்கள் அல்லர் காலித் (ரலி) அவர்களும். யமாமாவி லிருந்து வந்த வீரர்களுடன் அவர்கள், கலீபாவின் ஆணையை நிறைவேற்றப் புறப்பட்டார்கள்.

முஸ்லிம் படையை முதன்முதலில் சந்தித்தவன் ஹுர்முஸ் ஆவான். 'ஹுர்முஸைவிடப் பெரிய இறை மறுப்பவனும் இல்லை. அவனை விடக் கெட்ட மனிதனும் கிடையாது' எனும் பழமொழியையே ஏற்பட வைத்தவன் அவன். பாரசீக அரசின் சார்பாய் இராக்கின் ஆளுநராய் அவன் இருந்தான். அரபுக் குடிமக்களால் அதிகம் வெறுக்கப்பட்ட அவனுக்கு, காலித் (ரலி) அவர்கள் கடிதம் ஒன்று எழுதினர். அதில் அவனை அவர்கள் இஸ்லாத்திற்கு வருமாறு அழைத்தனர். ''இல்லையேல் உனக்கும் உன் மக்களுக்கும் சேர்த்துத் திறை செலுத்து!'' என்றனர். ''இவை இரண்டில் ஒன்றிற்கு நீ இணங்கா விடில், அதற்காகப் பிறகு உன்னையே நீ குறை கூறிக் கொள்ள நேரும். ஏனெனில் நீ எப்படி வாழ்வதை நேசிக்கிறாயோ, அப்படியே மாள்வதை நேசிக்கக்கூடிய படையுடன் நான் வந்திருக்கிறேன்'' என அந்தக் கடிதத்தின் இறுதியில் காலித் (ரலி) அவர்கள் குறிப்பிட்டனர். அதைப் பெற்றதும் ஹுர்ஸ், பாரசீகப் பேரரசர் கிஸ்ராவுக்கு ஓர் அறிக்கை அனுப்பிவிட்டு, உடனே ஒரு படையைத் திரட்டினான்.

தம் கடிதத்திற்குப் பதில் ஹுர்முஸ் அனுப்பாதது கண்டு, முன்னேறும் அணிக்கு முதன்னா (ரலி) தலைமை தாங்க, இரண்டாம் அணியை இறவாதப் புகழ் பெற்ற வள்ளல் ஹாத்திம் தாயின் புதல்வர் நடத்த, பின் புற அணிக்குத் தாமே தலைமை தாங்கி ஹஃபீர் நோக்கி முன்னேறினர் காலித் (ரலி) அவர்கள். அது பாரசீகப் பேரரசின் எல்லை நிலையமாயிருந்தது. ஹுர்முஸ், இளவரசர்கள் வழி நடத்திய அணிகள் பல்வற்றுடன் முஸ்லிம்களைச் சந்திக்கக் கிளம்பினான். நீர் ஊற்றுக்கள் சில அவன் கைவசமாயின. இதனை அறிந்த காலித் (ரலி) அவர்கள், தம் வீரர்களை வாகனம் விட்டு கீழிறங்கக் கூறி, ''நீருக்காகப்

போரிடுவோம்; இருவரில் அதிகவீரம் அமைந்தவரிடம் நீர் ஊற்றுக் கள் போகட்டும்'' என்றனர்.

ஹுர்முஸ், முஸ்லிம்களுடன் முன்னர் மோதாதவன் ஆதலாலும், மறைவாகச் சில வீரர்களை நிறுத்தி காலித் (ரலி) அவர்கள் தம்முடன் பொருதும் போது, அவர்களைத் தாக்கும் படி ஏற்பாடு செய்திருந்த தாலும், நேரடிச் சண்டைக்கு வரும்படி காலித் (ரலி) அவர்களை அழைத்தான் அவன். அதனை அவர்கள் உடனே ஏற்றுக்கொண்டனர். இருவரும் ஒருவரோடொருவர் நேரடியாகச் சண்டையிட்டனர். அதில் கர்வமிக்க ஹுர்முஸ் வெட்டுண்டு வீழ்ந்தான். உடனே முஸ்லிம்கள், பாரசீகப்படை மீது பாய்ந்து அதனை யூப்ரடீஸ் நதிவரை விரட்டிச் சென்றார்கள். இதில் முஸ்லிம்களுக்குக் கிடைத்த கொள்ளைப் பொருள்கள் ஏராளமானவையாகும். அவற்றில் ஒன்று, இலட்சம் திர்ஹம் மதிப்புள்ள ஹுர்முஸின் தலையணி. அதனைக் கலீபா, காலித் (ரலி) அவர்களுக்கே அன்பளிப்புச் செய்தனர். அகப்பட்ட பொருள் களில் மற்றொன்று மலை போன்ற மதயானையாகும். அது மதீனா தெருவில் ஊர்வலமாக வந்த போது, யானை ஆண்டைப்பற்றியே கேள்விப்பட்டு, யானையை அதுவரை பார்த்திராத பெண்கள். ''உண்மையில் இது இறைவனின் படைப்புத் தானா?'' என எண்ணி வியந்தனர். சங்கிலிப் போர் என்று குறிப்பிடப்பட்ட இதில், பாரசீக வீரர்கள் புறமுதுகிடாதிருக்க ஒருவரோடு ஒருவர் சங்கிலியால் பிணைத்துக் கொண்டனர். பாராண்ட பாரசீகர், களத்திலிருந்து ஓடாது தடுக்க ஏற்ற தளை மனத் துணிவுதான் என்பதை ஏனோ மறந்து விட்டிருந்தனர்.

தோற்ற பாரசீகர் தேற்றுவார் இன்றி தலைநகர் நோக்கி ஓடினார் கள். அவர்களை, முதன்னா (ரலி) தம் புரவிப் படை கொண்டு விரட்டிச் சென்றனர். யூப்ரடீஸ் நதியைக் கடந்து வந்த அவர்களுக்கு, 'இளவரசிக் கோட்டை' எதிர்ப்பட்டது. அதனுள் பாரசீக இளவரசி ஒருத்தி இருக்கவும் செய்தாள். அதனை முற்றுகையிடத் தம் உடன் பிறந்தவருக்கு உத்தரவிட்டுவிட்டு, இளவரசியின் கணவன் காத்த கோட்டையைத் தாக்கிப் பணிய வைத்தனர் முதன்னா (ரலி) அவர்கள்.

இப்பொழுது ஹுர்முஸ் அனுப்பிய செய்தி பாரசீக அரசவையை அடைந்தது. உடனே அது இளவரசர் ஒருவர் தலைமையில் படை யொன்றை அனுப்பி வைத்தது. முதன்னா (ரலி) டைக்ரிஸ் நதிக் கால்வாய் ஒன்றால் தடுக்கப்பட்டு நின்றனர். அவர்களின் உதவிக்குக்

காலித் (ரலி) அவர்கள் காற்றைப் போல் கடுகி வந்தார்கள். இருதரப் பினருக்கும் இடையே கடும் போர் மூண்டது. அதிலும் பாரசீகரால் முஸ்லிம்களின் முன் நிற்க இயலவில்லை. அவர்கள் மானத்தையும், ஏராளமான பொருள்களையும் களத்தில் விட்டு விட்டு ஓட்டம் பிடித்தார்கள். அவர்களில் பலரை ஆறு காவு கொண்டது. மற்றவர் தோணிகளில் ஏறி உயிர் தப்பினர். அவர்களில் சிறைப் பிடிக்கப் பட்டவர், ஒருவர் ஹபீர். இவரே காஹஸன் பஸரி (ரஹ்) அவர்களை ஈன்றவர்.

இந்தத் தோல்விகளை அறிந்த பாரசீக அரசவை, அரபுகளைக் கொண்டே அரபுகளைத் தாக்கத் தீர்மானித்தது. அதற்குக் காரணம் பாம்பின் கால் பாம்பிற்குத் தானே தெரியும் என அது கருதியாகும். அதன்படி பனீபக்ர் கோத்திரத்தாரும், பாரசீக அரசிற்கு விசுவாசமான இன்னும் சில கோத்திரத்தாரும் திரட்டப்பட்டனர். இந்தப் போரைப் புரிய புகழ் மிக்க தளபதி பஹ்மன் கிழக்கிலிருந்து வரவழைக்கப் பட்டார். இருபடைகளும் வாலாஜா எனனும் இடத்தில் மோதிக் கொண்டன. இதிலும் படுதோல்வி அடைந்தவர் பாரசீகர் தாம். இதன் பின் நிகழ்ந்த யவ்முல் மக்கர், ஐனுல் தமர், தூமத்துல் ஜந்தல், அன்பார், ஹஸீத், மதிஹ்தானா, சாமில், பிராத் போர்கள், ஒன்றிற்கு மற்றொன்று இளைத்ததாய் இருக்கவில்லை. அவை அனைத்திலும் வெற்றி பெற்றவர்கள் முஸ்லிம்களே.

இதற்குப் பிறகு பனீபக்ர் கோத்திரம் இரண்டாகப் பிரிந்தது. அதில் ஒருபகுதி காலித் (ரலி) அவர்கள் பக்கம் சரிந்தது. மற்றொரு பகுதி பாரசீகர் பக்கம் சாய்ந்தது. கிறிஸ்தவக் கூட்டத்தார்கள், முஸ்லிம் களைப் பழிவாங்குமாறு பாரசீக அரசவையை வேண்டினார்கள். அப்பொழுது நோய் பாரசீக அரசுக்கு மட்டுமல்ல, அரசருக்கும் ஏற்பட் டிருந்தது. ஆயினும் அவர் பஹ்மன் தலைமையில் படையொன்றை அரபு கோத்திரத்துடன் சேர்ந்து கொண்டு, முஸ்லிம்களைத தாக்க அனுப்பி வைத்தார். அவர்கள் ஹிராவுக்கும், உபுல்லாவுக்கும் இடை யிலிருந்த அல்ஈஸில் திரளலாயினர். அதனை அறிந்ததும், காலித் (ரலி) அவர்கள் ஹபீரில் ஒரு படையை நிறுத்தி விட்டுப் பாய்ந்து வந்தனர். அவர்களின் கைவாளுக்கு அரபு கோத்திரத் தலைவர் பலியானார். அதன் பின் பாரசீகர் பெரும் படையுடன் வந்து தாக்குதல் தொடுத்தனர். முஸ்லிம்களின் மூச்சுத் திணறியது. இத்தகைய தாக்குதலை அவர்கள் இதற்குமுன் சந்தித்ததில்லை. எனினும் முஸ்லிம்களே இறுதியில் வெற்றி பெற்றனர்.

பாரசீகர் தோற்றாலும், அவர்களின் அரபு நண்பர்கள் காலித் (ரலி) அவர்களுக்குத் தோந்தரவு கொடுப்பதை நிறுத்தவில்லை. முக்கிய மான இடம் ஒன்றில் இருந்து கொண்டு, அவர்கள் மதீனாவுக்குச் செய்தி செல்லாமல் தடுத்தனர். அவர்களைக் காலித் (ரலி) அவர்கள், யூப்ரடீஸ் நதியின் மேலைக் கரை முழுவதிலிருந்தும் விரட்டியடிக்கத் தீர்மானித்தனர். அவர்களின் தலைநகர் ஹீரா கேந்திர நிலையமாய் இருந்தது. அதனை நோக்கிச் சென்ற காலித் (ரலி) அவர்களுக்கு, ஹீராவுக்கு இணையான இன்னொரு நகரான அம்கீஸியா அடி பணிந்தது. அதன் மக்கள் ஊரைவிட்டே ஓட்டம் பிடித்தார்கள். இந்த வெற்றிச் செய்தியை அறிந்த கலீபா அவர்கள், அகமிக மகிழ்ந்து மொழிந்தனர், ''நிச்சயமாக கர்ப்பப்பை காலியாகிவிட்டது. பெண் இனம் இனிமேல் இரண்டாவது காலிதைப் பெறப் போவதில்லை'' என்று.

## ஹீரா வெற்றி

அம்கீஸியாவில் கிடைத்தத் தோணிகளில் காலித் (ரலி) அவர்கள் தம் வீரர்களையும், வேறு சாமான்களையும் ஏற்றிக் கொண்டு ஹீரா புறப்பட்டனர். அவர்களின் வரவை அறிந்த ஹீராவின் பாரசீகப் படைத் தளபதியின் மகன் விவசாயத்திற்கு நீர் விடுவதற்கு இருந்த மடைகளைத் திறந்து விட்டு விட்டான். அதனால் ஆற்றில் நீர் குறைந்தது. காலித் (ரலி) அவர்களின் வீரர்கள் வந்த தோணிகள் தரை தட்ட ஆரம்பித்தன. உடனே காலித் (ரலி) அவர்கள் கடுகிச் சென்று, படைத் தளபதியின் மகனைக் கொன்று, மடை வாய்களை அடைத் தனர். அதன் பின் அவர்கள் ஹீரா வந்து அங்கிருந்த அரண்மனை களைக் கைப்பற்றிக் கொண்டு, நகர் வாயிலில் முகாமிட்டனர். அருமை மகன் இறந்ததை அறிந்ததும், தளபதி அந்த கதி தனக்கும் ஏற்படாதிருக்க ஆற்றைக் கடந்து நகரை விட்டு ஓடினான். ஆயினும் நகரம் எளிதில் பணிய மறுத்தது. அதனைப் பணிய வைத்தே ஆக வேண்டும் எனும் தணியா ஆர்வத்துடன் முஸ்லீம்கள் இருந்தனர். இதை அறிந்ததும், நகருக்கு வெளியில் இருந்த மடங்களில் வதிந்த கிறிஸ்தவக் குருமார்கள் எளிதான நிபந்தனையுடன் பணிந்து போகும் படி நகர மக்களுக்கு ஆலோசனை கூறினர். அதன்பின் நகர கிறிஸ்த வர்களுக்கும் முஸ்லீம்களுக்கும் ஓர் உடன்பாடு ஏற்பட்டது. இந்த உடன்பாட்டை கலீபா அவர்கள் அங்கீகரித்தவுடன், ஹீரா மக்கள் அனுப்பிய அன்பளிப்புப் பொருள்களின் மதிப்பை, ஹீரா மக்கள் செலுத்த வேண்டிய வரிகளில் கழித்தும் கொண்டனர். இந்தத் தாராளக்

தன்மையும், தகைமையும் ஹீரா மக்கள் மனத்தில் அற்புத மாற்றம் ஒன்றை உண்டு பண்ணியது. அவர்கள் முஸ்லிம்களின் ஆட்சியை வரவேற்க ஆரம்பித்தார்கள்.

ஹீரா வெற்றி இஸ்லாமிய வரலாற்றில் ஒரு முக்கியமான நிகழ்ச்சியாகும். அங்கு காலித் (ரலி) அவர்கள் ஓர் ஆண்டு வரை தங்கியிருந்தனர். ஹீரா தான் அரேபியாவுக்கு வெளியே ஏற்பட்ட முதல் முஸ்லிம் தலை நகரமாகும். விரைவில் அங்கு ஐவேளைத் தொழு கைக்கும், அதான் என்னும் அழைப்பொலி எழத் தொடங்கியது. அந்நகர் மக்கள் வரி செலுத்திவிட்டுத் தம் மூதாதையர் மதத்திலேயே இருக்க அனுமதிக்கப்பட்டனர். இது ஒன்றே போதும், முஸ்லிம்களின் நோக்கம், தாம் பிடித்த நாட்டு மக்களை மதம் மாற்றுவது அல்ல என்பதற்கு. ஹீரா மக்கள், அதன் தலைவர்களாலேயே ஆளப்பட்டனர். அங்கிருக்கும் உழவர்களின் உரிமையில் தலையிடக் கூடாதென்றும், அவர்களின் நில உடைமைகள் மதிக்கப்படவேண்டும் என்றும் கலீபா அவர்கள் கட்டளையிட்டனர். அவர்களைப் பாதுகாக்கும் பொறுப்பை காலித் (ரலி) அவர்கள் ஏற்றுக் கொள்ள, அதற்குப் பகரமாய் நகர மக்கள் முஸ்லிம்களுக்கு விசுவாசமாய் இருப்பதாகத் தெரிவித்தனர்.

இப்பொழுது பாரசீக அரசு ஏற்ற, அரசர் அரியணை ஏற்றப் படாமல் இயக்கம் இழந்திருந்தது. அதனை அச்சுறுத்தினார் முதன்னா (ரலி). ஆனால் கலீபாவின் கட்டளை விரைந்தது பின்புறத்தைப் பலப் படுத்தாமல் முன்னேறக்கூடாது என்று. இதுவரை தூமாவிலிருந்த அயாதிடமிருந்து ஒரு தகவலும் வரவில்லை. காலித் (ரலி) அவர்களுக்கு அறவே பிடிக்காதது வெறுமனே இருப்பது. அதனால் தான் காலித் (ரலி) அவர்களைப் பற்றி வரலாற்றாசிரியர்கள் கூறினர், ''அவர் போர் வாய்ப்பைப் பெற்று விட்டாலோ, போர்ச் செய்தியைக் கேள்விப்பட்டாலோ, பொறுமை இழந்து விடுவார்'' என்று. எனவே காலித் (ரலி) அவர்கள், அன்பாரை முற்றுகையிட்டனர். அந்நகரைச் சுற்றி வலிமை மிக்க கவர்கள் இருந்தன. காலித் (ரலி) அவர்கள் மணல் மேடுகளை எழுப்பி, அங்கிருந்து அம்பு மழையைப் பொழிந்தனர். அத்துடன் தம்முடன் இருந்த ஒட்டகைகளைக் கொன்று, அவற்றைக் கொண்டு அகழியைத் தூர்த்து நகரின் மீது தாக்குதல் தொடுத்தனர். நகரால் அதிக நாட்கள் தாக்குப் பிடிக்க இயலவில்லை. அது அடி பணிந்ததும், காலித் (ரலி) அவர்கள் ஐன்தமர் கோட்டையைத் தாக்கினார்கள். அது ஆளுநர் மஹ்ரான் தலைமையிலிருந்த பாரசீகப் படையால் காக்கப்பட்டது. பாரசீகப் படையுடன் பனீ தக்லீப் கோத்

திரத்தாரும் இருந்தனர். பனீ தக்லீப்களே சஜாவுடன் யாமாமாவரை வந்தவர்கள். அவர்களின் தலைவன் உக்பாவை காலித் (ரலி) அவர்கள் கொன்றனர். கோட்டையிலிருந்து போரைப் பார்த்த ஆளுநர் ஊரைக் கோட்டை விட்டாலும், உயிரைக் கோட்டை விடக் கூடாதென அங்கிருந்து ஓட்டம் பிடித்தார். இப்போரில் ஏராளமானவர்கள் சிறை பிடிக்கப்பட்டனர். அப்படிப் பிடிக்கப்பட்டவர்களில் பன்னிரு அறிஞர்களும் இருந்தனர். அவர்களில் ஒருவர் இமாம் முகம்மத் (ரஹ்) அவர்களின் தந்தை, இன்னொருவர் ஸ்பெய்னை வென்ற தளபதி மூசாவை ஈன்றவர்.

காலித்(ரலி) அவர்களுடன் சேர்ந்து கொள்ள வந்த அயாத் தூமாவிலிருந்து முன்னேற முடியாமல் மூச்சுத் திணறிக் கொண்டிருந்தார். அவர் உதவிக்கு கலீபா வலீதை அனுப்பி வைத்தனர். வலீத் அயாதின் உதவிக்கு வரும்படி காலித் (ரலி) அவர்களுக்குச் செய்தி அனுப்பினார். ஐன்தமர் விழுந்த சமயம் இந்தச் செய்தி காலித் (ரலி) அவர்களுக்குக் கிடைத்தது. உடனே அவர்கள் ஹீராவைக் காக்க, அகாவை நியமித்து விட்டுத் தூமா நோக்கிப் புறப்பட்டார்கள். அவர்கள் வருவதை அறிந்ததுமே, பகைவருக்குக் கிலி பிடித்துக் கொண்டு விட்டது. சிரியா பக்கமிருந்து அயாதும், பாரசீகப் பக்க மிருந்து காலிதும் பகைவரைத் தாக்கத் தொடங்கினர். இரு முனைத் தாக்குதல் பகைவரை இற்றுவிழச் செய்தது.

காலித் (ரலி) அவர்கள் அங்கு இல்லாததைப் பாரசீகரும், பனீ தக்லீகளும் பயன்படுத்திக் கொள்ளத் துணிந்தனர். தம் தலைவர், காலித் (ரலி) அவர்களால் கொல்லப்பட்டதை மறந்திடாதிருந்த பனீ தக்லீப்கள் வீரப்போர் செய்ய வராவிட்டாலும், விஷம வேலைகள் செய்யத் தவறவில்லை. அதை அறிந்ததும், காலித் (ரலி) அவர்கள் கடும் வேகத்துடன் திரும்பி வந்து, பனீ தக்லீப்களைத் தாக்கத் தொடங்கினர். ''குளவியை அதன் கூட்டில் வைத்தே அழிக்கப் போகிறேன்'' என காலித் (ரலி) அவர்கள் சூளுரைத்தனர். அவ்விதமே அவர்கள் ஆற்றின் கீழ்க்கரையில் பாரசீகரை அழித்தனர். மேற்கரையில் பனீபக்ரை ஒழித்தனர்.

உயிர் தப்பி ஓடியவர்களைத் தொடர்ந்து சென்ற காலித் (ரலி) அவர்கள், சில நாட்களில் சிரியா எல்லையிலிருந்த பராத்தை அடைந்தார்கள். இப்பொழுது ரமலான் மாதம் வந்து விட்டது. ஆற்றின் அருகில் முகாமிட்டு, அம்மாதம் முழுதும் ஓய்வெடுக்க காலித் (ரலி)

அவர்கள் விரும்பினர். ஆனால் அவர்களை அப்படி இருக்க விட வில்லை அவர்களின் பகைவர்கள். உரோமர், பாரசீகர், முஸ்லிம் களுக்கு விரோதமான அரபு கோத்திரத்தவர் ஆகியவர் கொண்ட படை காலித் (ரலி) அவர்களைச் சந்தித்தது. அங்கு நடந்த கடும் போரிலும் வெற்றி அடைந்தவர்கள் முஸ்லிம்களே. இதன்பின் ஆஸிம் தலைமையில் படையை ஹீராவுக்கு அனுப்பி வைத்த காலித் (ரலி) அவர்களின் மனத்தில் அடக்க முடியாத ஆசை ஒன்று ஏற்பட்டது.

**புனித யாத்திரை**

அதே ஆசையால் இப்பொழுது கலீபா அவர்களும், ஆட் கொள்ளப்பட்டிருந்தனர். அந்த ஆசையை நிறைவேற்ற சென்ற ஆண்டே அவர்கள் விரும்பினார்கள். ஆனால் காவல் கடமைகள் அவர் களின் கால்களுக்குத் தளையிட்டிருந்தன. இப்பொழுது தளைகள் சற்றுத் தளர்ந்திருப்பதாய்க் கலீபா உணர்ந்தார்கள். அந்த ஆசைதான் மக்க நகரில் இருக்கும் ஞாலத்து முதல் ஆலயத்தைக் காண வேண்டும், ஹஜ்ஜுக் கடன்களை ஆற்ற வேண்டும் என்பது.

கலீபா அவர்கள் மக்களுடன் சேர்ந்து மக்கா நோக்கிப் புறப் பட்டனர். அவ்விதம் புறப்பட்டுப் போகும்போது, மக்கள் மறந்தும் அவர்களுக்கு முன் புறமாகப் போகவில்லை. தம் அகத்துறையும் மரியாதையைக் காட்டுவதற்காக மக்கள் இவ்விதம் செய்வது கலீபா அவர்களின் மனத்தை வருத்துகிறது. உண்மையில் அவ்வித மரியாதைக்கு உரியவர்கள்தாம். ஒருநாள் அபூதர்தா (ரலி) அவர்கள், அபூபக்கர் (ரலி) அவர்களுக்கு முன் நடந்து செல்வதை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கண்டு, ''அபூதர்தாவே! உம்மைவிட மேலான ஒருவருக்கு முன்னால் நீர் நடந்து செல்கிறீர். இறை தூதர்களுக்கு அடுத்தபடியாக அபூபக்ரைவிட மேலான ஒருவருக்குக் கதிரவன் புலரவுமில்லை, மறையவுமில்லை'' என்று கூறினார்கள். ஆனால் அபூபக்ர் (ரலி) அவர்கள், அவ்வித மரியாதையை ஏற்றுக் கொள்ள விரும்பவில்லை. எனவே அவர்கள் மக்களைப் பார்த்து, அவ்வித மரியாதை தமக்குச் செய்ய வேண்டாம் என்றார்கள். தமக்குப் பின் புறமாக மக்கள் வருவதைத் தாம் வெறுப்பதாயும், மக்கள் தமக்கு முன்னும் பின்னுமாய் வருவதையே தாம் விரும்புவதாயும் அவர்கள் கூறினர். அவர்கள் அதிகம் விரும்பியவற்றில் ஒன்று எளிமை; அதிகம் வெறுத்தவற்றில் ஒன்று பெருமை. எனவே அவர்கள் மக்கா நோக்கிச் செல்வது, உலகைத் துறந்த ஒருவர், தம் தோழர் தொடரப் போவது போல் இருந்தது.

கலீபா அவர்கள் காதம் பல கடந்து மக்காவை அடைகிறார்கள். அவர்கள் நகரினுள் நுழைவதைக் கண்ட மக்கள், அதனை அறிந்தால் அதிகம் மகிழக் கூடிய அவர்களின் தந்தையிடம் சென்று தெரிவிக் கின்றனர். வயதிலும் முதிர்ந்து, கண்பார்வையையும் இழந்திருந்த அவர், தம் அருமைப் புதல்வர், அல்லாஹ்வின் தூதருடைய அரிய பிரதிநிதியாய்ப் பிறந்த ஊர் வருவது அறிந்து பெருமகிழ்வடைகிறார். அவரை, வந்ததும் சந்திக்க வேண்டும் என்னும் ஆவலில் தம் வீட்டு வாயிலுக்கே வந்த அமர்ந்து கொள்கிறார். தம் அருமைப் புதல்வர் அருகில் வந்து விட்டதை அறிந்ததும், அவர்களை வரவேற்க எழுகிறார். கலீபா அவர்கள் தம் ஒட்டகையை மண்டியிடச் செய்து, அதிலிருந்து இறங்கி, தம் தந்தையைக் கட்டிக் தழுவிக் கொள்கின்றனர். அபூகுஹாஃபாவின் கண்களிலிருந்து மகிழ்ச்சிக் கண்ணீர் வழிகிறது. அவர் தம் புதல்வரின் நெற்றியில் தம் இதழ்களை ஒற்றி, அன்புடன் முத்தமிடுகிறார். முதலில் மக்காவின் ஆளுநரும், பிறகு அதன் பெரு மக்களும் வந்து கலீபா அவர்களின் கைகளைப்பற்றி அவர்களுக்கு வாழ்த்துக் கூறுகிறார்கள்.

அதன்பின் கலீபா குளித்துவிட்டு இஹ்ராம் உடை அணிந்து கொண்டு, கஃபாவைக் காணப் புறப்படுகிறார்கள். அறியாமைக் காலத்தில் தங்களின் மதிப்பிற்குரிய தலைவராயிருந்த அப்துல் கஃபா, இஸ்லாத்தை ஏற்று 'ஓர் இறைவன். உருவமற்றவன்' எனக் கூறிய தற்காக ஊரைவிட்டு விரட்டப்பட்ட அப்துல்லாஹ், தம் வீட்டின் முன்புறம் தாம் கட்டிய பள்ளியிலிருந்து இறைவனைத் தொழுதார். அவனின் வேத வசனங்களை ஓதும்போது அழுதார் என்பதற்காக அடித்து வதைக்கப்பட்ட அபூபக்ர், அரபு அவனியின் முடிசூடா மன்னராக, அகிலமாளும் இரு பேரரசுகளின் அடிக்காலைப் பிடித்து அசைக்கும் இஸ்லாமியக் கலீபாவாக வந்து, கஃபாவில் நிற்பதைக் கண்டதும், மக்கநகர் மக்கள் மெய் மயங்கி அப்படியே அவர்களை மொய்த்துக் கொண்டு விடுகிறார்கள். அதே கஃபாவில் வைத்து அவர்களின் தலை மயிரையும், தாடிமயிரையும் பிய்த்தவர்கள் தாம் அவர்கள்; கழியாலும் காலில் கிடந்ததாலும் அடித்தவர்கள் தாம் அவர்கள். ஆனால் அதனை எல்லாம் கலைந்து போன கனவாகக் கருதி, மறந்துவிட்டிருந்த கலீபா அவர்கள், மக்களுடன் அன்பாக அளவளாவுகிறார்கள். அவர்களுக்கு அறிவுரைகளையும் வழங்கு கிறார்கள். அப்பொழுது அவர்கள் காலமாகி விட்ட தம் கண்மணித் தலைவரைப் பற்றிக் குறிப்பிட நேருகிறது. அவர்களின் நினைவு வந்த

துமே, கலீபா அவர்களின் நெஞ்சம் கனக்கிறது. கண்டத்தில் ஏதோ வந்து அடைக்கிறது. கண்கள் கயங்களாகி விடுகின்றன. ஈராண்டு களுக்கு முன்வரை தங்களின் மத்தியில் இருந்து, தங்களின் இதயம் ஆண்டு கொண்டிருந்த அவர்கள், இப்பொழுது இல்லை என நினைந்ததுமே கலீபா அவர்களுக்கு விம்மல் வெடித்துக் கொண்டு கிளம்பி விடுகிறது. அவர்களால் தம் அழுகையை அடக்க இயல வில்லை. அதைப் பார்த்த மக்களும் கண்ணீர் வடிக்க ஆரம்பிக் கின்றனர்.

இப்படி நிகழ்வது இது முதல் முறை அல்ல. இந்த இரண்டு ஆண்டுகளில் தம் கண்மணித் தலைவர் நினைவு வரும் போதெல்லாம் கலீபா அவர்களால் அழாமல் இருக்க இயலவில்லை. இப்படித்தான் அவர்கள் அன்று மதீனாவில் குத்பாச் சொற்பொழிவு செய்து கொண்டிருக்கிறார்கள். அப்பொழுது, ''இதனை நான் சென்ற ஆண்டு அல்லாஹ்வின் தூதர் அவர்களிடமிருந்து கேட்டேன்'' என்று கூறி முடிக்குமுன், தொண்டை அடைத்துக் கொண்டு விடுகிறது. ''சென்ற ஆண்டு'' என்னும் இரு சொற்கள் கடந்த ஆண்டு நிகழ்ந்த உள்ளம் ஒடித்த உற்பாதத்தை அவர்களுக்கு நினைவுப்படுத்தி, அணைகோல முடியாத அவலப் பெருக்கை, காலத்தாலும் கரைக்க முடியாத மாளாத் துயரத்தை அவர்களின் மனத்தில் ஏற்படுத்தி விடுகின்றன. அந்தப் பெரும் துக்கத்தால் அவர்கள் மூர்ச்சையாகி விடுகிறார்கள். மூர்ச்சை தெளிந்ததும் மீண்டும் சொற்பொழிவு செய்யத் தொடங்குகிறார்கள். ஆனால் மீண்டும் மயக்கம் வந்து விடுகிறது. அன்றைய சொற்பொழிவை செய்து முடிப்பதற்குள் அவர்கள் பெரும்பாடு பட்டுவிடுகிறார்கள்.

இத்தகைய மன நிலையுடன் கஃபாவை இடம் சுற்றி, கருப்புக் கல்லை முத்தமிட்டு விட்டு வீடு திரும்பிய கலீபா அவர்கள், அதனை மீண்டும் செய்ய நண்பகலில் கிளம்புகிறார்கள். அந்த இனிய கடமையைச் செய்யாமல் அவர்களால் வீட்டில் அரைக்கணம்கூட அமைதியாக இருக்க இயலவில்லை. மறுபடியும் கஃபாவைச் சுற்றி, கருப்புக் கல்லை முத்தமிட்டபின் கலீபா அவர்கள் ஆங்கிருந்த மன்றம் ஒன்றில் அமர்ந்து கொண்டு, குறையிருப்பின் கூறும்படி மக்களைப் பார்த்துக் கேட்கிறார்கள். ஆனால் எவரும், எவ்விதக் குறையும் கொண்டுவரவில்லை. அதுகண்டு கலீபா ஆளுநரையும், மக்களையும் பாராட்டுகிறார்கள். பிறகு கலீபா மக்களை நீதிபதிகளாக்கி, அவர்களின் முன்னிலையில் தாம்நின்று கொண்டு,''என்னிடம் குற்றம் காணின்,

அதனை நீங்கள் தாராளமாகக் கூறலாம். நான் எவருக்கும் எதுவும் தர வேண்டியிருப்பின், அதனையும் நீங்கள் தயங்காமல் சொல்லலாம்'' என்கிறார்கள். இரண்டிற்கும் எவரும் ஒரு பதிலும் உரைக்கவில்லை. இப்பொழுது நண்பகல் தொழுகை நேரம் வரவே, தொழுகையை நிறைவேற்றிடக் கலீபா அவர்கள் எழுகிறார்கள்.

அடித்து விரட்டிவிட்டுப் பிறகு அணைத்துக்கொண்ட மக்காவில், சில நாட்கள் தங்கியிருந்துவிட்டு, முஸ்தலிபா, மினா, அரபாத் ஆகிய இடங்களில் ஆற்றவேண்டிய கடமைகளை ஆற்றிவிட்டு, இறுதி முறையாக மதீனா திரும்பினார்கள் கலீபா . ஆனால் அவர்களின் கூறிய பார்வை, அவர்களுடன் சேர்ந்து ஹஜ்ஜுச் செய்த ஒருவர் மீது படவில்லை. அவர்கள் தாம் காலித் (ரலி) அவர்கள். கலீபா அவர்களின் அனுமதி பெறாமல் காலித் (ரலி) அவர்கள் புராத்திலிருந்து ஒரு சிறு படையுடன், எவரும் கண்டு கொள்ளாதிருப்பதற்காக, கொடிய பாலைப் பாதையில், வழிகாட்டக் கூட ஆள் இல்லாமல் மின்னலை மிஞ்சிய வேகத்தில் விரைந்து வந்து ஹஜ்ஜுக் கடமை களை புரிந்துவிட்டுத் திரும்பிவிட்டனர்.இது கலீபா அவர்களின் கண்களில் படாவிட்டாலும், காதுகளில் பட்டுவிட்டது. ஆற்றிய செயலை அங்கீகரித்தாலும், அதனைத் தமக்குத் தெரியாமல், தம் அனுமதியும் பெறாமல் புரிந்தது பெரும் பிழை எனக் கலீபா அவர்கள் கருதினர். ஏனெனில் படையை அபாயமிக்க ஒரு நிலையில் நிறுத்தி விட்டு வந்ததைக் கலீபாவால் அங்கீகரிக்க இயலவில்லை. எனவே கண்டிப்புடன் கூடிய கடிதம் ஒன்றைக் காலித் (ரலி) அவர்களுக்கு எழுதி இனிமேல் இவ்விதம் செய்யக் கூடாது என எச்சரித்தார்கள் கலீபா. ஹிஜ்ரி 12-ஆம் ஆண்டு கழியுமுன் காலித் (ரலி) அவர்கள் இராக்கில் போர் நடவடிக்கைகளை முடித்துக்கொண்டனர்.

**சிரியாவில் போர்**

இதன் பின் கலீபா அவர்கள் உரோமர் பக்கம் தம் கவனத்தைத் திருப்பினார்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்களே உரோமர் போர் ஆயத்தம் புரிவதை அறிந்து 30,000 வீரர்களைக் கொண்ட படையுடன் தபூக்வரை சென்றனர். ஆனால் அவர்களை எதிர்க்க எவரும் வராததால் திரும்பிவந்தனர். இது நிகழ்ந்தது ஹிஜ்ரி 9- ஆம் ஆண்டில் ஆகும். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தாம் இறப்பதற்கு இரண்டு நாட் களுக்கு முன்பு தான், உஸாமா (ரலி) தலைமையில் ஒரு படை செல்ல ஆணையிட்டனர். உண்மையில் உரோமப் பேரரசர் ஹிராக்லியஸும்,

சிரியா எல்லையிலிருந்த கிறிஸ்தவரும், அரேபியாமீது அளவற்ற பகைமை கொண்டிருந்தனர். சிரியாவிலிருந்து அரேபியாமீது பாய்வது, பாரசீகத்திலிருந்து படை எடுப்பதைவிட எளிது. சிரியா எல்லைக்கும் மதீனாவுக்கும் இடையேயிருந்த தொலைவு, பாரசீக எல்லைக்கும் மதீனாவுக்கும் இடையேயுள்ள தொலைவைவிடக் குறைவு. அதனால் முஸ்லிம்கள் சிரியா எல்லை அபாயம் பற்றி அதிகம் அஞ்சியவர்களாய் இருந்தனர். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உயிர் வாழும்போது ஒரு நாள், ஒருவர் தாம் அருகில் இருந்த உமர் (ரலி) அவர்களிடம்.''பெரும் ஆபத்து வந்து விட்டது'' என்றார். அதைக் கேட்டதும் உமர் (ரலி) அவர்கள் கேட்ட முதல்கேள்வி,''கஸ்ஸானியர் வந்துவிட்டனரா? என்பது தான். கஸ்ஸானியர் என்பவர் சிரியா எல்லையில் வாழ்ந்த ஒரு கிறிஸ்தவக் கூட்டத்தவர். அவர்களின் சிற்றரசர்கள் உரோமருக்குக் கப்பம் கட்டிக்கொண்டு, சிரியாவைப் பகுதி பகுதியாக ஆண்டு கொண்டிருந்தனர். அவ்வரசர்களில் ஷிர்ஜில் என்பவன் ஒருவன். அவன் இஸ்லாத்தைத் தழுவுமாறு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் விடுத்த அழைப்பை எடுத்துச் சென்ற ஹாரித் இப்னு உமரைக் கொடுமையாகக் கொன்றான். இது சிரியாவுக்கும் இஸ்லாமிய அரசுக்கும் இடையே இருந்த பகைமைத் தீயைப் பற்றி எரியச் செய்தது.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இந்த எல்லை பற்றி அதிக எச்சரிக்கையுடன் இருந்தனர். உஸாமா (ரலி) தலைமையில் சிரியா எல்லைக்கு ஒரு படை சென்றே ஆக வேண்டும் எனக் கலீபா அவர்கள் கண்டிப்புடன் இருந்ததற்கு இதுவும் ஒரு காரணமாகும். உள்நாட்டுக் கலகங்களை விட அதிக ஆபத்தானது இது எனக் கலீபா கருதினர். அதனால் தான் அவர்கள் உஸாமா (ரலி) திரும்பி வந்ததும், காலித் இப்னு சயீத் (ரலி) தலைமையில் மற்றொரு படையை அங்கு அனுப்பி வைக்கத் தவறவில்லை. இந்த காலித் இப்னு சயீத் (ரலி) இஸ்லாத்தை ஆரம்பத்தில் ஏற்றவர்களில் ஒருவர். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இறந்ததும் ஏற்பட்ட குழப்பத்தின் போது நஜ்ரானிலிருந்து திரும்பி வந்த அவர்களை கலீபா, சிரியா எல்லையிலிருந்த அரபுக் கூட்டத்தவரை ஒன்று சேர்க்கும்படி அனுப்பி வைத்தார்கள். அவர்களிடம், தைமா என்னுமிடத்தில், தம்முடைய மறு உத்தரவு வரும்வரை தங்கியிருக்குமாறு கூறினார்கள். ''எதிரி அடிக்க ஆரம்பிக்காத வரை எடுக்க வேண்டாம் வாளை!'' என்னும் கண்டிப்பான கட்டளையும் அவர்களுக்கு இடப்பட்டிருந்தது. அவர்களை இப்பணிக்கு அனுப்ப

வேண்டாம் என அலீ (ரலி) அவர்களும், உமர் (ரலி) அவர்களும் உரைத்த போதும் கலீபா அவர்கள் அவ்விருவர் கூறியதையும் ஏற்கவில்லை. அதற்குக் காரணம் காலித் இப்னு சயீத் (ரலி) அண்ணல் நபி (ஸல்) அவர்களின் மதிப்பிற்குரிய தோழர்களில் ஒருவராய் இருந்தது. கலீபா அவர்கள் ஆணையிட்டபடி காலித் இப்னு சயீத் (ரலி) அரபு கூட்டத்தவர் பலரைத் தம் பணிக்குக் கொண்டு வந்து சேர்த்தனர். இது அங்கிருந்த உரோமரை உஷார்படுத்தியது. அவர்கள் கஸ்ஸானி யரையும் சிரியாவின் மற்ற கோத்திரத்தவரையும் திரட்டிக் கொண்டு, காலித் இப்னு சயீத் (ரலி) அவர்களை எதிர்த்தனர். ஆனால் அவர்கள் காலித் இப்னு சயீத் (ரலி) அவர்களைக் கண்டதும், கலைந்தனர். பாஹான் என்பவன் அவர்களை எதிர்த்துத் தோற்றான். இந்த வெற்றிச் செய்தியைக் கவிதையாக்கி காலித் இப்னு சயீத் (ரலி) கலீபாவுக்கு எழுதினர்; அத்துடன் உதவிப் படை அனுப்பும் படியும் கோரினர்.

## படை கிளம்பியது

இந்தச் சமயத்தில் துல்குலா (ரலி) அவர்களும் இக்ரிமா (ரலி) அவர்களும் மதீனா வந்து சேர்ந்தனர். அவர்களையும், வலீத் பின் உக்பா (ரலி) அவர்களையும், காலித் இப்னு சயீத் (ரலி) அவர்களின் உதவிக்கு உடனே போகும்படி பணித்து விட்டுக் கலீபா நாட்டின் நாலா பக்கங் களிலும் வீரர்களைத் திரட்ட ஆட்களை அனுப்பி வைத்தனர். இப்பொழுது பஹ்ரைனிலிருந்து திரும்பிய அமர் பின் ஆஸ் (ரலி) அவர்களிடமும், இராக்கிலிருந்து வந்த ஷுரஹ்பீல் (ரலி) அவர்களிடமும் கலீபா உரோமரை எதிர்க்கச் செல்லுமாறு கூறினர். கலீபா அவர்களின் ஆட்கள் வந்து, வரும் ஆபத்தை எடுத்துக் கூறி, வீரர்கள் வேண்டும் எனக் கூறியபோது, ஆயிரமாயிரமாய் அரபிகள் அடுகளம் காணக் கிளம்பி வந்தார்கள். அவர்களைக் கலீபா அவர்களே முன்சென்று வரவேற்று, ஜுர்ஃப் வெளியில் தங்க வைத்தனர். அவர்களில் ஓராயிரம் பேர் ஒண்ணுதல் அண்ணல் நபி (ஸல்) அவர் களைக் கண்ணாரக் காணும் பேறு பெற்றவர்கள். அவர்களில் பல பேர், பத்ர் போரில் பங்கு கொண்டவர்கள். அவர்களில் சிலரை யஸீத் இப்னு அபூசுப்யான் (ரலி) தலைமையில் பல்காவைத் தாக்கவும், இன்னும் சிலரை அபூ உபைதா (ரலி) தலைமையில் ஹிமஸைத் தாக்கவும் கலீபா அவர்கள் அனுப்பி வைத்தனர். இவர்கள் தமக்கு இறைவன் வெற்றியை நிச்சயம் அருள்வான் என்னும் நம்பிக்கையில் செழிப்பு மிக்க சிரியாவில் தங்கிவிடும் நோக்கத்துடன் தம்முடன் தம் மனைவி மக்களையும் அழைத்துக் கொண்டு சென்றார்கள். ஏறத்தாழ

இரண்டு ஆண்டுகளுக்கு முன் உஸாமா (ரலி) அவர்களை எந்த ஜுர்ஃப் வெளியிலிருந்து வழியனுப்பி வைத்தார்களோ அந்த ஜுர்ஃப் வெளியிலிருந்து ஒவ்வொரு படைக்கும் புரவி மீது அமர்ந்திருக்கும் அதன் தலைவருடன் 'தனியத்துல் விதாஃ' என்னும் இடம்வரை நடந்தே சென்று விடை கொடுத்தார்கள் கலீபா.

அப்பொழுதெல்லாம் அவர்கள் இந்த அறிவுரையைக் கூறவும் தவறவில்லை: ''முஸ்லிம்களின் தலைமையை உங்களுக்குத் தந்திருக் கிறேன், உங்களைச் சோதிப்பதற்காக; நீங்கள் முஸ்லிம்களை எப்படி நடத்துகிறீர்கள் என்பதைப் பார்ப்பதற்காக; எல்லாச் சூழ்நிலைகளிலும் இறைவனுக்குப் பயப்படுங்கள்! ஏனெனில் உங்கள் செயல்களும், எண்ணங்களும் அவனுக்கும் தெரியும். தம்முடைய விசுவாசமான செயல்கள் மூலம், எவர் இறைவனுக்கு அருகில் இருக்கிறாரோ, அவரே அவன் அன்பிற்கு அருகில் இருப்பவர். அறியாமைக் காலப் பழக்கங்களை விட்டு விடுங்கள்! ஏனெனில் இறைவன் அவற்றை வெறுக்கிறான். உங்களின் சொற்பொழிவுகளைச் சுருக்கிக் கொள் ளுங்கள்! ஏனெனில் நீளமான சொற்பொழிவில் தவறு நேரலாம். குறிப்பிட்ட நேரங்களில் தொழுங்கள்! பெண்கள், குழந்தைகள், முதியவர்களைக் கொல்லாதீர்கள்! அடிபணிந்தவரையோ, இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டவரையோ கொல்லாதீர்கள்! பால் தரும் பிராணிகளிடமிருந்து, பாலைக் கூட அதன் சொந்தக்காரர்களின் அனுமதியின்றிக் கறக்கா தீர்கள்! உங்கள் வாக்கைக் காப்பாற்றுங்கள்! உடன்படிக்கைகளை மீறாதீர்கள்!'' இதன் பின் கலீபா வீரர்களைப் பார்த்து, ''புறப்படுங்கள் நிற்க வேண்டாம்! உதவி கேளுங்கள் அல்லாஹ்விடம்!'' எனக் கூறி அவர்களுக்கு விடை கொடுத்தார்கள். இருக்கும் சிறுபடையையும் இப்படிப் பிரித்தனுப்புவதன் காரணத்தைக் கேட்டபோது, கலீபா அவர்கள் கூறினர்: ''விரைவில் உரோமர், முஸ்லிம்களுடன் மோத வருவர். ஒரு பகுதியில் வெற்றி பெறும் படை, மற்றப் பகுதியிலுள்ள படைகளுக்கு இதனால் உதவ முடியும். அத்துடன் மேட்டுப் பகுதியில் விரைவாய் அணிவகுத்துச் செல்லவும் முடியும். அதனால் தான் மூன்று பகுதியினரை அப்பகுதிக்கு அனுப்பினேன்.''

ஷுரஹ்பீல் (ரலி), யஸித் இப்னு அபூசுப்யான் (ரலி), அபூ உபைதா (ரலி), அம்ர் பின் ஆஸ் (ரலி) ஆகிய நான்கு தலைவர்களின் கீழ் சென்ற இந்தப் படையில் இருந்தவர்கள் எல்லாம் இருபத்து ஏழாயிரம் பேர்கள்தாம். ஆனால் உரோமப் படை 2,40,000 வீரர்களுடன்

இஸ்லாத்தை ஒழிக்கக் கிளம்பி வந்தது. நான்கு படைகளில் மூன்று, மூன்று திக்குகளிலிருந்து பல்க்கா நோக்கிச் செல்ல வேண்டும் என்பதும், அம்ர் பின் ஆஸ் (ரலி) மட்டும், பலஸ்தீன் வழியாகப் போக வேண்டும் என்பதும் கலீபா இட்ட கட்டளையாகும். "உரோமர் விரைவில் முஸ்லிம்களுடன் மோதுவர் என நான் உணர்கிறேன். உயர மான இடத்தில் இருப்பவர்கள் தாழ்வான இடத்திற்கும், தாழ்வான பகுதியில் உள்ளவர்கள் உயரமான இடத்திற்கும் வந்து விடுங்கள்! ஒருவர், பிறர் உதவியை எதிர்பாராமல் இருங்கள்!" என்றார்கள் கலீபா. முஸ்லிம் படை நான்கு பகுதிகளாகப் பிரிந்து வருவது அறிந்த ஹிராக்லியஸ், அவை பிரிந்திருக்கும் நிலையில் வைத்தே அழிப்பது எளிது எனக் கருதி, அவை ஒன்று சேரும் முன், அவற்றை கடல் போலும் தம் படை கொண்டு தனித்தனியே சந்திக்கத் திட்டமிட்டார். அம்ர்பின் ஆஸ் (ரலி) அவர்களைத் தாக்க தம் சகோதரர் தியோடரிக்கையும், யஸீத் பின் அபூசுப்யான் (ரலி) அவர்களை எதிர்க்க தியோடரின் மகனான ஜார்ஜையும், ஷுரஹ்பீல் (ரலி) அவர்களைச் சூழ டராகிக்ஸையும், அபூ உபைதா (ரலி) அவர்களைத் தடுக்க கைகாரையும் அனுப்பி வைத்தார் அவர். இந்தத் திட்டத்தை அறிந்ததும் முஸ்லிம்கள் அதுபற்றி அம்ர் பின் ஆஸ் (ரலி) அவர்களின் ஆலோசனையைக் கோரினர். "என் கருத்து எல்லோரும் ஒன்று சேரவேண்டும் என்பதுதான். அப்பொழுதுதான் நம் எண்ணிக்கையும் அதிகமாகத் தென்படும். நம்மைப் போன்றவர் ஒன்று சேர்ந்து விட்டால், எண்ணிக்கை பலத்தால் பகைவர் நம்மை எளிதாக வென்று விட முடியாது. நாம் பிரிந்திருந்தால், நம்மைத் தனித்தனியே சந்திக்கும் பகைவருக்கு ஈடு கொடுக்க நம்மிடம் போதிய வீரர்கள் இல்லை. எனவே யர்முக்கில் ஒன்று படுவதே உகந்தது" என்றனர் அம்ர்பின் ஆஸ் (ரலி).

அறிவு நிறைந்த ஆலோசனையாக இது கலீபா அவர்களுக்குத் தோன்றியது. எனவே அவர்கள் இந்த உத்தரவை உடனே அனுப்பி வைத்தனர்; "ஒன்று சேருங்கள், நீங்கள் ஒரு படையாவதற்கு! முஸ்லிம் படைகொண்டு பகையணியைப் பிளந்தெறியுங்கள்! அல்லாஹ்வை ஆதரிப்பவர்கள் நீங்கள் என்பதையும், அவன் தன்னை ஆதரிப்ப வர்களுக்கு வெற்றியை வழங்குகிறான், தன்னை எதிர்ப்பவர்க்கு அழிவை அளிக்கிறான் என்பதையும் உறுதியாக நம்புங்கள்! உங்களைப் போன்றவர்களை எண்ணிக்கை பலத்தால் ஒன்றும் செய்துவிட முடியாது. பல்லாயிரவரைக் கொண்ட கூட்டமாயினும், அதற்கு அதிக

மானவராயினும், பவப் பாதையைத் தேர்ந்தால், அவர் அழிவது உறுதி. எனவே பவப் பாதை பற்றி எச்சரிக்கையாய் இருங்கள்! யர்முக்கில் ஒன்று திரளுங்கள்!ஒவ்வொரு படைத்தலைவரும் தம் வீரர்களுக்கு இமாமாக நின்று தொழுகையை நடத்தட்டும்!'' இந்த உத்திரவு கிடைத்ததும், முஸ்லிம் படைகள் நான்கும் யர்முக் ஆற்றை நோக்கிப் புறப்பட்டு, அதன் தென்புறத்தில் திரண்டு நின்றன.

முஸ்லிம்களின் போர்த்திட்ட மாறுதலை ஹிம்ஸிலிருந்த ஹிராக்லியஸ் அறிந்து, தம் திட்டங்களையும் மாற்றிக் கொண்டு முஸ்லிம்களைப் போலவே தம் வீரர்களையும் ஓர் இடத்தில் திரளுமாறு உத்திரவிட்டார். அவ்வாறே அவரின் படையணி அனைத்தும் யர்முக் ஆற்றின் இன்னொரு கரையிலிருந்த வாக்குஸா என்னும் இடத்தில் வந்து தங்கியது. அந்தச் சமவெளி மூன்று பக்கம் ஆறால் குழப்பட்டு, ஒரு பக்கம் மலையால் அரணிக்கப்பட்டிருந்தது. மலைப்பக்கம் சம வெளிக்குள் செல்ல ஒரு பாதை இருந்தது. அது தாக்குதல் தொடுக்க ஏற்ற இடம் என ஹிரால்க்லியஸ் தேர்ந்தார். சம வெளிக்குள் நுழைய விருந்த வாயிலில் வந்து முஸ்லிம்கள் முகாமிட்டுக்கொண்டனர். இப்பொழுது உரோமப் படைகள் பொறிக்குள் அகப்பட்ட எலியின் நிலையில் இருந்தன. பொறி விட்டு எலி எப்பொழுது வெளிவரும் என முஸ்லிம்கள் பூனைகளைப்போல் எதிர் பார்த்திருந்தனர். சாதகமான நிலை முஸ்லிம்களுக்குக் கிடைத் ததை அறிந்து அம்ர் பின் ஆஸ் (ரலி) அவர்கள் அக மகிழ்ந்து கூறினர். ''மக்களே! மகிழ்ச்சியுடன் இருங்கள்! உரோமர் இப்பொழுது சூழப்பட்டுவிட்டனர். சூழப் பட்டவரில் ஒரு சிலரே உயிர் தப்புவர்'' என்று. அபாய நிலை அதுவென பிறகு தெரிந்து கொண்ட பேரரசர் ஹிராக்கிலியஸ் அந்நிலையில் போரைத் துவக்குவது ஆபத்து என அஞ்சி மூன்று மாதங்கள் வரை என்ன செய்வதென்றே தெரியாமல் விழித்துக் கொண்டிருந்தார்.

## யர்முக் போர்

இது உத்தரவுகளின் ஊற்றுக் கண்ணான கலீஃபா அவர்களுக்கு விளக்கப்பட்டு, அவர்களின் ஆணை எதிர்பார்க்கப்பட்டது. உடனே அங்கு'இறைவனின் வாள்' சென்றாக வேண்டும் எனக் கலீபா கருதினார்கள். ''இறைவனின் உதவி கொண்டு வலீதின் மகனைக் கொண்டும், சைத்தானின் சதிகளும் கிரேக்கரின் சூழ்ச்சிகளும் முறி யடிக்கப்படும்'' என்றார்கள் அவர்கள். எனவே காலித் (ரலி)

அவர்களுக்கு கலீபா அவர்களின் ஆணை பறந்தது. "புறப்படும்! சிரியாவிலுள்ள முஸ்லிம் படையுடன் சேர்ந்து கொள்ளும்! எச்சரிக்கை! நீர் செய்திருப்பது (அனுமதி பெறாமல் ஹஜ்ஜுச் செய்யச் சென்றது) போன்றதைத் திரும்பச் செய்ய வேண்டாம்! இறைவனின் அருளால் இராக்கில் நீ விட்டுச் செல்லும் வீரர்கள் மனம் தளர்ந்து விட மாட்டார்கள். முன்னே செல்லும்! பெரும் உறுதி உமக்கு ஏற்படட்டும்! மனித இனத்தின் மீது இருக்கும் அனுகூலங்களின் அளவை நிரப்பும்! அதனை அவன் உமக்கு அவசியம் நிறைவேற்றித் தருவான்.

"உம்முடைய வீரர்களின் உடல் நலனை கவனித்துக் கொள்ளும்! அவர்களை நல்ல முறையிலும் நடத்தும்! பிறரைத் திருத்து முன் உம்மைத் திருத்திக் கொள்ளும்! உம்மிடம் வரும் பகைவரின் தூதுவர்களுக்கு மரியாதை செய்யும்! ஆனால் அவர்களை விரைவில் திருப்பி அனுப்பிவிடும்! ஏனெனில் அவர்கள் உம் இரகசியங்களை அறிந்து கொள்ளலாம். அவர்களுடன் நீரே நேரடியாகப் பேசும்! எப்பொழுதும் உண்மையே பேசும்!

"இரவில் கண்விழித்துக் கவனியும்! இப்பொழுது உமக்குப் பல தகவல்கள் கிடைக்கலாம். படையின் உண்மை நிலையை அறிய அதற்குத் தகுந்தவர்களை நியமியும்! மறதியால் தவறு செய்தாலும் செய்தவர்களைத் தண்டிக்கத் தயங்க வேண்டாம். ஆனால் தவறு செய்தவர்களைத் துன்புறுத்தாதீர்! படையிலிருந்து பிரிந்து நீர் தங்க வேண்டாம்! அது உமக்கு இழப்பு ஏற்படுத்தும்.

"நேர்மையானவர்களையும், விசுவாசமானவர்களையும் ஆலோசகர்களாக ஆக்கிக் கொள்ளும்! அவர்களுடன் தூய்மையான மனத்துடன் தொடர்புகொள்ளும்! உம்மையே நீர் பலவீனப்படுத்திக் கொள்ள வேண்டாம்! அவ்விதம் செய்தால் மற்றவர்களும் பலவீனராகி விடுவார்கள். இறையைத் தொழுபவரையும், துறவிகளையும் தொந்தரவு செய்ய வேண்டாம்!"

இராக்கிலிருந்த காலித் (ரலி) அவர்களுக்கு, இந்த ஆணையுடன் அறிவுரைகளையும் அனுப்பி விட்டுக் கலீபா இரு கைகளையும் உயர்த்தி இறைவனிடம் இறைஞ்சினார்கள். உள்ளத்தில் பிறந்த இறைஞ்சல் உரையாக வெளி வந்தது இவ்வாறு; "இறைவனே! இந்தப் படை உன் மார்க்கத்தைக் காப்பதற்காகப் புறப்படுகிறது. அதற்கு நீயே பாதுகாவலன் ஆவாய். இந்தப் படை மூலம் சிரியா நாட்டு மக்களுக்கு உரோமர்களிடமிருந்து விடுதலை அளிப்பாயாக!" இரு கை ஏந்தி

கலீபா அவர்கள் புரிந்த இறைஞ்சுதல் இறையின் இருக்கையை அடைந்தது.

கலீபா அவர்களின் கட்டளை கிடைத்ததும், காலித் (ரலி) அவர்கள் தம்மிடம் இருந்த படையை இரண்டாகப் பிரித்து, ஒரு பாதியை முதன்னா (ரலி) அவர்களிடம் ஒப்படைத்து விட்டு, மறு பாதியைத் தம்முடன் அழைத்துக் கொண்டு, காற்றை வெல்லும் கடும் வேகத்தில் சிரியா புறப்பட்டார்கள். தம் தோழரை, முதன்னா (ரலி) அவர்கள் பாலைவனப் பாதையில் சிறிது தொலைவு வரை வந்து வழி அனுப்பிவிட்டு, ஹீரா திரும்பிச் சென்றனர்.

காலித் (ரலி) அவர்கள் தம் குதிரையின் கால் கழன்று விழும் அளவு, அதனை விரட்டிக் கொண்டு விரைந்தனர். சீக்கிரம் யர்முக் சேர வேண்டும் என்பதற்காக அவர்கள் தேர்ந்த பாலைப் பாதை தவறினால், யர்முக் சேர்ப்பதற்குப் பதிலாக எமனுலகு சேர்க்க வல்ல தாகும். முடிவில்லா அம்மணல் கடலில் மாட்டிக் கொள்பவர்கள், முடிவு தெரியாமல் போவதுண்டு. அப்பாதையில் ஐந்து நாள் பயணம் வரை பொறி பறக்கும் மணலை அல்லாமல் பொட்டுத் தண்ணீரையும் பார்க்க இயலாது என ஏற்கனவே வழிகாட்டி எச்சரித்திருந்தான். அச்சுறுத்தும் அது காலித் (ரலி) அவர்களை என அவன் எண்ணினான். ஆனால் ஏமாந்தான். ''இதிலேயே செல்வோம், இது ஆபத்தும், அதிகக் கடுமையும் உடையதாயிருந்தாலும், இறை உதவி இருக்கு மாயின் எதுவுமே கடினமல்ல'' என்றார்கள் காலித் அவர்கள், அந்த எச்சரிக்கையைக் கேட்டு. அதன்பின் அவர்கள் தம் ஒட்டகைகளுக்கு நன்கு நீர் காட்டச் சொன்னார்கள். ''ஒவ்வொரு பயண முடிவிலும், நூறு குதிரைகளுக்கு, பத்து ஒட்டகைகள் வீதம் வெட்டப்பட்டு அவற்றின் வயிற்றிலிருந்து எடுக்கப்படும் நீர் குதிரைகளுக்குப் பாலுடன் கலந்து கொடுக்கப்பட வேண்டும்'' என்றும் கூறினார்கள்.

அதன்பின் அப்பாதையில் இறப்பை நோக்கிச் செல்வது போன்ற பயணத்தைச், சிறப்பை நோக்கிச் செய்வதுபோல் செய்தார்கள். ஐந்து நாட்களுக்குத் தேவையான நீர்தான் அவர்களிடமிருந்தது. பாலையின் விளிம்பைப் பார்ப்பதற்கு அதற்கு மேல் ஒருநாள் அதிகமானாலும், அவர்கள் இறப்பின் விளிம்பைப் பார்க்க நேரும். ஐந்தாம் நாளை அவர்கள் ஆவலுடன் எதிர்பார்த்த வண்ணம் பயணம் செய்து கொண்டிருந்தனர். வழிகாட்டி கூறியபடி அன்று தண்ணீர் கிடைத்தாக வேண்டும். ஆனால் எங்குப் பார்த்தாலும் கானல் நீரைத் தவிர்த்து தாகம்

தணிக்கும் நீரைக் காணவில்லை. இறப்பு தங்களுக்கு அழைப்பு விடுத்து விட்டது என்று எல்லோருமே எண்ணிக் கொண்டு விட்டனர். ''எங்காவது ஏதாவது செடி கொடி தென்படுகிறதா பாருங்கள்!'' என்றான் வழிகாட்டி. ஆவல் நிறைந்த பார்வை பாலைப் பரப் பெங்கும் படர்ந்தது. ''அதோ ஒரு சிறு செடி!'' என்றார் ஒருவர். ஆவி வந்ததுபோல் உணர்ந்தனர் அத்தனை பேரும். ஏனெனில் அச்சிறு செடி அதனடியில் நீர் இருப்பதற்கு அறிகுறி. வேட்கை மிகுந்த நாவு கைகளுக்கு வேகம் அளித்தது. வீரர்கள் மண்ணை மள மளவெனத் தோண்டத் தொடங்கினார்கள். அப்பொழுது மண்ணின் மடி சுரந்தது. அமுதம் நிகர்த்த நீர் அதிலிருந்து குமிழியிட்டுக் கொண்டு கிளம்பியது. அதனை அள்ளி மாந்தி வீரர்கள் தம் வேட்கை தணித்துக் கொண்டனர். அவர்கள் இப்பொழுது தமாஸ்கஸிலிருந்து நூறு கல்களுக்குக் கிழக்கே இருந்தனர். வழியில் அவர்கள் வலியக் கிடைத்த வெற்றி களைத் தம் வலிமைக்குக் கிடைத்த வெற்றிகளாகக் கொள்ளாமல், வல்லவன் அல்லாஹ் தந்ததாய்க் கொண்டு, யர்முக் வந்து சேர்ந் தார்கள். அதே நாளில் உரோமத் தளபதி பாஹான், இருக்கும் படை போதாதென்று இன்னொரு படையுடன் வந்து சேர்ந்தான். அவன் படையில் கிறிஸ்தவ மத குருமார்கள் பலர் இருந்தனர். அவர்கள் தம் கைகளில் தங்கச் சிலுவைகளைத் தாங்கிக் கொண்டு வந்தார்கள். அவர்களின் வேலை 'மதத்திற்கு ஆபத்து வந்து விட்டது' என்னும் கூப்பாட்டை எழுப்பி, அதன் மூலம் அறிவை மடக்கி, வெறியைக் கிளப்பி விடுவதாகும்.

உரோமரிடம் இருந்த படை இப்பொழுது இரண்டரை இலட் சத்தை எட்டியது. ஆனால் அதில் ஆறில் ஒரு பங்கு படைதான் முஸ்லிம்களிடம் இருந்தது. உரோமர் படையை ஆறென்றால், முஸ்லிம் படையை ஓடை என்றுதான் கூற வேண்டும். ஆனால் ஓடை ஆற்றை ஓட ஓட விரட்டும் அற்புதம் விளைக்கத்தக்க கொள்கை முஸ்லிம்களிடமிருந்தது. அந்தக் கொள்கைக்கு முன் ஆவி ஒரு தூசு எனக் கருதக்கூடிய இதயம் இருந்தது. அந்த இதயத்தில் உருக்கை மிகைக்கும் உறுதி இருந்தது. அவர்கள் உலகில் இருப்பதை, இறப்பதை ஒன்றாகக் கருதக் கூடியவர்கள். போரில் வெல்வது, வீழ்வது இரண்டில் ஒன்றுதான் அவர்களுக்குத் தெரியும். புறமுது கிடுவது என்பது அவர்கள் மனத்தாலும் நினைத்துப் பாராதது. அத்தகைய காலித் (ரலி) அவர்களும், அவர்களின் வீரர்களும் களம் காண வந்து ஒரு மாதமாகியும் உரோமர் போரைத் துவக்க உளம் துணியாதது கண்டு பொறுமை இழக்கத் தொடங்கினர்.

இப்பொழுது முஸ்லிம்களிடமிருந்து சிறு படை தனித் தனித் தலைவர்களின் கீழ் நின்று போரிடத் தயாராகியது. 'தசன்னுத்' என்னும் இவ்விதப் போர் முறையை, அரபிகள் அறிந்தும், இருந்தனர். இது இந்தச் சந்தர்ப்பத்திற்கு உகந்ததல்ல என காலித் (ரலி) அவர்கள் கருதினர். எனவே அவர்கள் வீரர்களைப் பார்த்துப் பின் வருமாறு பேசினார்கள்; ''இது வரலாற்றில் வாழப்போகும் ஒரு முக்கியமான நாள். நாம் நம்முடைய சொந்த கௌரவம், பெருமை இவற்றை எல்லாம் பாராது, ஒரு நடவடிக்கையை எடுக்கவேண்டும். அதன் மூலம் நாம், பகைவர் நிலைமையைத் தமக்குச் சாதகமாக்கிக்கொள்ள முடியாமல் செய்ய வேண்டும். இன்று நாம் உரோமரை பின்வாங்க வைக்க வேண்டும். ஆனால் தனித் தனித் தலைவர்களின் கீழ் நின்று போரிடுவது நம் வலிமையை நாமே பிளந்து கொள்வதாகும். எனவே நீங்கள் சந்தர்ப்பத்திற்கு ஏற்ற வழியைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.''

இதைக் கேட்டு, ''உங்கள் கருத்து என்ன?'' என்று வினவப்பட்ட போது காலித் (ரலி) அவர்கள் கூறினர்: ''இந்தப் படையெடுப்புகள் எளிதானவை எனக் கலீபா கருதுவதாகத் தெரிகிறது. ஆனால் அவர்கள் நாம் சந்திக்க வேண்டிய நிலைமைகளை அறிவார்களானால், நிச்சயமாக ஒரே தளபதியின் கீழ் படை முழுவதையும் அணிவகுக்கத் தான் கூறுவார்கள். இப்பொழுது நான் நினைக்கிறேன், நம் படை யணிகள் அனைத்தையும் ஒரு தலைமைத் தளபதியின்கீழ் நிறுத்த வேண்டும் என்று. ஒரு நாளுக்கு ஓர் அமீர் அந்தப் பொறுப்பை எடுத்துக் கொள்ளட்டும். உங்களுக்கு மறுப்பு இல்லை என்றால், இன்று என்னிடம் அந்தப் பொறுப்பை ஒப்படைக்கலாம்.'' காலித் (ரலி) அவர்களின் இந்தக் கோரிக்கையை மற்றவர்கள் மகிழ்ச்சியுடன் ஏற்றனர். அதற்குக் காரணம் அவர்கள் அனைவரும் இஸ்லாத்தின் ஏற்றத்தைத் தம் மனதில் ஏற்றிருந்தவர்கள்.

இறுதியாக உரோமர் தம் படையணிகளை அணிவகுக்க ஆரம்பித்தனர். அதுகண்டு காலித் (ரலி) அவர்கள், ஆயிரம் வீரர் கொண்ட நாற்பது பகுதிகளாக முஸ்லிம் படையைப் பிரித்தனர். படையில் ஒருபகுதி அபூ உபைதா (ரலி) தலைமையில் நடுவில் நின்றது. பத்துப் பகுதிகளைக்கொண்ட அணி ஓர் பக்கமும், மற்றொரு பத்துப் பகுதிகளைக்கொண்ட அணி இன்னொரு பக்கமும் நிறுத்தப் பட்டன. ஓர் அணிக்கு அம்ர் பின் ஆஸ் (ரலி) அவர்களும், மற்றோர் அணிக்கு யஸீத் இப்னு அபூசுப்யான் (ரலி) அவர்களும் தலைமை தாங்கினர். ஓராயிரம் வீரர்களைக் கொண்ட ஒருபகுதி, காலித் (ரலி)

அவர்களின் புதல்வரான 18 வயது அப்துர் ரஹ்மானிடம் ஒப்படைக்கப் பட்டது. அபூதர்தா காரியாகவும், அபூசுப்யான் கஸ் ஆகவும் இருந்தனர். பத்ர் போருக்குப்பின் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் போர் தொடங்குமுன் திருமறையிலிருந்து சூரா அன்பாலை ஓதும்படி கூறியிருந்தனர். அதனைச் செய்வதே காரியின் கடமை. போரில் வீரர்கள் ஆர்வம் கொள்ளச் செய்வது கஸ்ஸின் வேலை. ஒவ்வொரு படைத் தொகுதிக்கும் சென்று அபூசுப்யான் கூறினார்: ''நீங்கள் அரேபியாவின் உதவியாளருக்குப் பண்டம் போலாவீர்கள், இஸ்லாத் தின் உதவியாளர் ஆவீர்கள். அவர்கள் உரோமின் உதவியாளருக்குப் பண்டம் போலாவார்கள். அவர்கள் அல்லாஹ்வை மறுப்பவருக்கு உதவியாளர் ஆவர். இறைவனே! இது உன்னுடைய மேலான நாட் களில் ஒரு நாள். உன் அடியாருக்கு உன் உதவியை அனுப்புவாயாக!''

நகீபாக நியமிக்கப்பட்டவர் பின்வருமாறு பிரார்த்தித்துக் கொண்டிருந்தார்; ''இறைவனே!உன் மார்க்கத்தைக் காக்க உன் படை அணிவகுத்து நிற்கிறது. நீ உன் அடியார்களுக்கு உதவி செய்வாயாக!''

இருதரப்புப் படைகளும் முடிவில் ஒன்றையொன்று நெருங்க ஆரம்பித்தன. அது மதகளிறு ஒன்று, மறி ஒன்றை நெருங்குவது போலிருந்தது. உருவத்தில் தான் முஸ்லிம்படை மறிபோல் சிறிதா யிருந்தது. ஆனால் உள்ளத்தில் அது அரிமாவைவிட அதிகமாக தென்றே கூற வேண்டும். இரு படைகளுக்கும் அளவில் இருந்த இந்த வேறுபாட்டைக் கண்ணால் கண்ட முஸ்லிம் ஒருவரால் இவ்வாறு கூறாமல் இருக்க இயலவில்லை. ''உரோமர் எவ்வளவு அதிகம் பேர், முஸ்லிம்கள் எவ்வளவு குறைந்த பேர்!''. அவர் கூறியது காதில் விழுந்த கணம் காலித் (ரலி) அவர்களின் நாவில் எழுந்த சொற்கள், ''இல்லை. முஸ்லிம்கள் எவ்வளவு அதிகம் பேர்! உரோமர் எவ்வளவு குறைந்த பேர்! நீர் சரியாக எண்ணிப் பாரும்! இறைவன் அருளால் அதன் அளவு வளரும். அவன் தன் முகத்தைத் திருப்பிக் கொண்டால் குறையும். ஒரு படையின் பலம், அளவை மட்டும் பொறுத்தல்ல. வெற்றி தோல்வியே அதன் பலத்தைத் தீர்மானிப்பவை. அல்லாஹ் அருளால் நாம் வெற்றி அடையப் போகிறோம். அதனால் நாம் தாம் அதிகம் பலம் உள்ளவர்கள்'' என்பவையே. இதன்பின் இஸ்லாத்தின் விதியைத் தீர்மானிக்கக் கூடிய அந்தப் போர் துரிதகதியுடன் தொடங்கியது. அப்பொழுது புரவி வீரர் ஒருவர் மதீனாவிலிருந்து விரைந்து வந்தார், காலித் அவர்களைக் கண்டார். அவர்களின் கையில் கடிதம் ஒன்றைத் திணித்தார். அதனைப் பிரித்துப் பார்த்ததும், காலித்

(ரலி) அவர்கள் அதிர்ச்சி அடைந்தனர். ஆயினும் அதனைச் சமாளித்துக் கொண்டு, அபூ உபைதா (ரலி) அவர்களை அழைத்தனர். அபூ உபைதா (ரலி) வந்ததும், அவர்களிடம் அதனைக் காட்ட அவர்களும் அதிர்ந்தனர். அதன்பின் அபூ உபைதா (ரலி) காலித் (ரலி) அவர்களைப் பார்த்து, ''என்ன செய்யலாம்?'' எனக் கேட்ட போது, காலித் (ரலி) அவர்கள் அறிவுமிக்க பதில் ஒன்றை அளித்தார்கள். ''இப்பொழுது நாம் கடிதத்தை வெளிப்படுத்தாதிருப்பது நலம் என நான் கருதுகிறேன். ஏனெனில் அதில் உள்ள செய்தி பல வதந்திகளுக்கு வழி கோலும். வீரர்கள் அதைரியமும், குழப்பமும் அடையலாம். அதனால் அதனை, அல்லாஹ் நமக்கு வெற்றியை அருளிய பின் வெளியிடுவோம்''. இதற்கு அபூ உபைதா (ரலி) அவர்கள் உடனே இணங்கினர்.

### உரோமத் தளபதியின் மனமாற்றம்

இதன்பின் போர் மும்முரமாக நடக்கப்போகும் போது, உரோமத் தளபதியான ஜார்ஜ் என்னும் ஜிர்ஜா, இஸ்லாமியத் தளபதியான காலித் (ரலி) அவர்களுடன் நேருக்கு நேர் நின்று போரிட்டு வென்று இஸ்லாமியப் படையை எளிதாய் அழிக்கலாம் என்று எண்ணினார். எனவே அவர் அஞ்சா நெஞ்சுடன் கள நடுவில் வந்து நின்று கொண்டு, ''நான் பேசி முடிக்கும் வரை எனக்கு எதிராய் வாளை நீங்கள் உயர்த்தக் கூடாது'' எனக் கோரினர். அவர் கோரிக்கை அக்கணமே ஏற்றுக் கொள்ளப்பட்டது. அவர் முன் அச்சம் என்பதை அறிந்தே இராத காலித் (ரலி) அவர்கள் வந்து நின்றனர். ''உம்முடன் நான் போரிடத் தொடங்கு முன் என் கேள்விகள் சிலவற்றிற்கு உம் பதிலை எதிர்ப்பார்க்கிறேன்'' என்றார் ஜிர்ஜா. அதற்குக் காலித் (ரலி) அவர்கள் இணக்கம் அளித் தனர். ''நான் கேட்பதற்கு உண்மையே பதிலாக இருக்க வேண்டும். ஏனெனில் சுதந்திர மனிதர்கள் பொய் சொல்ல மாட்டார்கள். ஏமாற்றும் பதில்களையும் எனக்கு அளிக்க வேண்டாம். ஏனெனில் உயர்ந்த மனிதர்கள் ஏமாற்ற மாட்டார்கள்'' என்றார் ஜிர்ஜா. ''நீர் விரும்புவதைக் கேட்கலாம். உண்மையே உமக்குப் பதிலாகக் கிடைக்கும்'' என்றனர் காலித் (ரலி) அவர்கள். ''உம்முடைய நபி இறைவனிடமிருந்து ஒரு வாளைப் பெற்று, அதனை உமக்குத் தந்ததாகவும், அது தான் உம்முடைய வெற்றிக்குக் காரணம் என்றும் கூறப்படுகிறதே, அது உண்மையா?'' என்ற ஜிர்ஜாவின் கேள்விக்குக் காலித் (ரலி) அவர்கள் அழுத்தமாக, ''இல்லை'' என்று பதில் அளித்தார்கள். ''அவ்வாறாயின் உமக்கு, 'இறைவனின் வாள்' என்னும் பெயர் எப்படி வந்தது?'' என்று ஜிர்ஜா கேட்டபோது காலித் (ரலி) அவர்கள் பின்வருமாறு

பதிலிறுத்தனர். ''எல்லாம் வல்ல இறைவன், அவன் தூதரான முகம்மது (ஸல்) அவர்களை எங்களிடையே அனுப்பினான். அவர்கள் எங்களுக்கு இஸ்லாத்தைப் போதித்தார்கள். ஆரம்பத்தில் நாங்கள் அனைவரும் அவர்களை விட்டு விலகியே நின்றோம். சிலர் தான் அவர்களை பின் தொடர்ந்தனர். பெரும்பாலோர் அவர்களை எதிர்த்து வந்தோம். இஸ்லாத்தைக் கடுமையாக எதிர்த்தவர்களில் நானும் ஒருவன். ஆனால், விரைவில் எங்களின் இதயங்களை இறைவன் மாற்றினான். அவனையே தலை தாழ்த்தி வணங்கவும், அவனுடைய நேரிய பாதையில் செல்லவும் வழிகாட்டினான். நான் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டதும், அல்லாஹ்வின் தூதர் அவர்கள், 'இறை வழியை நிராகரிபோருக்கு எதிராகப் போரிடும் இறைவனின் வாள்களில் நீர் ஒரு வாள்' என்றார்கள். அதன்படி நான் இப்பொழுது இறைவழியை நிராகரிப்பவருக்குக் கடும் பகைவனாய் இருக்கிறேன்''. காலித் அவர்களும் ஜிர்ஜாவும் இப்படிக் களநடுவில் நின்று பேசிக் கொண்டிருப்பதை, இரு தரப்பினரும் வியப்புடன் பார்த்துக் கொண்டு நின்றனர்.

காலித் (ரலி) அவர்கள் உரைப்பது உண்மை என உணர்ந்து கொண்ட, ஜிர்ஜா இஸ்லாத்தின் மூலக் கொள்கையை மொழியுமாறு வேண்டினார். அதனை காலித் (ரலி) அவர்கள் கூறக் கேட்ட ஜிர்ஜா, ''இதனை ஏற்றுக் கொள்ளும் மனிதனின் நிலை என்ன?'' என வினவினார். ''உயர்குடியில் பிறந்தவரும் சரி, தாழ்குடியில் பிறந்த வரும் சரி, முன்பே இஸ்லாத்தை ஏற்றவரும் சரி, பிறகே அதனைப் பின் பற்றியவரும் சரி, அல்லாஹ்வின் கட்டளைப்படி அனைவரும் ஒரே தகுதி உடையவர் ஆவர்'' என்றார்கள் காலித் (ரலி) அவர்கள். ''இன்று ஒருவர் இஸ்லாத்தை ஏற்றுக் கொள்வாராயின் அவர் நிலை எப்படி இருக்கும்?'' என ஜிர்ஜா கேட்டார். அதற்கு காலித் (ரலி), ''அவரும் மற்ற முஸ்லிம்களுடன் சம அந்தஸ்துப் பெறுவார், ஒரு விஷயத்தில் அவர் அதிகம் சிறப்புப் பெற்றவராயும் இருப்பார்'' என்றார்கள். ''அது எப்படி இயலும்?'' என்று ஜிர்ஜா கேட்டபோது, காலித் (ரலி) கூறினார்கள்: ''நாங்கள் இஸ்லாத்தை ஏற்ற போது, இறை வனின் தூதர் அவர்கள் உயிருடன் இருந்தார்கள். அவர்களின் ஆற்றலையும், அற்புத சாதனைகளையும் நாங்கள் காணும் பேறு பெற்றிருந்தோம். அத்தகு சூழ்நிலையில் நாங்கள் இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டதில் ஆச்சரியமில்லை. ஆனால் இதை எதையும் பார்க்காமல் அவர்களின் மார்க்கத்தில் நம்பிக்கை கொண்டு, அதனை ஏற்றுக்

கொண்டால், அந்த விஷயத்தில் நீர் சிறப்புடையவர் ஆவீர்''. இதன்பின் ஜிர்ஜா தம்மிடம் காலித் (ரலி) அவர்கள் உரைத்தவை அனைத்தும் உண்மை தான் என்று உறுதி பெற்றதும், தம் கேடயத்தைத் தூக்கி எறிந்தார். இஸ்லாத்தை தமக்கு எடுத்துக் கூறும்படிக் கோரினார். அவரை, காலித் (ரலி) அவர்கள் தம் கூடாரத்திற்கு அழைத்துச் சென்று, குளிக்கச் செய்து, இஸ்லாத்தை எடுத்துக் கூறினார்கள். அதன்பின் காலித் (ரலி) அவர்கள் தலைமை வகித்து நடத்திய தொழுகையில் ஜிர்ஜா கலந்து கொண்டார்.

இது, உரோமரின் ஆத்திரத்தை அதிகப் படுத்தியது. அவர்கள் முஸ்லிம்கள் மீது மூர்க்கத் தாக்குதல் தொடுத்தனர். இக்ரிமா (ரலி) அவர்களும், ஹாரித் (ரலி) அவர்களும் பகைவருக்குப் பதில் அடி கொடுத்தார்கள். இப்போது காலித் (ரலி) அவர்களும் உரோமத் தளபதியளாயிருந்த ஜிர்ஜாவும் கூடாரத்தைவிட்டு வெளியே வந்தனர். களத்தில் நிகழுவதைக் கண்ட காலித் (ரலி) அவர்கள், ''பகைவரின் ஊடுருவலுக்கு இடம் கொடாதீர்கள்! தளர்ந்து விடாதீர்கள்! முன்னேறுங்கள்!'' என முழக்கமிட்டனர். ஆயினும் இக்ரிமா (ரலி) அவர்களால், அலை அலையாய் வந்து மோதிய உரோமப் படையினருக்கு ஈடுகொடுக்க இயலவில்லை. அதனால் பகைவர் முஸ்லிம் அணியைப் பிளந்து ஊடுருவ ஆரம்பித்தனர். இந்நிலையைக் கண்ட பிறகும் உளம் தளராத இக்ரிமா (ரலி) அவர்கள், ''நான் அல்லாஹ்வின் தூதரையே எதிர்த்துப் போரிட்டவன். இந்த இறை மறுப்போருக்கா பின் வாங்குவேன்?'' எனக் கூறிவிட்டு, ''என்னிடம் மரண உடன் படிக்கை செய்து கொள்பவர் யார்?'' எனக் குரல் எழுப்பினார். தர்ரார் பின் அஸ்தர் அந்த அழைப்பை ஏற்று, 400 வீரர்களுடன் வந்து இறக்கும் வரைப் போரிடுவதாய்ப் பிரமாணம் செய்தார். அவ்விதமே அவர்கள் அனைவரும் இறுதிவரை தளராது போர் புரிந்து களத்தில் இறந்தனர். இஸ்லாமியப் படை இப்பொழுது உரோமப் படையைத் தாக்க ஆரம்பித்தது. உரோமர் அத்தாக்குதலைத் தாங்க இயலாமல் பின் வாங்கலாயினர். இதற்கிடையில் காலித் (ரலி) அவர்களும், கள நடுவில் வந்து பகைவரைத் தாக்கித் தள்ளினார்கள். காலையில் முஸ்லிம்களின் பரம விரோதியாயிருந்த ஜிர்ஜா, நண்பகலில் இஸ்லாமிய அணியில் நின்று போராடி, மாலையில் வீரமரணம் அடைந்து, இஸ்லாத்திற்காக உயிர் துறந்த உயர் தியாகிகளில் ஒருவராக ஆனார்.

நண்பகலில் முஸ்லிமான ஜிர்ஜா காட்டிய வீரம், உதயத்திலேயே இஸ்லாத்தை ஏற்ற முஸ்லிம் வீரர்களை ஆவேசம் கொள்ள வைத்தது. அவர்கள் அயராமல் நின்று, அல்லாஹ்வுக்காகப் போரிட்டார்கள். அவர்களின் பெருவீரம் பார்த்து, களம் பல கண்ட உரோமரே அதிசயித்தனர். அன்று பொழுது சாயும் போது, உரோமர் அணியும் சாயத் தொடங்கியது. பகைவர் பக்கம் குதிரைகள் குறைவதைக் கவனித்த காலித் (ரலி) அவர்கள் நடு அணியிலிருந்து வீரர்களை அழைத்துச் சென்று, உரோமரின் காலாட் படையையும், குதிரைப் படையையும் துண்டித்து விட்டார்கள். இதனால் உரோமரின் குதிரைப் படை முஸ்லிம்களின் தாக்குதலைத் தாங்க இயலாமல் ஓட ஆரம்பித்தது. அதன்பின் காலித் (ரலி) அவர்கள் காலாட் படை மீது காட்டாற்று வெள்ளம் போல் விழந்தார்கள். இந்தப் போர் இரவு முழுவதும் நடந்தது. ஏராளமான முஸ்லிம்கள் களத்தில் இறந்தது கண்டும், காலித் (ரலி) அவர்களின் மனத்தில் கலக்கம் எழவில்லை. ''இறைவன் பாதையில் நான் போர் புரிகிறேன். அது என் கடமை. வெற்றி அருள வேண்டியது அவன் பொறுப்பு'' என்று அவர்கள் கூறினார்கள். 'பகலிலேயே போரிட முடியாதபோது, இரவில் என்ன செய்ய இயலும்?' எனக் கருதி, உரோமர், நிற்பதைவிட ஓடுவதே உகந்தது எனத் தீர்மானித்தார்கள். கடல் ஒன்று கால் பெற்று நடந்தது போல், காலையில் வந்த அந்தப் படைக்கடல், உடைப்பெடுத்துக் கொண்ட ஊருணிபோல் ஓட ஆரம்பித்தது. உரோமரில் இறந்தவர் மட்டும் ஒரு நூறாயிரம் பேர் ஆவர். உள்ளத்தைத் துடிக்க வைக்கும் அந்தக் காட்சியைக் கண்டதும், உரோமத் தளபதிகள் அப்படியே உட்கார்ந்துவிட்டனர். தம் தலைமையை நம்பி வந்த அந்த வீரர்களுக்கு நேர்ந்த கதி, தமக்கும் ஏற்படட்டும் எனத் தம் முகங்களையே தம் கை கொண்டு மூடிக்கொண்டனர். களம்விட்டுக் கால் கிளப்பி ஓடிய உரோம வீரர்கள், பதுங்குவதற்காகப் பாதுகாப்பிடங்களைத் தேடத் தொடங்கினார்கள். ஆனால் அவர்களை, முஸ்லிம்கள் எங்கும் விடுவதாயில்லை. ஏனெனில் பதுங்கியிருக்கும் அவர்களே, பாயும் புலிகளாக ஆக, அதிக நேரம் ஆகாது என்பதை முஸ்லிம்கள் அறிவர். முன்புறம் முஸ்லிம்கள். பின்புறம் பெரும் மலை, உயிர் தப்பி ஓட ஒரு வழியும் தெரியாமல் விழி பிதுங்கியது உரோம வீரர்களுக்கு. இந் நிலையில் அவர்களை முஸ்லிம்களால் எளிதாய் அழிக்க இயன்றது.

ஒருபகல், ஓர் இரவிற்குள் உலக வரலாற்றில் இடம் பெறப் போகும் இந்தப் போர் நடந்து முடிந்தது. அப்பொழுது இறைவனைத்

தொழும்படி விடுக்கப்பட்ட அதான் என்னும் அழைப்பொலி, இருள் வானைக் கிழித்துக்கொண்டு கிளம்பியது. முஸ்லிம்கள் தமக்கு வெற்றி அளித்த இறைவனுக்கு நன்றி செலுத்தத் தம் நெற்றியைத் தரையில் பதித்தார்கள். அவர்கள் நாவுகள் இறைவனை நெஞ்சாரப் புகழ்ந்தன. ஆனால், முஸ்லிம்கள் அதிக விலை கொடுத்துத் தான் இந்த வெற்றியைப் பெற நேர்ந்தது. அவர்களில் இறந்தவர் மூவாயிரம் பேர் ஆகும். ஆனால் அவர்கள் பாவாயிரம் பாடிப் புகழத்தக்கவிதம், வீரப் போராடி மாறா இன்ப மறு உலகடைந்தவர்கள். அந்தப் பேற்றை அடையப்போகும் இருவர் அடுகளத்தில் குற்றுயிராய்க் கிடப்பதை புலர் கதிர் ஒளியில் காலித் (ரலி) அவர்கள் பார்த்தனர். பொல பொலவென அவர்களின் கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தது. அவ்விருவரின் தலையையும் காலித் (ரலி) அவர்கள் தம் மடிமீது தூக்கி வைத்துக் கொண்டனர். முகங்களில் படிந்திருந்த மண்ணை அகற்றிய பின், அவர்கள் அவ்விருவருக்கும் கொஞ்சம் தண்ணீர் அருந்தக் கொடுத்தனர். சிறிது நேரத்தில் அவ்விருவரின் உயிரும் பிரிந்தது. அவர்கள் தாம் இக்ரிமா (ரலி) அவர்களும், அவர் மகனார் அம்ரு (ரலி) அவர் களும் ஆவர் . இந்தப் போரில் ஒரு விசேஷம் பெண்களின் அணி களும் அதில் பணியாற்றியதாகும். அவற்றில் ஒன்று அபூசுப்யானின் மகள் ஜுவைரியாவின் தலைமையில் இயங்கியது.

இந்தப் போர் தொடங்குமுன் முஸ்லிம் முகாம் வந்து உரோம ஒற்றன் ஒருவன் உளவறிந்து சென்றான். அவன் ஒற்று இலக்கணம் ஒழுங்காகக் கற்றவன். ஆதலால், பகைவரின் பலவீனத்தை மட்டும் பகராமல், பலத்தையும் கூறினான். ''அவர்கள் (முஸ்லிம்கள்) இரவில் துறவிகளாய் இருக்கின்றனர். பகலில் புரவி வீரர்களாய் இருக்கின் றனர். உண்மையைக் காப்பதிலும், அதனை நிலை நிறுத்துவதிலும், அவர்கள் எவ்வளவு உறுதி உள்ளவர்களாய் இருக்கின்றனர் என்றால், அவர்கள் தம் அரசரின் புதல்வன் கையை வெட்டுகின்றனர், அவன் திருடினால்; அவனைக் கல்லால் அடிக்கின்றனர், அவன் கற்பழித் தால். ''யர் முக்கில் மட்டுமல்ல, இதற்கு முன்பு நடந்த போர்களிலும், நடக்கப்போகும் போர்களிலும் முஸ்லிம்களுக்கு வெற்றி ஈட்டிக் கொடுத்தது அவர்களிடமிருந்த இந்த இயல்பு தான். அரபு மக்கள் செய்த ஆகூழின் பயனாய்க் கிடைத்த அரிய செல்வம் அது. அதைத் தான் அழிக்க எழுந்தன அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இறந்த பின் ஏற்பட்ட அத்தனை குழப்பங்களும், உரோம, பாரசிகப் பேரரசுகள் தொடங்கிய அத்தனை போர்களும். அரிதாய்க் கிடைத்த செல்வத்தை

இழக்க மனமில்லாமல் தான் கலீபா அவர்கள், அந்தக் கலகங்களையும், இந்தப் பேரரசுகளையும் அடக்குவதில் ஆத்திரம் கொண்டார்கள். அவை கேட்ட அதிக விலையைக் கொடுக்கவும் அவர்கள் கொஞ்சமும் தயங்கவில்லை.

**சீர்திருத்தங்கள்**

இவ்விதம் கலீபா அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இறப்பிற்குப் பிறகு எழுந்த குழப்பங்களை அடக்கிவிட்டு, எல்லையிலிருந்த பேரரசுகளின் அபாயங்களையும் ஓரளவு ஒடுக்கினார்கள். இதற்கிடையில் அவர்கள் ஆட்சி இயந்திரமும் நின்று விடாமல் முறையாக இயங்கிக் கொண்டிருக்கச் செய்தார்கள். அவசியமான சீர்திருத்தங்களையும் அவர்கள் செய்து கொண்டிருந்தார்கள். நடுவண் ஆட்சி என்பதையே இதுவரை அரேபியா அறிந்ததில்லை. வன்மை மிக்க நடுவண் ஆட்சிக்கு அடிக்காலிட்டவர்கள் அவர்கள் தாம். நிர்வாக வசதிக்காக அவர்கள் அரபு அவனியைப் பத்து மாநிலங்களாகப் பிரித்தார்கள். அவை ஒவ்வொன்றிற்கும் ஆமில்கள் என்னும் ஆளுநர்களை நியமித்தார்கள். ஆமில்களே வரி வசூலிப்பவர்களாயும் இருந்தனர். ஆனால் நீதி நிர்வாகம் அவர்களிடம் ஒப்படைக்கப்படவில்லை.

ஒவ்வொரு மாநிலத்திற்கும் வழக்குகளை விசாரித்து நீதி வழங்க காஜிகள் நியமிக்கப்பட்டனர். ஆனால், முஸ்லிம்களுக்கிடையில் சகோதரப் பாசமும் பற்றும் இருந்ததால், அவர்களுக்கிடையில் சண்டை சச்சரவுகள் ஏற்படவில்லை. அப்படி ஏற்பட்டவையும் காஜிகளிடம் வரக்கூடிய அளவு வலுக்கவில்லை. இதனால் காஜிகள், வழக்குகள் இல்லாமலேயே காலத்தைக் கழிக்க நேர்ந்தது. காஜியாக நியமிக்கப்பட்டிருந்த உமர் (ரலி) அவர்களிடம் ஓர் ஆண்டு முழுவதும் ஒரு வழக்குக் கூட வரவில்லை.

இதற்கு முன் பொதுநிதி என்று அரேபியாவில் ஒன்று இருந்ததில்லை. அப்போதைக்கப்போது நிதி திரட்டிக்கொள்வதே அங்கு வழக்கமாய் இருந்து வந்தது. போர்களுக்கு அண்ணல் நபி (ஸல்) அவர்கள், அப்போதைக்கப்போது தான் நிதி திரட்டிக் கொள்வர். ஆனால் இப்பொழுது அரசு ஒன்று ஏற்பட்டு, அதற்குச் செலவுகளும் ஆக ஆரம்பித்தன. எனவே கலீபா அவர்கள் அரசிற்கு முறையான வரி ஒன்று வேண்டும் என்பதை உணர்ந்தனர்; அதனை அளிக்காதவர்கள் மீது போர் தொடுக்கவும் தயாராயினர். வரிகள் மூலம் வரும் பொருள்

களில் மக்களுக்குப் பிரித்துக் கொடுத்தது போக, அரசின் பங்காக எஞ்சுவதைக் கலீபா அவர்கள் பொது நிதியில் சேர்த்தனர். அதற்கு ஒரு கட்டடம் தேவைப்பட்டது. அது தம் கண்பார்வையில் இருக்கிறாற் போல் ஒரு கட்டடத்தைக் கலீபா அவர்கள் ஏற்பாடு செய்தார்கள். ஆனால் அதற்குக் காவலர் கிடையாது. ''காவலர் ஒருவர் போட வேண்டும்'' என்று கூறப்பட்டபோது, ''பூட்டு ஒன்றே போதும் '' என்று அவர்கள் கூறினார்கள். சுன்ஹிலிருந்த வீட்டைவிட்டு, மதீனா விலிருந்த வீட்டிற்கு அவர்கள் வந்தபோது, இந்தக் கட்டடமும் மாற்றிக்கொள்ளப்பட்டது.

பொதுநிதிக் கட்டடத்திற்குக் காவலர் வேண்டியதில்லை, பூட்டு ஒன்றே போதும் எனக் கலீபா கூறியதற்குக் காரணம், மக்கள் நல்லவர் களாய் இருந்தது மட்டுமல்ல; அதில் பெரும்பாலும் பொருள்களே இல்லாதிருந்ததுமாகும். அவர்கள் இறந்தபின் அதை உமர் (ரலி) அவர்கள் திறந்து பார்த்தபோது அதில் ஒரே ஒரு நாணயமட்டும்தான் இருந்தது. அதுகண்டு ஆச்சரியப்பட்டு அவர்கள் உரைத்தனர் ''அல்லாஹ் அபூபக்ருக்கு அருள் புரியட்டும்!'' என்று. போரில் கிடைக்கும் பொருள்கள் வந்து சேர்ந்ததும், அவை வந்து சேர்ந்த மாலையிலோ, அடுத்த நாள் காலையிலோ, மக்களுக்குப் பகிர்ந் தளிக்கப்பட்டுவிடும். அதில் ஆண்,பெண், ஏழை, செல்வர், அடிமை, ஆண்டான் என்னும் வேறுபாடே கலீபா அவர்கள் காட்டுவதில்லை. துவக்கத்தில் முஸ்லிமானவர்களுக்குத் தனிச் சலுகை அளிக்க வேண்டும் எனக் கோரப்பட்டபோது, அதனை ஏற்கக் கலீபா கண்டிப் புடன் மறுத்து விட்டனர்.

கடமைகளுக்கு ஏற்ற மனிதர்களை கண்டுபிடிப்பதில் கலீபா அவர்களுக்குத் தனித் திறமை இருந்தது. அந்தத் திறமையில் முதன் மையானது அண்ணல் நபி (ஸல்) அவர்களால் நியமிக்கப் பட்டவர் களை அகற்றாததாகும். அவர்கள், தமக்கு அரசியல், மத விஷயங் களில் ஆலோசனை கூறச் சிலரைத் தேர்ந்தெடுத்து வைத்திருந்தனர். அவர்கள் அறிவு மிக்க மேலவர்கள், ஆன்ற ஒழுக்கம் அமைந்தவர்கள். அவர்களில் முக்கியமானவர்கள் உமர் (ரலி), அலீ (ரலி), உதுமான் (ரலி), ஜைத் பின் தாபித் (ரலி), அபூ உபைதா (ரலி), அப்துர் ரஹ்மான இப்னு அவ்ஃப் (ரலி), மு ஆத் பின் ஜபல் (ரலி) ஆகியோர் ஆவர். உமர் (ரலி) அவர்கள் காஜியாகவும், அபூஉபைதா (ரலி) பொது நிதிக் காப்பாளராகவும், ஜைத் பின்தாபித் (ரலி), அலீ (ரலி) ஆகியோர் கடிதங்கள் எழுதுவோராகவும், உதுமான் (ரலி) அவர்கள் அரசாங்கக்

கட்டளைகள் வரைபவராகவும் பணிபுரிந்தனர். இவர்களைவிட, இந்தப் பொறுப்புக்களுக்குத் தகுந்தவர்களைக் காண்பது அரிதாகும். இவர்கள், தாம் புரியும் கடமைகளுக்கு எவ்விதச் சம்பளமும் பெற்றுக் கொள்ள விரும்பவில்லை. அல்லாஹ்வுக்காகத் தாம் புரியும் பணிகளுக்கு ஊதியம் பெறுவது தம் தகுதிக்குத் தாழ்வானது என்று இவர்கள் கருதினார்கள்.

அதிகாரிகளைக் கடமை புரிய வெளி மாநிலங்களுக்கு அனுப்பும் போது, கலீபா அவர்கள் செய்த உபதேசங்கள், அவர்கள் ஆட்சி எவ்விதம் அமைந்திருக்க வேண்டும் என எண்ணினார்கள் என்பதற்கு எடுத்துக்காட்டாகும். கவியாக்கும் திறன் கைவரப் பெற்றிருந்ததால், கலீபா அவர்கள் ஆழமான கருத்துக்களையும் அழகான சொற்களில் அமைத்தார்கள். அம்ர் இப்னு ஆஸ் (ரலி) அவர்களையும், வலீத் பின் உக்பா (ரலி) அவர்களையும் வழி அனுப்பும் போது, அவர்கள் கூறினார்கள்: ''உள்ளும், புறமும் உங்களுக்கு இறையச்சம் இருக்க வேண்டும். உண்மையாகவே இறைவன் தனக்கு அஞ்சுபவர்களை மன்னிக்கிறான். அவர்கள் செய்யும் நன்மைகளை இரட்டிப் பாக்குகிறான். நீங்கள் செல்லும் பாதையில் கவனமின்மை கூடாது. சோம்பல், மறதி ஆகியவை உங்களை அணுக அனுமதிக்க வேண்டாம்!''

காலித் இப்னு வலீத் (ரலி) அவர்களை வழி அனுப்பும் போது அவர்கள் புரிந்த போதனை இது: ''பெருமையை விட்டு ஓட முயலும்! பெருமை உம்மைத் தொடரும். இறப்பைத் தேடி ஓடும்! உமக்கு வாழ்க்கை வழங்கப்படும்''.

யஸீத் பின் அபூ சுப்யான் (ரலி) அவர்களை ஆளுநராய் அனுப்பும் போது, அவர்கள் கூறிய அறிவுரை இது. ''யஸீதே! உமக்குச் சிரியாவில் உறவினர்கள் இருப்பர். அவர்களுக்கு ஒருக்கால் நீர் உதவி செய்யலாம். இந்த விஷயத்தில் தான் நான் என் அதிகாரிகளுக்குப் பயப்படுகிறேன். அல்லாஹ்வின் தூதர் அவர்கள், 'ஒரு முஸ்லிம் அதிகாரி தம் உறவினர்களை, அவர்கள் தகுதியற்றவர்களாய் இருக்கும் போது, (அவர்களைப்) பெரிய பதவிகளில் நியமிப்பாரானால், அல்லாஹ்வால் அவர் சபிக்கப்படுவார். அல்லாஹ், அதற்காக அவர் செய்யும் எந்த மன்னிப்புக் கோரிக்கையையும் ஏற்றுக் கொள்ள மாட்டான். அவர் நரகில் நுழையும்வரை' என்று கூறியிருக் கின்றனர்''.

அல்லாஹ்வின் தூதர் அவர்களின் இந்த எச்சரிக்கை கலீபா அவர்களின் நெஞ்சைவிட்டும் நீங்கவே இல்லை. அதனால் அவர்கள் தம் ஆட்சியில் தம் உறவினர் எவருக்கும் அரசுப் பதவிகள் அளிக்கவே இல்லை.

முஆவியா (ரலி) அவர்களுக்குக் கலீபா செய்த அறிவுரை இது: ''இறையச்சத்தை மனத்தில் வைத்து நடந்து கொள்ளும்! கடந்து செல்லும் ஒவ்வொரு நாளும், உமக்கும், இம்மைக்கும் உள்ள தூரம் அதிகப்பட்டுக் கொண்டிருக்கிறது. கொஞ்சம், கொஞ்சமாய் நீர் மறுமையை நெருங்கிக் கொண்டிருக்கிறீர். உம் காலடியைப் பின்பற்று வதற்காகப் பலர் காத்திருக்கின்றனர். இது உமக்கு மட்டுமல்ல, எனக்கும் (பொருந்தும்). நாம் வகிக்கும் பதவி நிச்சயம் அழியக் கூடியது. என்றாவது ஒருநாள் நாம் அதை விட்டுப் பிரிந்து தான் ஆக வேண்டும். இனிமேல் நாம் அடையப் போவது, அது நல்லதாயினும் கெட்டதாயினும் நிரந்தரமானது. நல்லது என்றைக்கும் நல்லது தான். கெட்டது என்றைக்கும் கெட்டது தான்''.

இவ்விதம் அதிகாரிகளுக்கு அறிவுரைகள் கூறியதுடன், கலீபா அவர்கள் நின்றுவிடவில்லை. அவர்களை, அவர்கள் கண் காணிக்கவும் செய்தார்கள். உள்ளத்தைக் கண்காணிப்பதில் கஷ்டம் இருந்தாலும், உள்ளதைக் கண்காணிப்பதில் கஷ்டம் இருக்கவில்லை. அதிகாரிகள் பதவிகளுக்கு நியமனமாகிப் போகும்போது, அரசிடம் அவர்கள் தம் சொத்து விவரங்களை சமர்ப்பிக்கவும், அவர்களின் பதவிக் காலத்தில் அவர்களின் சொத்து அதிகரித்திருந்தால், அதிகப் படியாய் இருந்த அந்த சொத்துக்களைப் பறிமுதல் செய்து, போது நிதியில் சேர்க்கவும் கலீபா அவர்கள் ஏற்பாடு செய்தார்கள்.

அதிகாரிகள் எவ்வளவு பெரிய மனிதர்களாய் இருந்தாலும், அவர் களிடம் குறை காணின், அவர்களைக் கண்டிக்கக் கலீபா அவர்கள் அணுவளவும் தயங்கியதில்லை. அவர்கள் ஒருமுறை காலித் (ரலி) அவர்களுக்குக் கடிதம் எழுதினர். ''நீர் சுகம் அனுபவித்துக் கொண் டிருக்கிறீர். உம் கூடாரத்திற்கு அருகில் முஸ்லிம்களின் குருதி ஓடிக் கொண்டிருக்கிறது'' என்று

இவ்விதம் குறை கண்டு கலீபா அவர்கள் கண்டிக்கும் விதம் தளபதிகளோ, அதிகாரிகளோ பெரும்பாலும் நடந்து கொள்ள வில்லை. அதற்குக் காரணம் கலீபா அவர்கள் மீது அவர்கள் திறமை யின் மீதும் அவர்கள் கொண்டிருந்த நம்பிக்கை. ஒரு சமயம் அம்ர்

இப்னு ஆஸ் (ரலி) அவர்கள் சிரியாவுக்குச் செல்ல வேண்டும் எனக் கலீபா அவர்கள் விரும்பினர். அப்பொழுது அமர் இப்னு ஆஸ் (ரலி) அவர்கள் தைமாவுக்கும் செங்கடலுக்கும் இடையிலிருந்த பகுதியில் இருந்து கொண்டிருந்தனர். கலீபா அவர்கள் எழுதினர். ''நீர் இருக்கும் இடத்திலேயே இரும் அல்லது இந்த உலக வாழ்விலும், அந்த உலகை வாழ்விலும் உமக்கு நன்மையாக இருக்கும் காரியத்தைப் புரியும்!'' என்று. அதற்கு அமர் இப்னு ஆஸ் (ரலி) அவர்கள் இவ்விதம் பதில் எழுதினர். ''நான் இஸ்லாத்தின் அம்பறாத் தூணியிலுள்ள ஓர் அம்பு தான். அம்பை எய்தவர் தாங்கள். அம்பை எடுத்து எங்கு எய்ய வேண்டும் எனத் தாங்கள் விரும்புகிறீர்களோ, அங்கு எய்ய வேண் டியவர்கள் தாங்கள் தாம்''.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் காலத்திலும், கலீபா அவர்கள் காலத்திலும் இருந்த இஸ்லாமியப் படை, முறையான போர்ப் பயிற்சி அளிக்கப்படாததேயாகும். ஆபத்துகள் தாம் ஒருவரின் வீரத்தைக் கூர்மைப்படுத்துபவை அல்லவா? அறியாமைக் காலத்தில் உயிருக் கும், உடைமைகளுக்கும் ஆபத்துக்கள் அதிகமாக இருந்து கொண் டிருந்தன. அதனால் அரபிகளில் பெரும்பாலோர் ஓரளவு போர்ப் பயிற்சி பெற்றிருந்தனர். கலீபா அவர்கள் இஸ்லாமியப் படையைப் பல பிரிவுகளாகப் பிரித்து, ஒவ்வொன்றிற்கும் தனித் தனித் தலைவர்களை நியமித்தனர்.

போர்கள் அதிகம் புரிய வேண்டிய கட்டாய நிலை இருந்து கொண்டிருந்ததால், கலீபா அவர்கள் போர்க் கருவிகள் செய்வதிலும், தம் கவனத்தைச் செலுத்தினார்கள். அதற்கென அவர்கள் ஆட்சியில் ஒரு தொகை ஒதுக்கப்பட்டது. போருக்குப் போக வேண்டிய ஒட்ட கைகளும், குதிரைகளும் மேய்வதற்கென அகன்ற மேய்ச்சல் நிலங்களும் உண்டு பண்ணப்பட்டன.



# 5. மனிதர்

இந்த அற்புதங்களையெல்லாம் செய்த விந்தை மனிதர் எப்படியிருந்தார்கள் என அறிய விரும்புவது மனித இயற்கை. அவர்கள் ஓர் ஆஜானுபாகுவல்ல, அடக்கமான உடல் அமைப்புக் கொண்டவர்கள் தாம். அவர்கள் பெற்றிருந்ததும் பருத்த உடலையல்ல, மெலிந்த உடலைத்தான். அவர்களின் உடல் நிறம் கோதுமை; அவர்கள் உண்டது கோதுமை ரொட்டியை. பெரும் நெருக்கடி நிலைகளாலும் வளைக்க முடியாத நெஞ்சம் அவர்களுக்கு. ஆனால் அவர்களின் இடுப்பு சற்று வளைந்திருந்தது. அதனால் அவர்கள் சற்றுக் குனிந்து கொண்டு தான் நடப்பார்கள். இறைவன் மீதும் அவன் தூதர் மீதும் இருந்த நம்பிக்கை இறுகியது. ஆனால் இடுப்பைச் சுற்றிக் கட்டப்பட்டிருந்த ஆடை அடிக்கடி அவிழக் கூடியது. உண்மையில் உடம்பு என்னும் ஆடையை எப்பொழுது உதறுவோம் என அவர்களின் உயிருக்கிருந்த ஆவலை உணர்த்தத்தான், அது அப்படி அடிக்கடி அவிழ்ந்ததோ, என்னவோ?

அடக்கமிகுந்த அவர்களுக்கு இருந்தது ஒடுக்கமான முகம். ஆனால் அதில் இருந்த இரு கண்கள் அப்துல்லாஹ்வின் புதல்வரை, அல்லாஹ்வின் தூதர் எனக் கணக்கில் கண்டு கொண்ட கூர்மை உடையவை. ஒற்றுமையுடன் கடமை புரிந்த அவை, ஒன்றை விட்டு ஒன்று சற்று விலகியிருந்தன. கூரிய மூக்கு அறிவு அதிகம் இருப்பதைக் கூறுவது என்பர். அதுவும் அவர்களுக்கு அப்படித்தான் இருந்தது. அவர்களுக்குச் சற்றுச் சுருண்ட தலை மயிர் இருந்தது. ஆனால், அதன் கீழ் இருந்த மூளை சூழ்ச்சி அறியாததாகும். தலை மயிரும், தாடி மயிரும் அவர்களுக்கு வெள்ளையாய் இருந்தன. ஆனால் அவற்றிற்கு அவர்கள் மருதாணி வண்ணம் ஏற்றியிருந்தார்கள்.

குணத்தில் அவர்கள் உயர்ந்தவர்களாய் இருந்தனர். உடல் உயரத்திலும் அவர்கள் அப்படித்தான் இருந்தார்கள். ஆனால், உள்ளத்தில் அடக்கம் உள்ளவர்களாய் இருந்ததால், உயரம் அப்படி அதிகமானதாகத் தெரியாதபடி. அவர்களின் உடல் அமைப்பு இருந்தது. மென்மையான உள்ளம் உள்ளவர்களாய் இருந்த அவர்கள், மென்மையான உடல் உடையவர்களாயும் இருந்தனர். அவர்களின் நரம்புகள் உடலில் நன்றாகத் தெரியும் விதம் அமைந்திருந்தன. அல்லாஹ்வின் தூதர் சொல்லை அப்படியே பற்றி ஒழுகும் மனம் அவர்களுக்கு. ஆனால் அள்ளும் நீரை அப்படியே ஒழுக விட்டுவிடும் விரல்களை அவர்கள் பெற்றிருந்தார்கள். ஈபவர்க்கு இருப்பவை இத்தகைய விரல்கள் என்பர். அதனை எண்பிக்க அவர்களை விடச் சிறந்த ஆதாரம் தேடவேண்டியதே இல்லை. இளமை எழிலைக் கொல்லும் கூற்று என்று கூறுவர் முதுமையை. ஆனால் அவர்கள் விஷயத்தில் அது தோற்றது. முதிய வயதிலும் அவர்கள் அதிக அழகுள்ளவர்களாய் இருந்தார்கள். இறை தூதர் ஒருவருக்கு அடுத்தவராக இருந்த அவர்கள், உருவத்தில் இறைதூதர் ஒருவரை ஒத்தவராகவே இருந்தார்கள். ''இப்ராஹீம் (அலை) அவர்களைப் பார்க்க விரும்புபவர்கள் அபூபக்ரைப் பார்க்கட்டும்!'' என அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினர். அபூபக்ர் (ரலி) அவர்களுக்கும், இப்ராஹீம் (அலை) அவர்களுக்கும் உருவத்தில் மட்டும் இருக்கவில்லை இந்த ஒற்றுமை. இறைவன் தன் திருமறையில் இப்ராஹீம் (அலை) அவர்களை 'அதிகம் பெருமூச்செறியும் ஒருவர்' என்று குறிப்பிடு கிறான். இதே பெயரைக் கொண்டே அபூபக்ர் (ரலி) அவர்களை, அவர்களின் தோழர்கள் அழைத்தனர். ஆனால் சூபியாக்கள் அபூபக்ர் (ரலி) அவர்களை 'திம்னியத்குப்ரா' நிலைக்கு உயர்ந்தவர்கள் என உரைக்கின்றனர்.

உள்ளத்தில் மட்டும் எளிமையுள்ளவர்களாய் இருக்க வில்லை அவர்கள். உடையிலும் அப்படித்தான் இருந்தார்கள். இஸ்லாமிய அரசின் அரசர்க்கும் அதிகமான கலீபா ஆவார்கள் அவர்கள். ஆனால் அவர்கள் அணிந்திருந்தது, இரு வெளிறிய செந்நிறத் துண்டுகளைத் தாம். ஒன்று, அரைக்கு மேலிருந்த உடம்பை மறைத்தது. மற்றொன்று, அரைக்குக் கீழுள்ள ஆடையாய் இருந்தது. அவர்களை அவ்வுடையில் காண் பவர்கள், அரசருக்கும் அதிகமான கலீபா எனக் கருத மாட்டார்கள், உலகை உண்மையிலேயே துறந்துவிட்ட ஒருவர் என்றே எண்ணுவார்கள். இவ்வெளிய கோலத்தில் அவர்களை மதீனாவின்

தெருவில் கண்ட ஒருவர், ''ஏன் இப்படி உங்களை மாற்றிக் கொண்டு விட்டீர்கள்?'' என்று கேட்ட போது, ''அவசியமற்ற செயற்கைத் தன்மைகளிலிருந்து ஓர் இன்பமும் நான் அடையவில்லை'' என அவர்கள் பதிலிறுத்தனர். அவர்களைக் காண வந்த அரபுச் செல்வர்களும், கோத்திரத் தலைவர்களும் அவர்களின் எளிய உடையைப் பார்த்து அகல வாயைத் திறந்தனர். அந்தச் செல்வர்களும், தலைவர்களும் தம்மிடம் இருப்பதைப் பெருக்கிக் காட்டும் ஆடம்பர உடைகளை அணிந்து வந்தபோது, கலீபா இன்மையில் உழலும் ஏழை உடுத்தும் ஆடையையே அணிந்திருந்தனர். அவர்களைப் பார்த்தால், அவர்களையும் விட ஓர் ஏழை உலகில் இருக்க இயலாது என்றே எண்ணத் தோன்றும்.

அவர்களைப் பார்க்க வந்தவர்களும், அவர்களின் இவ்வெளிய கோலம் கண்டு தம்முடைய ஆடம்பர உடைகளைத் களைந்து எறிந்தனர்; ஆபரணாதிகளைக் கழற்றி எறிந்தனர். அவ்விதம் எறிந்தவர்களில் ஒருவர் துல்கலஃ.அவர் யமன் நாட்டை ஆண்ட அரச குலத்தைச் சேர்த்தவர். அவர் ஆட்படையுடனும்,ஆயிரம் அடிமைகளுடனும் மதீனா வந்தார். அப்பொழுது அவர் மணியால் ஆன முடியை அணிந்திருந்தார்; பொன்னால் ஆன உடையைப் புனைந்திருந்தார். அவர் மட்டு மல்லாமல், அவருடன் வந்த பலரும், அவ்வித ஆடம்பர உடைகளைத் தாம் அணிந்திருந்தனர். துல்கலஃ இஸ்லாமியக் கலீபா இருந்த கோலத்தைக் கண்டார். உடனே தம் ஆடம்பர உடைகளை அகற்றினார். அன்று முதல் எளிய உடையை அணியத் தொடங்கினார். ஒருநாள் அவர் தம் இடுப்பில் தோல் வாரைப் போட்டுக் கொண்டு, மதீனா தெருவில் செல்வதைக் கண்ட அவரின் உறவினர் ஒருவர், ''மாலிக்கே! என்ன உடை நீர் அணிந்திருப்பது? எங்களை ஏன் இப்படி அவமானப்படுத்துகிறீர். அரபிகள் மத்தியில் எங்களை இழிவு படுத்துகிறீர்?'' என்று அவரைப் பார்த்துக் கேட்டபோது, ''அறியாமைக் காலத்தில் இருந்த கர்வமிக்க இளவரசனைப் போலவே நான் இஸ்லாத்தில் இணைந்த பிறகும் இருக்கவேண்டும் என விரும்புகிறீரா? ஒருபோதும் முடியாது. அடக்கமில்லாமல், இறைவனுக்கு முற்றிலும் அடிபணிதலை, அதன் மூலம் அவன் பாராட்டை அடைய முடியாது'' என்று கூறிவிட்டு, மனத்திற்குள், 'உடம்பில் குளிப்பதற்கு முன் இருந்த சேறு, குளித்த பிறகும் குறையக் கூடாது எனக் கருதும் மூடர்' என எண்ணிக் கொண்டு நடந்து கொண்டிருந்தார் அவர்.

இந்த எளிய உடை கூட அபூபக்ர் (ரலி) அவர்களுக்குச் சில சமயங்களில் இல்லாமல் போய்விடுவதுண்டு. ஒரு சமயம் அவர்கள் உடம்பை மறைத்துக் கொள்ள உடையின்றி இருக்கிறார்கள் என்பதை அறிந்து, பாத்திமா (ரலி) அவர்கள், அவர்களுக்கு உடை ஒன்றை அனுப்பி வைக்கின்றனர். அதனை அணிந்து கொண்டு அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் சமூகம் வந்தபோது, ஜிப்ரயீல் (அலை) அவர்களும் வந்து விடுகின்றனர். அதில் ஓர் அதிசயம், அபூபக்ர் (ரலி) அவர்கள் என்ன உடை அணிந்தருந்தனரோ, அதே உடையில் ஜிப்ரயீல் (அலை) அவர்களும் இருந்தது. அதுபற்றி அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஜிப்ரயீல் (அலை) அவர்களிடம் கேட்டபோது ஜிப்ரயீல் (அலை) அவர்கள் ''தாம் மட்டுமல்ல, வானிலுள்ள அமரர்கள் அனைவரும் அபூபக்ரின் உடையில் தான் இருக்கின்றனர்'' என்றனர்.

இன்னொரு நாள் இப்படித்தான் அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் நெஞ்சுக்கு நேராகக் கிழிந்த ஒரு கம்பளிச் சட்டையை அணிந்து கொண்டு, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் சமூகம் அமர்ந்திருந்தனர். அப்பொழுது வந்த ஜிப்ரயீல் (அலை) அவர்கள், ''என்ன, அபூபக்ரை இந்தக் கோலத்தில் காண்கிறேன். அவர் உடம்பில் கிழிந்த சட்டை இருக்கிறது,அதுவும் நெஞ்சுக்கு நேராக் கிழிந்து இருக்கிறது'' என்றனர். அதுகேட்டு அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ''வெற்றிக்கு (மக்கா வெற்றிக்கு) முன்னரே, எனக்காக அவர் தம் பொருள் அனைத்தையும் செலவு செய்து விட்டார்'' என்றார்கள். அப்பொழுது ஜிப்ரயீல் (அலை) அவர்கள், ''அல்லாஹ் அவருக்கு 'சலாம்' கூறுகிறான். 'என்னைக் குறித்து நீர் திருப்தியாயிருக்கிறீரா அல்லது கோபமாயிருக்கிறீரா என்று கேளும்!' என்கிறான்'' என்றனர். அது அறிந்து அபூபக்ர் (ரலி) அவர்கள்,''என் இறைவன் மீது கோபமா? நான் என் இறைவன் மீது திருப்தியாயிருக்கிறேன்; நான்என் இறைவன் மீது திருப்தியாயிருக்கிறேன்; நான் என் இறைவன் மீது திருப்தியாயிருக்கிறேன்'' என்று மூன்று முறை கூறினார்கள். இதுதான் முதல் கலீபாவாக அவர்களைத் தேர்ந்தெடுக்க நபித் தோழர்களைத் தூண்டியது என அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்கள் அறிவிக்கின்றனர்.

அபூபக்ர் (ரலி) அவர்களின் உடையில் மட்டும் இருக்க வில்லை எளிமை. உணவிலும் அவர்கள் அப்படித்தான் இருந்தார்கள். பெரும்பாலும் அவர்கள் பசியுடன் தான் தம் காலத்தைக் கழித்தார்கள். சில சமயங்களில் அவர்கள் தொடர்ந்து இரண்டு, மூன்று நாட்கள்

பட்டினியாய் இருந்ததுண்டு. ஒரு சமயம் அவர்கள் சாப்பிடுவதில்லை என்று பிரமாணம் செய்தனர். ஆனால், அதில் (உணவுண்பதில்) பரக்கத் இருப்பதை அறிந்ததும், தம் பிரமாணத்தை முறித்து உணவுண்டனர். இறை வணக்கத்தின் இனிமையை, நிறைந்த வயிறு கெடுத்து விடுகிறது என்பதும் ஒரு காரணம் அவர்கள் தம் வயிற்றைக் காய வைத்ததற்கு. ''இஸ்லாத்தைத் தழுவியதிலிருந்து நான் வயிறு நிறைய உண்டதில்லை, என்னுடைய இறைவனை வணங்குவதில் இன்பம் காண வேண்டும் என்பதற்காக. இஸ்லாத்தைத் தழுவியதிலிருந்து நான் தாகம் தீரத் தண்ணீர் அருந்தியதில்லை, என்னுடைய இறைவனைச் சந்திக்க வேண்டும் என்பதற்காக'' என்று அவர்கள் கூறினர். இப்படிப் பசியுடன் இருப்பதை விரும்பிய அவர்களுக்கு, அவ்விதம் இருக்க வேண்டிய அவசியமும் வந்து விடுகிறது. அள்ளி அள்ளிக் கொடுத்ததால் அவர்கள் வறுமை வாயுள் தள்ளப்பட்டார்கள். அதனால் அவர்கள் சில சமயங்களில் ஆறு நாட்கள் வரை கூடப் பசியை ஆற வைக்க இயலாமல் தவித்திருக்கிறார்கள்.

ஒருநாள் நண்பகல் நேரம், வெய்யிலின் கடுமையில் கொடுமை கூடிக்கொண்டிருந்தது. அப்பொழுது அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் வீட்டைவிட்டு வெளியேறி, மஸ்ஜிதுந் நபவீக்கு வந்தார்கள். அதே சமயத்தில் அங்கு உமர் (ரலி) அவர்களும் வந்து சேர்ந்தார்கள். அவர்கள், அபூபக்ர் (ரலி) அவர்களைப் பார்த்து, ''கடுமையான வெய்யில் நேரத்தில் அங்கு வரக் காரணம் என்ன?'' என்று கேட்டனர். ''தாங்க முடியாத பசியின் காரணமாக'' என்று அபூபக்ர் (ரலி) அவர்கள் கூறினார்கள். அதைக் கேட்டு உமர் (ரலி) அவர்கள் ''அல்லாஹ் மீது ஆணையாக நானும் அதே காரணத்தினால் தான் வீட்டை விட்டு வெளியே வந்தேன்'' என்று கூறினர்.

இவ்விதம் இவர்கள் இருவரும் பேசிக் கொண்டிருக்கும் போது, அங்கு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் வந்து, ''இந்தக் கடும் வெய்யிலில் இருவரும் எங்கே வந்தீர்கள்? என்று கேட்டார்கள். ''பசியின் காரணமாக வந்தோம்'' என்று அவர்கள் இருவரும் பதில் கூற, ''அதே பசியின் நிர்ப்பந்தத்தின் காரணத்தால் தான் நானும் வெளியே வந்தேன்'' என்றார்கள் அவர்கள். இவ்வித நிலைகளில் அண்ணல் நபி (ஸல்) அவர்களுடன் சேர்ந்து, அபூபக்ர் (ரலி) அவர்கள், அபூஅய்யூப் அன்ஸாரி (ரலி) அவர்கள் வீட்டிற்கோ, அபுல் ஹைதம் இப்னு தைஹான் (ரலி) அவர்கள் இல்லத்திற்கோ சென்று உணவு கேட்டு உண்டதுண்டு.

இப்படி அடிக்கடி பட்டினி கிடக்க நேர்ந்தாலும், நேரான முறையில் ஈட்டப்பட்ட உணவையே அருந்த வேண்டும் என்பதில் அபூபக்ர் (ரலி) அவர்கள் அதிக அக்கறையுள்ளவர்களாய் இருந்தனர். அவர்களின் ஊழியர் ஒருவர், ஒரு நாள் அவர்களுக்குப் பாத்திரம் ஒன்றில் பால் கொண்டு வந்து கொடுத்தார். அதனை வாங்கி அவர்கள் அருந்தி முடித்ததும், அந்த ஊழியர் கேட்டார்,''நான் எதைக் கொண்டு வந்து கொடுத்தாலும், அதைப் பற்றி விசாரணை செய்வீர்களே; இந்தப் பாலைப் பற்றி மட்டும் ஏன் அப்படிக் கேட்கவில்லை?'' என்று. உடனே அவர்கள் ''என் பசியின் மிகுதியால் உம்மிடம் அதைப்பற்றி எதுவும் கேட்காமல் அருந்தி விட்டேன். அந்தப்பால் உமக்கு எப்படிக் கிடைத்தது?'' என்று கேட்டார்கள். ''அறியாமைக் காலத்தில் ஒரு சமூகத்தாருக்கு ஆரூடம் பார்த்துச் சொன்னேன். அதற்காக அவர்கள் கொடுத்தார்கள்'' என்று அவர் கூறியதுதான் தாமதம், அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் வாய்க்குள் விரலை விட்டு, அருந்திய பாலை வாந்தி எடுக்க முயன்றார்கள். அந்த முயற்சியில் அவர்களின் உயிரே போய் விடும் போலிருந்தது. இதனை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அறிந்ததும், அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களைச் சந்தித்து,''அல்லாஹ் உமக்கு அருள் புரிவானாக! உம்மைக் குறித்து அல்லாஹ் ஓர் ஆயத்தை அருளியுள்ளான்'' என்றனர். அதில் அவன், ''இன்னும் தன் இறைவனிடத்தில் நிற்பதைப் பயந்தவருக்கு இரண்டு சோலைகள் இருக்கின்றன'' *(55:46)* எனக் குறிப்பிட்டான். பாவம் செய்யும் போதோ, அதற்குப் பிறகோ அல்லாஹ்வை நினைந்து அஞ்சியவருக்கு ஈடேற்றம் உண்டு என்பதை இந்த வசனம் உறுதிப்படுத்துவதாகக் கூறப்படுகிறது

இன்னொரு சமயம் அவர்கள் தம் அடிமை கொண்டு வந்து கொடுத்த உணவில் ஒரு பிடியை எடுத்து உண் டார்கள்.அது ஹராமான உணவு என அறிந்ததும், அவர்கள் துடி துடித்துப் போய் விட்டார்கள். ''என்னை நீ கொன்றிருக்கக் கூடாதா?'' என அவர்கள் ஆத்திரத்துடன் கேட்டு விட்டு, அதனை வாந்தி எடுக்க முயன்றார்கள். தண்ணீரைக் குடித்து வாந்தி எடுத்தால் அது வந்துவிடும் எனக் கூறப்பட்டதும், அவ்விதம் அவர்கள் தண்ணீர் வாங்கி அருந்தி வாந்தி எடுக்க முயன்றார்கள். ''அல்லாஹ் உங்கள் மீது அருள்பாலிப்பானாக! உண்ட அந்த உணவைக் கக்க இப்படிக் கஷ்டப்பட்டு விட்டீர்களே'' என்று ஒருவர் கூறிய பொழுது,''என் உயிரோடு தான் அது வெளியேறும் என்றிருந்தாலும் கூட அதனை வெளியேற்றியே தீருவேன். 'ஹராம் என விலக்கப்பட்ட ஒரு பொருளை உண்டு உடல் வளர்வதைக்

காட்டிலும், நெருப்பைத் தின்பது நல்லதாகும்' என அல்லாஹ்வின் தூதர் அவர்கள் கூறியிருக்கின்றனர். எனவே என் உடலின் எந்தப் பகுதியும் அந்த விலக்கப்பட்ட உணவால் வளர்ந்து விடக் கூடாது என அஞ்சுகிறேன்'' என்று அவர்கள் கூறினார்கள். இயன்ற மட்டும் அதனை வாந்தி எடுத்து விட்டு அவர்கள் சொன்னார்கள், ''இறைவனே! என்னால் முடிந்தது இவ்வளவுதான். வாந்தியாகாமல் என் உடலில் தங்கிவிட்ட உணவின் தீமையிலிருந்தது உன்னிடம் அடைக்கலம் தேடுகிறேன். நரம்புகளில் தங்கிவிட்ட பகுதிக்கும் நீயே போதுமானவன்'' என்று. இந்த விஷயத்தை அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் ஒருவர் அறிவித்தபோது, அவர்களின் முகம் மலர்ந்தது. அவர்களின் நா மொழிந்தது, ''உங்களுக்குத் தெரியாதா? சித்தீக் இருக்கிறாரே அவர் வயிற்றுக்குள் நல்லதைத் தவிர்த்து, வேறு எதுவும் செல்லாது. அதற்கு அவர் அனுமதிக்கமாட்டார்'' என்று.

அவர்களின் உள்ளம், உடை, உணவில் இருந்த எளிமை, இல்லத்திலும் இருக்கத் தவறவில்லை, கலீபாவாகி ஆறு மாதங்கள் ஆன பிறகும் கூட, அவர்கள் மதீனாவிலிருந்த வீட்டிற்கு வரவில்லை. சுன்ஹில் இருந்த எளிய இல்லமே தமக்குப் போதுமானது என்று தான் அவர்கள் இருந்தார்கள். அந்த இல்லம் படுதாக்களால் ஆனதாகும். கடமைகள் அதிகரித்த போது தான், அவர்கள் சுன்ஹில் இருப்பதை விட, மதீனாவில் இருப்பது உகந்தது எனத் தீர்மானித்தனர். சுன்ஹில் தங்கியிருக்கும் போது, அவர்கள் இஷாத் தொழுகைகக்குப் பின் அங்கு சென்று தங்கியிருந்து விட்டு, இளங்காலையில் எழுந்து மதீனா வந்து விடுவார்கள். வெள்ளிக்கிழமை மட்டும் அவர்கள் தம் தாடிக்கு மருதாணியிட்டு, குளித்து, புதிய ஆடை அணிந்து ஜுமுஆத் தொழுகை நடத்த வருவார்கள். சுன்ஹுவுக்கும் மதீனாவுக்கும் இடையே இருந்த தொலைவைப் பெரும்பாலும் அவர்கள் நடந்தே தான் கடப்பார்கள்.

தம் வேலைகளை அவர்கள் தாமே செய்துகொள்வார்கள். கலீபாவாக ஆன பிறகும், அவர்கள் தம் ஆடுகளைத் தாமே மேய்ப்பதற்கு அழைத்துச் செல்வதுண்டு. தமக்குப் பிறர் உதவ முன் வந்தால், அதனை அவர்கள் ஏற்கமாட்டார்கள். ஒட்டகையில் சவாரி செய்யும் போது, மூக்கணாங்கயிறு கீழே விழுந்து விட்டால், ஒட்டகையை உட்காரச் செய்து தான் அதை எடுப்பார்கள். இதைப் பார்க்கும் மக்கள், ''எங்களுக்கு உத்தரவிட்டால், நாங்கள் எடுத்துத் தந்திருப்போமே'' என்று கூறினால், ''என் அன்பிற்குரிய ஹபீப், 'மனிதர்

களிடமிருந்து எதனையும் இரக்க வேண்டாம்' எனக் கூறியிருக் கின்றனர்'' என்பார்கள்.

**நாவடக்கம்**

இந்த அடக்கம் அவர்களின் குரலிலும் இருந்தது. இனிமையும், மென்மையும் பொருந்திய குரலைப் பெற்றிருந்தார்கள் அவர்கள். அது, கேட்போர் மனம் ஈர்க்கக் கூடியதாக இருந்தது. அறியாமைக் காலத்தில் குறைஷிகள் அதிகம் பயந்தது அவர்களின் குரலுக்குத்தான். அதனால் தான் குறைஷிகள், அவர்கள் தம் குரலை உயர்த்தி குர்ஆனை ஓதக்கூடாது என்றனர். குரலில் இருக்கும் இனிமையும், மென்மையும் பெரும்பாலாருக்குக் குரல் வளையுடன் நின்றுவிடும். ஆனால் அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு அவை, இதயத்திலும் இறங்கியிருந்தன. அவர்களின் பேச்சில் இனிமை ததும்பும், பக்தி பிரவகிக்கும். ஆர்வம் துளும்பும், அறிவு அதிகமாயிருக்கும். அவர்களின் சொற்றொடர் களைப் பொறுக்கு மணிகள் பொருத்தப்பட்ட அணிகலனுக்கு இணையாகக் கூறலாம். அவர்களின் சொற்பொழிவுகள் பேழை யிலிருந்து மணி உதிர்வதை ஒத்திருக்கும். கருத்தற்ற சொற்களையோ, பிறர் மனத்தை வருத்தும் வார்த்தைகளையோ அவர்களின் நாவு உதிர்த்ததில்லை. இறைவனின் பெயரை உச்சரிக்கும்போது, அவர்களுக்கு ஆவேசம் பிறக்கும். அது கேட்போர் மனத்தில் இறை யச்சத்தைப் பெருக்கும்.

இத்தகைய ஆற்றல் தம் நாவிற்கு இருந்ததால், அது பாதகமாய்ப் பயன்பட்டுவிடக் கூடாதென்பதில் அவர்கள் அதிகம் எச்சரிக்கை யுள்ளவர்களாய் இருந்தனர். அவர்கள் அவசியம் ஏற்படும்போது தான் பேசுவார்கள். அநாவசியப் பேச்சுப் பேசாதிருக்க, அவர்கள் தம் வாயில் கூழாங்கற்களைப் போட்டுக் கொண்டிருப்பதுண்டு. அவசியம் பேச வேண்டும் என உணரும்போது, அவர்கள் தம் வாயிலிருக்கும் கூழாங்கற்களைக் கீழே துப்பிவிடுவார்கள். முஸ்லிம்களில் அதிக நாவன்மை அமைந்திருந்தவர்கள் இருவர் . அவர்களில் ஒருவர் இவர்கள். மற்றொருவர் அலீ (ரலி) அவர்கள்.

நாவன்மைக்கு நகைச்சுவை, உணவில் உப்பின் அளவு இருப்பது அவசியம். அந்த இலக்கணத்திற்கு ஏற்றதாகவே அபூபக்ர் (ரலி) அவர்களின் பேச்சு இருந்தது. அண்ணலின் தோழர் ஒருவர் அவர் களிடம் வந்து, ''போரில் என் புரவி முன்னேயே போக மாட்டேன் என்கிறது, பின்னேயும் போக மாட்டேன் என்கிறது'' என்று கூறினார்.

''உம் குதிரை முனாபிக்கா (நயவஞ்சகனா)க இல்லை என்று கூறும்! முனாபிக் தான் முன்னேயும் போவான், பின்னேயும் போவான். ஒரே இடத்தில் நிற்க மாட்டான்'' என்றார்கள் அபூபக்ர் (ரலி) அவர்கள்.

அண்ணலின் இன்னொரு தோழர் ஒரு நாள், அவர்களிடம் வந்து, ''கிழவர் யார்?'' என்று கேட்டார். ''எவன் போர்க்களத்தில் தோற்று விடுவோமோ என எண்ணுகிறானோ, அவன் தான் கிழவன்'' என்றார்கள் அவர்கள். அதற்கு அவர் ஏதோ கூறினார். ''இறைவனுக்கு நன்றி செலுத்துகிறேன். அல்லாஹ்வின் தூதர் அவர்களை ஏற்றுக் கொள்பவரில் கிழவர்களும், இளைஞராகி விடுகின்றனர்'' என்றார்கள் அவர்கள். ''அவ்வாறாயின் நம்மில் யாரும் கிழவர் இல்லையா?'' என்று அவர் கேட்ட போது, இள நகையுடன் அபூபக்ர் (ரலி) அவர்கள், ''இல்லை, நம்மில் அபூபக்ரும் கிழவராக இல்லை'' என பதிலிறுத்தனர்.

ஒருநாள் அவர்கள் தம் நாவைப் பிடித்து இழுத்துத் தேய்த்துக் கொண்டிருப்பதைக் கண்ட உமர் (ரலி) அவர்கள், ''என்ன செய்து கொண்டிருக்கிறீர்கள்?'' என்று கேட்டனர். அதற்கு அவர்கள், ''இந்த நாவு பல காரியங்களில் என்னை வீழ்த்தியிருக்கிறது'' என்று பதிலிறுத் தனர். அவர்கள் தங்களின் நாவைப் பிடித்துக் கொண்டு, ''உன்னுடைய தகாத சொல்லின் காரணமாகத்தான், நாங்கள் அழிவில் விழுந்து விடுகிறோம்'' என்று கூறுவதும் வழக்கம். அது உண்மை தான் என்பதை இந்தச் சம்பவம் உணர்த்துகிறது. ஒரு நாள் பனீ தமீம் கோத்திரத்தைச் சேர்ந்த அகர் இப்னு ஹாபீஸ் என்பவர் அண்ணல் நபி (ஸல) அவர்களின் சமூகம் வந்தார். அப்பொழுது அங்கிருந்த அபூபக்ர் (ரலி) அவர்கள், ''அவரை பனீ தமீம்களின் தலைவராக்கலாம்'' என்று கூறினர். அதைக் கேட்ட உமர் (ரலி) அவர்கள், ''அவர் வேண்டாம், கைன்கா இப்னு மஃபத் இருக்கிறார்'' என்றார்கள். இது அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு ஆத்திரத்தை ஏற்படுத்தி விட்டது. ''எனக்கு எதிர்ப்பாகச் செய்ய வேண்டும் என்பது தான் உம் விருப்பம்'' என்று அவர்கள் சற்று உரத்த குரலில் கூறினார்கள். அதற்கு உமர் (ரலி) அவர்கள் ''உங்களுக்கு எதிர்ப்பாகச் செய்யவேண்டும் என்பது என் எண்ண மல்ல'' என்று பதிலிறுத்தனர். இந்த விஷயம் தடித்த குரலில் அண் ணல் நபி (ஸல்) அவர்களின் முன்னிலையில் வைத்துத் தர்க்கிக் கப்பட்ட அடுத்த கணமே, இறைவனிடமிருந்து செய்தி வந்துவிட்டது. அதில் அவன், ''விசுவாசிகளே! நபியுடைய குரலுக்கு மேலாக உங்கள் குரலை உயர்த்தாதீர்கள்!'' என எச்சரித்தான். அதை அறிந்ததும் அபூபக்ர்

(ரலி) அவர்கள் துடி துடித்துப் போய் விட்டார்கள். ஆத்திரத்தில் புரிந்த பிழை நினைந்து அவர்கள் அதிகம் வருந்தினார்கள். இதன்பின் அவர்கள் இரகசியம் பேசும் ஒருவர் போல் அன்றி உரத்துப் பேசுவ தில்லை என்னும் உறுதியை எடுத்துக் கொண்டதுடன், அவ்விதமே நடக்கவும் ஆரம்பித்தார்கள். உமர் (ரலி) அவர்களும் அதேவித உறுதியை அக்கணமே எடுத்துக் கொண்டனர். இதன்பின் அண்ணல் நபி (ஸல்) அவர்களுடன் பேசினால், நன்றாகக் கூறுமாறு மடக்கிக் கேட்காத வரை உமர் (ரலி) அவர்களுடைய பேச்சு உரத்து இருப்பதில்லை.

இந்த உறுதியை அபூபக்ர் (ரலி) அவர்கள் எடுக்குமுன் நிகழ்ந்தது இது: ஒரு நாள் அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் சமூகத்தில் அமர்ந்திருந்தனர். அப்பொழுது ஒருவன் வந்தான்; அவர்களை வாயில் வந்தபடி திட்ட ஆரம்பித்தான். அவர்களும் பொறுத்துப் பொறுத்துப் பார்த்தார்கள். ஆனால், அவர்களால் அதிக நேரத்திற்குத் தம் நாவிற்குக் கடிவாளம் இட இயலவில்லை. அவர்களும் அவனைக் திருப்பித் திட்டத் தொடங்கினார்கள். அடுத்த கணம் அங்கிருந்து, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பொருக்கென எழுந்து நடக்கலாயினர். அது கண்டு அதிர்ந்த அவர்கள் ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! பிழை ஏதும் செய்து விட்டேனா நான்?'' எனக் கேட்டனர். அதற்கு அவர்கள், ''நீர் வாய் மூடி இருந்தவரை உமக்காக ஓர் அமரர் பதில் கூறிக் கொண்டி ருந்தார். நீர் பதில் கூற ஆரம்பித்ததும், அவர் அகன்று விட்டார். அவர் இடத்திற்கு சைத்தான் வந்து விட்டான். அவனுடன் நானும் அமர்ந் திருக்க விரும்பவில்லை'' என்று பதில் கூறினர். அதைக் கேட்டதும் அபூபக்ர் (ரலி) அவர்கள், ''இனிமேல் இவ்விதம் செய்யமாட்டேன்'' என உறுதி மொழி பகர்ந்தனர்.

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் செயலும், சொல்லும் அபூபக்ர் (ரலி) அவர்களை எப்படி மாற்றின; அண்ணல் முன் எடுத்த உறுதி மொழியை, அவர்கள் எப்படிப் போற்றினர் என்பதற்கு ஆதாரம் இந்த நிகழ்ச்சி: ஒரு நாள் அவர்களை இப்படித்தான் ஒருவன் வந்து கண்ட படி திட்டினான். அதைப் பொறுமையோடு கேட்டுக் கொண்டிருந்து விட்டு அவனைப் பார்த்து அவர்கள் அமைதியாகக் கூறினார்கள். ''உனக்குத் தெரியாமல் என்னிடம் மறைந்து இன்னும் பல (குறைகள்) இருக்கின்றனவே'' என்று. அவர்கள் கலீபாவாக இருந்தபோது, அவர் களைப் பார்த்து ஒருவர் திட்டினார், ''நீர் என்ன ஆட்சி நடத்துகிறீர்? உம்மிடம் எத்தனையோ குறைகள் இருக்கின்றன! அவற்றையெல்லாம்

இறைவன் மறைத்து விட்டான். இல்லையேல்...'' என்று கூறி, அதற்கு மேல் எதுவும் சொல்லாமல் நிறுத்தினார் அவர். அது கேட்டு அபூபக்ர் (ரலி) அவர்கள் கோபப்படவில்லை. ஏனெனில் அவர்களின் உள்ளம் தம் குற்றத்தை ஆராய ஆரம்பித்துவிட்டது. குற்றம் கூறுபவர் மீது கோபம் கொள்வதை விட, அவர் ஏற்றும் குற்றம் தம்மிடம் இருக்கிறதா எனத் துருவிப் பார்த்து, அப்படி ஏதாவது இருக்குமாயின் அதனை எடுத்து எறிவது மேல் அல்லவா என அவர்கள் கருதினர்.

உண்மையில் அபூபக்ர் (ரலி) அவர்கள் தம்மை அறியாமல் சிறு பிழைகள் சில சமயம் செய்துவிடுவதும் உண்டு தான். தமக்கும், இவர்களுக்கும் ஏற்பட்ட தகராறு பற்றி ரபீஆ அஸ்லமி கூறுகிறார். ''எனக்கும் அபூபக்ருக்கும் ஒரு விஷயத்தில் தகராறு ஏற்பட்டது. அவர் என்னைப் பார்த்து ஒரு கடின சொல் பயன் படுத்திவிட்டார். அதனால் என் மனம் வேதனை அடைந்தது. அதை அறிந்ததும் அவர் என்னிடம், 'நான் உம்மைத் திட்டியதற்குப் பதிலாக நீரும் என்னைத் திட்டிவிடும்!'' என்றார். அவ்விதம் செய்ய நான் மறுத்து விட்டேன். அதுகண்டு அவர், 'நீர் என்னைத் திட்டாவிடில் இதுபற்றி நான் அல்லாஹ்வின் தூதரிடம் சென்று முறையிடுவேன்' என்று கூறினார். அப்பொழுதும் நான் அவரைத் திட்டவில்லை. அவர் அங்கிருந்து சென்று விட்டார். அதை அறிந்த பனீ அஸ்லம் கோத்திரத்தவர் சிலர் என்னிடம் வந்து, ''அவர், (அபூபக்ர்) உமக்கு அநியாயமும் செய்து விட்டு, அல்லாஹ்வின் தூதர் அவர்களிடம் உம்மைப் பற்றி முறையிடவும் செய்கிறாரே'' என்றனர். அப்பொழுது நான் அவ்விதம் கூறியவர்களிடம், ''அவர் அபூபக்ர் என்பதை அறியமாட்டீர்களா? அவர் மட்டும் என் மீது கோபம் கொண்டால், அல்லாஹ்வின் தூதர் அவர்களும் என் மீது கோபம் கொண்டு விடுவர். என்மீது அல்லாஹ்வின் தூதர் அவர்கள் கோபம் கொண்டுவிடின் அல்லாஹ்வும் என் மீது கோபம் கொண்டு விடுவான். அப்பொழுது ரபீஆவாகிய நான் நாசமடைந்து விடுவேன் என்பதில் ஐயமில்ல'' என்று கூறிவிட்டு அல்லாஹ்வின் தூதர் சமூகம் சென்றேன். அவர்களிடம் எனக்கும் அபூபக்ருக்கும் இடையே நிகழ்ந்தவற்றைக் கூறினேன். அப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ''ரபீ ஆவே! நீர் செய்வதே சரி. அவர் உம்மைத் திட்டியது போல் நீரும் அவரைத் திட்டுவது அறிவுடைமை ஆகாது. அதற்குப் பதிலாக, 'அபூபக்ரே! இறைவன் உம்மை மன்னிப்பானாக!' என்று கூறவேண்டும்'' என்றனர்.

இன்னொரு சமயம் அபூபக்ர் (ரலி) அவர்கள் ஒரு பொருளைச் சபித்து விடுகின்றனர். அதைக் கேட்ட அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ''அபூபக்ரே! நீர் சித்தீக்காய் இருந்து கொண்டு சபிக்கிறீரே. கஃபாவுடைய இறைவன் மீது ஆணையாக இது உமக்கு அழகல்லவே'' என்று மூன்று முறை கூறினர். இடிகள் மூன்று ஒன்றின் பின் ஒன்றாய்த் தம் நெஞ்சில் விழுந்தது போல் உணர்ந்து அபூபக்ர் (ரலி) அவர்கள், அந்தக் குற்றத்திற்கு இறைவனிடம் மன்னிப்புக் கேட்டதுடன், அதற்குக் கழுவாய் தேடுவதற்காக ஓர் அடிமையையும் விடுதலை செய்தனர்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இறுதி முறையாக ஹஜ்ஜுச் செய்யச் செல்லும் போது, அல்அர்ஜ் என்னும் இடத்தை அடைந்தனர். அப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்களின் சாமானகள் இருந்த ஒட்டகையைக் காணவில்லை. அது எங்கேயோ ஓடிப்போய்விட்டது. இது அபூபக்ர் (ரலி) அவர்களை ஆத்திரம் கொள்ள வைத்தது. ஒட்டகை ஓட்டியை அவர்கள் கண்டித்தார்கள். அவன் போலி சமாதானங்கள் கூறியதும், அவர்களின் ஆத்திரம் அதிகரித்தது. அவர்கள் அவனைத் தம் சாட்டையால் அடித்துவிட்டார்கள். இப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்கள், அபூபக்ர் (ரலி) அவர்களைக் கடியும் விதத்தில், ''இஹ்ராம் உடையில் இருக்கும் யாத்திரிகர் ஒருவரின் நடவடிக்கையைப் பாருங்கள்!'' என்று கூறினர்.

தம் சிறிய தாயார் புதல்வர் மிஸ்தஹ் ஆயிஷா (ரலி) அவர்கள் மீது கூறப்பட்ட அவதூறை உண்மை யென நம்பினார். அதற்காக, ''அவருக்கு ஒரு பொருளும் உதவியாகக் கொடுக்கமாட்டேன்'' எனப் பிரமாணம் செய்ததுடன், அவ்விதமே அவருக்கு அளித்து வந்த உதவியையும் நிறுத்தி விட்டார்கள் அபூபக்ர் (ரலி) அவர்கள். அப்பொழுது ''உங்களில் மேன்மையும், தாராளத்தன்மையும் உள்ளவர்கள் பிரமாணம் செய்ய வேண்டாம்!'' என்பது முதல், ''அல்லாஹ் உங்களை மன்னிப்பதை நீங்கள் விரும்பவில்லையா? நிச்சயமாக, அல்லாஹ் பிழை பொறுப்பவனாயும், கிருபை செய்கிறவனாயும் இருக்கிறான்'' என்பது வரையுள்ள இறைவசனம் இறங்கியது. அதில், ''தீமை செய்தவனுக்கு உதவி செய்யமாட்டோம் என நீங்கள் ஆணையிட்டுச் சொல்லவேண்டாம்'' என்றும், ''அல்லாஹ் உங்களை மன்னிப்பதை நீங்கள் விரும்பவில்லையா?'' என்றும் இறைவன் எச்சரித்தான். அதை அறிந்ததும் அபூபக்ர் (ரலி) அவர்கள், ''அல்லாஹ்வின் மீது ஆணையாக அதனை நான் விரும்புகிறேன்'' எனக் கூறியதுடன், தம்

உறவினருக்குக் கொடுத்து வந்த உதவியை இரட்டிப்பாக்கினார்கள். ''இதனை இனி நான் குறைக்கவே மாட்டேன்'' என்றும் கூறினார்கள்.

எவ்வளவோ எச்சரிக்கையாய் இருந்தும் அவர்களின் நாவு அவர்களைப் பலமுறை மோசம் செய்திருக்கிறது என்பதையும், ஒவ்வொரு முறையும் அதற்குத் தண்டனை அளித்து, அதிலிருந்து மீள அவர்கள் முயன்றிருக்கிறார்கள் என்பதையும், இந்தச் சம்பவங்கள் உணர்த்துகின்றன. ஆனால், அவர்களின் நாவு பொய் சொன்னதில்லை. அறியாமைக் காலத்திலும் கூட அது அந்தத் தவறைச் செய்ததில்லை. அவர்கள் மக்களைப் பார்த்துக் கூறுவது வழக்கம். ''பொய்யுரைக் காதீர்கள்! எச்சரிக்கிறேன். பெரும் பாவமும் அதுவும் ஒன்றுதான்'' என்று பிறரை இகழும் பிழையையும், அவர்களின் நாவு அறியாமைக் காலத்திலும், இஸ்லாத்திற்கு வந்த பிறகும் புரிந்ததில்லை. அவர்கள் அடிக்கடி கூறுவார்கள், ''முஸ்லிம்கள் ஒருவரை ஒருவர் இகழ்ந்து கொள்ளக் கூடாது. ஏனெனில், அற்பமானவராகக் கருதப்படும் ஒருவர் கூட, இறைவன் முன்னிலையில் உயர்ந்தவராக இருக்கக் கூடும்'' என்று.

## இறையன்பு

பிறர் இகழப்படுவதை, அதிலும் இறைவன் இகழப் படுவதை அவர்களால் பொறுத்துக் கொள்ள இயலுவதில்லை. ஒரு நாள் அவர்கள் மதீனாவின் யூதக்கிளையினரான பனூகைனுகாக்கள் வாழ்ந்த இடத்திற்குச் சென்று, அவர்களிடம் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கொடுத்த கடிதத்தைக் கொடுத்து, இஸ்லாத்தைப் பற்றி எடுத்துக் கூறினர். ''அல்லாஹ்வை அஞ்சிக் கொள்ளுங்கள்! இஸ்லாத்தைத் தழுவுங்கள்! முகம்மது (ஸல்) அவர்கள் அல்லாஹ்வின் தூதர் ஆவர் என, நீங்கள் நிச்சயமாக அறிந்திருக்கிறீர்கள். அவர்கள் அல்லாஹ் விடமிருந்து உங்களிடம் வந்திருக்கிறார்கள். உங்களிடம் உள்ள தவ்ராத்தில் அவர்களைப் பற்றிக் குறிப்பிட்டிருப்பதைத் தெரிந்திருக் கிறீர்கள். எனவே நீங்கள் அல்லாஹ்வை விசுவாசித்து, அவன் தூதரை உண்மைப்படுத்தி, அவனுக்கு அழகிய முறையில் கடன் கொடுப் பீர்களாக! அவன் உங்களைச் சுவனத்தில் நுழைய வைப்பான்; உங்களுக்கு நன்மையையும் இரட்டிப்பாக்குவேன்'' என்றதும், அங்கிருந்த பன்காஸ் என்னும் யூதன், ''அபூபக்ரே! நம்முடைய ரப்பு நம்முடைய பொருள்களைக் கடன் கேட்கிறான் என்று நினைக்கிறீரா?

அவ்விதமாயின் அல்லாஹ் ஏழையாகவும் நாம் தாம் செல்வர்களாயும் இருக்கிறோம். ஏழை தான் செல்வனிடம் கடன் கேட்பான்'' என்றான். இது அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு அடங்காச் சினத்தை உண்டு பண்ணியது? அவர்கள் அவனை அறைந்து விட்டார்கள். ''உங்களுக்கும், எங்களுக்கும் உடன் படிக்கை மட்டும் இல்லாதிருந்தால் உன் தலையைத் துண்டித்திருப்பேன்'' என்றும் கூறினார்கள்.

அறைபட்ட பன்காஸ் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் வந்து, ''அபூபக்ர் என்னை அடித்துவிட்டார்'' என்றான். தான் அல்லாஹ்வைக் குறித்து அவ்வாறு கூறவே இல்லை என்றும் சாதித்தான். வானிலுள்ள இறைவன் வாய் பொத்தி இருக்கிறான் என்னும் தைரியத்தில் தான், உலகில் உள்ள பலர் பொய்புகலப் பயப்படுவதில்லை. ஆனால் அல்லாஹ் இப்பொழுது வாயைத் திறந்தான். அபூபக்ர் (ரலி) அவர்களின்உதவிக்கு வந்தான்; அபூபக்ர் (ரலி) அவர்கள் கூறியதை உண்மைப்படுத்தினான். ''நிச்சயமாக அல்லாஹ் ஏழை நாங்கள் தான் சீமான்கள் என்று எவர்கள் கூறினார்களோ, அவர்களின் சொல்லை நிச்சயமாக அல்லாஹ் கேட்டுக் கொண்டான்'' என்னும் வசனத்தை அவன் வெளிப்படுத்தினான் *(3 :181)*

இஸ்லாத்திற்காக அபூபக்ர் (ரலி) அவர்கள் எத்தகைய அர்ப்பணத்தையும் செய்ய ஆயத்தமாகயிருந்தார்கள். அவர்களுக்கு இளமையிலிருந்தே அபுல் அஸத் என்னும் நண்பர் ஒருவர் இருந்து வந்தார். அவர், அவர்கள் இஸ்லாத்திற்காகத் தாம் ஈட்டிய பொருளை வாரிச் செலவிடுவது கண்டு வருந்தி, ''நீர் மிகவும் எச்சரிக்கையானவர், வாணிபத்தில் நன்கு தெளிந்தவர். நீர் ஒரு போதும் இழப்படைந்ததில்லை. ஆனால், இப்பொழுது உமக்கு ஏதோ அறிவீனம் ஏற்பட்டிருக்கிறது. அதனால் நீர் கைப் பொருளையெல்லாம் காலி செய்துவிட்டு, ஒரு தனி மனிதரை விசுவாசித்துக் கொண்டிருக்கிறீர். உம்முடைய பூர்வீக மார்க்கத்தை விட்டும் விலகியிருக்கிறீர். இதனால் நீர் இழப்பிற்குள்ளாகிவிட்டீர்'' என்று கூறினார். அந்த ஆலோசனையில் ஒரு பொட்டுக் கூடப் பொருட்படுத்தத் தக்கதல்ல என உதறித் தள்ளினார்கள் அபூபக்ர் (ரலி) அவர்கள்.

அற்பப் பொருளை மட்டும் அல்ல, அருமையுடன் பெற்று, பெருமையுடன் பேணி வளர்த்த திருமகனையே இஸ்லாத்திற்காகத் தீர்த்துக் கட்டத் துணிந்தவர்கள் அல்லவா அவர்கள்? அவர்களின் புதல்வர் அப்துர் ரஹ்மான் (ரலி) இஸ்லாத்தை ஏற்றுக்கொண்டபின்,

ஒரு நாள் தந்தையாருடன் உரையாடிக் கொண்டிருக்கும் போது கூறினர், ''தந்தையே! பத்ர் போரின் போது உங்களை வெட்டி வீழ்த்த அருமையான வாய்ப்பு ஒன்று எனக்குக் கிடைத்தது. ஆனால், நான் அதனைப் பயன்படுத்திக் கொள்ளவில்லை'' என்று அதைக் கூறி அவர்கள் வாய் மூடுமுன், ''அவ்விதச் சந்தர்ப்பம் மட்டும் எனக்குக் கிடைத்திருப்பின் உன்னை நான் விட்டிருக்க மாட்டேன்'' என்றார்கள் அபூபக்ர் (ரலி) அவர்கள்.

## இறை தூதர் மீது அன்பு

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மீது அபூபக்ர் (ரலி) அவர் களுக்கு அளவற்ற அன்பு இருந்தது. அதனால் அவர்கள் அண்ணல் மனத்தை மகிழ்விப்பதில் அக்கறை உள்ளவர்களாய் இருந்தனர். ஒரு நாள் அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் சமூகத்தில் அமர்ந்திருந் தனர். அலீ (ரலி) அவர்கள் வருவதைக் கண்டதும், அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு வலப்புறமாக அமர்ந்திருந்த அபூபக்ர் (ரலி) அவர்கள், தாம் நகர்ந்து கொண்டு அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கும் தமக்கும் இடையில் அலீ (ரலி) அவர்கள் அமர இடம் அளித்தனர். அலீ (ரலி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தவர். ஆதலால் அவர்களைக் கண்ணியப்படுத்துவது அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு மகிழ்வளிக்கும் என எண்ணியே இவ்விதம் செய்தனர். அவர்கள் எதிர்பார்த்தபடியே அவர்களின் தகைமை கண்டு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அதிகம் மகிழ்ந்தனர். ''அஹ்லுல் பள்லுக்கு இருக்கிற பள்ளை, அஹ்லுல் பள்ளைத் தவிர வேறு யாரும் அறிய மாட்டார்கள்'' என்றும் கூறினர். அஹ்லுல் பள்லு என்பதன் பொருள், ''சன்மார்க்கத்தின் கண்ணியவான்'' என்பதாகும்.

மக்காவில் இருக்கும் போது அண்ணல் நபி (ஸல்) அவர்களுடன் அபூபக்ர் (ரலி) அவர்கள் சில சமயம் இரவு முழுதும் கூடப் பேசிக் கொண்டு இருப்பதுண்டு. மதீனா வந்தபிறகு, அண்ணல் நபி (ஸல்) அவர்கள், அபூபக்ர் (ரலி) அவர்களின் வீட்டிற்கு இஷாத் தொழு கைக்குப் பின் வந்து முஸ்லிம்கள் சம்பந்தப்பட்ட பிரச்சினைகளைப் பற்றிப் பேசுவது வழக்கம். இப்படி ஒருவரை விட்டு ஒருவர் அதிக நேரம் பிரிந்து இராவிட்டாலும், அபூபக்ர் (ரலி) அவர்கள் சிலசமயம் இரவில் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் வீட்டு வாயிலில் வந்து படுத்துக் கொள்வார்கள். எவராவது இதைப் பார்த்து, ''உங்களுக்கு வீடு வாசல் கிடையாதா?'' என்று கேட்டால் ''எனக்கு வீடு

வாசல்களெல்லாம் இருக்கவே செய்கின்றன. விடிந்ததும் அல்லாஹ்வின் தூதர் முகம் பார்க்க வேண்டும் என்னும் ஆவலில் இங்குப் படுத்திருக்கிறேன்'' என்று அவர்கள் கூறுவார்கள்.

அண்ணல் நபி (ஸல்) அவர்களும் அபூபக்ர் (ரலி) அவர்கள் மீது அளவற்ற அன்பு வைத்திருந்தனர். இறைவன் மீது வைத்திருந்த அன்பிற்கு அடுத்தபடியாக ஒருவர் மீது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அன்பு வைத்திருந்தனர் என்றால், அது அபூபக்ர் (ரலி) அவர்கள் மீதுதான். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்களுடன் ஒரு குளத்தில் நீந்துவது வழக்கம். ஒரு நாள் அவர்கள் தம் தோழர்களைப் பார்த்து, 'நீங்கள் நீந்திச் சென்று உங்களின் தோழர்களைப் பிடித்துக் கொள்ளுங்கள்!'' என்றனர். அவ்விதமே பலரும் தம் மனத்திற்கு இயைந்த தோழர்களைப் பிடித்துக் கொண்டு, இரண்டு, இரண்டு பேராக இணைந்து நீந்தினர். அப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்கள், அபூபக்ர் (ரலி) அவர்கள் பக்கம் நீந்தி வந்து, அவர்களின் கழுத்தை கட்டிக்கொண்டு, ''நானும் என் தோழரும், நானும் என் தோழரும்'' என்று கூறினார்கள்.

ஒரு நாள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மக்களைப் பார்த்துக் கூறினர்: ''நான் சொன்னேனே மக்களே! ஐயமின்றி நான் உங்கள் அனைவருக்கும் அல்லாஹ்வால் அனுப்பப்பட்ட தூதனாவேன் என்று, 'நீர் பொய் சொல்கிறீர்' என்று சொன்னீர்கள். ஆனால் அபூபக்ரே, 'நீங்கள் உண்மையைச் சொல்கிறீர்கள்'' என்றனர்.

இன்னொரு நாள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களைப் பார்த்துப் பகர்ந்தனர். ''நீர் இம்மையிலும் மறுமையிலும் (எனக்குத்) தோழராய் இருப்பீர்.'' இதைக் கேட்டதும் அபூபக்ர் (ரலி) அவர்கள் அளவிறந்த மகிழ்ச்சி அடைந்தார்கள். அந்த மகிழ்ச்சியில் அவர்கள் பூமியில் விழுகிற வரைக்கும் குதித்தனர் என்றும், பூமியில் விழுகிற வரைக்கும் அசைந்தாடிக் குதித்தனர் என்றும் கூறப்படுகிறது.*

மற்றொரு நாள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களைப் பார்த்துப் புகன்றனர். ''என்னுடன் சேர்ந்து சுவர்க்கம் புகுபவர்களில் முதலாமவராக நீர் இல்லையா? (தவ்ர்) குகையில் என்

* இதை வைத்துத்தான் ஷாதுலியா தரீக்காவைச் சேர்ந்தவர்கள் திக்ரு செய்யும்போது, அசைந்தாடுவதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர் என்று சொல்லப்படுகிறது.

தோழராய் இருந்தது போலவே, ஹவ்லுல் கவ்தரிலும் நீர் என் தோழராய் இருப்பீர்.'' இதைக் கேட்டதும் அவர்கள் அளவற்ற ஆனந்தம் அடைந்தார்கள்.

இன்னொரு நாள் இரவு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தம் அருமை மனைவி ஆயிஷா (ரலி) அவர்களுடன் அமர்ந்திருந்தனர். அப்பொழுது கரும்பட்டில் வைத்துத் தைக்கப்பட்ட வைரக் கற்களைப் போல் இருள் வானில் கணக்கற்ற விண்மீன்கள் கண் சிமிட்டிக் கொண்டிருந்தன. அநாதி காலமாய்க் கவிஞர்களின் கற்பனைக்கு வேலை வைத்துக் கொண்டிருந்த அக் கவினுறு காட்சி, அன்று ஆயிஷா (ரலி) அவர்களின் அறிவிற்கு வேலை வைத்தது. விண் விதானப் பரப்பில் விரவிக் கிடந்த விண்மீன்களைப் பார்த்து, ''இந்த விண்மீன்களின் எண்ணிக்கை அளவு நன்மை செய்தவர் (எவரும்) உண்டா ?'' என ஆயிஷா (ரலி) அவர்கள், அண்ணல் நபி (ஸல்) அவர்களைப் பார்த்துக் கேட்டார்கள். உண்மையில் இது சங்கடமான கேள்விதான். ஆயினும், அது அண்ணல் நபி (ஸல்) அவாகளுக்கு அங்ஙனம் இருக்கவில்லை. ''ஆம்'' என்றார்கள் அவர்கள். அதைக் காதுற்றதும் ஆயிஷா (ரலி) அவர்கள் ''அவர் யார்?'' என்று கேட்டார்கள். ''உமர்'' என்றார்கள் உடனே அண்ணல் நபி (ஸல்) அவர்கள். இந்தப் பதில் அதிரவைத்தது ஆயிஷா (ரலி) அவர்களை. அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தம் தந்தையைக் குறிப்பிடாது ''உமர்'' என்று கூறியது தான் ஆயிஷா (ரலி) அவர்களின் அதிர்ச்சிக்குக் காரணமாகும். அவர்களால் தம் வருத்தத்தை வெளிப்படுத்தாது இருக்க இயலவில்லை. ''என் தந்தையார் அப்படி நன்மை செய்யவில்லையா?'' என்று ஆயிஷா (ரலி) அவர்கள் வருத்தத்துடன் வினவினார்கள். அதற்கு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அளித்த பதில் அவர்களை முன்னினும் அயரவைத்தது. அப்படி அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அளித்த பதில் என்ன? ''உம் தந்தையின் ஒரு நன்மையில் உமரின் இத்தனை நன்மைகளும் அடங்கும்.''

மற்றொரு நாள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தம் தோழர்களுடன் அமர்ந்திருந்தனர். அப்பொழுது அவர்கள், ''இந்த உம்மத்தில் தம் வலக்கையில், தம் புத்தகம் கொடுக்கப் படுபவர்களில் முதலாமவராக உமர் இப்னு கத்தாப் இருப்பார். அவருக்குக் கதிரவனின் காந்தியைப் போல் சுடர் இருக்கும்'' என்று கூறினர். முன் சம்பவத்தில் ஆயிஷா (ரலி) அவர்களை அதிர்ச்சி அடைய வைத்ததைப் போலவே, தோழர்களை அதிர்ச்சி அடையவைத்தது இது. அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களைப் பார்த்து ''அபூபக்ர் எங்கே?'' என்று கேட்

டனர். அதற்கு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அளித்த பதில், அவர்களின் அதிர்ச்சியை அகல வைத்தது. அப்படி அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கொடுத்த பதில் என்ன? "அவரை அமரர்கள் வெகு தொலை சுவர்க்கத்தின் பக்கம் அழைத்துச் சென்றுவிடுவர்."

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தம் அன்பு மனைவி ஆயிஷா (ரலி) அவர்களைப் பாராட்டப் புகன்ற ஒரே சொற்றொடர் "அவர் அபூபக்ரின் புதல்வி" என்பதாகும். அதில் ஆயிஷா (ரலி) அவர்கள் மட்டுமல்ல, அபூபக்ர் (ரலி) அவர் களும் பாராட்டப்படுகின்றனர். ஒரு நாள் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் ஜைனபு (ரலி) அவர்கள் வந்து, "தங்களின் மனைவிமார்கள் அபூகுஹாஃபாவின் புதல்வி* விஷயத்தில் தாங்கள் நியாயமாக நடந்து கொள்ளவேண்டும் என்று அல்லாஹ்வை வஸிலாக வைத்துத் தங்களை வேண்டிக் கொள் கின்றனர்." என்று சற்று சப்தமிட்டுக் கூறினர். அங்கு ஆயிஷா (ரலி) அவர்களும் இருந்தனர். அவர்களின் அருகில் வந்து அவர்களை ஜைனபு (ரலி) அவர்கள் திட்டினர். அண்ணல் நபி (ஸல்) அவர்கள், இதற்கு ஆயிஷா (ரலி) அவர்கள் என்ன பதில் கூறுகிறார் என்று பார்த்துக் கொண்டி ருந்தார்கள். ஆயிஷா (ரலி) அவர்கள் அப்பொழுது ஜைனபு (ரலி) அவர்களுக்குப் பதில் கூறி, அவர்களை அடக்கி விட்டனர். அது கண்டு அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ஆயிஷா (ரலி) அவர்களைப் பார்த்து, "அபூபக்ரின் புதல்வி அல்லவா?" என்றார்கள்.

இவ்விதம் அபூபக்ர் (ரலி) அவர்களைத் தாமும் புகழ்ந்ததுடன், பிறர் அவர்களைப் புகழ்வதைப் பார்த்து மகிழவும் செய்தார்கள். அண் ணல் நபி (ஸல்) அவர்கள், ஒரு நாள் அவர்கள், ஹஸ்ஸான் இப்னு தாபித் (ரலி) அவர்களைப் பார்த்து, "நீர் அபூபக்ரைப் புகழ்ந்து ஏதாவது எழுதியுள்ளீரா?" என்று கேட்டனர். "ஆம்" என்று ஹஸ்ஸான் இப்னு தாபித் (ரலி) அவர்கள் சொன்னதும், அதனைச் சொல்லும்படியும், அதனைத் தாம் கேட்பதாயும் அவர்கள் கூறினர். ஹஸ்ஸான் இப்னு தாபித் (ரலி) அவர்கள் பின்வரும் பொருள் பொதிந்த பா ஒன்றைப் பாடினார்கள்.

"குன்றம் ஏறிப் பாதகர் அல்லாஹ்வின் தூதர் அவர்களைத் தேடி அலைந்தபோது, அமைதி குறைந்த அந்தக் குகையில் இருந்த இருவரில் இரண்டாமவர் யாரோ?

---

* பெயரன், பெயர்த்தியை மகன், மகள் என்று குறிப்பிடுவது அரபிகளின் வழக்கம். ஆயிஷா (ரலி) அவர்கள் அபூகுஹாஃபாவின் பெயர்த்தி.

''அல்லாஹ்வின் தூதருடைய தோழர் அவர் தாம். அந்த முறையில் அவருக்கு நிகராய் மக்களில் எவரும் இரார் என்பதை அறியாதோர் யாரோ?''

அழகு அரபியில் இருந்த இந்தப் பாகுப்பாடலை இயற்றியவரே, இசைத்ததைக் கேட்டதும், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் முத்தைப் பழிக்கும் தம்முன் பற்கள் தெரியச் சிரித்தார்கள். ''நீர் உண்மையே கூறினீர். ஹஸ்ஸானே! நீர் கூறியது போலவே அவர் இருக்கிறார்.'' என்று தம் மனத்தை விரித்தார்கள்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களை இவ்விதம் நேசிக்க எத்தனையோ காரணங்கள் இருந்தன. அவற்றில் ஒன்று இது. அவர்கள் தாம் செய்த விண் பயணத்தைச் சொன்னதும், இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டவர்களில் சிலர் கூட அவர்களின் தூதுத் துவத்தில் நம்பிக்கை இழந்தனர். இஸ்லாத்தை ஏற்றுக் கொள்ளாத குறைஷிகளில் பலர் கை கொட்டி நகைத்தனர். அகப்பட்டுக் கொண்டார் முகம்மது' என்னும் ஆனந்தக் கூத்து அனந்தம் அவர்களின் அகத்தில், அகப்பட்டுக் கொள்வார் அபூபக்ரும்!' எனக் குதித்துக் கொண்டு அவர்கள் நேரே அபூபக்ர் (ரலி) அவர்களிடம் சென்றார்கள். ''உம் நண்பர் சொல்வதைக் கவனித்தீரா? நேற்றிரவு அவர் பைத்துல் முகத்தஸ் சென்று அர்ஷையும் அடைந்து, அல்லாஹ்வுடன் பேசிவிட்டு விடிவதற்கு முன் திரும்பி வந்து விட்டாராமே?'' எனத் தம் மொழிகளில் ஏளனம் வழிய எகத்தாளமாகக் கேட்டனர். அதைக் கேட்டு அபூபக்ர் (ரலி) அவர்கள் அமைதியாக, ''அல்லாஹ்வின் தூதர் அவர்கள் அவ்விதம் கூறியிருப்பார்களேயானால், அதனை நான் நம்புவேன்'' என்றார்கள். ''இதனைக் கொண்டும் நீர் அவரை விசுவாசிக்கிறீரா? மக்காவுக்கும், பைத்துல்முகத்தஸிற்கும் இடையே இருக்கும் அந்த நெடுந்தொலைவுக்கு ஒரே இரவில் ஒருவர் போய்த் திரும்ப முடியுமா? எனக் குறைஷிகள் கேட்டபோது, அபூபக்ர் (ரலி) அவர்கள் இன்னும் அமைதியாக, அது என்ன பெரிது? அதைவிட எத்தனையோ மடங்குத் தொலைவில் உள்ள வானத்திலிருந்து காலையிலும், மாலையிலும் 'வஹீ' தமக்கு வந்து கொண்டிருக்கிறது என்று அவர்கள் கூறுவதையே நான் நம்புகிறேனே. இதை நம்பாமல் இருப்பேனா?'' என உறுதியாக உரைத்தனர்.

இந் நிகழ்ச்சிக்குப் பின் ஒரு நாள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஹத்தீம் என்னும் இடத்தில் இருந்து கொண்டிருந்தனர். அப்பொழுது

குறைஷிகள் சிலர் அங்கு வந்து அவர்களிடம் பைத்துல் முகத்தஸ் பற்றிக் கேள்விகள் பல கேட்டனர். இதற்கு முன் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பைத்துல் முகத்தஸ் சென்றவர்கள் அல்லர். மிஃராஜ் இரவில் தான் அதனை அவர்கள் பார்த்தார்கள். அரைக்கணப் பொழுதில் நிகழ்ந்த அவ்வற்புதப் பயணத்தின் போது, அதனை அவர்கள் கவனித்துப் பார்க்க வெல்லாம் காலம் இருக்கவில்லை. அதனால் அவர்களுக்குக் குறைஷிகளின் கேள்விகளுக்குப் பதில் அளிப்பதில் சிறிது சிரமம் ஏற்பட்டுவிட்டது. அவர்களின் கண்முண் பைத்துல் முகத்தஸின் உருவம் காட்டப்பட்டது. அதைப் பார்த்துக் கொண்டே அவர்கள் குறைஷிகளின் கேள்விகளுக்குக் குறையில்லாமல் பதில் கூறிக்கொண்டே வந்தார்கள்.

அப்பொழுது அங்கு அபூபக்ர் (ரலி) அவர்களும் இருந்தனர். அவர்கள் பைத்துல் முகத்தஸைப் பார்த்தவர்கள். அவர்களும் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் பைத்துல் முகத்தஸ் பற்றிப் பல கேள்விகள் கேட்டனர். அவர்கள் கேட்கும் கேள்விகளுக்கும், அண் ணல் நபி (ஸல்) அவர்கள் பிழையில்லாமல் பதில் பகர்ந்தனர். தாம் கேட்கும் கேள்விகளுக்கு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பதில் பகரும் போதெல்லாம் அபூபக்ர் (ரலி) அவர்கள், ''அது உண்மையே, அது உண்மையே'' என்று கூறிக்கொண்டே வந்தார்கள். அப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அகமகிழ்ந்து, 'அபூபக்ரே! நீ சித்தீக்காக (உண்மைபடுத்துபவராக) இருக்கின்றீர்!'' எனக் கூறினர்.

உண்மைப்படுத்தியவர் என்னும் பெயர் பெற்ற அபூபக்ர் (ரலி) அவர்களும், குறைஷிகளைப் போல் ஏன் பைத்துல் முகத்தஸ் பற்றிக் கேள்விகள் கேட்டனர் என்னும் கேள்வி எழலாம். அவர்கள் அவ்விதம் கேள்விகள் கேட்டது, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் செய்த விண் பயணம் பற்றிய ஐயத்தால் அல்ல. பைத்துல் முகத்தஸ் பல முறை சென்ற தாம் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறியவற்றை உண்மை என அங்கீகரித்தால் குறைஷிகள் தம் குறைமதியுணர்ந்து, அவற்றை நம்பமாட்டார்களா என்னும் ஆசையால்.

அண்ணல் நபி (ஸல்) அவர்களை, அபூபக்ர் (ரலி) அவர்கள் மிகவும் அதிகமாக நேசித்தனர். அதனால் அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் சொற்களை அணுவளவும் மீறவும், அவர்களின் வழி முறையைச் சிறிதளவும் விடவும் விரும்பவில்லை. அதற்கு ஆதாரமாகக் கீழ்வரும் இந்தச் சம்பவங்கள் இருக்கின்றன. அண்ணல்

நபி (ஸல்) அவர்கள் இறந்ததும், அவர்களின் அருமைப் புதல்வி பாத்திமா (ரலி) அவர்கள் தம் தந்தையார், தம் சொந்த பராமரிப் பிற்கென வைத்துக் கொண்டிருந்த சொத்துக்களை அவர்களின் வாரிசு களுக்கு இஸ்லாமியச் சட்டப்படிப் பிரித்துக் கொடுக்கும் படியும், அப்படிப் பிரிக்கும் போது, தமக்குரிய பங்கைத் தம்மிடம் தரும்படியும் கலீபா அபூபக்ர் (ரலி) அவர்களிடம் கோரிக்கை விடுத்தனர். அந்தக் கோரிக்கை அபூபக்ர் (ரலி) அவர்களை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது. அல்லாஹ்வின் தூதர் அவர்களின் உயிருக்குப் பகரமாய்த் தம் குடும்பத் தார் அத்தனை பேரின் உயிரையும் அர்ப்பணிக்கத் துணிந்தவர்கள் தாம் அவர்கள். ''என் இதயத்தின் துண்டு' என அல்லாஹ்வின் தூதர் அவர் களால் வர்ணிக்கப்பட்ட பாத்திமா (ரலி) அவர்களின் கோரிக்கையை மறுக்குமுன் மரணிக்க விரும்புவர்கள் தாம் அவர்கள். ''வம்சச் சொத்தாக எடுத்துக் கொள்ளத்தக்க எதனையும் இறை தூதரவர்கள் விட்டுச் செல்லவில்லை. அவர்கள் எதை விட்டுச் சென்றார்களோ, அது தர்மத்திற்குப் போகவேண்டும்'' என்னும் அல்லாஹ்வின் தூதர் அவர் களின் சொல்லை மீறும் பிழையைப் புரிந்து விடக் கூடாது என்பதற்காக அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் இதயத்தை இரும்பாக்கிக் கொண்டு பாத்திமா (ரலி) அவர்கள் விடுத்த கோரிக்கையை ஏற்க மறுத்தனர்.

இது பாத்திமா (ரலி) அவர்களையோ, அலீ (ரலி) அவர் களையோ திருப்திப்படுத்தவில்லை. அலீ (ரலி) அவர்கள் இது பற்றித் தம்மிடம் இடித்துரைத்த போது, அபூபக்ர் (ரலி) அவர்கள், ''என் னுடைய உயிர் எவன் கைவசம் உள்ளதோ, அவன்மீது ஆணையாகக் கூறுகிறேன். அல்லாஹ்வின் தூதர் அவர்களின் உறவினர்கள், என் உறவினர்களைவிட எனககு அதிகப் பிரியமானவர்கள். அல்லாஹ் வின் தூதர் அவர்கள் விட்டுச் சென்ற சொத்து விஷயத்தில், அல்லாஹ் வின் தூதர் அவர்களின் விதியை விட்டும் நான் மயிரிழையும் விலகவில்லை'' என்று கூறினர்.

இதுபற்றித் தம்மிடம் பாத்திமா (ரலி) அவர்கள் பேசிய போது அபூபக்ர் (ரலி) அவாகள், ''அல்லாஹ் மீது ஆணையாக அல்லாஹ்வின் தூதர் அவர்கள் உறுதிப்படுத்தியுள்ளதைச் சிறிதும் நான் மாற்ற மாட்டேன்'' என அறிவித்தார்கள்; ''ஆனால் 'உங்கள் தந்தையார் உங்களுக்கு இந்தச் சொத்தைத் தந்தார்கள் என்று நீங்கள் நிச்சயமாக இருந்தால் நான் உங்களின் வார்த்தையை ஒப்புக் கொள்கிறேன்'' என அவர்கள் கூறினார்கள். இதைக் கேட்டு பாத்திமா (ரலி) அவர்கள்,

''உம்மு ஐமன் தவிர்த்து வேறு சாட்சியம் இல்லை'' என்று உரைத்ததும் அபூபக்ர் (ரலி) அவர்களால் தம் முடிவை மாற்றிக் கொள்ள முடிய வில்லை. இந்த விஷயத்தில் அபூபக்ர் (ரலி) அவர்கள் இவ்வளவு கண்டிப்புடன் இருந்ததற்கு இரு காரணங்கள் இருந்தன. ஒன்று, அல்லாஹ்வின் தூதர் அவர்களின் சொல் மீறப்படக் கூடாது என்பது. மற்றொன்று அல்லாஹ்வின் தூதரவர்கள் அவர்கள் இப்படிச் சொல்லி யிருப்பதால் அவர்களின் குடும்பத்தார் அந்த நிலங்களிலிருந்து வருபவற்றை உண்ணக்கூடாது என்பது.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உயிர் வாழும்போது, தம் வளர்ப்புத் தாயான உம்மு ஐமன் (ரலி) அவர்களை அடிக்கடி சென்று காண்பது வழக்கம். இது அபூபக்ர் (ரலி) அவர்களுக்குத் தெரியும். எனவே அவர்கள் கலீபாவானதும், ''நாமும் அல்லாஹ்வுடைய தூதரின் வழக்கத்தை மேற்கொள்வோம். வாரும்! உம்மு ஐமன் அவர்களைப் போய்ப் பார்த்துக் வருவோம்'' என்று கூறி உமர் (ரலி) அவர்களையும் அழைத்துக்கொண்டு, உம்மு ஐமன் (ரலி) அவர்களின் வீடு சென்றனர். அவர்கள் இருவரையும் கண்டதும், உம்மு ஐமன் (ரலி) அவர்கள் அழத் தொடங்கிவிட் டார்கள். ''நீங்கள் ஏன் அழவேண்டும்? அல்லாஹ்வின் தூதரவர்கள் அல்லாஹ்வின் அருகில் இருப்பது நல்லதல்லவா?'' என்று அவர்கள் இருவரும் கேட்டபோது, உம்மு ஐமன் (ரலி) அவர்கள், ''அதனை நானும் நன்கு அறிந்தே இருக்கிறேன். நான் கவலைப்படுவதெல்லாம் 'வஹீ' வருவது நின்று விட்டதே' என்பதற்காகத்தான்'' என்று கூறினர். உடனே அவர்கள் இருவரும் உம்மு ஐமன் (ரலி) அவர்களுடன் சேர்ந்து அழத் தொடங்கிவிட்டனர்.

ஒருநாள் அபூமூஸா அஷ்அரீ (ரலி) அவர்கள் ''அல்லாஹ்வின் தூதர் அவர்களுக்கு ஊழியம் செய்து கொண்டு இன்று அவர்களுடன் இருப்பேன்'' என்று கூறிவிட்டு அவர்களைத் தேடிச் சென்றனர். அப் பொழுது அவர்கள் பீறுஅரீஸ் என்ற தோட்டக் கிணற்றின் மேட்டின் மீது அமர்ந்திருந்தனர். அப்பொழுது அவர்கள் தம் இரு கெண்டைக் கால்களையும் திறந்து வைத்துக்கொண்டு அக்கிணற்றிற்குள் தொங்க விட்டிருந்தனர். அவர்களுக்கு சலாம் கூறிவிட்டுத் திரும்பி வந்து தலைவாயிலின் அருகில் அமர்ந்துகொண்டு, அபூமூஸா அஷ்அரீ (ரலி) அவர்கள் ''இன்று நான் அல்லாஹ்வின் தூதர் அவர்களுக்கு வாயில் காவல்காரனாய் இருப்பேன்'' என்று தமக்குள் கூறிக் கொண்டனர்.

சிறிது நேரத்தில் அபூபக்ர் (ரலி) அவர்கள் அங்கு வந்து கதவைத் தட்டினார்கள். ''யார் அது?'' என்று அபூமூஸா அஷ்அரீ (ரலி) அவர்கள் கேட்டனர். ''அபூபக்ர் என்று பதில் வந்தது. ''அப்படியே நில்லுங்கள்!'' எனக் கூறிவிட்டு, அபூமூஸா அஷ்அரீ (ரலி) அவர்கள், அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் சென்றனர். ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! அபூபக்ர் (தங்களிடம் வர) அனுமதி கேட்கிறார்'' என்றனர். உடனே அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உரைத்தார்கள், ''அவரை அனுமதியும்! அவருக்கு சுவர்க்கத்தைக் கொண்டு நற்செய்தி கூறும்!'' என்று. அதன்படியே அபூபக்ர் (ரலி) அவர்கள் சென்று கிணற்றின் மேட்டில் அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு வலப்புறம் அமர்ந்து, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் செய்தது போலவே, தங்களின் இருகால்களையும் கிணற்றிற்குள் தொங்க விட்டுக் கொண்டனர். கெண்டைக்கால்களையும் திறந்து கொண்டனர்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அளித்த வாக்குறுதிகள் அவர்களின் இறப்பால் நிறைவேற்றப்படாமல் இருந்தால், அவையும் அழகான முறையில் நிறைவேற்றப்பட்டாக வேண்டும் என்பதில் கலீபா அபூபக்ர் (ரலி) அவர்கள் அதிக அக்கறை யுள்ளவர்களாய் இருந்தனர். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உயிர் வாழும் போது, ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரலி) அவர்களிடம் பஹ்ரைனிலிருந்து பணம் வந்து விட்டால், உமக்கு இப்படி, இப்படித் தருவேன் எனக் கூறியிருந்தனர். பஹ்ரைனிலிருந்து பணம் வருவதற்குள் அவர்கள் இறந்துவிட்டனர். பஹ்ரைனிலிருந்து பணம் வந்த போது, ''அல்லாஹ் வின் தூதர் அவர்கள் நிறைவேற்ற வேண்டிய வாக்குறுதி அல்லது கடன் பாக்கி எவருக்காவது இருந்தால் அவர் நம்மிடம் வந்து வாங்கிக் கொள்ளலாம்'' என்று கலீபா அவர்கள் அறிவித்தார்கள்.

இந்த அறிவிப்பை அறிந்ததும் ஜாபிர் இப்னு அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் கலீபா அவர்களிடம் சென்று, ''அல்லாஹ்வின் தூதர் அவர்கள் தங்களின் இறுதிக் காலத்தில் அடுத்த தடவை (பஹ்ரைனி லிருந்து) செல்வம் வரும்போது, கை நிறைய அள்ளித் தருவதாக எனக்கு வாக்களித்திருந்தார்கள். ஆனால் அதற்குள் அவர்களின் வாழ்வு நிறைவடைந்துவிட்டது'' என்று கூறினர். அதைக் கேட்டதும் கலீபா அவர்கள், தம் இரு கைகளாலும் நாணயங்களை அள்ளிப் போட்டு, ''எண்ணும்!'' என்று கூறினர். ஜாபிர் இப்து அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் அவ்வாறே தம் கைகளில் விழுந்த நாணயங்களை எண்ணிப்

பார்த்தனர். ஐந்நூறு இருந்தன. ''இதைப்போல் (இன்னொரு மடங்கு) வாங்கிக் கொள்ளும்!'' என்று கலீபா கூறி மற்றொரு முறை அள்ளிப் போட்டனர்.

இவ்விதம் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இறந்த பிறகும், அவர்களின் வாக்கை கௌரவித்தார்கள் கலீபா அவர்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உயிர் வாழும்போதும், அவர்களுக்குச் சிறு கௌரவக் குறைவும் ஏற்பட அவர்கள் அனுமதித்ததில்லை. அதை உற்றவர்கள் செய்தாலும், மற்றவர் புரிந்தாலும் பொறுக்க முடியாத பொன்மனத்திற்கு உரிமைக்காரர் ஆவார்கள் அவர்கள். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இறுதி முறையாக ஹஜ்ஜுக்குப் போய்க் கொண்டிருந்தனர். அப்பொழுது அவர்களுடன் அவர்களின் மனைவியரான சபிய்யா (ரலி) அவர்களும், ஆயிஷா (ரலி) அவர்களும் தம் தம் ஒட்டகைகளில் ஏறிச் சென்று கொண்டிருந்தனர். சபிய்யா (ரலி) அவர்கள் இருந்த ஒட்டகையில் சாமான்கள் அதிகம் ஏற்றப்பட்டிருந்தன. அதனால் அது மற்ற ஒட்டகைகளுடன் சேர்ந்து செல்லவில்லை. ஆயிஷா (ரலி) அவர்கள் இருந்த ஒட்டகையில் சாமான்கள் அதிகம் ஏற்றப்படவில்லை. அதனால் அதற்கு மற்ற ஒட்டகைகளுக்கு முன் செல்ல முடிந்தது. அத்துடன் சபிய்யா (ரலி) அவர்களின் ஒட்டகை சற்று மெதுவாகச் செல்லக் கூடியது. ஆயிஷா (ரலி) அவர்களின் ஒட்டகை சற்று வேகமாகப் போகக் கூடியது. இந்த விஷயத்தை விளக்கி அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ஆயிஷா (ரலி) அவர்களிடம், சாமான்களைப் பரிமாறிக்கொள்ளும்படிக் கூறினர். இது ஆயிஷா (ரலி) அவர்களை ஆத்திரம் கொள்ள வைத்துவிட்டது. ஆத்திரம் வரும் போது அறிவு சற்று அகன்று விடத்தானே செய்கிறது. எனவே அவர்கள், அண்ணல் நபி (ஸல்) அவர்களைப் பார்த்து, ''நீங்கள் கூறிக் கொள்கிறீர்கள் நான் அல்லாஹ்வின் தூதன் ஆவேன் என்று, ஆனால் நீங்கள் நியாயமற்றவர்களாக இருக்கிறீர்களே'' என்று கத்திக் கூறிவிட்டனர்.

தம் ஆருயிருக்கும் ஆயிரம் மடங்கு மேலான தம் கண்மணித் தலைவர் மீது இவ்விதம் வெளிப்படையாகக் குற்றம் கூறியதைக் கேட்டதும், அதை மொழிந்தவர் தம் மகளேயாயினும் அபூபக்ர் (ரலி) அவர்கள் கொடுத்தார்கள் ஓர் அடி அவர்களின் கண் மீது. இவ்விதம் அடித்ததை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அங்கீகரிக்கவில்லை. அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களைக் கண்டித்தார்கள். ''உங்கள் முன்னிலையில் வைத்து அவள் என்ன கூறினாள் என்பதைத் தாங்கள்

கேட்கவில்லையா?'' என்று அபூபக்ர் (ரலி) அவர்கள் கேட்டனர். ''ஆம், நான் கேட்டேன் தான். ஆயினும் அவர் மன்னிக்கப்பட வேண்டியவர்'' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினர். தாம் பெற்ற பெண் என்ன, தம்மைப் பெற்ற தந்தை கூட அல்லாஹ்வின் தூதர்மீது குற்றம் கூறியதை பொறுக்காதவர்கள் அல்லவா அபூபக்ர் (ரலி) அவர்கள்.

ஒருசமயம் இரு பெண்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அருகில் பாடிக்கொண்டிருந்தனர். அவர்கள் பாடுவது தம் காதில் பட்டாலும், அவர்களின் தோற்றமும் தம் பார்வையில் படவேண்டாம் என அண்ணல் நபி (ஸல்) அவர்கள் படுத்துக் கொண்டு, தம் முகத்தைத் திருப்பிக் கொண்டனர். அப்பொழுது பார்த்து அபூபக்ர் (ரலி) அவர்கள் அங்கு வந்து விட்டார்கள். அவர்கள் அந்தப் பெண்களை அதட்டி விட்டு, ''ஷைத்தானுடைய கருவிகள் அல்லாஹ்வின் தூதர் அவர்கள் (இருக்கும்) இடத்திலா?'' என்று கேட்டார்கள். அதையறிந்து அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ''அவ்விருவரையும் விட்டு விடும்!'' என்று அபூபக்ர் (ரலி) அவர்களைப் பார்த்துக் கூறினர்.

## இறையச்சம்

அல்லாஹ்வுடைய தூதரின் நட்பையும் பெற்று, அவர்களின் நன்மாராயத்தையும் பெற்றவர்களாய் இருந்தாலும், அபூபக்ர் (ரலி) அவர்களிடம் இறையச்சம் அதிகம் இருந்து கொண்டிருந்தது. அதனால் அவர்கள் தீமை செய்து விடுவோமோ, பாவம் புரிந்து விடுவோமோ என்று அஞ்சி அஞ்சியே தம் வாணாளைக் கழித்தார்கள். ''தீமை செய்தவன் தண்டனை அடைவான்'' என்னும் இறைவசனம் இறங்கியதும், அவர்கள் அதிர்ந்தார்கள். ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! இதை விட்டும் நாங்கள் எப்படி விடுதலை அடைவது?'' என அளவற்ற அச்சத்துடன் அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் கேட்ட போது, ''நீங்கள் நோயுறுவதில்லையா? நீங்கள் துக்கமடைவதில்லையா? இவை முஃமினுடைய பாவத் திற்குத் தண்டனையாகும்'' என்று அவர்கள் கூறினர். அதை அறிந்த பிறகு தான் அபூபக்ர் (ரலி) அவர்களின் மனத்திலிருந்த அதிர்ச்சி அடங்கியது.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஒருநாள், ''எவன் கர்வத்தின் காரணமாகத் தன் ஆடையை இழுத்துக் கொண்டு நடக்கின்றானோ அவன் பக்கம் இறைவன் மறுமை நாளில் பார்க்கவே மாட்டான்'' என்று சொன்னதைக் கேட்டதும் அபூபக்ர் (ரலி) அவர்கள் நடுங்கிப்

போய், ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! என் ஆடையும் சில வேளைகளில் அப்படி ஆகி விடுகிறதே'' என்ற போது; ''நீர் கர்வத்தின் காரணமாக அவ்விதம் செய்வதில்லையே'' என அவர்கள் ஆறுதல் கூறினர்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இன்னொரு நாள், ''அல்லாஹ் வுக்கு முந்நூற்று அறுபது தன்மைகள் இருக்கின்றன. எவர் ஏகத் துவத்துடன் இந்தத் தன்மைகளில் ஒன்றைக் கொண்டு அல்லாஹ்வைச் சந்திக்கின்றாரோ, அவர் சுவனம் சேர்வார்'' என்று கூறினர். இவ்விதம் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறும்போதெல்லாம், அச்சத்துடனும் அதே சமயம் ஆவலுடனும் அபூபக்ர் (ரலி) அவர்கள் கேட்கும் கேள்வி, ''அவற்றில் ஏதேனும் ஒன்று என்னிடம் இருக்கிறதா, அல்லாஹ்வின் தூதர் அவர்களே?'' என்பது தான். அதே விதம் தான் அவர்கள் இப்பொழுதும் அண்ணல் நபி (ஸல்) அவர்களைப் பார்த்துக் கேட்டனர். ''அவை எல்லாமும் உம்மிடம் உள்ளன. ஆனால் அவற்றில் அல்லாஹ்வுக்குப் பிரியமானது தயாளம்'' என்று அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினர்.

இறையச்சம் அபூபக்ர் (ரலி) அவர்களை இகவாழ்வின் மீதே அச்சம் கொள்ள வைத்து விட்டது. ஒருவர் அவர்களுக்கு ஒரு நாள் தேன் கலந்த பால் கொஞ்சம் கொண்டு வந்து கொடுத்தார். அதனை வாங்கி வாயருகில்தான் கொண்டு சென்றார்கள். என்ன நினைத்துக் கொண்டார்களோ, பாலை அருந்தாமல் பாத்திரத்தைக் கீழே வைத்து விட்டார்கள். அப்பொழுது அவர்களின் கண்கள் கலங்கியிருந்தன. அவற்றிலிருந்து நீரும் வழிந்தது. அதைப் பார்த்ததும், ஆங்கிருந்த மற்றவர் கண்களும் கலங்க ஆரம்பித்தன. அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் கண்களைத் துடைத்துக் கொண்டபோது, தோழர்களில் ஒருவர் கேட்டார், ''தாங்கள் அழுததற்குக் காரணம் யாது?'' என்று. அதற்கு அவர்கள் அளித்த பதில் இது: ''ஒரு நாள் நான் அல்லாஹ்வின் தூதர் சமூகம் அமர்ந்திருந்தேன். அப்பொழுது அவர்கள் தம்மிடம் இருந்த எதையோ தம் கைகளால் தள்ளி விலக்கிக் கொண் டிருக்கக் கண்டேன். ஆனால் அங்கு அவர்கள் விலக்கும்படியாக ஒரு பொருளும் இருக்க வில்லை. அதைப் பார்த்து நான், ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! இது என்ன என்று கேட்டேன். அதற்கு அவர்கள், 'உலகம், எனக்குத் தன்னை எடுத்துக் காட்டுகிறது. அதனை நான் விலக்கினேன். அதன்பின் அது வந்து தாங்கள் என்னை விலக்கினாலும், தங்களுக்குப் பின் வருபவர்கள் என்னைவிட்டும் தப்ப மாட்டார்கள் என்கிறது' என்று

கூறினார்கள். அதனால் தான் நான் இப்பொழுது அதன் கையில் சிக்கியுள்ளேனா என்னும் அச்சத்தால் அழுதேன்.''

இறையச்சத்தால் அவர்கள் அடிக்கடி செய்யும் இறைஞ்சலாக இது இருந்தது. ''இறைவனே! நல்லதை எனக்குக் காட்டு! அதைப் பின்பற்றுவதற்கு உதவி செய்! தீமையை நான் தெரிந்து கொள்ளச் செய்! அதை விட்டும் தப்பிக்க அருள்புரி! நல்லது, கெட்டது ஆகியவற்றிற் கிடையே எனக்குச் சந்தேகத்தை ஏற்படுத்தி விடாதே! மன இச்சைக்கு வழிப்படும்படியும் செய்து விடாதே!''

இறையச்சத்தால் அவர்கள் அதிகம் அழுபவர்களாயும், தொழுபவர்களாகயும் இருந்தனர். இறையச்சம் அவர்களுக்கு மறுமை பற்றிய அச்சத்தை அதிகப்படுத்தியது. அதனால் அவர்கள் மறுமை பற்றி அச்சம் ஏற்பட்டதுமே, பெரு மூச்செறிவார்கள். அடிக்கடி அழவும் செய்வார்கள். அவர்கள் இரவில் அதிக நேரம் நின்றும் தொழு வார்கள். தொழுகையில் நிற்கும் போது இறைவன் முன்னிலையில் நிற்கிறோம் என்னும் உணர்வு அவர்களை விட்டும் சற்றும் அகலாது. அதனால அவர்கள் ஆடாமல் அசையாமல் ஊன்றிவைக்கப்பட்ட கம்பம் போல் காட்சி அளிப்பார்கள்.

இவ்விதம் நின்றே மற்றவர்களும் தொழ வேண்டும் என அவர்கள் விரும்பினார்கள். அதற்கு ஆதாரம் உம்மு ரூமான் (ரலி) அவர்களின் இந்த அறிவிப்பு: ''ஒரு நாள் நான் தொழுத போது கொஞ்சம் அசைந்து கொண்டிருந்தேன். அபூபக்ர் (ரலி) அவர்கள் இதைப் பார்த்து விட்டார்கள். அவர்கள் பலமாசச் சப்தமிட்டார்கள். நான் அச்சத்தால் தொழுகையை முறித்துவிடும் நிலையை அடைந்தேன். பின்னர் அவர்கள் (என்னைப் பார்த்துக்) கூறினார்கள்: தொழுகையில் நின்றால் உறுப்புகளை அமைதியாக வைத்துக் கொள்ள வேண்டும். யூதர்கள் ஆடுவது போன்று ஆடிக் கொண்டு நிற்கக் கூடாது. 'உறுப்புகளை அமைதியாக வைத்திருப்பதும், தொழுகையை முழுமைப் படுத்து வதில் ஒரு பங்காகும்' என அல்லாஹ்வின் தூதர் அவர்கள் கூற நான் கேட்டிருக்கிறேன்'' என்று சொன்னார்கள்.

இறையச்சம் இருந்ததால் அவர்கள் இஸ்லாமிய மார்க்க விஷயத்திலும் அதிகப் பேணுதல் உள்ளவர்களாய் இருந்தனர். அதற்கு ஆதாரம் ஆயிஷா (ரலி) அவர்கள் கூறும் இந்த நிகழ்ச்சி: ''என் தந்தையார் ஐந்நூறு ஹதீஸ்களைக் கொண்ட நூல் ஒன்றைத் தொகுத்து வைத்திருந்தனர். ஒரு நாள் இரவு அவர்கள் ஒரு விதக் கலக்கத்துடன்

பாயில் படுத்துப் புரண்டு கொண்டிருந்தார்கள். அவர்கள் உறும் நிலை பார்த்து, நான் உள்ளம் பொறாமல், 'எந்தையே! உடல் நலம் சரியில்லையா? வருந்தத்தக்க விஷயம் எதையாவது கேள்விப்பட்டுத் தாங்க முடியாமல் இப்படித் தவிக்கிறீர்களா?'' என வினவினேன். அதற்கு அவர்கள் பதில் அளிக்கவில்லை. இரவு முழுவதும் இப்படியே புரண்டு கொண்டு கிடந்து விட்டு, விடிந்ததும் அவர்கள், 'ஆயிஷா! நான் உன்னிடம் தந்திருந்த அந்த ஹதீஸ் திரட்டை எடுத்து வா!'' என்று கூறினார்கள். நான் அதனை எடுத்துக் கொண்டு வந்து கொடுத்தேன். அதனை அவர்கள் நெருப்பிலிட்டு எரித்தார்கள். ''அதனை இவ்வாறு எரிக்கக் காரணம் என்ன?'' என்று நான் கேட்ட போது, ''நான் இறந்து விட்டபிறகும் இது அழியாது இருந்து விடும் என்னும் ஐயத்தால் நான் அதனை எரித்தேன். இதில் நான் அல்லாஹ் வின் தூதரிடமிருந்து கேட்டவற்றை, நான் புரிந்து கொண்ட அளவு தான் எழுதியிருக்கிறேன். நான் எழுதியவற்றில் சில அவர்கள் கூறியதற்குச் சொல்லிற்குச் சொல் சரியில்லாமலும் இருக்கலாம். ஓரிரு சொற்கள் எங்காவது தவறியும் இருக்கலாம். அல்லாஹ்வின் தூதர் சொற்களில் தவறே வரக்கூடாது. அதனால் ஏற்படும் தீய விளைவு களுக்கு நான் காரணமாய் இருக்க வேண்டியிருக்கும்'' என அவர்கள் பதில் அளித்தனர்.

அச்சத்தின் காரணமாகவும், அதனால் ஏற்பட்ட பேணுதலின் காணமாகவும் அவர்கள், இப்படிச் செய்தாலும், அவர்கள் ஹதீஸ்களை அறிவிப்பதில் எத்தகையவர் என்பதற்கு ஆதாரம் அலீ (ரலி) அவர்களின் இந்த அறிவிப்பு : ''எவராவது அல்லாஹ்வுடைய தூதர் அவர்கள் ஹதீஸை எடுத்துரைத்தால், பேணுதலுக்காக நான் அவர்களிடம் சத்தியப் பிரமாணம் வாங்குவதுண்டு. ஆனால் அபூபக்ர் அவர்களிடம் அவ்விதம் வாங்குவதில்லை. அவர்கள் இதைவிட (சத்தியப் பிரமாணங்களை விட) உயர்ந்தவர்களாய் இருந்தார்கள்.''

இறையச்சத்தின் உச்சம் அவர்களைத் தாம் ஒரு மனிதராகப் பிறந் திருக்கக் கூடாது என்று கூட எண்ண வைத்துவிட்டது. அவர்கள் ஒரு நாள் மரக்கிளை ஒன்றில் குருவி ஒன்று குதூகலமாய் இருந்து கொண் டிருப்பதைக் கண்டார்கள். அதைப் பார்த்து அவர்கள், ''குருவியே! நீ மகிழ்ச்சியுடன் இருக்கிறாய், மரம்தரும் கனிகளைத் தின்கிறாய். அதன் நிழலில் வாழ்கிறாய், அல்லாஹ்விடம் கணக்குக் கூறவேண்டும் என்னும் அச்சம் உனக்கு இல்லை. உன்னைப் போன்ற நிலையில் நானும் இருந்திருக்கக் கூடாதா என ஏங்குகிறேன்'' என்று கூறினார்கள்.

அவர்கள் இன்னொரு நாள் தோட்டம் ஒன்றிற்குச் சென்றார்கள். அங்கு சுதந்திரமாகத் திரிந்து கொண்டிருந்த ஒரு மிருகத்தைப் பார்த்துப் பெருமூச்செறிந்துவிட்டு, ''மிருகமே! நீ எவ்வளவு இன்பத்துடன் வாழ்கிறாய். சுதந்திரமாக எதையும் உண்ணவும், குடிக்கவும் செய்கிறாய். மரங்களின் நிழல்களில் திரிகிறாய். இறுதித் தீர்ப்பு நாளின் போது எவ்விதக் கேள்வி கணக்கும் உனக்கு இல்லை. அந்தோ, இந்த அபூபக்ரும் உன்னைப் போல் இருந்திருக்கக் கூடாதா?'' என்று கூறினார்கள்.

பல சமயங்களில் அவர்கள் இப்படிச் சொல்லியிருக்கின்றனர் : ''அபூபக்ர் மரமாகப் பிறந்திருக்கக் கூடாதா? அப்படிப் பிறந்திருந்தால் வெட்டப்பட்டு விறகாகப் பிறருக்குப் பயன்பட்டிருப்பேனே! புல்லாகப் பிறந்திருக்கக் கூடாதா? அப்படிப் பிறந்திருந்தால், மிருகங்களுக்கு இரையாகவாவது பயன்பட்டிருப்பேனே, மறுமையில் கேள்வி கணக்கு இல்லாமல் போயிருக்குமே.''

சில சமயங்களில் இப்படியும் சொல்லியிருக்கின்றனர் : ''நான் முஸ்லிமான அடியானின் விலாப்புறத்தில் ஒட்டியிருக்கும் உரோமமாக இருக்கக் கூடாதா? நான் ஒரு முஸ்லிமின் மார்பில் முளைத்த உரோமமாகவேனும் இருக்கக் கூடாதா?''

இறையச்சத்தால் இற்று, மறுமை பற்றிய பயத்தால் மக்கிப் போயிருந்த இந்த மக்கீயின் உண்மை நிலையை, அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இச்சொற்கள் உருவகப்படுத்துகின்றன. ''நடமாடும் பிரேதம் ஒன்றைப் பார்க்க விரும்பினால் (அவர்) அபூபக்ரைப் பார்க்கவும்!''

இவ்வித நிலையில் இருந்ததால் தான் அபூபக்ர் (ரலி) அவர்கள் பின்வருமாறு அல்லாஹ்விடம் அழுது இறைஞ்சுவதைத் தம் அகலா வழக்கமாய்க் கொண்டிருந்தார்கள்: ''இறைவனே! உன் அருள் கருணையினால் மிகவும் குறைந்த கட்டுச் சாதம் (மறுமை வாழ்விற்குத் தேவையான இறை பக்தி) வைத்திருப்பவருக்கு நீ நன்கொடை அளிப்பாயாக! உண்மையற்ற (அபூபக்ர்) உன் வாயிலில் வந்து நிற்கிறார். அவர் குற்றங்களெல்லாம் மிகப் பெரியவையாகும். அவரின் அப்பெரும் குற்றங்களையெல்லாம் நீ மன்னித்து விடுவாயாக!

''இறைவனே! (மறுமையில்) என் நிலைமை என்னவாகுமோ தெரியவில்லையே. என்னிடத்தில் நற்செயல்கள் எவையும்

இல்லையே. துர் நடத்தைதானே அதிகம் இருக்கிறது. வழிபாடு என்னும் கட்டுச் சாதமும் மிகவும் குறைவாய் இருக்கிறதே.

''இறைவனே! 'குளிர்ச்சியடைவாயாக!' என நபி இப்ராஹீம் (அலை) அவர்களுக்குத் தயார் பண்ணப்பட்ட நெருப்புக் குண்டத்தைப் பார்த்து நீ கூறியது போல எனக்காகத் தயார் பண்ணப்பட்டிருக்கும் நரகத்தைப் பார்த்தும் கூறிவிடுவாயாக!''

இவ்விதம் அபூபக்ர் (ரலி) அவர்கள் அஞ்சியதற்கு அவசியமே இல்லை. ஏனெனில் அவர்களிடம் இஸ்லாம் வலியுறுத்திய விழுமிய ஒழுக்கங்கள் அனைத்தும் அப்படியே அமைந்திருந்தன. அதற்கு ஆதாரம் இந்தச் சம்பவம் : ஒரு நாள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தம்மைச் சூழ்ந்திருந்த தோழர்களைப் பார்த்து, ''எத்தனை பேர் இன்று நோன்பு நோற்றிருக்கிறீர்கள்?'' என்று கேட்டனர். அபூபக்ர் (ரலி) அவர்கள், ''நான் நோற்றிருக்கிறேன்'' என்றார்கள். ''இன்று யார் ஒரு பிரேதத்துடன் புதை குழி வரை சென்றவர்?'' என்று கேட்டனர். அபூபக்ர் (ரலி) அவர்கள், ''நான் சென்றேன்'' என்றார்கள். ''இன்று யார் ஓர் ஏழைக்கு உணவளித்தவர்?'' என்று கேட்டனர். அபூபக்ர் (ரலி) அவர்களே, ''நான் அளித்தேன்'' என்றார்கள். ''இன்று யார் ஒரு நோயாளியைச் சென்று கண்டவர்?'' என்று கேட்டபோதும், அபூபக்ர் (ரலி) அவர்கள் மட்டுமே, ''நான் சென்று கண்டேன்'' என்று பதிலிறுத்தார்கள். அவர்களைத் தவிர்த்து வேறு எவராலும் நான் என்றோ நானும் என்றோ பதில் அளிக்க இயலவில்லை. இதை அறிந்ததும், அண்ணல் நபி (ஸல்) அவர்கள், அப்பொழுதே கூறிவிட்டனர், ''இந்த உயர் பண்புகள் ஒரு சேரப் பெற்றிருப்பவர் சுவனம் சேர்வர்'' என்று இதற்கு முன் எப்பொழுதோ கூறிவிட்டனர்,'' ''உலகில் வைத்தே சுவர்க்கத்தைக் கொண்டு நன்மாராயம் பெற்ற பதின்மரில் ஒருவர் ஆவார் அபூபக்ர்'' என்று.

## இரக்ககுணம்

அபூபக்ர் (ரலி) அவர்களிடம் இருந்த உயர் குணங்களில் ஒன்று இரக்கம். பத்ர் களத்தில் பிடிபட்ட கைதிகளை என்ன செய்வது என்னும் பிரச்சினை எழுந்தபோது, அவர்களை விடுவித்துவிட வேண்டும் என வாதாடியவர்கள் அவர்கள் தாம். மக்காக் குறைஷிகள் ஹுதைபிய்யாவில் வைத்துச் செய்யப்பட்ட உடன்படிக்கையை மீறிச் செயல்பட்டபோது, அதுபற்றி அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களையும், உமர் (ரலி) அவர்களையும் அழைத்து ஆலோ

சனை கேட்டனர். அப்பொழுது அபூபக்ர் (ரலி) அவர்கள். ''அல்லாஹ் வின் தூதர் அவர்களே! அவர்களும் தங்களுடைய சமூகத்தவர்கள் தாம்'' என்னும் ஒற்றைச் சொற்றொடரையே தம் ஆலோசனையாக அளித்தனர். ஈரமற்ற நெஞ்சம் பெற்றவர்கள் தாம் மக்காக் குறைஷிகளாயினும் அவர்கள் மீதும் இரக்கம் காட்டப்பட வேண்டும் என்பதே அபூபக்ர் (ரலி) அவர்களின் அந்த ஒற்றைச் சொற்றொடரில் மறைந்திருந்த கருத்தாய் இருந்தது. ஆனால் உமர் (ரலி) அவர்களோ பத்ர் கைதிகள் விஷயத்தில் போலவே இவ்விஷயத்திலும் அபூபக்ர் (ரலி) அவர்களின் கருத்திற்கு நேர் எதிரான கருத்துக் கொண்டிருந்தனர். ''அவர்கள் தங்களைப் பொய்ப்பித்தவர்கள். தங்களை நாட்டை விட்டு வெளியேற்றியவர்கள். தங்களை எதிர்த்துப் போர் செய்தவர்கள். ஆகவே அவர்களை வெட்டி விட வேண்டியது தான். ஏனெனில் அவர்கள் இறை மறுப்புக்குத் தலைமை வகித்தவர்கள் என்று மக்காக் குறைஷிகளின் தீய தன்மைகளை எடுத்துக் கூறி விட்டு, அவர்களை விட்டு விடுவதல்ல, வெட்டுவதே உகந்த வழி என்று சொல்லிவிட்டு, மக்காக் குறைஷிகள் கீழ்படியாதவரை மற்ற அரபிகள் அடிபணிய மாட்டார்கள்'' என்று உமர் (ரலி) அவர்கள் உரைத்தார்கள். இதனால் தான் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அறிவித்தனர். என் உம்மத்துகள் மீது அதிகம் இரக்கம் உள்ளவர் அபூபக்ர்'' என்று

அமீர்களில் ஒருவர் தோற்ற படைத் தளபதியின் வெட்டப் பட்ட தலையையும், வெற்றிச் செய்தியையும் அபூபக்ர் (ரலி) அவர்களிடம் அனுப்பி வைத்த போது, தரிக்கப்பட்ட தலை அனுப்பப்பட்டது கண்டு தருக்கடையவில்லை அவர்கள். அதற்கு மாறாக அதிகம் கோபம் கொண்டார்கள். ''இவ்விதமே நம் பகைவர் செய்கின்றனர்'' எனத் தலையைக் கொண்டு வந்தவர் தெரிவித்த போது, ''நாம் உரோமம், பாரசீகத்தைப் பின்பற்றுபவர்கள் அல்லர்'' என்று அவர்கள் கூறி னார்கள். அதன்பின், 'இனிமேல் எவரும் தோற்ற பகைவரின் தலையை வெற்றிச் செய்தியுடன் அனுப்பி வைக்க கூடவே கூடாது' என அமீர் களுக்குக் கண்டிப்பாக கட்டளையிட்டார்கள்.

குற்றம் புரிந்தவனோ, புரியாதவனோ அகப்பட்டுக் கொண்டால் அவனை மாட்டிவைத்து விடவேண்டும் என்று ஆசைப்படுபவர்களே அதிகம் பேர். ஆனால் அபூபக்ர் (ரலி) அவர்கள் அப்படிப்பட்டவர்கள் அல்லர். 'குற்றம் புரிந்தவன் அவர்களிடம் அகப்பட்டால், குற்றவாளி அகப்பட்டுக் கொண்டான் என்னும் ஆனந்தமோ, குற்றம் புரிந்தவன்

அல்லவா என்னும் ஆத்திரமோ அவர்கள் அடைவதில்லை. அதற்கு மாறாக அவர்கள் மனத்தில் எழும் உணர்ச்சி இரக்கம் தான். அவர்கள் கூறினார்கள்: ''நான் ஒருவனைப் பிடிக்கும் போது, அவன் களவு செய்தவனாய் இருந்தாலும், கள்குடித்தவனாய் இருந்தாலும் அந்தக் குற்றம் அவனிலிருந்து வெளியாகாதபடி அல்லாஹ் மறைத்து விடவேண்டும் என்றே விரும்புவேன்.

## அன்பு

ஒருவரிடம் இரக்க குணம் இருந்தால் அவர் மனத்தில் அன்பு அதிகம் இருக்கிறது என்பதற்கு அது அறி குறி. ஏனெனில் இரக்க நீர் இறைக்கப்படும் போது, அன்புச் செடி அவசியம் வளரும். அபூபக்ர் (ரலி) அவர்கள் மனத்தில் அன்பு அதிகம் இருந்தது அவர்கள் எல்லோர் மீதும், குறிப்பாக குழந்தைகள் மீதும் அதிக அன்பு கொண்டி ருந்தார்கள். குழந்தைகளை அவர்களும் தழுவிக் கொள்வர். அவர் களின் குழந்தைகள் மட்டுமல்ல, அனைத்துக் குழந்தைகளும் அவர் களை 'பாபா' என்று தான் அழைப்பது வழக்கம்.

## அடக்கம்

பிறரை நேசிப்பதற்கும், மதிப்பதற்கும் அடக்கம் என்னும் அரியகுணம் இருப்பது அவசியம். அபூபக்ர் (ரலி) அவர்களிடம் அது அதிகம் இருந்தது. அதனால் அவர்கள் இளையவர் களை அதிகம் நேசித்தார்கள். முதியவர்களை மிகவும் மதித்தார்கள். அபூ முகம்மது ஹரீரீ என்னும் பெரியார் ஒருவர் மக்காவில் தங்கியிருந்தார். அவர் அங்குத் தங்கியிருந்த ஓர் ஆண்டு முழுவதும் தூங்கவில்லை. பேசவில்லை. தலையணையிலோ சுவரிலோ சாயவுமில்லை, காலை நீட்டவுமில்லை. அதை அறிந்து அவர்கள் அவரைப் பார்க்கச் சென்றார்கள். அவரைக் கண்டதும் அவர்கள் அவருக்கு சலாம் சொன்னார்கள். அவர் பதில் கூறினார். ''எதற்காக நீங்கள் இப்படி சிரமம் எடுத்துக் கொள்கி றீர்கள்?'' என்று அவரைப் பார்த்து அவர்கள் கேட்டார்கள். அதற்கு அவர், ''என் இதயத்தில் ஒளிவிட்ட உண்மை யான அறிவு, என் உறுப்புகள் அனைத்தையும் திருத்தி அமைத்து விட்டது'' என்று பதில் கூறினார். அபூபக்ர் (ரலி) அவர்கள் அங்குச் சில கணம் அமைதியாக நின்றார்கள். அவரிடம் மேற்கொண்டும் எதுவும் கேட்க அவர்களுக்குத் துணிவு ஏற்படவில்லை. அவ்விடத்தை விட்டும் சிந்தனையுடன் வெளியேறினார்கள்.

முதியவர்களை அவர்களும் மதித்தார்கள். பிறரையும் அவ்வாறு மதிக்கும்படி அறிவுரை பகர்ந்தார்கள். ஒரு நாள் தோழர் ஒருவர் அவர்களிடம் வந்து, ''என் காரியங்களும், வேலைகளும் கஷ்ட மாகவும், மோசமாகவும் இருக்கின்றன. அதற்கு ஒரு நல்ல வழி கூறுங்கள்!'' என்று அவர்களை வேண்டிக் கொண்டார். அவரைப் பார்த்து அவர்கள், ''உம் காரியங்கள் நன்மையாக வேண்டுமானால், உம்மை விட வயதில் முதிர்ந்த நல்ல பெரியோர்களை அதில் முற் படுத்திக் கொள்ளும்! அதுவே உமக்குச் சிறப்பையும் பரக்கத்தையும் கொடுக்கப் போதுமானதாகும்'' என்று கூறினார்கள்.

பிறரை மதித்த அவர்கள், தம்மை பிறர் மதிப்பதை விரும்ப வில்லை. பிறர் தம்மை அதிகம் மதிப்பதைப் பார்த்து அவர்கள் கூறுவார்கள். ''என்னை மக்கள் அதிகம் உயர்த்தி விட்டார்களே'' என்று. தம்மை எவராவது புகழ்ந்தால், ''அவ்விதம் புகழ வேண்டாம்'' என அவரிடமும் கூறுவார்கள். இறைவனிடமும் இவ்விதம் இறைஞ் சுவார்கள் : ''இறைவனே! என் நிலையை என்னைவிட நீ நன்கறிவாய். என் நிலையை இந்த மக்களை விட நான் நன்கறிவேன். இறைவனே! என்னை அவர்களுடைய எண்ணத்தில் நல்லவனாக ஆக்கிவிடு! என்னுடைய தவறுகளை அவர்கள் அறியாதவர்களாய் இருக்கிறார் கள். ஆதலால் அந்தத் தவறுகளை மன்னித்துவிடு! என்னைத் தூய்மை யுள்ளவனாக ஆக்கு! என் பாவங்களை மன்னித்தருள்! என் தகுதிக்கு மேற்பட்ட மக்களின் புகழ் மொழிகளுக்குக் கணக்குக் கேட்க என்னை அழைக்காதே!''

அடக்க குணம் அவர்களிடம் அதிகம் இருந்ததால், அவர்கள் அடிக் கடி இப்படிக் கூறிக் கொள்வது வழக்கம்: ''என் முடிவு சரியானதாய் இருந்தால், அதற்கு வழி காட்டுதல் அல்லாஹ்விடமிருந்து வந்த தாகும். நான் தவறு செய்தால், அந்தத் தவறு என்னுடையதாகும். அல்லாஹ் என்னை மன்னித்தருளட்டும்!''

ஒரு நாள் அவர்களிடம் தோழர் ஒருவர் வந்தார். ''அபூபக்ரே! நான் போலி விசுவாசியைப் போல் ஆகி விட்டேன். அல்லாஹ்வின் தூதர் அவர்கள் சமூகத்தில் அமர்ந்திருக்கும் போது எனக்கு ஏற்படும் ஈமானின் நிலை, மனைவி மக்கள் மத்தியில் இருக்கும் போது மாறி விடுகிறது'' என்று கூறினார். அதைக் கேட்டு அவர்கள், ''என் நிலை யும் அப்படித்தான் இருக்கிறது'' என்றார்கள். இருவரும் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் சென்று தங்களுக்கு இருக்கும் பலவீனத்தை

எடுத்துக் கூறினர். அதைக்கேட்டு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ''ஈமானின் நிலை ஒவ்வொரு சமயமும் இப்பொழுது இருப்பது போலவே இருக்க முடியாது. அப்படி நீடித்திருக்குமாயின், மனிதத் தன்மையைக் கடந்து அமரர்களில் ஒருவராக ஆகிவிடுவீர்,'' என அறிவித்தனர்.

அடக்கமாய் இருந்த அவர்கள், அடக்கத்தைப் பற்றி இவ்விதம் இயம்பியிருக்கிறார்கள்: ''பாவத்திற்கு மன்னிப்புக் கேட்பது மேலானது. பாவத்தை விட்டும் தப்பித்திருப்பது அதையும் விட மேலானது. துன்பத்தில் பொறுமை காட்டுவது நல்லது. அந்தப் பொறு மையைப் பாதுகாப்பது அதையும்விட நல்லது. வெட்கம் ஆண் களுக்கு நல்லது. ஆனால் அது பெண்களுக்கு அதையும் விட நல்லது. பாவமன்னிப்புக் கோருவது முதியவருக்கு நல்லது. இளையவனுக்கு அதையும் விட நல்லது. மன்னிப்பளிப்பது செல்வனுக்கு நல்லது. வறியவனுக்கு அதையும் விட நல்லது. பாவம் செய்வது இளைஞ னுக்குக் கெட்டது. கிழவனுக்கு அதையும் விடக் கெட்டது. உலகில் ஈடுபடுவது அறியாதவனுக்குக் கெட்டது. அறிந்தவனுக்கு (ஆலிமுக்கு) அதையும் விடக் கெட்டது. இறைவனைத் தொழுவதில் சோம்பல் படுவது சாதாரன மனிதனுக்குக் கெட்டது. அறிந்த வனுக்கும் (ஆலிமுக்கும்) அறிவைத் தேடுபவனுக்கும், அதையும் விடக் கெட்டது. கர்வம் கொள்வது செல்வனுக்குக் கெட்டது. வறியவனுக்கு அதையும் விடக் கெட்டது. அடக்கம் ஏழைகளுக்கு நல்லது. அரசர்களுக்கு அதையும் விட நல்லது.''

அடக்க குணம் இருந்தால் தான் அவர்கள் தாம் புரிந்தது பிழை எனத் தெரிந்த மறுகணமே, அதற்காக மன்னிப்புக் கோரத் தயாராய் இருந்தார்கள். ஒரு சமயம் அவர்களுக்கும் உமர் (ரலி) அவர்களுக்கும் ஒரு விஷயத்தில் சற்று மனத் தாங்கல் ஏற்பட்டு விட்டது. தவறு தம்முடையது தான் என உணர்ந்ததும் அவர்கள், உமர் (ரலி) அவர்களைப் பார்த்துத் தம்மை மன்னிக்கும்படி வேண்டினார்கள். ஆனால் உமர் (ரலி) அவர்களோ, அவர்களை மன்னிக்க மறுத்து விட்டனர். அதற்குக் காரணம் உமர் (ரலி) அவர்கள் ஆத்திரமுற்று இருந்ததாகும். உடனே அபூபக்ர் (ரலி) அவர்கள், அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் சென்றார்கள். அப்பொழுது அவர்கள் தம் வேஷ்டியின் ஒரு மூலையைப் பிடித்துக் கொண்டு வந்தனர். அதனால் அவர் களுடைய முழங்கால் திறந்திருந்தது. அதைப் பார்த்து அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பக்கத்திலிருந்த அபூதர்தா (ரலி) அவர்களிடம்,

'உங்களின் தோழர் சண்டையிட்டிருக்கிறார்'' என்று கூறினார். அபூபக்ர் (ரலி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு சலாம் கூறிவிட்டு, : ''அல்லாஹ்வின் தூதர் அவர் களே! எனக்கும் கத்தாபுடைய மகனுக்கும் இடையில் ஒன்று நிகழ்ந்தது. அவரிடம் நான் அவசரப்பட்டுப் பேசிவிட்டேன். பிறகு நான் பேசியது தவறு என உணர்ந்து, கழி விரக்கம் கொண்டு, என்னை மன்னிக்கும்படி அவரை நான் கேட்டுக் கொண்டேன். அவர் மறுத்துவிட்டார். இப்பொழுது நான் தங்களிடம் வந்திருக்கிறேன்'' என்றார்கள்.

அதுகேட்டு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ''அபூபக்ரே! அல்லாஹ் உம்மை மன்னிப்பான்'' என மும்முறை கூறி அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு ஆறுதல் கூறினர். பிறகு தான் உமர் (ரலி) அவர்கள் தாம் மன்னிக்க மறுத்த தவற்றினை உணர்ந்து அபூபக்ர் (ரலி) அவர்களைக் காண அவர்களின் வீடு சென்றனர். அங்கு அவர்கள் இல்லாதது அறிந்ததும், அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இல்லம் வந்து அவர்களுக்கு சலாம் கூறினர். உமர் (ரலி) அவர்களைப் பார்த் ததும், அண்ணல் நபி (ஸல்) அவர்களின் அழகு முகம் செக்கர்வானம் போல் சிவந்து விட்டது. அதைக் கண்டு அஞ்சியவர்கள் உமர் (ரலி) அவர்கள் மட்டுமல்ல, அபூபக்ர் (ரலி) அவர்களும் ஆவர். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உமர் (ரலி) அவர்களை அதிகம் கடிந்து விடுவரோ என்பதுதான் அபூபக்ர் அவர்களின் அச்சத்திற்கும் காரண மாகும். எனவே அவர்கள் தம் இரு முழங்கால்களையும் ஊன்றி மண்டியிட்டு அமர்ந்து கொண்டு ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! உமரை விட நான் தான் அதிகம் ஆத்திரமுற்று விட்டேன்'' என்று கூறினர். அப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் அங்கிருந்த வர்களைப் பார்த்து இருமுறை பகர்ந்தனர். ''என்னை உங்களிடம் தன் தூதராக அல்லாஹ் அனுப்பினான். 'நீர் பொய்யுரைக்கின்றீர்' என்று நீங்கள் கூறினீர்கள். 'அவர்கள் உண்மையுரைக்கிறார்கள்' என அபூபக்ர் கூறி, தம் உடலாலும் பொருளாலும் என்னுடன் ஒத்துழைத்தார்'' இதன் பின்னர் உமர் (ரலி) அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்கள் வருத்தமுறுகிறாற் போல் எதுவுமே செய்வதில்லை.

**ஈகை**

ஈவதில் அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு இணையாக இன்னொரு வரைக் கூற இயலாது. அதற்கு ஆதாரம் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் இந்த அறிவிப்பு : ''மற்ற எல்லா மனிதர்களிலும்

அபூபக்ரே மிகவும் அதிகமான தர்ம குணம் கொண்டவர்'' இவ்விதம் அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஆதாரம் இல்லாமல் அறிவிக்க வில்லை. ஒரு நாள் ஒருவர் உமர் (ரலி) அவர்களைத் தெருவில் கண்டு, ''ஜகாத் எவ்வளவு கொடுக்க வேண்டும்?'' என்று கேட்டார். அதற்கு அவர்கள், ''நாற்பதில் ஒன்று'' என்று பதில் அளித்தனர். அவர்களிடம் விடை பெற்றுச் செல்லும் போது, அவர் வழியில் அபூபக்ர் (ரலி) அவர்களைக் கண்டார். அவர்களிடமும் கேட்டுப் பார்ப்போமே என்னும் எண்ணம் எழுந்தது அவருக்கு. எனவே அவர் அவர்களைப் பார்த்து, ''ஜகாத் எவ்வளவு கொடுக்கவேண்டும்?'' என்று கேட்டார். ''நாற்பதில் முப்பத்தொன்பது'' என்று அவர்கள் பதில் கூறினார்கள். உமர் (ரலி) அவர்களின் பதிலைக் கேட்டு மகிழ்ந்த அவர், அபூபக்ர் (ரலி) அவர்களின் பதிலைக் கேட்டு அதிர்ந்தார். இந்தக் குழப்பத்திலிருந்து தெளிவு பெற அவர் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் சென்று, இருவர் கூறியதையும் இயம்பி, அவர்களிடம் விளக்கம் வேண்டினார். ''அதுவும் நன்மையானதே, இதுவும் நன்மையானதே'' என்று அவர்கள் கூறியதுடன், ''நீர் அதிகம் நேசிக்கக்கூடிய ஒன்றைக் கொடுக்காத வரையில், அல்லாஹ்வின் அன்பைப் பெற முடியாது'' என்றும் அறிவித்தார்கள். அத்துடன் அவர்கள் அவருக்கு 'லந்தனாலுல்' என்னும் இறைவசனத்தையும் ஓதிக்காட்டினார்கள்.

அபூபக்ர் (ரலி) அவர்களிடம் இதற்கு ஒரு விளக்கம் இருந்தது. ''நாற்பதில் ஒன்பது என்பது கருமிகளின் ஜகாத், முழுவதையும் கொடுப்பதே சித்திக்குகளின் ஜகாத்'' என்று அவர்கள் கூறுவார்கள். அவர்கள் தம்மிடமிருந்த பொருள்கள் அனைத்தையும் தர்மம் செய்ததைப் பார்த்து முஸ்லிம்களில் சிலரே குறை கூறினர் என்றும், அப்பொழுது இறைவன் இந்த வசனத்தை இறக்கி வைத்தான் என்றும், அலீ (ரலி) அவர்கள் கூறியதாக அறிவிக்கப்படுகிறது. (இங்கு) உங்களுக்குக் கொடுக்கப்பட்டிருப்பதெல்லாம் (நிலையற்ற) இவ்வுலக வாழ்க்கைக்குரிய (அற்ப) இன்பங்களே, விசுவாசங் கொண்டு, தங்கள் இறைவனையே முற்றிலும் நம்பி இருப்போருக்கு, அல்லாஹ்விடத்தில் உள்ளதோ மிக்க மேலானதும், நிலையானதுமாகும். *(42:36)*

ஜகாத் பற்றி இமாம் கஸ்ஸாலி (ரஹ்) அவர்களின் கருத்து இது: ''ஒரு முஸ்லிம் எல்லாப் பொருள்களையும்விட, அல்லாஹ்வையே அதிகம் நேசிக்க வேண்டும். அவ்விதம் அவன் நேசிப்பதற்கான அறிகுறி தான், அவன் தனக்குப் பிரியமான பொன், பொருளிலிருந்து

ஒரு பகுதியை ஏழைகளுக்கு வழங்குவது. இப்படிக் கொடுப்பவர் களில் மூன்று வகையினர் உண்டு: இவர்களில் முதல் வகையினர் நாற்பதில் ஒரு பங்கு கொடுப்பது போதாதென்று, கைவசமுள்ள அனைத்தையுமே அள்ளி வழங்கிவிடுவர். அபூபக்ர் (ரலி) அவர்கள் இவ்விதம் தான் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் தம் பொருள் களைக் கொண்டு வந்து குவித்து ஏழைகளுக்கு வழங்கச் செய்தனர். எனவே இந்த முதல் வகையினர் இறைவனின் உண்மை நேசர்கள் ஆவர். இரண்டாம் வகையினர் ஒரே முறையில் தம் கைப்பொருள் முழுதையும் கொடுத்து விடாமல், காப்பாற்றி வைத்திருந்து, ஏழைகளுக்குத் தேவைப்படும் போது கொடுப்பவர்கள். மூன்றாம் வகையினர் கடமையை மட்டும் சரியாக நிறைவேற்றுபவர்கள். அவர்கள் நூற்றில் இரண்டரைப் பங்கை ஒழுங்காகக் கொடுத்து விடுபவர்கள்.''

அபூபக்ர் (ரலி) அவர்கள் தாம் ஈட்டிய 40,000 திர்ஹங்களையும், இரவிலும், பகலிலும், இரகசியமாகவும், பகிரங்கமாகவும் தர்மம் செய்தது குறித்தே, இறைவன் கீழ்வரும் வசனத்தை இறக்கி வைத்தான் என்றும் கூறப்படுகிறது: ''(விசுவாசிகளே) எவர்கள் தங்கள் பொருள்களை (தர்மத்திற்காக) இரவிலும் பகலிலும் இரகசிய மாகவும் பராசியமாகவும் செலவு செய்கின்றார்களோ, அவர்களுக்கு, அவர் களுடைய கூலி அவர்களுடைய இறைவனிடத்தில் உண்டு. தவிர அவர்களுக்கு (மறுமையில்) யாதொரு பயமுமில்லை. அவர்கள் துக்கிக்கவு மாட்டார்கள்.'' (2 :274)

இறைவனின் இந்த இருவசனங்களும் தம்மிடமுள்ளவை அனைத்தையும் தானம் கொடுத்ததால், வறுமையை வரவழைத்துக் கொண்ட அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு மறுமையில் பெரிய பாக்கியங்கள் காத்திருக்கின்றன என நன்மாராயம் நவிலுபவை யாகவே அமைந்திருக்கின்றன.

அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் செல்வம் அனைத்தையும் தர்மம் செய்ததற்கு ஒரு காரணம் இரக்கம் என்றாலும், இன்னொரு காரணம் செல்வத்தைத் துறக்கவேண்டும் என்பதுமாகும். அதனால் பிறரின் வறுமை போக வேண்டும், தமக்கு வறுமை வர வேண்டும் என்றும், அவர்கள் விரும்பினார்கள். ''இறைவனே! எனக்கு ஏராளமாக உலகப் பொருள்களையும் கொடு! ஆனால், அவற்றைத் துறக்கும் விருப்பம் உள்ளவனாகவும் ஆக்கு!'' என்று அவர்கள் இறைஞ்சியிருக்கின்றனர்.

இதன் பொருள். "உலகப் பொருள்களை ஏராளமாக எனக்குக் கொடு! அவற்றிற்காக நான் நன்றி செலுத்தலாம். அதன் பின் அவற்றிலிருந்து உனக்காக விலகியிருக்கச் செய் அவ்விதமானால் தான் என் வறுமையை வலிய எடுத்துக் கொண்டதாய் இருக்கும். வற் புறுத்தித் திணிக்கப்பட்டதாய் இராது. வறுமை வற்புறுத்தித் திணிக்கப்பட்ட தாய் இருந்தால் அவன் வறுமையின் பிராணி; வறுமை வலிய எடுத்துக் கொள்ளப்பட்டதாய் இருந்தால் வறுமை அவனுக்குப் பிராணி" என்பதாகும்.

அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் செல்வம் அனைத்தையும் தர்மம் செய்தது, கஞ்சத் தனத்தை விட்டு விடுபடவும், அல்லாஹ் பால் தனிக்கவும் என்றும் கூறப்படுகிறது. அவர்கள் செல்வத்தை விரும் பியது, அதற்காக அல்லாஹ்வுக்கு நன்றி கூறவும், செல்வத்தைத் துறக்கவும் ஆகும். செல்வம் இருந்தால் தானே அதற்காக நன்றி கூற முடியும். செல்வம் இருந்தால் தானே அதைத் துறக்க முடியும்.

அபூபக்ர் (ரலி) அவர்களிடமிருந்த அழகிய குணம் பிறருக்குக் கொடுக்கும் போது, அவர்களின் மனம் ஒரு போதும் கோணாதிருந் ததாகும். பிறருக்கு எப்படிக் கொடுக்க வேண்டும் என அவர்கள் இப்படிக் கூறுகிறார்கள். "ஏழைகளுக்கு மகிழ்ச்சியுடன் கொடுப்பதே அல்லாஹ்வால் ஏற்றுக் கொள்ளப்படும் தர்மமாகும்."

### விருந்தோம்பல்

பிறருக்குக் பொருள் ஈவதில் மட்டுமல்ல, பிறருக்கு விருந்து வைப்பதிலும் அபூபக்ர் (ரலி) அவர்கள் எவருக்கும் பின் தங்கியவர்கள் அல்லர். ஒரு நாள் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் திண்ணைத் தோழர்களில் சிலர் அபூபக்ர் (ரலி) அவர்களின் வீட்டிற்கு விருந் தாளிகளாக வந்தனர். அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் நெஞ்சிற்கு நெருங்கியவர்களாதலால், அவர்களை அங்கிருந்து உபசரிக்கவே அபூபக்ர் (ரலி) அவர்கள் அதிகம் விரும்பினர். ஆயினும், அவர்களால் அவ்விதம் செய்ய இயலவில்லை. அதற்குக் காரணம், அண்ணல் நபி (ஸல்) அவர்கள் சமூகம் அவர்கள் ஓர் அவசர அலுவ லாய்ச் செல்ல வேண்டியிருந்தது. எனவே அவர்கள் தம் புதல்வர் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களிடம், "நான் திரும்பி வருமுன் இவர்களுக்கு உணவு அளித்து விடு!" என்று கூறிவிட்டுச் சென்றனர். அதன் பிரகாரம் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் விருந்தினர்களுக்கு

உணவு கொணர்ந்து கொடுத்தனர். ஆனால் அவர்களோ, ''அபூபக்ர் வந்த பிறகே உண்போம்!'' எனக் கூறி உணவுண்ண மறுத்து விட்டனர்.

அன்று அபூபக்ர் (ரலி) அவர்கள் வீடு திரும்ப வெகு நேரம் ஆகி விட்டது. விருந்தினர் உணவருந்திச் சென்றிருப்பர் என்னும் எண்ணத்துடன் வந்த அவர்கள், அனைவரும் பட்டினியுடன் அமர்ந்திருப்பதை அறிந்து அதிர்ந்தனர். 'நம் பிள்ளை தான் நமக்காக அவர்களைக் காக்க வைத்துவிட்டார்' என எண்ணியதும் அவர்களுக்குக் கடுஞ்சினம் ஏற்பட்டு விட்டது. அதனால் அவர்கள் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களைப் பார்த்து ''உன்னை என்னுடன் இனிமேல் உண்வுண்ண உட்கார விடமாட்டேன்'' எனப் பிரமாணம் செய்துவிட்டார்கள். அப்பொழுது விருந்தினர்கள் அனைவரும், குற்றவாளி அப்துர் ரஹ்மான் அல்லர், என அபூபக்ர் (ரலி) அவர்களிடம் எடுத்துக் கூறினர். ''அவர் எங்களை உணவருந்தத்தான் கூறினார். நாங்கள் தாம் நீர் இல்லாமல், உண்ண மனமில்லாமல் உட்கார்ந்திருந்தோம். அல்லாஹ் மீது ஆணையாக நீர் அப்துர்ரஹ் மானுடன் உணவுண்ணாவிடில் நாங்களும் உணவுண்ண மாட்டோம்'' என்றும் அவர்கள் உறுதியாக உரைத்தனர். அதன் பின்னர் தான் அபூபக்ர்' (ரலி) அவர்களின் சினம் தணிந்தது.

## ஞானமார்க்கத்தின் இமாம்

இம்மை, மறுமை இரண்டின் தன்மையையும் அபூபக்ர் (ரலி) அவர்கள் நன்கு அறிந்திருந்தனர். இம்மை வாழ்வில் இலயித்து விட்டால் மறுமை வாழ்வு மறுக்கப்பட்டுவிடும் என்பது அவர்களுக்குத் தெரியும். இம்மை வாழ்வில் இலயிக்க வைப்பவை உலக இன்பங்கள், இந்த இன்பங்கள் நிரந்தரமாக இருக்கக் கூடியவை அல்ல என்பதை உணர்த்தத்தான் அவர்கள், ''நீ உலகின் இருப்பதற்குக் காரியம் செய்கிறாய், ஆனால் அதுவோ உன்னை விரட்டுவதற்கு வேலை செய்கிறது'' என்று உரைத்தனர். உலக இன்பங்களில் உள்ளத்தை இழக்கும்போது, என்ன அழிவு ஆரம்பிக்கிறது என்பதை அறிவிக்கத் தான், ''ஓர் அடியான் தன் உள்ளத்தில் உலகின் அழகைப் பெருமையாகக் காணும் போது, இறைவன் அவனுக்கு விரோதியாகி விடுகிறான். அடியான் உலகின் அழகை (தன் உள்ளத்திலிருந்து) விலக்காத வரை அவன் மீது இறைவன் விரோதமாகவே இருக்கிறான்'' எனக் கூறினார்கள்.

உலக இன்பங்கள் இதயத்தை ஈர்த்து விடாமல் இருக்க வேண்டுமானால், அல்லாஹ் மீது நேசம் கொள்ளுதல் அவசியமாகும்.

அதனால் தான் அவர்கள், ''அல்லாஹ் தன் அன்பிலிருந்து சிறிதள வாவது, எவருக்காவது சுவைக்க வைத்து விட்டால், அவர் உள்ளத் திலிருந்து உலக ஆசை அகன்றுவிடும்'' என்றும் ''அல்லாஹ்வுடைய நேசத்தின் இன்பத்தைக் கலப்பில்லாமல் அனுபவித்தவன் எவனோ அவன் உலகை விட்டு விட்டான், படைப்புப் பொருளை விட்டு விட்டான்'' என்றும் கூறினர். இவ்விதம் கூறியதுடன் நில்லாது, அவ் விதமே தான் அவர்கள் வாழ்ந்தார்கள் என்பதற்கு ஆதாரம் முஆவியா (ரலி) அவர்களின் இந்தச் சொற்கள் : ''அபூபக்ர் (ரலி) அவர்களும் உலகைத் தேடித் திரியவில்லை. உலகமும் அவர்களைத் தேடித் திரியவில்லை.

உலக இன்பங்களை உதறிவிட்டு அல்லாஹ்வின் நேசத்தையும், அவன் தூதரின் நேசத்தையுமே அவர்கள் ஆசித்து வாழ்ந்தார்கள். ஒரு நாள் அவர்களிடம் அலீ (ரலீ) அவர்கள், ''எங்களை விட உயர்ந்த தன்மைகளைத் தாங்கள் எதன் மூலம் அடைந்தீர்கள்?'' என்று கேட்ட போது, அவர்கள் அளித்த பதில் இது: ''ஐந்து விஷயங்களால் நான் அவற்றை அடைந்தேன். முதலாவதாக, நான் இஸ்லாத்தில் இணைந்த போது, மனிதர் இருவகையினராக இருப்பதைக் கண்டேன். சிலர் இந்த உலகத்தைத் தேடினார்கள். இன்னும் சிலர் இனிமேல் வரக் கூடிய உலகை நாடினார்கள். நான் அல்லாஹ்வை நாடுபவனாக இருக்கிறேன். இரண்டாவதாக, நான் இஸ்லாத்தில் இணைந்ததி லிருந்து இறைவனை நினைவு கூர்வதைத் தவிர்த்து, அவனுக்குத் தொண்டு செய்யும் இன்பத்தைத் தவிர்த்து, இந்த உலகத்தில் ஓர் இன்பத்தையும் காணவில்லை. இவையெல்லாம் இந்த உலகின் இன்பங்களைத் தேடுவதிலிருந்து என்னை விலக்கி வைத்தன. மூன்றாவதாக, நான் இஸ்லாத்தில் இணைந்ததிலிருந்து இந்த உலகின் உணவை வயிறார உண்ணவில்லை. இந்த உலகின் நீரை வயிறு முட்டக் குடிக்கவில்லை. ஏனெனில், அதனால் நான் அறிவை இழந்து விடலாம் என அஞ்சினேன். இறைவனிடமிருந்து விலகி விடுவேனோ எனக் கவலைப்பட்டேன். நான்காவதாக, இரண்டு விஷயங்கள் என்னைச் சந்தித்து, அவற்றில் ஒன்று இறை விருப் பத்திற்கு ஏற்றதாயும், மற்றொன்று என் மனத்திற்கு இணக்கமாயும் இன்பமாயும் இருந்தால் நான் இறை விருப்பத்திற்கு ஏற்றதாய் உள்ளதையே தேர்ந்தெடுப்பேன். இறைவனைத் தவிர்த்து வேறு எவருக்கும் இணக்கமானதை நான் தேர்ந்தெடுக்கவில்லை. ஐந்தா வதாக, நான் அல்லாஹ்வுடைய தூதர் அவர்களின் மிகவும் அழகிய

நட்பை அனுபவித்தேன். ஒரு கணம் கூட அவர்களுடன் இருப்பதை நான் விட்டு விடவில்லை.'' அபூபக்ர் (ரலி) அவர்கள் தம் கேள்விக்குப் பதில் கூறத் தொடங்கியதுமே, அலீ (ரலி) அவர்களின் மனம் கனக்க ஆரம்பித்துவிட்டது. அவர்கள் சொல்லி முடிக்கும் போது, அலீ (ரலி) அவர்களின் இருவிழிகளிலிருந்தும் நீர் வழிந்தோடியது. ''அல்லாஹ் அபூபக்ர் அவர்களை ஆசீர்வதிப்பானாக!'' என அவர்கள் தழுதழுத்த குரலில் கூறினார்கள்.

இவ்விதம் தாம் வாழ்ந்த விதத்தை விளக்கிய அபூபக்ர் (ரலி) அவர்கள் நாம் வாழ வேண்டிய விதத்தையும் விரிக்கிறார்கள். அதில் நம்மை ஈடேறச் செய்யும், சுவன வீடேறச் செய்யும் அற்புத அறிவுரைகள் அமைந்திருக்கின்றன. ''மன இச்சையின் ஆதிக்கத்திற்கு வழிப்பட்டு விடாதீர்கள்! இச்சை, ஆசை, கோபம் ஆகியவற்றிலிருந்து தன்னைக் காத்துக் கொள்பவனே வெற்றியாளன். அகப் பெருமையை அழியுங்கள்! இன்று உயிரோடு இருப்பவன், நாளை இறந்து விடுகிறான்; நாளுக்கு நாள், நொடிக்கு நொடி (ஏற்படும்) துயரங் களைச் சகித்துக் கொண்டு, பொறுமையாய் இருங்கள்! பொறுமையின் மூலமே நற்செயல்கள் ஒவ்வொன்றும் நடைபெறுகின்றன. அல்லாஹ் வால் அளிக்கப்பட்ட அருள் வேதம், உங்கள் முன் வந்துள்ளது. அதன் அற்புதங்கள் குறையமாட்டா. அதன் ஒளியால் இருண்ட நாளில் ஒளி பெற முயலுங்கள்! தன்னை அஞ்சி நடக்கவே அல்லாஹ் உங்களைப் படைத்தான்; கிராமன், காத்திபீன் எனும் அமரர்கள் நீங்கள் புரியும் காரியங்களைக் கவனிக்க (அல்லாஹ்) உங்கள் மீது சாட்டியுள்ளான். உங்களின் தவணை முடியும் முன்னர் நற்காரியங்களைச் செய்து கொள்ளுங்கள்!''

''நம் வீடு நிலையில்லாதது. நம் வாழ்க்கை கடனாகப் பெற்றது. நம் மூச்சு எண்ணப்படுகிறது. நம் சோம்பல் வெளிப் படையானது.''

இந்த அறிவுரைகள் நம்மை நோக்கிக் கூறப்பட்டவை போல் இருந்தாலும், அவை அபூபக்ர் (ரலி) அவர்கள் தம்மை நோக்கிக் கூறிக் கொண்டவையே. அவற்றில் சொல்லபபட்டதுபோலவே, அவர்கள் தம் புவி வாழ்வில் செயல்பட்டார்கள். அதனால் தான் அவர்கள் 'தஸவ்வுஃப்' என்னும் ஞான மார்க்கத்தின் இமாம் எனக் குறிப்பிடப் படுகின்றனர். ஞாண மார்க்கத்திற்கு உலகின் வலையில் விழா விழிப்பு நிலை அவசியமானதாகும். அத்துடன் இறை நம்பிக்கை, இறையச்சம், இறை நேசம், இறைவன் அளித்தவற்றில் திருப்தி அடைதல், இறை

விருப்பிற்கு முற்றிலும் அடி பணிதல் ஆகிய தன்மைகளும், தேவையானவையாகும். இவை யாவும் அபூபக்ர் (ரலி) அவர்களைத் தம் இல்லமாகவே கொண்டிருந்தன.

ஞான மார்க்கத்தின் இமாமாய் இருந்த அவர்கள், 'சிராத்' என்னும் பாலம் கடக்க அவசியமானதாகும் ஞானம் என்று கூறுகிறார்கள் : "உலகப்பற்று என்பது ஓர் இருள். அதற்குரிய விளக்கு பேணுதலாக வாழ்வது. பாவம் என்பது ஓர் இருள். அதனை அகற்றுவது, 'தவ்பா' என்னும் விளக்கு. மண்ணறை என்பது ஓர் இருள். அவ்விருளை மாற்றுவது 'கலிமா'வாகிய விளக்கு. மறுமை என்பது ஓர் இருள். அதனை அகற்றுவது நல் 'அமல்கள்' என்னும் விளக்கு. 'சிராத்' என்னும் பாலமும் ஓர் இருளே. அதனை அகற்றுவது 'ஞானம்' என்னும் விளக்கு."

ஞானம் பற்றி இவ்விதம் கூறிய அவர்கள், கல்வி பற்றிக் கூறிய கருத்துகள் இவை :

"கல்வியின் அளவிற்குத் தக்கபடி அல்லாஹ்வின் அச்சம் இருக்கும். இறைவனுக்கு அஞ்சாதிருப்பது அறியாமை ஆகும்.

"கல்வியுள்ளவன் எவனும், தன்னை இறைவன் என்று கூறவில்லை. செல்வம் வைத்திருப்பவன் தான் அப்படிச் சொல்கிறான்."

"செல்வம் ஃபிர்அவ்ன், காரூன் ஆகியோரின் சொத்து. கல்வி இறை தூதர்களுடையது."

"முஃமினுக்கு இந்த அளவு கல்வி போதுமானது. எந் நேரமும் இறைவனுக்கு அஞ்சிக் கொண்டேயிருக்கும் அந்த அளவு."

"நல்ல அறிவிற்கு அடையாளம் இறையச்சம். பாவச் செயலுக்கு அடையாளம் மடமை."

அபூபக்ர் (ரலி) அவர்கள் அடைந்திருந்த சிறப்புகளிலெல்லாம் சிறந்தவை அல்லாஹ்வின் பாராட்டும், அல்லாஹ்வின் தூதரின் பாராட்டும் ஆகும். அல்லாஹ்வின் பாராட்டு, அவன் வேதமாகிய திருக்குர்ஆனிலும், அவன் தூதரின் பாராட்டுதல், தூதரின் போதமாகிய அல் ஹதீஸிலும் அடங்கியிருக்கின்றன.

அல்லாஹ்வின் திருமறையில் 'வசயுஜன்னபுஹல் அத்கா" எனத் தொடங்கும் வசனம் அபூபக்ர் (ரலி) அவர்களின் பக்தி பற்றியே

குறிப்பிடுகிறது என்று இமாம் ஜவ்ஸி (ரஹ்) போன்ற அறிஞர்கள் அபிப்பிராயப்படுகின்றனர். அந்த வசனத்தில் அல்லாஹ் அபூபக்ர் (ரலி) அவர்களை, 'அத்கா' (அதாவது, தீமைக்கு எதிராய்த் தம்மை அதிகம் காத்துக் கொண்டவர்) என்று அழைக்கிறான். இன்னொரு சமயம், ''நிச்சயமாக, அல்லாஹ்வின் பார்வையில் மிகவும் மேலானவர், தீமைக்கு எதிராய்த் தம்மைக் காத்துக் கொண்டவரே'' என்று குறிப்பிடுகின்றான். இந்த இரு வசனகங்களிலிருந்தும் பெறும் கருத்து இது. ''அபூபக்ர் அவர்கள், உங்கள் அனைவரிலும் மிகவும் மேலானவர், தீமைக்கு எதிராய் அதிகம் காத்துக் கொண்டவர்.''

அல்லாஹ்வுடைய தூதரின் ஹதீஸ்களில், அபூபக்ர் (ரலி) அவர்களை மட்டும் குறிப்பிடும் ஹதீஸ்கள் 181 இருக்கின்றன. அபூபக்ர் (ரலி) உமர் (ரலி) ஆகியோரின் உயர் ஒழுக்கங்கள் பற்றி 88 ஹதீஸ்கள் பேசுகின்றன. அபூபக்ர் (ரலி), உமர் (ரலி), உதுமான் (ரலி) ஆகியோர் பற்றி 17 ஹதீஸ்கள் இருக்கின்றன. அபூபக்ர் (ரலி), உமர் (ரலி), உதுமான் (ரலி), அலீ (ரலி) ஆகியோர் பற்றி 14 ஹதீஸ்கள் பேசுகின்றன. இந்த நான்கு கலீபாக்களுடன், இன்னும் சில தோழர் களையும் இணைத்து 16 ஹதீஸ்கள் புகழ்கின்றன. மொத்தத்தில் 316 ஹதீஸ்கள் அபூபக்ர் (ரலி) அவர்களின் உயர்வையும் ஒழுக்கங் களையும் உணர்த்துகின்றன. பல ஹதீஸ்கள் அபூபக்ர் (ரலி) அவர்களின் அறிவான கேள்விகளுக்கு, நபி (ஸல்) அவர்கள் பகர்ந்த படிப்பினைகள் நிறைந்த பதில்களாக அமைந்தவையாகும்.

அல்லாஹ்வின் தூதர் அவர்களும் தமக்கு அடுத்தவர் என்னும் தகுதி உடையவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களே என்னும் கருதப்பட, பல சமயங்களில் பேசியிருக்கின்றனர். அவர்கள் ஒரு சமயம், ''நானும் அபூபக்ரும் பந்தயம் விடப்பட்ட இரு புரவிகளை ஒத்திருந்தோம். நான் அவரை முந்தி விட்டேன். அதனால் அவர் என்னைத் தொடர்ந் தார். அவர் என்னை முந்தியிருந்தால், நான் அவரைத் தொடர்ந் திருப்பேன்'' என்று கூறினர். இறை தூதராய் இவ்வுலகு வரத் தகுதி, அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு அடுத்தபடியாக அமைந்திருந்தது அபூபக்ர் (ரலி) அவர்களிடம் தான், என்பதையே இந்த உரை உணர்த்துகிறது.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள், அல்லாஹ்வைத் தொழ மதீனாவில் முதல் பள்ளி கட்டப்படும் போது, தம் அருள் கையினால் ஒரு கல்லை எடுத்து வைத்துவிட்டு, அதன் மேல் அடுத்த கல்லை

எடுத்து வைக்க அழைத்தது அபூபக்கர் (ரலி) அவர்களைத் தாம். அண்ணல் நபி (ஸல்) அவர்களின் பகைவர்களே, அவர்களுக்கு அடுத்தவராக அபூபக்ர் (ரலி) அவர்களையே கொண்டிருந்தனர். உஹதுப் போரின் போது அபூசுப்யான், அண்ணல் நபி (ஸல்) அவர்களைக் கூவி அழைத்து விட்டு, அடுத்து அழைத்தது அபூபக்ர் (ரலி) அவர்களைத்தாம்.

பத்ருப் போரின் போது குறைஷிகளைப் பற்றித் துப்பறிவதற்காகத் தனியே பிரிந்து சென்ற அண்ணல் நபி (ஸல்) அவர்கள் தம்முடன் அழைத்துச் சென்றது அபூபக்ர் (ரலி) அவர்களைத் தாம்.

அண்ணல் நபி (ஸல்) அவர்களிடம் ஒரு நாள் அம்ர் பின் ஆஸ் (ரலி) அவர்கள், ''அல்லாஹ்வின் தூதர் அவர்களே! ஆண்களில் தாங்கள் அதிகம் விரும்புவது எவரை?'' என்று வினவிய போது, அவர்கள் குறிப்பிட்டது அபூபக்ர் (ரலி) அவர்களைத் தாம்.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஒரு சமயம் கூறினர். ''இறை தூதர்களைத் தவிர்த்து, மனிதர்களில் மேலானவர் அபூபக்ர் தாம். எனக்கு வெளிப்படுத்தப்பட்ட எதனையும் நான் அவர் நெஞ்சில் பொழியாது இருந்ததில்லை'' என்று.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இன்னொரு சமயம் இயம்பினர். ''அபூபக்ரின் ஈமானை ஒரு தட்டிலும் உலக மக்களின் ஈமானை ஒரு தட்டிலும் வைத்தால், அபூபக்ரின் ஈமான் இருக்கும் தட்டே தாழும்'' என்று.

அண்ணல் நபி (ஸல்) அவர்கள் மற்றொரு சமயம் மொழிந்தனர், ''அபூபக்ர் உங்களை விட மேலாய் இருப்பது, அவரின் நோன்பாலும் தொழுகையாலும் அல்ல. மதிக்கத்தக்க பொருள் ஒன்று அவர் மனத்தில் இருக்கிறது. அதனால்தான்'' என்று.

இவை அபூபக்ர் (ரலி) அவர்களின் சிறப்பைப் பற்றி அண்ணல் நபி (ஸல்) அவர்கள் பிறரிடம் கூறியவை. அபூபக்ர் (ரலி) அவர்களை விளித்து, அவர்களிடம் அவர்கள் நேரில் கூறியவை இவை: ஒரு நாள் அண்ணல் நபி (ஸல்) அவர்களுடன் அபூபக்ர் (ரலி) அவர்கள் இருந்து கொண்டிருந்தனர். அப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ''அபூபக்ரே!'' என விளித்து, 'அல்லாஹ் உம்மீது தன்னுடைய மிகப் பெரிய அருட்கொடையைப் பொழிந்திருக்கிறான்'' என்று கூறினர். அது கேட்டு அபூபக்ர் (ரலி) அவர்கள், ''அல்லாஹ்வுடைய மிகப்

பெரிய அருட்கொடை என்ன?'' என்று கேட்டபோது ''அல்லாஹ் 'லிகா' என்னும் தன் தரிசனத்தை மற்றவர்களுக்குப் பொதுவாகக் காட்டுவான். உமக்குத் தனிப்பட்ட முறையில் காட்டுவான்'' என்று அவர்கள் பதில் கூறினர். இன்னொரு நாள் அண்ணல் நபி (ஸல்) அவர்கள், ''அபூபக்ரே'' என விளித்து, ''அல்லாஹ்வும் முஸ்லிம்களும் உம்மைப் பற்றி இரு வேறு கருத்துக் கொள்ள மறுக்கின்றனர்'' என மொழிந்தனர்.

தவ்ர் குகையில் அண்ணல் நபி (ஸல்) அவர்களும், அபூபக்ர் (ரலி) அவர்களும் தங்கியிருந்த போது, மக்காக் குறைஷிகள் குகையின் வாயில் வரை வந்துவிட்ட சமயத்தில், தம்முடன் குகையில் இருந்த தோழராகிய அபூபக்ர் (ரலி) அவர்களை நோக்கி, அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ''நீர் கவலைப்படாதீர்! நிச்சயமாக அல்லாஹ் நம்முடன் இருக்கிறான்'' என்று கூறித் தம்முடன் அபூபக்ர் (ரலி) அவர்களையும் இணைத்துக் கொண்டனர்.

தவ்ர் குகையில் அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்குத் துணையாய் அபூபக்ர் (ரலி) அவர்கள் இருந்ததைக் குறிப்பிடும் போது, இருவரில் ஒருவர் (ஃதானியஃத்திதனைன்) என்று அல்லாஹ் கூறுகிறான். இதன் மூலம் அல்லாஹ்வே அபூபக்ர் (ரலி) அவர்களை, அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்கு அடுத்தவர் எனக் குறிப்பிட்டு விட்டான்.

ஹஸ்ஸான் இப்னு தாபித் (ரலி) அவர்கள், ''தவ்ர் குகையில் இரண்டாமவர் என்று பெயர் பெற்றாலும் அபூபக்ர் (ரலி) அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் உண்மையை ஏற்று, அதனை மெய்ப் பித்தவர்களில் முதலாமவர் ஆவர்'' என்று கூறினார்கள்.

வயது வந்த ஆண்களில், இஸ்லாத்தைத் தழுவிய முதலாமவர் அபூபக்ர் (ரலி) அவர்கள் தாம்.

அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்குப்பின் திருமறையை ஒன்று சேர்த்தவர்களும், அதனை 'முஸ்ஹஃப் என அழைத்தவர்களும் அவர்கள் தாம்.

கலீபா என அழைக்கப்பட்ட முதலாமவரும், நேர்வழி நடந்த கலீபாக்கள் எனப் போற்றப்படும் முக்கிய நான்கு கலீபாக்களில் முதலாமவரும், தமக்குப்பின் வரக்கூடிய கலீபாவை முற்கூட்டியே நியமித்த முதலாமவரும் அவர்கள் தாம்.

பொது நிதி என்று ஒன்று இல்லாத போது அதனை நிறுவிய முதலாமவர் அவர்கள் தாம்.

'அதீக்' என்னும் பெயரைப் பெற்ற முதலாமவரும், 'அஸ்ஸித்தீக்' என்னும் பெயரைப் பெற்ற முதலாமவரும் அவர்கள் தாம்.

மார்க்கத் தீர்ப்பு வழங்குவதில் முதன் முறையாக 'இஜ்தி ஹாத்' என்னும் முறையை அறிமுகப்படுத்திய முதலாமவர் அவர்கள் தாம். இதுதான் பிறகு முஜ்தஹிதுகளுக்கு ''வழிகாட்டியாக அமைந்தது'' என ஷா வலியுல்லாஹ் அவர்கள் கூறுகின்றனர். 'அபூபக்ர் (ரலி) அவர்கள், இந்த விதியை ஏற்படுத்தியதன் மூலம், அவர்கள் எல்லா முஜ்தஹிது களுக்கும் வழிகாட்டியாகவும், ஆசிரியராகவும் ஆகிறார்கள்'' என்று.

அண்ணல் நபி (ஸல்) அவர்களின் தோழர்களில் சுவனம் புகும் முதலாமவர் அவர்கள் தாம். ''சுவர்க்கத்தின் எல்லா வாயில்களி லிருந்தும் அபூபக்ரின் பெயர் அழைக்கப்படும். என் உம்மத்துகளில், அதில் நுழைபவர்களில், முதல் மனிதராக அவர்கள் தாம் இருப்பார்'' என அண்ணல் நபி (ஸல்) அவர்கள் கூறினர்.

''லா இலாஹ இல்லல்லாஹ்'' என்னும் திருக்கலிமாவைத் திரும்பத் திரும்பக் கூறி திக்ரு செய்யும் முறையை அறிமுகப்படுத்திய முதலாமவரும் அவர்கள் தாம்.

திருக்கலிமாவின் சிறப்பை அவர்கள் அண்ணல் நபி (ஸல்) அவர்களிடமே நேரில் கேட்டறிந்தனர் என்பதற்கு ஆதாரம் இந்தச் சம்பவம் : அண்ணல் நபி (ஸல்) அவர்கள் இறந்த அன்று, தாம் அடைந்த அனுபவம் ஒன்றை உதுமான் (ரலி) அவர்கள் உரைக் கின்றனர்: ''அந்தத் துக்கத்தில் தத்தளித்தவர்களில் நானும் ஒருவன். அந்தச் சமயத்தில் உமர் அவர்கள் வந்து எனக்கு சலாம் சொன்னார் களாம். ஆனால் அது எனக்குத் தெரியாது. உமர் அவர்கள் அபூபக்ர் அவர்களிடம் சென்று, 'உதுமானுக்குச் சலாம் கூறினேன். அதற்கு அவர் பதில் கூறவில்லை' என முறையிட்டிருக்கின்றனர். அவர்கள் இருவரும் என்னிடம் வந்து சலாம் கூறினர். அதன்பின் அபூபக்ர் அவர்கள் என்னைப் பார்த்து; 'உங்களின் சகோதரர் உமர் கூறிய சலாத் திற்கு பதில் கூறாததன் காரணம் என்ன?' என்று கேட்டனர். 'நான் அவ்விதம் நடந்து கொள்ளவில்லையே' என்று நான் கூறினேன். 'இல்லை நீங்கள் அவ்விதமே நடந்து கொண்டீர்கள்' என உமர் அவர்கள் கூறினர். நான் 'தாங்கள் வந்தது தெரியாதே, எனக்கு சலாம்

சொன்ன விஷயம் கூட இப்பொழுது நீங்கள் வந்து கேட்டபின் தான் தெரியும்' என்று கூறினேன்.

''அப்பொழுது அபூபக்ர் அவர்கள் 'இப்படித்தான் நடந்திருக்க வேண்டும். நீங்கள் ஏதேனும் சிந்தனையில் இருந்திருப்பீர்கள்'' என்று கூறினர். ''ஆமாம், நான் மிகவும் ஆழ்ந்த சிந்தனையிலே தான் மூழ்கி யிருந்தேன்.'' என்று நான் கூறினேன். ''அது என்ன சிந்தனை?'' என்று என்னைப் பார்த்து அபூபக்ர் அவர்கள் கேட்டனர். ''அல்லாஹ்வின் தூதர் அவர்கள் நம்மை விட்டுப் பிரிந்து (போய்) விட்டார்கள். இந்த வேலை யின் ஈடேற்றம் எதன் மூலம் இருக்கிறது என்பதைக் கேட்டுத் தெரிந்து கொள்ள வில்லையே என்னும் சிந்தனையில் தான் நான் மூழ்கியிருந் தேன்'' என்று நான் சொன்னேன். அதைக் கேட்டு அபூபக்ர் அவர்கள், 'நான் அதனை முன்பே கேட்டு வைத்திருந்தேன்' என்று கூறினர்.

''என் அன்னையும் தந்தையும் தங்களுக்கு அர்ப்பணமாகட்டும்! மார்க்கத்துடைய எல்லாக் காரியங்களிலும், தாங்கள் முந்தியிருப்பது போல், இதைக் கேட்பதற்கும் தாங்களே தகுதி வாய்ந்தவர்களாய் இருக்கிறீர்கள்'' என்று நான் சொன்னேன். அதற்கு அபூபக்ர் அவர்கள், நான் அல்லாஹ்வின் தூதர் அவர்களிடம் 'ஈடேற்றம் பெற வழி என்ன?'' என்று கேட்டேன். ''என் தந்தை அபூதாலிப் அவர்களின் இறப்பு நேரத்தில் நான் சமர்ப்பிக்க அவர்கள் மறுத்த அந்தத் தூய திருக் கலிமாவாம் 'லாஇலாஹ இல்லல்லாஹ்' என்பதே 'ஈடேற்றம் பெறும் சாதனமாகும்' என அல்லாஹ்வின் தூதர் அவர்கள் அறிவித்தார்கள்'' எனக் கூறினார்கள்.

இந்தச் சிறப்புகளுடன் அபூபக்ர் (ரலி) அவர்களை இன்னொரு சிறப்பும் இணைத்திருந்தது. அவர்களின் குடும்பத்தினர் நான்கு தலை முறையினர், அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்குத் தோழர்களாய் இருக்கும் அரும் பேற்றை அடைந்திருந்தனர். அபூபக்ர் (ரலி) அவர் களின் தந்தை அபூகுஹாஃபா, அவர்களின் புதல்வர் அப்துர் ரஹ்மான் அவர்கள், பெயரர் அபூ அதீக்முகம்மது ஆகிய அனைவரும் சஹா பாக்கள் என்னும் அண்ணல் நபி (ஸல்) அவர்களின் சகாக்கள் ஆவர்.

இவ்வித முதல் தகுதியுடன், இரண்டாவது தகுதியும் அபூபக்ர் (ரலி) அவர்களுக்கே அமைந்திருந்தது என்பதைத் தான் அல்லாமா முகம்மது இக்பால் (ரஹ்) அவர்களின் இந்த உரை உணர்த்துகிறது; ''இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டவர்களில், இரண்டாவது மனிதர், ஹிஜ்ரத் சென்ற போது, தவ்ர் குகையில் அல்லாஹ்வின் தூதர் அவர் களுடன் இருந்த இரண்டாவது மனிதர், பத்ருப் போர்க் களத்தில்

அல்லாஹ்வின் தூதர் அவர்களை விட்டு, அகலாதிருந்த இரண்டாவது மனிதர், அல்லாஹ்வின் தூதர் அவர்களுக்கு சமீபமாக இரண்டாவதாக அடக்கம் செய்யப்பட்டிருக்கும் மனிதர் அபூபக்ர் (ரலி) அவர்களே.''

அபூபக்ர் (ரலி) அவர்களைக் கொண்டு மட்டுமல்ல, அவர்களின் குடும்பத்தினரைக் கொண்டும், அடைந்த நன்மை இது: ஒரு பிரயாணத்தின் போது ஆயிஷா (ரலி) அவர்களின் ஆபரணம் ஒன்று அறுந்து விழுந்துவிட்டது. அதனைத் தேடுவதற்காக அண்ணல் நபி (ஸல்) அவர்களும், மற்றவர்களும் அங்குத் தங்க வேண்டியதாயிற்று. ஆனால் அதுவோ, தண்ணீர் கிடைக்காத இடம். மக்கள் அபூபக்ர் (ரலி) அவர்களிடம் வந்து, ''ஆயிஷா என்ன செய்துவிட்டார் என்பதை நீங்கள் பார்க்கவில்லையா? அல்லாஹ்வின் தூதர் அவர்களை நிறுத்தி விட்டார். மக்கள் தண்ணீர் உள்ள இடத்தில் இல்லை. அவர்களிடமும் தண்ணீர் இல்லை'' என்று கூறினர்.

இது அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு ஆத்திரத்தை உண்டு பண்ணியது. அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்கள் இருக்கும் இடம் வந்தனர். அப்பொழுது அண்ணல் நபி (ஸல்) அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களின் தொடை மீது தலை வைத்து உறங்கிக் கொண்டிருந்தார்கள். அபூபக்ர் (ரலி) அவர்கள், ஆயிஷா (ரலி) அவர்களைப் பார்த்து ''அல்லாஹ்வின் தூதர் அவர்களை நிறுத்தி விட்டாயா? அவர்கள் தண்ணீர் உள்ள இடத்தில் இல்லை. அவர்களிடத்திலும் தண்ணீர் இல்லை.'' என்று கூறிக் கண்டித்து விட்டு, ஆயிஷா (ரலி) அவர்களின் இடுப்பில் தாம் கையால் குத்தினர். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் விழித்துக் கொள்வர் என ஆயிஷா (ரலி) அவர்கள் குத்தைப் பொறுத்துக் கொண்டு அசையாதிருந்தனர். அண்ணல் நபி (ஸல்) அவர்கள் விழித்தெழுந்ததும், அல்லாஹ் 'தயம்மும்' பற்றிய வசனத்தை அருளினான். இதை அறிந்த உஸைர் இப்னுஹுளைர் (ரலி) அவர்கள், ''அபூபக்ரின் குடும்பத்தாரே! இது உங்களின் முதல் பரக்கத் அல்ல'' என்று கூறினர். தயமும் ஓர் அருள் என்பதையும் இவ்வித அருள்கள் அபூபக்ர் (ரலி) அவர்களைக் கொண்டும், அவர்களின் குடும்பத்தாரைக் கொண்டும், முஸ்லிம்களுக்கு ஏற்பட்டிருக்கின்றன என்பதையும் தான் இந்த உரை உணர்த்துகிறது.

## மணவாழ்க்கையும் மக்களும்

அபூபக்ர் (ரலி) அவர்கள் நான்கு முறை திருமணம் செய்து கொண்டனர். இருமுறை அறியாமைக் காலத்தில், இருமுறை

இஸ்லாமியக் கோலத்தில். அறியாமைக் காலத்தில் அவர்கள், மணம் புரிந்து கொண்ட பெண்கள் இருவர். ஒருவர் கத்தீலா, மற்றவர் உம்மு ரூமான் (ரலி). கத்தீலா இஸ்லாத்தை ஏற்க வில்லை. உம்மு ரூமான் (ரலி) இஸ்லாத்தை ஏற்றுக் கொண்டனர். கத்தீலா அபூபக்ர் (ரலி) அவர்களின் இல்லத்தை விட்டு வெளியேறினார். உம்மு ரூமான் (ரலி) அவர்கள், அபூபக்ர் (ரலி) அவர்களின் உள்ளத்தினுள்ளே குடியே றினார். மதீனா வந்த ஆறாம் ஆண்டில் உம்மு ரூமான (ரலி) அவர்கள் உயிர் துறந்தனர். அல்லாஹ்வின் தூதர் அவர்களாலேயே மண்ணறைக்குள் அடக்கப் பெறும் பேறு அடைந்தனர்.

இஸ்லாத்திற்கு வந்த பின், அபூபக்ர் (ரலி) அவர்கள் மணந்து கொண்ட பெண்கள் இருவர். ஒருவர் ஆமிஸின் புதல்வி அஸ்மா (ரலி) மற்றவர் காரிஜாவின் மகள் ஹபீபா (ரலி). மதீனா வந்ததும் அவர்கள் ஹபீபா (ரலி) அவர்களை மணந்தனர். உம்முரூமான் (ரலி) அவர்கள் இறந்ததும் அவர்கள் அஸ்மா (ரலி) அவர்களை மணம் புரிந்து கொண்டனர்.

அபூபக்ர் (ரலி) அவர்கள் ஆறு குழந்தைகள் பெற்றனர். அவர்களில் மூவர் ஆண், மூவர் பெண். புதல்வர்களில் மூத்தவர் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் உம் முரூமான் (ரலி) அவர்களுக்குப் பிறந்தவர்கள். இரண்டாவது புதல்வர் அப்துல்லாஹ் (ரலி) அவர்கள் கத்தீலாவுக்குப் பிறந்தவர்கள். அவர்கள் தாயிப் போரில் உயிர் துறந்தனர். மூன்றாவது புதல்வர் முகம்மது (ரலி) அவர்கள் அஸ்மா (ரலி) அவர்களுக்குப் பிறந்தவர்கள். புதல்விகளில் மூத்தவர் அஸ்மா (ரலி) அவர்களின் அன்னை கத்தீலா. அவர்கள் சுபைர் (ரலி) அவர்களுக்கு மணம் செய்து கொடுக்கப்பட்டனர். இரண்டாவது புதல்வி ஆயிஷா (ரலி) அவர்கள் அல்லாஹ்வின் தூதரின் அன்பிற்குரிய மனைவியாய் இருக்கும் அரும் பேறு பெற்றனர். ஆயிஷா (ரலி) அவர் களின் அன்னை உம்முரூமான் (ரலி), மூன்றாவது மகள் உம்முகுல்தாம். அவர்களின் அன்னை ஹபீபா (ரலி). (உம்முகுல்தூமே அபூபக்ர் (ரலி) அவர்கள் இறந்த பின் பிறந்தவர்கள்.)

புதல்வர்களில் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களுக்கும், முகம்மது (ரலி) அவர்களுக்குமே மக்கள் இருந்தனர். அப்துல்லாஹ் (ரலி) அவர்களுக்கு மக்கள் கிடையாது.



# 6. புனிதர்

தம்முடைய தவணை முடிவதற்குள் இஸ்லாத்தையும், அதன் இளைய அரசையும் நிலைநிறுத்துவதில் ஓய்வதில்லை என்னும் உறுதி எடுத்துக் கடமை புரிந்ததில் களைத்து, இளைத்துப் போயிருந்த கலீபா அவர்களுக்கு, இப்பொழுது வயது அறுபத்து மூன்று ஆகியிருந்தது. ஆருயிருக்கும் ஆயிரம் மடங்கு மேலான தம் அருமைத் தலைவருடன் ஒரு நாள் இரவு அவர்கள் மக்கா விட்டுப் புறப்பட்டு மதீனா வந்து சேர்ந்து இப்பொழுது பதின்மூன்று ஆண்டுகள் கழிந்திருந்தன. அன்று ஜமாதுல் ஆகிர் மாதத்தில் ஏழாம் நாள் கலீபா என்றும் போல் தான் அன்றும் குளித்தார்கள். அன்று மதீனாவில் சற்று குளிராய் இருந்தது. எத்தனையோ பருவ மாறுதல்களையும், வாழ்வு மாறுதல்களையும் பார்த்த உடம்பு தானே என்று அன்று கலீபா அவர்கள் தம் உடம்பைப் போர்த்திக் கொள்ளவில்லை. அதனால் அவர்களுக்கு உடனே சுரம் வந்து விட்டது. இதற்கு முன்பும் வந்தது தானே அது. எனவே தானாகவே போய்விடும் என எண்ணி அவர்கள் அதனைப் பொருட்படுத்தவில்லை. ஆனால், அந்த சுரம் இதற்கு முன் வந்த சுரத்திற்கு மாறுபட்டிருந்தது. அதனால் அவர்களின் உடம்பு அதிகம் சோர்ந்தது. எழுந்து நடமாடக் கூட இயலா நிலைக்கு அவர்கள் விரைவில் வந்து விட்டார்கள். எனவே அவர்கள் தொழுகைக்குத் தலைமை வகித்து நடத்தும்படி உமர் (ரலி) அவர்களைக் கேட்டுக் கொண்டனர். உமர் (ரலி) அவர்களும் அதனை அரை மனத்துடன் ஆற்றிக் கொண்டிருந்தனர்.

நாட்கள் பதினைந்து நடந்து விடுகின்றன. ஆயினும் கலீபா அவர்களின் உடல் நிலையில் ஒரு முன்னேற்றமும் ஏற்படவில்லை. நாளுக்கு நாள் அவர்கள் நலிந்து கொண்டே போனார்கள். இது அவர்களின் தோழர்கள் மனத்தை அதிகம் நைத்தது. எனவே அவர்கள் கலீபா அவர்களைக் கண்டு பதினைந்து நாட்களாகியும், பற்றிய சுரம் தணியாதிருப்பதை எடுத்துக் கூறி, ''மருத்துவரை வரவழைத்தால் என்ன?'' என்று கேட்டார்கள். எப்படியாவது உயிர் பிழைத்து எழுந்து

விட வேண்டும் என எண்ணுபவர்களாய் இருந்திருந்தால், கலீபா அவர்கள் இதற்குக் கட்டாயம் இணங்கியிருப்பர். தம் ஆருயிர்த் தலைவர் எந்த வயதில் இவ்வுலகை விட்டுப் பிரிந்தார்களோ, அந்த வயது தமக்கு ஆகியிருப்பது அவர்கள் அறியாதல்ல. எனவே, அவ் வயதில் வைத்து உலக வாழ்வை உதறிவிட அவர் களின் நெஞ்சத்தில் ஆசை நிறைந்திருந்தது. ஆயினும் அதனை மறைத்துக் கொண்டு, தம் நலனில் அக்கறை கொண்டு வந்த அந்த நல்ல நண்பர்களைப் பார்த்து, ''ஏற்கனவே மருத்துவன் என்னை வந்து பார்த்து விட்டுப் போய் விட் டானே'' என அமைதியாகப் பதில் கூறினார்கள். ஆவலுடன் தோழர் கள், ''அவன் என்ன சொன்னான்?'' என வினவியபோது, ''நான் எதை விரும்புகிறேனோ, அதை உமக்குச் செய்ய விரும்புகிறேன். நான் எதைச் செய்ய எண்ணுகிறேனோ, அதைச் செய்து முடிக்கும் ஆற்றல் உள்ளவன் என்றான்'' என்று அவர்கள் விடை பகர்ந்தார்கள். அத்துடன் அவர்கள் இக்கருத்தைக் கொண்ட கவிதையையும் சொல்லிக் காட்டினார்கள்.

''ஆட்டு மந்தைகளுக்கோ, ஒட்டகைக் கூட்டங்களுக்கோ சொந்தக்காரர்களாய் இருப்பவர்கள், ஒரு நாள் அவற்றைத் தம் வாரிசுகளுக்கு விட்டு விட்டுத்தான் செல்லவேண்டும்.''

''எந்தப் பிராணியும், அவர் எங்கு அலைந்து திரிந்தாலும் எவ்வளவு தொலை சென்றாலும், திரும்பத்தான் வேண்டும். இறப்பின் பாதையை எதிர்பார்த்துக் கொண்டு, அதிலிருந்து திரும்புவது என்பது (அறவே) கிடையாது.''

இந்தக் கவிதையின் கருத்து என்ன என்பதையும், கலீபா குறிப் பிடும் மருத்துவன் எவன் என்பதையும் வந்த தோழர்கள் விளங்கிக் கொள்கின்றனர். அந்த மருத்துவன் கூறியதை அறிந்ததும், அவர்கள் மௌனமாகியும் விடுகின்றனர். மற்றவர்கள் கைவிடும் போது, கை பிடிப்பவன் அல்லவா அவன்? அவன் கைபிடித்து விட்டால், மற்ற வர்கள் கைவிட்டு விட வேண்டியது தானே. இதனைத் தோழர்களும் அறிந்து கொள்கின்றனர். கலீபாவும் தெரிந்து கொள்கிறன்றனர். இதன்பின் கலீபா அவர்களின் சிந்தனை முழுதும் தமக்குப்பின் கலீபாவாக எவரைத் தேர்ந்தெடுப்பது என்பதிலேயே சுழல ஆரம்பிக் கிறது. அல்லாஹ்வின் தூதர் அவர்கள், உயிர் வாழும்போதே அவர் களின் கலீபாவாக எவர் வருவது என்பது தீர்மானிக்கப்படாததால், ஏற்படவிருந்த விபரீதம் அவர்களுக்கு நினைவு வருகிறது. கலீபாவாக எவர் வருவது என்பதில் மனித பலவீனம் ஆடிக் காட்டிய விளை யாட்டும், அவர்களின் மனத்தில் நிழலாடுகிறது.

எனவே அவர்கள் தாம் உயிருடன் இருக்கும் போதே உயர்ந்த அப்பதவிக்கு ஏற்ற ஒருவரை எல்லோரும் ஏற்றுக் கொள்ளும் விதம் தேர்ந்தெடுத்து விடவேண்டும் எனத் தீர்மானித்தார்கள். அவ்விதம் தாம் செய்யத் தவறினால் அப்பதவிக்கு ஏற்படும் போட்டி உள் நாட்டுப் போரையே உண்டு பண்ணி விடலாம் எனவும், அவர்கள் அஞ்சினார்கள். எனவே, அதுபற்றித் தாமும் சிந்தித்தார்கள். தம்மைச் சந்தித்த அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃபு (ரலி), உதுமான் (ரலி), சயித் இப்னு ஜைத் (ரலி), உஸைர் இப்னு ஹுளைர் (ரலி) ஆகியோரிடமும் ஆலோசனை கேட்டார்கள். அகதிகளான முஹாஜிரீன்களின் ஆலோசனையையும் வேண்டினார்கள். ஆதரவாளர்களான அன்ஸார்களின் ஆலோசனையையும் கோரினார்கள். ''என்னுடைய நிலையைப் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள். எனக்குப் பின்னால் உங்களின் நிர்வாகத்தைச் செம்மையாக நடத்த ஒருவரை ஏற்படுத்திக் கொள்வது அவசியம். உங்களுக்குள் ஆலோசனை செய்து ஏற்படுத்திக் கொண்டாலும் சரி, நீங்களே ஆலோசனை செய்து எனக்கு (ஒருவரைத் தேர்ந்தெடுக்க) அனுமதி அளித்தாலும் சரி'' என அவர்கள் கூறினார்கள்.

அதுகேட்டு உதுமான் (ரலி) அவர்கள் உரைத்தார்கள் : ''உமருடைய உள் அழகு அவரின் வெளித் தோற்றத்திற்கு மாற்றமானது. அவர் தோற்றத்தில் அச்சம் தருபவராகக் காணப்படுகிறார். ஆனால் அவர் கனிவும் இரக்கமும் மிகுந்தவர். அவருடைய தகுதியை எங்களில் எவரும் எய்த முடியாது.''. அலீ (ரலி) அவர்களும், உதுமான் (ரலி) அவர்களின் கருத்திற்குத் ஒத்த கருத்தையே உரைத்தனர்.

உஸைர் இப்னு ஹுளைர் (ரலி) அவர்கள் கூறினார்கள் : ''உங்களுக்கும் அடுத்தபடியாக உமரைத்தான் நான் மிகவும் சிறந்தவர் என்று கருதுகிறேன். அவரை விட அப்பதவிக்குச் சிறந்தவர் வேறு எவரும் இல்லை.''

இவ்விதம் ஏறத்தாழ எல்லோரும் அடுத்த கலீபாவாக வர உமர் (ரலி) அவர்களே உகந்தவர்கள் என்னும் தம் அகக் கருத்தைக் கலீபா அவர்களிடம் கூறி, ''நீங்களே தேர்ந்தெடுத்து விடுங்கள்!'' என்று கேட்டுக் கொண்டனர். அது கேட்டுக் கலீபா அவர்கள், உமர் (ரலி) அவர்களைக் கலீபாவாக ஆக்குவதற்கான சாஸனத்தை எழுதும்படிப் பணித்தனர்.

ஆங்கிருந்த உமர் (ரலி) அவர்கள் உடனே, ''இவ் வேலையைத் தாங்கும் சக்தி எனக்கு இல்லையே'' என்று கூறினர். அது கேட்டுக் கலீபா அவர்களுக்குக் கடும் கோபம் வந்து விட்டது. ''எடுங்கள் என் வாளை! அவர் அல்லாஹ்வுடைய தூதரின் கலீபாவுடைய உத்தரவை

ஏற்றுக் கொள்ள மறுக்கிறார்'' என்றார்கள் கலீபா. அதைக் காதுற்றதும் உமர் (ரலி) அவர்கள் தம் வாயைத் திறக்கவில்லை.

உமர் (ரலி) அவர்களின் தேர்வை ஏற்க அப்துர் ரஹ்மான் இப்னு அவ்ஃபு (ரலி) அவர்களின் மனமும் சிறிது மறுத்தது. அவர்களும் இன்னும் சிலரும் உமர் (ரலி) அவர்களின் கடின இயல்பு பற்றிய தம் அச்சத்தைக் கலீபா அவர்களிடம் அறிவித்தனர். அவர்கள் கூறுவதில் ஓரளவு உண்மை இருப்பதை அறியாதவர்கள் அல்லர் கலீபா அவர்களும். தம் காலுக்கடியில் என்ன நிகழ்ந்து கொண்டிருக்கிறது என்பதை அறிந்து கொள்ளாமல் ககன வெளியை அளப்பது, அவர்களின் வழக்கம் அன்று. ஆனால் உமர் (ரலி) அவர்களின் கடின இயல்பு, அவர்களுக்குக் கலீபாப் பதவி கொடுப்பதைத் தடுக்கும் அளவு அச்சம் கொள்ளத்தக்க தல்ல என்பதே அவர்களின் கருத்தாய் இருந்தது. எனவே அவர்கள் அச்சம் தெரிவித்த தோழர்களிடம், ''உமர் வளைந்து கொடா இயல்பு உள்ளவராக இருக்கிறார். கலீபா இளகிய மனம் உள்ளவராக இருப்பதால்'' என்று கூறினார்கள். அதாவது தம்முடைய இளகிய மனம், அரசாங்க விஷயங்களில் பாதகம் பண்ணிவிடாமல் பார்த்துக் கொள்ளத்தான், உமர் கடினமாக இருக்கிறார் எனக் கலீபா விளக்கினார்கள். ''எனக்கு நேரடியான அனுபவம் இருக்கிறது. நான் எவர் மீதாவது சினமுற்றால், அதனைத் தணிக்க உமர் ஆவலுறுவார். நான் எவருக்காவது விட்டுக் கொடுப்பதாயத் தெரிந்தால், கடுமையாய் இருக்கும்படி அவர் எனக்கு ஆலோசனை கூறுவார்'' என்று கலீபா எடுத்துரைத்து , ''அவரே ஆளுபவராய் ஆகும் போது நீங்கள் அவர் பற்றி அச்சப்படுபவற்றில் பலவற்றை விலக்கிவிடுவார்'' என்று உறுதிப்படுத்தினார்கள்.

இதன்பின் உதுமான் (ரலி) அவர்களிடம் உமர் (ரலி) அவர்களைக் கலீபாவாக ஆக்கும் சாஸனத்தைக் கூறத் தொடங்கினார்கள். ''அருளாளனும் அன்பாளனும் ஆகிய அல்லாஹ்வின் திருப் பெயரால்! இது அபூபக்ர் பின் அபூகுஹாஃபாவின் இறுதி ஏற்பாடாகும். எனக்குப் பின் கலீபாகவாக நான் நியமிக்கிறேன்.'' என்று தான் கூறினார்கள். உடனே அவர்களுக்கு மயக்கம் வந்துவிட்டது. உதுமான் (ரலி) அவர்கள் கலீபா அவர்களின் மன நிலையையும், கால நிலையையும் கருத்தில் கொண்டு, உமர் (ரலி) அவர்களின் பெயரைத் தாமே சாஸனத் தில் சேர்த்துக் கொண்டனர். சிறிது நேரத்தில் கலீபா அவர்களுக்கு நினைவு திரும்பியது. அவர்கள் சாஸனத்தைப் படித்துக் காட்டும்படி உதுமான் (ரலி) அவர்களிடம் உரைத்தார்கள். உதுமான் (ரலி)

அவர்கள் தாமே சேர்த்துக் கொண்டதையும் சேர்ந்துப் படித்தார்கள். அது கேட்டுக் கலீபா அவர்கள் அகமகிழ்ந்தார்கள். தம் எண்ணத்தை, அதாவது உமர் (ரலி) அவர்களின் பெயரைச் சேர்த்துக் கொண்டதைப் பாராட்டி, உதுமான் (ரலி) அவர்களை ஆசீர்வதித்தார்கள். அல்லாஹ்வைப் புகழ்ந்தார்கள்.

அதன்பின் சாஸனத்தைப் பின்வருமாறு எழுதச் சொன்னார்கள். ''அவர் (உமர்) சொல்லை கவனியுங்கள்! அவர் சொற்படி செயல் புரியுங்கள்! நான் என்னால் இயன்ற அளவு அல்லாஹ்வுக்கும், உங்களுக்கும், எனக்கும் என் கடமைகளைச் செய்ய முயன்றிருக்கிறேன். அவர் நீதியோடும், நியாயத்தோடும், நடந்து கொண்டால் மக்கள் நலனிற்காக நடவடிக்கைகள் எடுத்தால், நான் என் தேர்வில் தவறு செய்யாதவன் ஆவேன். அவர் அநியாயத்தில், அக்கிரமத்தில் ஈடுபட்டால், நான் நிரபராதி. அல்லாஹ் அறிவான். நான் நன்மையை நாடியவன் என்பதை. ஏனெனில் மறைவான விஷயங்களை அறியக் கூடியவனாக நான் இல்லை. தோற்றத்தையே நான் நம்ப வேண்டியதிருந்தது. உங்களுக்கு சாந்தி உண்டாகட்டும்! அல்லாஹ்வின் அருளும், ஆசியும் உங்களுக்கு ஏற்படட்டும்!''

இதன்பின் கலீபா இவ்விதம் கூறினார்கள், ''நான் இதுவரை உங்களுக்காகத் தேர்ந்தெடுத்த விஷயத்தில், உங்களுக்கு நன்மை செய்ததாகவே கருதுகிறேன். எவர்கள் குற்றம் புரிகிறார்களோ, அதனுடைய நாசம் அவர்கள் மீதே ஏற்படுகிறது.'' அத்துடன் அவர்கள் இந்த இறைவசனத்தையும் ஓதிக்காட்டினார்கள் : ''அக்கிரமம் செய்தவர்கள், தாங்கள் எங்கு திரும்பச் செல்ல வேண்டுமென்பதை அதிசீக்கிரத்தில் அறிந்து கொள்வார்கள். (27 : 227)

இப்பொழுது வீட்டின் வாயிலில் சில பேர் பேசும் சப்தம் கேட்டது. உடனே கலீபா தம் புதல்வர் அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்களைப் பார்த்து, ''யார் அவர்கள்? எதற்காகச் சப்தம் என்று பார்!'' என்று கூறினார்கள். அவ்வாறே அப்துர் ரஹ்மான் (ரலி) அவர்கள் வாயிலுக்குச் சென்று பார்த்துவிட்டுத் திரும்பினார்கள். ''இறுதி முறையாகத் தங்களைப் பார்க்க விரும்புவதாய்க் கூறிக்கொண்டு சிலர் வந்திருக்கின்றனர்'' என்னும் தகவலைத் தந்தார்கள். கலீபா அவர்கள் உடனே அனுமதியளித்தனர். அவர்கள் அனைவரும் உள்ளே நுழைந்தனர். அவர்களில் ஒருவரான தல்ஹா (ரலி) அவர்கள், ஆவியைக் கலீபா வேகமாக இழந்து கொண்டிருக்கிறார்கள் என்பதை அறிந்து, மறந்திடாமல், ''கலீபா அவர்களே! உங்களின் காலத்திலேயே உமர்

எங்களை எவ்வளவு கடுமையுடன் நடத்தினார் என்பதை நீங்கள் அறியவே செய்வீர்கள். உங்களுக்குப் பிறகு அவர் கலீபாவாக வரும் போது, எங்களை அவர் எவ்விதம் நடத்துவார் என்பதை அல்லாஹ் தான் அறிவான். நீங்கள் எங்களை விட்டும் என்றென்றும் நீங்கிவிடப் போகிறீர்கள். இரும்புக் கரத்துடன் எங்களை ஆளப் போகும் ஒருவரிடம் எங்களின் விதியை ஒப்படைக்கப் போகிறீர்கள். இதற்காக நீங்கள் இறைவனிடம் என்ன பதில் கூறப்போகிறீர்கள் என்பதைச் சிந்தித்துப் பார்த்துக் கொள்ளுங்கள்!'' என்று கூறினார்கள்.

அச்சுறுத்துவது போல் அமைந்த இந்தப் பேச்சைக் கேட்டதும், கலீபா அவர்களுக்குக் கடுமையான கோபம் வந்து விட்டது. இவ்விதக் கோப நிலையில் அவர்களைத் தாம் கண்டதில்லை என ஆயிஷா (ரலி) அவர்களே அறிவித்தனர். தம்மைத் தூக்கி வைக்கும்படி கலீபா அவர்கள் கட்டளையிட்டார்கள். அவர்களின் வாயிலிருந்து வேகமாக இந்தச் சொற்கள் வெடித்துக் கொண்டு விழுந்தன: ''என் அல்லாஹ் முன் தோன்றுவதற்கு நீர் என்னை அச்சப்படுத்தவா விரும்புகிறீர்? நான் அவன் முன் தோன்றும்போது, அவனிடம், 'உன் படைப்பில் மிகவும் மேலான ஒருவரை உன் மக்களை ஆளுபவராக ஆக்கியிருக்கிறேன்' என்று கூறுவேன். அல்லாஹ் மீது ஆணையாக உமர் உங்களுக்கு நல்லவராக இருக்கிறார், நீங்களோ அவருக்கு கெட்டவராக இருக்கிறீர்கள்.''

கலீபா அவர்கள் கொண்ட கோபமும், விண்ட சொற்களும் வந்தவர்கள் மனத்தில் ஓர் அற்புதத்தைச் செய்துவிடுகின்றன. கலீபா அவர்கள் தம் தேர்வு சரியானது என்பதில் இவ்வளவு உறுதியாய் இருந்தார்கள் என்றால், உண்மையில் அந்தத் தேர்வு தவறானதாய் இராது என எண்ணுகின்றனர். இந்த மாறுதலை வந்தவர்கள் மனத்தில் ஏற்படுத்தியபின், கலீபா அவர்கள் உமர் (ரலி) அவர்களின் உதார குணங்கள் பலவற்றை எடுத்துரைக்கிறார்கள். இது உமர் (ரலி) அவர்களின் தேர்வை எதிர்க்க வந்தவர்களின் இதயங்களைத் தொட்டு விடுகிறது. அவர்கள் உமர் (ரலி) அவர்களின் உயர் தன்மைகளைப் புகழ்ந்து விட்டுப் போகிறார்கள்.

தம் கருத்தை, மாற்றுக் கருத்துக் கூறியவர்களும் ஏற்றுக் கொண்டதும், கலீபா அவர்கள் தம் வீட்டின் முகப்புக்குத் தம் அருமை மனைவி அஸ்மா (ரலி) அவர்களின் தாங்கலில் வந்து நின்று கொண்டார்கள். பள்ளியின் முற்றத்தில் திரண்டு நின்ற மக்களுக்குத் தம்முடைய மரண சாஸனத்தைப் படித்துக் காட்டும்படி உதுமான் (ரலி) அவர்களிடம் உரைத்தார்கள். பிறகு மக்களைப் பார்த்துப் பின்வரு

மாறு பேசினார்கள் : 'மக்களே! நான் எனக்குப் பின் உங்களின் ஆட்சியாளராக ஆக்கப் போகும் ஆளை நீங்கள் ஏற்றுக் கொள்வீர்களா? புரிந்து கொள்ளுங்கள்! பிரமாணம் செய்து பகர்கிறேன். இந்த விஷயம் பற்றித் தீர்மானிப்பதில் நான் எவ்விதச் சிரமத்தையும் எடுக்காமல் இருக்கவில்லை, நான் அப்பதவிக்கு என் உறவினர் ஒருவரை நியமிக்க வில்லை. எனக்குப் பின் கலீபாவாக வர நான் உமர் பின் கத்தாபைத் தேர்ந்தெடுத்திருக்கிறேன். நான் சொல்வதைக் கவனியுங்கள்! என் ஏற்பாட்டை ஏற்றுக் கொள்வீர்களா?''

கலீபா அவர்களின் இந்தச் சொற்கள் மந்திரச் சொற்களைப் போல் வேலை செய்தன. அல்லாஹ்வின் தூதர் அவர்கள் இறந்த பின் ஏற்பட்ட இன்னல் நடுவில், கணமும் கண் இமையாமல் கடமை புரிந்துவிட்டு, இன்னும் சில நாழிகைப் பொழுதிற்குள் இறப்பைத் தழுவிக் கொள்ளப் போகும் தங்களின் அருமைத் தலைவர், இஸ்லாத்திற்கு ஏற்றதும், முஸ்லிம்களுக்கு ஏற்றம் அளிக்கக் கூடியதுமான ஒன்றையே புரிவார்கள் என்னும் உறுதியைத் தம் உள்ளத்தில் கொண்டிருந்த மக்கள் அடுத்த கணம் உரத்த குரலில் முழங்கினார்கள். ''நீங்கள் கூறியதை நாங்கள் கேட்டோம். உங்களின் நியமனத்தையும், உங்களின் எல்லா ஏற்பாடுகளையும் ஏற்றுக் கொள்கிறோம்.

தன்னலம் மறுத்துப் புரிந்த தொண்டு கணப்பொழுதில் மக்களின் இணக்கத்தைப் பெற்றுத் தர மகிழ்ந்தாலும் கலீபா மனத்தில் கவலை இல்லாமல் இல்லை. அவர்கள் உமர் (ரலி) அவர்களை அருகே அழைத்தார்கள். அப்பொழுதும் உமர் (ரலி) அவர்கள், ''அப்பதவி மீது எனக்கு விருப்பமில்லை'' என்று கூறி இப்பொழுதாவது தப்பித்துக் கொள்ளலாம் எனப் பார்த்தார்கள். அது கேட்டுக் கலீபா அவர்கள், ''அப்பதவி உம்மை விரும்புகிறது'' என்று அறிவித்துவிட்டுத் தெரிவித்தார்கள். ''தேர்வில் எனக்குச் சரியான வழிகாட்டும் படியும், முஸ்லிம்களை ஒற்றுமை, இணக்கம் என்னும் வழியில் வழிகாட்டும் படியும் நான் அல்லாஹ்விடம் இறைஞ்சினேன். அவன் எனக்குச் சரியான வழிகாட்டி விட்டான்.''

இதன்பின் கலீபா அவர்கள் உமர் (ரலி) அவர்களுக்கு அதிக நேரம் அறிவுரை பகர்ந்து கொண்டிருந்தார்கள். அந்த அறிவுரைகளுக்கு இடையே உமர் (ரலி) அவர்களைக் கண்டிக்கும் சொற்களும் கலந்து கேட்டுக் கொண்டிருந்தன. ''உமரே! நான் கூறிய பிரகாரம் நடந்தால் இறப்பை விட அதிகமாக வேறு எதனையும் நீர் நேசிக்க மாட்டீர். அதற்கு மாறாக நடந்தால் இறப்பை விட அதிகமாக வேறு எதனையும் நீர் வெறுக்க மாட்டீர். இறப்பின் அச்சத்திலிருந்து மீளவும் உம்மால்

முடியாமல் போய்விடும்''. இந்தச் சொற்களில் இறங்கி, அவற்றின் அடியில் கிடந்த கருத்து முத்துக்களைக் கையில் எடுத்ததும் உமர் (ரலி) அவர்கள் அதிர்ந்தார்கள். அவர்களின் விழிகளிலிருந்தும் நீர் வழிந்தோடியது. கலீபா அவர்களிடம் விடை பெற்றுக் கொண்டு அங்கிருந்து கிளம்பும் போது உமர் (ரலி) அவர்கள் தம் தோள்கள் மீது ஏற்றப்பட்டிருக்கும் சுமையை உணர்ந்தார்கள். இந்தச் சுமையைத் தவிர்க்கத் தாம் பண்ணிய முயற்சி பலன் அளிக்காமல் போனது அவர்கள் நெஞ்சத்தில் நிழலாடியது. ஒருமுறைஅவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்களின் முன் வைத்து இவ்விதம் சொல்லியிருந்தார்கள்: ''எனக்குக் கலீபா பதவி தேவை இல்லை. ஆனால் கிலாபத்திற்குத் தங்களைப் போன்ற ஒருவர் தேவை.கலீபாப் பதவி சிறப்பாக ஒளி ரும், இன்னும் நீங்களே அதில் இருந்தால். அதன் புகழும், பெருமையு ம் ஓங்கும் நீங்களே கலீபாவாகஇருந்தால். இன்னொருமுறை அவர்கள் அபூபக்ர் (ரலி) அவர்கள் பின் வைத்து இவ்விதம் பகர்ந்திருந்தார்கள் : அபூபக்ர் அவர்களின் வாழ்க்கை இத்தகையதாய் இருக்கிறது. அவர்களின் உயர்ந்த முன்மாதிரியை அவர்களுக்குப் பின் வருபவர் களால் பாவனை செய்வது கூட முடியாததாய் இருக்கும்.''

தேர்ந்தெடுத்தவரை விட்டும் தேர்ந்தெடுக்கப்பட்டவரை விட்டும், அறிவான இந்தத் தேர்வைச் செய்த அச்சம் அகன்றுவிட வில்லை. எனவே இதன் பின்பும் கலீபா அவர்கள் இவ்வாறு அல்லாஹ்விடம் இறைஞ்சினார்கள்: ''இறைவனே; நான் இந்தத் தேர்வை முஸ் லிம்களின் நன்மைக்காகவும், அவர்களுக்கிடையில் பிளவு ஏற்படாது இருப்பதற்காகவும் செய்திருக்கிறேன். நான் செய்திருப்பதை நீ நன்கு அறிவாய். ஒருவருக்கு ஒருவர் கலந்தாலோசனை செய்த பிறகே எனக்குப் பின் கலீபாவாக எவர் வரவேண்டும் என்பதைத் தீர்மானித் திருக்கிறேன். அவர், அவர்களில் மேலானவர், வன்மையானவர், அவர்கள் நேர் வழியில் செல்ல வேண்டும் என்பதில் அதிக ஆவல் உள்ளவர். என் பற்றிய வரையில் எனக்கு உத்தரவுகள் போட்டு விட்டாய். எனவே அவரை நான் உன் காவலில் விடுகிறேன். அவர் உன் அடியார்; முற்றிலும் உன் கையில் இருப்பவர். இறைவனே! அவரின் அதிகாரிகளை நேர் வழியில் வைத்திருப்பாயாக! எனக்குப் பின் வருபவரை பக்தியுள்ள கலீபாவாக ஆக்குவாயாக! அவரின் மக்கள் மீது அமைதியைப் பொழிவாயாக!''

பிற்காலத்தில் வெளியாகப் போகும் பெருந்திறனை முற்கூட்டியே அறிந்து மனிதர்களை முக்கிய பொறுப்புகளில் நியமித்தவர்கள் மூவர்

என்று கூறப்படுகிறது. அவர்களில் ஒருவர், நபி 'யூசுப்' (அலை) அவர்களின் திறனை உணர்ந்து அவர்களை அமைச்சராக ஆக்கிய எகிப்து நாட்டின் அஸீஸ். இரண்டாமவர், நபி மூஸா (அலை) அவர்களின் திறனை உணர்ந்து அவர்களுக்கு அடைக்கலம் கொடுக்கும் படித் தம் தந்தையிடம் கூறிய நபி ஷுஐப் (அலை) அவர்களின் மகள். மூன்றாமவர், உமர் (ரலி) அவர்களின் திறனை உணர்ந்துஅவர்களைத் தமக்குப் பின் கலீபாவாக ஆக்கிய அபூபக்ர் (ரலி) அவர்கள்.

அபூபக்ர் (ரலி) அவர்களை உமர் (ரலி) அவர்கள் அடுத்த கலீபா வாக தேர்ந்தெடுத்ததில் வெளிப்படுவை உமர் (ரலி) அவர்களின் திறமை மட்டுமல்ல, அபூபக்ர் (ரலி) அவர்களின் திறனும் ஆகும். அண்ணல் நபி (ஸல்) அவர்களே இவ்விருவரையும் இணைத்துப் புகழ்ந்து அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு அடுத்தவர் உமர் (ரலி) அவர்கள் தாம் என்பதை உணர்த்தியுள்ளனர். அதை நிலை நிறுத்தும் நிகழ்ச்சி இது:

தபூக்போருக்குப் போகும் போது ஒரு நாள் இரவு அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உட்பட, அனைவரும் நன்கு உறங்கிவிட்டனர். சூரிய உதயம் ஆனபிறகே உமர் (ரலி) அவர்களின் தக்பீர் ஒலிகேட்டு, அனைவரும் தம் உறக்கத்திலிருந்து விழித்தெழுந்தனர். உடனே அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உறக்கம் உதறி எழுந்தனர். அந்த இடத்தை விட்டு அகன்று, தாம் தயாராய் வைத்திருந்த தண்ணீர் கொண்டு உளுச்செய்து விட்டுத் தொழுதனர். இது அங்கிருந்தவர்களை வியப்படையச் செய்தது. அவர்கள் தங்களுக்குள் இது பற்றிப் பேசிக் கொண்டனர். இது அண்ணல் நபி (ஸல்) அவர்களுக்குத் தெரிந்தது. அவர்கள், ''என்னை விட்டு விட்டு, என்ன பேசுகிறீர்கள்?'' என்று கேட்டனர். அதற்கு அவர்கள், ''சூரியன் உதயமான பின் தொழுவது சரிதானா என நாங்கள் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கிறோம்'' என்று கூறினர். அதைக் கேட்டு அண்ணல் நபி (ஸல்) அவர்கள், கீழ்வரும் அறிவுரையை அவர்களுக்கு வழங்கினர்: ''நீங்கள் பின் தொடர்வதற்கு நான் ஓர் உதாரணம் இல்லையா? நீங்கள் சரியான நேரத்தில் காலைத் தொழுகையைத் தொழத் தவறியது போலவே, நானும் தொழத் தவறிவிட்டேன். காலைத் தொழுகை தொழக்கூடாது என வேண்டு மென்றே நாம் நிச்சயமாக உறங்கவில்லை. நாம் வேண்டுமென்றே செய்திருந்தால் நிச்சயமாக அது ஒரு தவறு தான்; நாம் நம்மை அறியாமல் உறங்கிவிட்டோம். உறக்கத்திலிருந்து எழுந்தவுடனேயே அதனைத் தொழுது விடுவது நமக்கு உகந்தது. அது உரியநேரத்தில் தொழப்பட்ட தொழுகையாகவே கருதப்படும். தாமதித்துத் தொழப்

பட்ட தொழுகையாகக் கருதப்படமாட்டாது.'' அறிவான இந்தஅறிவு ரையை வழங்கிவிட்டு அவர்கள் கூறினார்கள்: ''ஒரு நாள் வரும். அப்பொழுது அல்லாஹ்வின் தூதர் உங்களுடன் இருக்க மாட்டார். அப்பொழுது நீங்கள் அபூபக்ரையும் உமரையும் பின்பற்றினால் நீங்கள் வழி தவறிப் போய்விடமாட்டீர்கள்.''

## இறுதி ஏற்பாடுகள்

இவ்வித அறிவான தேர்வைச் செய்த கலீபா அவர்களின் கவனம் இப்பொழுது பைத்துல்மால் என்னும் பொதுநிதியிலிருந்து தாம் இது வரை பெற்றிருக்கும் பணம் விஷயத்தில் திரும்புகிறது. அந்தப் பணம் ஆற்றிய பணிக்கு அன்பளிப்பாகப் பெறப்பட்டதென்றாலும், அதுவும் தம் உயிர் போயவிடுமுன் பொது நிதிக்குப் போய்ச் சேர்ந்து விட வேண்டும் எனக் கலீபா அவர்கள் கவலைப்பட்டார்கள். அல்லாஹ் வையும், அவன் தூதரையும் தமக்குப் போது மென வைத்துக் கொண்டு தபூக் போருக்குத் தம் பொருள்களையெல்லாம் வாரிக்கொடுத்த வள்ள லாகிய அவர்களின் மனத்தைப் பொது நிதியிலிருந்து பணம் பெறுவது முள்ளைப் போல் குத்திக் கொண்டிருந்தது. அதனால் தான் அதனைத் திருப்பிக் கொடுத்துவிடவேண்டும் என அவர்கள் தீர்மானித்தார்கள்.

இஸ்லாமியக் கலீபாவாகி அரபு அவனியை ஆளுபவராக மாறிய நிலையிலும், உழைத்து உண்பதே உகந்தது என அவர்கள் எண்ணினர். எனவே கலீபாவாகி ஆறுமாதங்கள் வரை கூடத் துணி வாணிபம் புரிவ தற்காகக் கடைத் தெருவுக்குத் துணிகளைத் தம் தோளில் தொங்க விட்டுக் கொண்டு சென்று கொண்டிருந்தனர். அந்த வாணிபத்தில் கிடைக்கும் இலாபத்தையும், அவர்கள் பொது நிதியில் கொண்டு போய்ச் சேர்க்க விரும்பினர். ''கலீபாவாக இருக்கும்போது கிடைக்கும் இலாபமும், பொதுநிதியில் சேர்க்கப்பட வேண்டியதே'' என்பதே அவர்களின் அபிப்பிராயமாக இருந்தது. துணிகளுடன் கடை வீதிக்குச் செல்வதைக் கண்ட தோழர்கள் வியப்புற்று ''எப்படி நீங்கள் வாணிபம் செய்ய முற்பட்டீர்கள்? முஸ்லிம் சமுதாயத்தின் மாபெரும் பொறுப்பு உங்களிடம் ஒப்படைக்கப்பட்டிருக்கிறதே, இந்நிலையில் துணி மூட்டைகளைச் சுமந்து கொண்டு கடை வீதிக்குக் கிளம்பி விட்டீர் களே. இது நியாயமா? உங்களுடைய பதவிக்கு இது அழகாகுமா?'' என்று கேட்டார்கள்.

''எனக்கு மனைவி மக்கள் இருக்கிறார்கள். அவர்களைப் பட்டினி யில் துன்புறச் செய்வது என்ன நியாயம்? வள மிக்க வாழ்வை

அவர்களுக்கு அளிப்பது எனக்குள்ள கடமை அல்லவா? அந்தக் கடமையை நிறைவு செய்யாத நான் மா பெரிய முஸ்லிம் சமுதாயத்தின் மகத்தான பொறுப்பினை எப்படி நிறைவு செய்வேன்? ஆறு பேர்கள் அடங்கிய சிறிய குடும்பத்தை வறுமைப் பிணியிலிருந்து விடுவிக்க முடியாத நான் கோடிக் கணக்கான மக்கள் அடங்கிய மாபெரும் குடும்பத்தை வறுமையின் கொடுமையிலிருந்து எவ்வாறு விடுவிப்பேன்? நான் என் குடும்பத்தினரைத் துன்பமுறச் செய்வேனாயின் மற்றவர்களையும் வெகு விரைவில் துன்பத்தில் ஆக்குவேன். கலீபா பதவி ஏற்றிருக்கும் நான் முன்னிலும் அதிக அக்கறையுடன் நடந்து கொள்ள வேண்டாமா? எனவே நான் என் குடும்பத்திற்கு ஆற்றவேண்டிய பணியைத் தடுத்துவிடாதீர்கள்!'' என்று அவர்கள் பதில் கூறினர்.

கடைத் தெருவுக்குத் தோளில் துணிகளுடன் அவர்கள் சென்றது உமர் (ரலி) அவர்களின் பார்வையில் ஒரு நாள் பட்டுவிட்டது. ''எங்கே கிளம்பி விட்டீர்கள் '' என்று அவர்களைப் பார்த்து உமர் (ரலி) அவர்கள் கேட்டனர். ''வாணிகம் செய்யக் கடைத் தெருவுக்குச் செல்கிறேன்'' என்று அவர்கள் பதில் கூறினார்கள். ''நீங்கள் வாணிபம் செய்து கொண்டிருந்தால் அரசாங்கத்தின் கதி என்ன ஆவது?'' என உமர் (ரலி) அவர்கள் கேட்டனர். ''என் மனைவி மக்களுக்காக நான் உழைக்க வேண்டுமல்லவா?''எனக் கலீபா அவர்கள் உமர் (ரலி) அவர்களைத் திருப்பிக் கேட்டார்கள்.

இப்பொழுது தான் உமர் (ரலி) அவர்கள் உணர்ந்தனர்: கடமைகள் மலைபோல் குவிந்திருக்கும் நிலையிலும் கலீபா தமக்காகவும் தம் குடும்பத்தவருக்காகவும் உழைக்காவிட்டால் அவர்களின் குடும்பத்தினர் உண்ண உணவின்றிப் பட்டினிதான் கிடக்கவேண்டும் என்னும் உண்மையை, உடனே அவர்கள், ''அல்லாஹ்வின் தூதர் அவர்களால் அமீனுல் உம்மத் என்னும் பட்டம் அளிக்கப்பட்ட அபூ உபைதாவிடம் செல்வோம். அவர் பொதுநிதியிலிருந்து உங்களுக்குப் போதுமான தொகையை நிர்ணயிப்பார்'' என்று கூறினர். அதற்கு அரை மனத்துடன் இணங்கி உமர் (ரலி) அவர்களுடன் சென்றார்கள் கலீபா. அபூ உபைதா (ரலி) அவர்களைக் கண்டு அவர்களிடம், ''அபூபக்ர் அவர்களுக்குக் கலீபா பதவியின் தகுதிக்கேற்ற மானியத் தொகை நிர்ணயிக்கப்பட வேண்டும்'' என உமர் (ரலி) அவர்கள் உரைத்தனர். அதைக்கேட்டு அபூ உபைதா (ரலி) அவர்கள் கலீபா அவர்களைப் பார்த்து, ''நடுத்தர நிலையிலிருக்கும் முஹாஜிர் ஒருவருக்கு என்ன தொகை நிர்ணயிக்கப்பட்டிருககிறதோ அதுதான் உங்களுக்கும். நீங்கள் கலீபாவாக

இருப்பதால் ஒரு திர்ஹம் கூடக் கூட்டியோ, குறைத்தோ கொடுக்கப்பட மாட்டாது'' என்று கூறினர்.

இந்த ஏற்பாட்டின்படி கலீபா அவர்கள் பெற்றவை ஒரு வாகனம் இரண்டு துணிகள், சாதாரண வாழ்க்கை நடத்தப் போதிய பணம் ஆகியவை தாம். இவற்றைக் கூடக் கலீபா அவர்கள் பொது நிதியி லிருந்து பெற விரும்பவில்லை. எனினும் உழைத்துத்தான் உண்ண வேண்டும் என்னும் தம் கொள்கையில் உறுதியாக இருந்ததால் அல்லாஹ்வுக்கும், அவன் தூதருக்கும், அவன் மார்க்கத்திற்கும், அவன் மக்களுக்கும் தாம் புரிவதாய்ப் பொறுப்பேற்றுக் கொண்ட கடமைகள் பாதிக்கப்படலாம் என்றே கலீபா அவர்கள் அவற்றைப் பொது நிதியிலிருந்து பெற இணங்கினார்கள். அவர்கள் பெற்ற தொகை எவ்வளவு குறைவானது என்பதையும், அதனையும் கலீபா எப்படிக் குறைத்துக் கொண்டார்கள் என்பதையும் விளக்க, அருமையான சம்பவம் ஒன்று அவர்களின் வாழ்வில் நிகழ்ந்திருந்தது!

கலீபா அவர்களும், அவர்களின் குடும்பத்தினரும் எளிய வாழ்வு ஒன்று இதற்கு மேல் இருக்க முடியாது என்று கூறத் தக்க வாழ்வையே, பொது நிதியிலிருந்து பெற்றுக் கொண்ட பொருளைக் கொண்டு நடத்தி வந்தார்கள். அதனால் அவர்கள் நல்ல உணவுகளை உண்டு நாட்கள் பல ஆகியிருந்தன. ஒருநாள் கலீபா, கடமை புரிய வீட்டை விட்டுப் புறப்படும் போது அவர்களின் அருமை மனைவி அருகில் வந்து, இனிப்புப் பண்டம் ஏதாவது வாங்கி வருமாறும், அத்தகைய பண் டங்கள அருந்தி அதிக நாட்கள் ஆகின்றன என்றும் கூறுகிறார்கள். அதனைக் காதுற்றதும் கலீபா அவர்களின் நெஞ்சம் நெகிழ்கிறது. ஆனால் அது சாத்தியப்படாது என்று அவர்களின் அறிவு சொல்கிறது. ஏனெனில் தாம் பெறும் உதவிப் பணம் உடலிற்குள் இருக்கும் உயிர் வெளியே ஓடிவிடாமல் தடுப்பதற்கு மட்டும் தான் போதுமானது என்ப தை அறிவார்கள் அவர்கள். எனவே கலீபா தம் அருமை மனைவி யைப் பார்த்து ''என்னிடம் பணம் இல்லையே'' என்கிறார்கள். அப்பொழுது அவர்களின் மனைவி, ''தாங்கள் செலவுக்குத் தரும் பணத்தில் நாள் தோறும் சிறிது மிச்சம் செய்து வந்தால் சில நாட்களில் அது இனிப்புப் பண்டம் வாங்கும் அளவு வளர்ந்து விடலாம்'' என்று, கூறுகிறார்கள். அது நல்ல யோசனையாகத் தோன்றவே கலீபா அதற்கு அனுமதி அளித்துவிடுகின்றனர்.

சில நாட்களில் ஒரு குறிப்பிட்ட அளவு காசுசேர்ந்து விடுகிறது. அதைக் கலீபாவிடம் கொடுத்து இனிப்புப் பண்டங்கள் வாங்கி

வருமாறு கேட்டுக்கொள்கிறார்கள் அவர்களின் மனைவி. காசுகளைக் கையில் பெற்றதும் கலீபா அவர்களின் மனத்தில் ஒரு சிந்தனை எழுகிறது. 'இந்தக் காசுகளை, நாம் மிச்சம் பண்ண இயன்றதென்றால் அதன் பொருள் நாம் பொது நிதியில் இருந்து இந்தக் காசுகளைநம் தேவைக்கு மேல் அதிகமாகப்பெற்றிருக்கிறோம என்பது தான். இது தேவைக்குப் போதுமானதை மட்டும் பெற்றுக் கொள்வதாகாதே. இந்தக் காசுகள் இல்லாமல் நாம் உயிர்வாழ இயன்றிருக்கும் தானே.' கலீபா அவர்கள் தம் மனைவி ஆசையுடன் அளித்த காசுகளை எடுத்துக் கொண்டு வேகமாக நடக்கிறார்கள். கடைவீதிக்கு அல்லகருவூலத் திற்கு அந்தக் காசுகளைப் பொதுநிதியில் சேர்த்த பிறகே அவர்களின் மனம் நிம்மதி அடைகிறது.

போர்களிலிருந்து கொள்ளைப் பொருள்கள் வந்து போர் போராய்க் குவியத் தொடங்கியிருந்த காலம் அது. ஆயினும் கலீபா அந்தப் பொருள்களை எல்லோருக்கும் பங்கிட்டுக் கொடுப்பார்கள். தாம் மட்டும் எடுத்துக் கொள்ளமாட்டார்கள்.

பொது நிதியிலிருந்து புதிய துணி வாங்கும் போது பழைய துணி யைப் பொது நிதிக்கே திருப்பிக் கொடுத்து விடுவது அவர்களின் வழக்கமாகும்.

கலீபாவாக இருக்கும்போது தாம் பெற்ற தொகையைக் கலீபா அவர்கள் இறக்குமுன் திருப்பிக்கொடுத்துவிட விரும்பினார்கள். அந்தத் தொகையை 6000 திர்ஹங்கள் என அறிந்ததும் அவர்கள் தம் அருமைப் புதல்வி ஆயிஷா (ரலி) அவர்களை அழைத்தார்கள். ''பொது நிதியிலிருந்து மானியம் பெற என் மனம் விரும்பவில்லை'' 'வாணிபத்தையும் செய்து கொண்டு, அரசாங்க வேலைகளையும் கவனித்தால், முஸ்லிம் சமூகத்தவருக்குப் பல சங்கடங்கள் நேரலாலம்; எனவே நீங்கள் வாணபத்தை விட்டு விட்டு உங்களின் குடும்பச் செல விற்குப் பொது நிதியிலிருந்து மானியம் பெற்றுக் கொள்ள வேண்டும்' என உமர் வற்புறுத்தியதால் தான் அதற்கு நான் சம்மதித்தேன். என்னுடைய தோட்டத்தை (விற்று) நான் இதுவரை பெற்று வந்த மானியத்திற்கு ஈடு செய்து விடுவாயாக!'' என ஆயிஷா (ரலி) அவர் களிடம் கூறினார்கள். கலீபா அவர்கள் கூறியதை ஆயிஷா (ரலி) அவர்கள், உமர் (ரலி) அவர்களிடம் உரைத்து, அத்தோட்டத்தைப் பொது நிதிக்காக எடுத்துக் கொள்ளும்படிக் கூறியபோது, உமர் (ரலி) அவர்களின் உள்ளம் உருகிப் போய்விட்டது. ''அல்லாஹ் அபூபக்ர் அவர்கள் மீது அருள் புரியட்டும்! அவர்களுக்கு எதிராக எவரும்

வாயைத் திறக்கக் கூட, அவர்கள் எந்த வாய்ப்பும் அளிக்கவில்லை'' என உமர் (ரலி) அவர்கள் உரைத்தார்கள்.

பொது நிதியிலிருந்து பெற்ற தொகைக்கு ஈடுகட்டதோட்டத்தைக் கொடுத்த பிறகும் கூடக் கலீபா அவர்களின் மனம் அமைதி பெற்று விடவில்லை. அரசாங்கத்தற்குச் சொந்தமான பொருள் வேறு ஏதேனும் எஞ்சியிருக்கிறதா என்று அவர்கள் கேட்டார்கள். ''குழந்தைகளைக் கவனித்துக் கொண்டும், வாள்களைப் பளபளப்பாக்கும் பணி புரிந்து கொண்டும் இருந்த அபிஸீனிய அடிமை ஒருவர், தண்ணீர் கொணரும் ஒட்டகைஒன்று, நீர் அருந்த உதவும் ஒரு கோப்பை, ஒன்றே கால் ரூபாய் மதிப்புள்ள ஒரு போர்வை என அவர்களிடம் சொல்லப் பட்டது. அடிமையும் அந்தப் பொருள்களும் உடனே புதிய கலீபா விடம் போய்ச் சேர வேண்டும் என அவர்கள் கட்டளையிட்டார்கள். தம்மை அடக்கம் செய்த பிறகும் ஏதாவது பொருள் அகப்படுமானால் அதனையும் உமரிடம் ஒப்படைத்துவிட வேண்டும் என ஆயிஷா (ரலி) அவர்களுக்கு ஆணையிட்டார்கள்.

கலீபா அவர்களிடமிருந்த அடிமையும், மற்றப் பொருள்களும் தம்மிடம் ஒப்படைப்பதற்காக வந்த போது, உமர் (ரலி) அவர்களால் பொங்கிக் கொண்டு வரும் அழுகையை அடக்க இயலவில்லை. இவ் விதப் பேணுதலுடன் நாமும் இருக்கவேண்டுமே என்னும் அச்சம் அதிகப்பட, ''அபூபக்ர் அவர்களே! உங்களுக்குப் பின் பதவிக்கு வருபவரின் வேலையை மிகவும் கடினமாக்கி விட்டீர்களே'' என்று உமர் (ரலி) அவர்கள் கண்ணீர் மழைக்கிடையே கூறினார்கள்.

கலீபா அவர்கள் காலமாகப் போகும் அன்றையதினம், தளபதி முதன்னா (ரலி) அவர்கள் மதீனா வந்தனர். செருமுகம் காண, சிரிய முனைக்குச் சென்ற காலித் பின் வலீத் (ரலி) அவர்களால் இராக்கில் நிறுத்தி வைக்கப்பட்ட அவர்கள், நாட்கள் சில ஆகியும் மதீனாவி லிருந்து செய்தி வராததாலும், பாரசீக அரசு படைகளைக் கொண்டு வந்து குவித்துக் கொண்டிருந்ததாலும், மதீனா புறப்பட்டு வந்தனர். வந்த பிறகு தான் அறிந்தனர். கலீபா அவர்களுக்கு நோய் கண்டிருந்தது தான் தமக்குச் செய்தி வராததற்கான காரணம் என்பதை. இறப்பை இன்னும் சின்னேரத்தில் இறுகத் தழுவிக் கொள்ளப்போகும் கலீபா, அந்நேரத்திலும் தம் கடமையைத் தள்ளிப் போட விரும்ப வில்லை. இறப்பின் பிடி இறுகிக் கொண்டிருந்தாலும், அறிவுத் தெளிவு அவர் களை விட்டும் அகன்று விடவில்லை. அதனால் அவர்கள் முதன்னா (ரலி) அவர்களிடமிருந்து இராக் நிலவரம் பற்றி முழுதும் கேட்டறிந்து

கொண்டு, கலவரம் சிறிதும் அடையாமல் நெருக்கடியைத் தீர்க்கமாகத் தெரிந்து கொண்டு, அதுபற்றி ஆழமாகச் சிந்தித்து, அறிவான ஆணையிட, உடனே உமர் (ரலி) அவர்களை அழைத்து வர ஆள் அனுப்பினார்கள்.

உமர் (ரலி) அவர்கள் வந்ததும், அவர்களைப் பார்த்து அமைதியாக அறிவித்தார்கள் : ''உமரே! நான் கூறுவதைக் கவனமாய்க் கேளும்! அதன்படிச் செயலாற்றும் ! இன்று என் வாழ்வு முடிந்து விடும் என எண்ணுகிறேன். நான் பகலில் இறந்தால் மாலை வருமுன்பும், இரவில் இறந்தால் விடிவதற்குள்ளும் முதன்னாவின் உதவிக்கு முஸ்லிம்களைத் தயார் செய்யும்! இஸ்லாத்திற்குப் பணிபுரிவதில், இறைவனுடைய ஆணைக்கு அடிபணிவதில், என் இறப்பால் ஏற்படும் வருத்தம் உம்மை ஒரு சிறிதும் தடுத்து விடக்கூடாது. அல்லாஹ் வுடைய தூதர் அவர்களின் இறப்பை விடப் பெரிய உற்பாதம் ஒன்று மனித இனத்திற்கு ஏற்பட்டிருக்க முடியுமா? அன்று நான் என்ன செய்தேன் என்பது உமக்குத்தெரியும் அல்லவா? அல்லாஹ் மீது ஆணையாகக் கூறுகிறேன். அன்று நான் மட்டும் அல்லாஹ்வின் ஆணையை நிறைவேற்றுவதில் சிறிதளவு பலவீனத்தைக் காட்டியிருந் தாலும், அல்லாஹ் நம்மை நம் அழிவை வரவழைத்துக் கொண்டதற் காகத் தண்டித்திருப்பான். குழப்பம் என்னும் நெருப்பால் மதீனா மூழ்கடிக்கப்பட்டிருக்கும். அல்லாஹ் முஸ்லிம்களுக்கு சிரியாவில் வெற்றியை வழங்கினால் காலிதை மீண்டும் இராக்கிற்கு அனுப்பும். ஏனெனில் அவர் அனுபவமிக்க அதிகாரி. மேலும் அந்நாட்டின் நிலைமைகளை மிகவும் தெளிவாகத் தெரிந்தவரும் கூட.'' இதன் பின் கலீபா, உமர் (ரலி) அவர்களைப் பார்த்து, கடுமையை மென்மையைக் கொண்டும், மிதத்தைக் கண்டிப்பைக் கொண்டும் மாற்றிக் கொள்ளும் படி ஆலோசனை கூறினர். உமர் (ரலி) அவர்கள் இறந்துகொண் டிருக்கும் கலீபா அவர்களின் ஆணைகளையும் ஆலோசனைகளையும், கவனமாய்க் கேட்டுத் தம் கருத்தில் பதித்துக் கொண்டார்கள். உண்மை யில் கலீபா இன்னும் சின்னேரத்தில் உலகைப் பிரியப் போகும் ஒருவரைப் போல் அல்லாமல், பதவியிலிருந்து விலகி ஓய்வுப் பெறப் போகும் ஒருவரைப் போலவே செயல் புரிந்தார்கள்.

இறப்பதற்குச் சற்று நேரத்திற்கு முன், கலீபா அவர்கள், ஆயிஷா (ரலி) அவர்களைப் பார்த்து, ''அல்லாஹ்வின் தூதர் அவர்களின் உடலை மூட எத்தனை துணிகள் பயன்படுத்தப்பட்டன?'' என்று கேட்டார்கள். ''மூன்று துணிகள்'' என ஆயிஷா (ரலி) அவர்கள் அறி

வித்ததும் அதே அளவு துணிகள் தமக்குப் போதும் என்றும், ஏற்கன வே பயன்படுத்திய துணிகள் இருப்பதால் புதிதாய் ஒரு துணி வாங்கிக் கொண்டாலே போதும் என்றும் கலீபா அவர்கள் கூறினார்கள். அதைக் கேட்டு ஆயிஷா (ரலி) அவர்கள், உங்களின் உடலை மூட மூன்று புதிய துணிகளே வாங்கிக் கொள்வோம்'' என்று கூறியபோது, கலீபா அவர்கள் அதற்கு இணங்கவில்லை புதிய துணிகள் உயிருடன் இருப் பவருக்கே உகந்தவை; புழுக்களுக்கும், பூச்சிகளுக்கும் உணவாகப் போகும், மண்ணாகப் போகும் உடலுக்கு அல்ல. நான் பயன்படுத்திய துணிகளைத் துவைத்து அவற்றைக் கொண்டு என் உடலைப் போர்த் துங்கள்!'' என்று கலீபா கண்டிப்புடன் கூறினார்கள்.

இதன் பின் கலீபா அவர்கள், ''அல்லாஹ்வின் தூதர் அவர்கள் எந்த நாளில் இறந்தார்கள்?'' என்று கேட்டார்கள். ''திங்கட்கிழமை'' எனத் தெரிவிக்கப்பட்டது. ''இன்று என்ன கிழமை? என்று கேட் டார்கள். ''இன்று திங்கட்கிழமை'' என்று சொல்லப்பட்டதும், ''இன்று நான் இறப்பேன் என நம்புகிறேன்'' என்று கூறினார்கள். தம் உடலை அல்லாஹ்வின் தூதர் அவர்கள் அடக்கப்பட்டிருக்கும் அறையின் லாயில் முன் கொண்டுபோய் வைக்கும் படியும் அதன் பூட்டு சாவி யின்றியே திறந்து கொள்ளின், அங்குத் தம்மை அடக்கும் படியும், இல்லையேல் எல்லா முஸ்லிம்களும் அடக்கப்படும் இடத்தில் தம்மையும் அடக்கும்படியும் கூறினார்கள் என்று சிலர் சொல் கின்றனர். தம் உடலை அல்லாஹ்வின் தூதர் அவர்கள் அடக்கப்பட்டிருக்கும் அறையின் வாயில் முன் வைக்கும்படியும் அங்குத் தம்மை அடக்குவதற்கு அல்லாஹ்வின் தூதர் அவர்களின் அனுமதி கிடைத்தால், அடக்கும்படியும் இல்லையேல் அங்கு அடக்க வேண்டாம் என்று சொன்னதாகவும் சிலர் கூறுகின்றனர்.

கலீபா அவர்கள் தம் இறுதி உறக்கம் எங்கிருக்கும் என்பதை நன்கு அறிந்தே இருந்தார்கள என்பதற்கு ஆதாரம் இருக்கிறது. ஒரு நாள் ஆயிஷா (ரலி) அவர்கள் தம் அறையில் மூன்று முழுமதிகள் வந்து விழுந்து கிடப்பதைப் போல் கனவு கண்டு, ''அதன் பொருள் என்ன?'' என்று தம் தந்தையாரிடம் கேட்டபோது, அவர்களால் அதற்கு அப்பொழுது பதில் பகர இயலவில்லை. அல்லாஹ்வின் தூதர் அவர் களின் உடலம் அவர்கள் உறைந்த அறையில் அடக்கம் செய்யப்பட்ட பின் ஆயிஷா (ரலி) அவர்களைப் பார்த்து அவர்கள் கூறினர், ''உம்முடைய மூன்று முழுமதிகளில் இது ஒன்று, ஆனால் இது தான் அவைஅனைத்திலும் மிகவும் மேலானது'' என்று. அந்த அறையில்

அடக்கப்படப் போகும் மற்ற இரு முழுமதிகள் அபூபக்ர் (ரலி) அவர்களும், உமர் (ரலி) அவர்களும் ஆவர்.

இறப்பின் பிடியில் இருந்து கொண்டிருந்த கலீபா அவர்களுக்கு ஆறுதலாய் இருக்கட்டும் என்று அருகில் இருந்த ஒருவர் ஈரடிப்பாடல் ஒன்றை இசைக்கத் தொடங்கினார். அந்தப் பாடலைக் கலீபா அவர்கள் தமக்கு சுரம் வரும் போதெல்லாம் பாடுவதும் வழக்கம். மக்காவிலிருந்து மதீனா வந்ததும் சுரம் கண்டபோதும், அவர்கள் அந்தப் பாடலைப் பாடியிருக்கின்றனர். ஆனால் அதனை இப்பொழுது பாட வேண்டாம் எனக் கலீபா அவர்கள் கட்டளையிட்டார்கள். அதற்குப் பதிலாக, ''உண்மையில், இறப்பின் வேதனை வந்தே தீரும் மனிதனே! நீ தவிர்க்க முயலுவது அதனைத்தான்'' என்னும் இறை வசனத்தைத் திரும்பத் திரும்பத் தமக்கு ஓதிக் காட்டும்படிக் கேட்டுக் கொண்டார்கள்.

அவர்களுக்குத் தம் குடும்பத்தார் அத்தனை பேர் மீதும் அன்பு உண்டு. ஆனால் அது சற்று அதிகமாய் ஆயிஷா (ரலி) அவர்கள் மீது இருந்தது. அதற்குக் காரணம், ஆயிஷா (ரலி)அவர்கள் பிரியத்திற்குரிய தம் மகளாய் இருந்ததுடன், அல்லாஹ்வின் தூதர் அவர்களின் அன்பிற்குரிய மனைவியாய் இருந்ததுமாகும். அன்பு நெஞ்சில் இருந்தால் மட்டும் போதாது, அதற்கு அடையாளமும் அவசியம் எனக் கருதி அவர்கள் ஆயிஷா (ரலி) அவர்களுக்குக் கொஞ்சம் நிலம் அன்பளிப்பாக அளித்திருந்தனர். அது தப்பு என்று இப்பொழுது அவர்களின் மனம் இ···ந்துக் கூறியதால், அதனை மற்ற சகோதரர்களுடனும், சகோதரி··ளுடனும் பங்கிட்டுக் கொள்ளும்படி ஆயிஷா (ரலி) அவர்களிடம் கூறினார்கள். ''அந்தக் குழந்தை உன் சகோதரி, அதற்கும் என் சொத்தில் பங்கு உண்டு'' என்று அவர்கள் அறிவித்தார்கள். இதைக் கேட்டு ஆயிஷா (ரலி) அவர்கள் திகைப்படைந்தனர். 'நமக்கு ஒரு சகோதரி தானே உண்டு. இன்னொரு சகோதரி நமக்கு இருக்கிறது என்று தந்தையார் கூறுகிறார்களே, அது எப்படி?'' என்று ஆயிஷா (ரலி) அவர்கள் தம் மூளையைப் போட்டுக் குழப்பிக் கொண்டனர். விரைவில் அவர்களுக்கு விளக்கம் கிடைத்தது. அபூபக்ர் (ரலி) அவர்கள் இவ்விதம் கூறியபோது அவர்களின் மனைவி கருவுற்றிருந்தனர். கருவில் இருக்கின்ற குழந்தை பெண் குழந்தை, அந்தக் குழந்தைக்கும் தம் சொத்தில் பங்கு உண்டு. அது பிறக்கின்ற போது தாம் உயிருடன் இருக்கப் போவதில்லை என்பதை எதிர் காலத்தில் நடக்கப் போவதை முன் கூட்டியே உணரும் தம் திறனால் தெரிந்து தான் கலீபா அவர்கள் சூசகமாகக் கூறினார்கள்.

இவ்விதம் அரசு அலுவல்களையும், குடும்பக் கடமைகளையும் ஆவி விரைந்திட ஆயத்தமாகும் அந்த நேரத்திலும் தவறு ஏற்படாமல் செய்து வரும் போது, அவர்கள் நினைவிழந்தார்கள். உண்மையான வற்றையே பேசிய, அறிவானவற்றையே கூறிய அவர்களின் நய நா அமைதியுற்றுவிட்டது போல் தோன்றவே, ஆயிஷா (ரலி) அவர்கள் குளங்களாகி விட்ட கண்களோடு, கலீபா அவர்களின் அழகு முகத்தைப் பார்த்தார்கள். கன்னங்களில் கண்ணீர் உருண்டோட ஆயிஷா (ரலி) அவர்களின் கவலை தோய்ந்த நெஞ்சிலிருந்து உருக்கமான இந்தக் கவிதை வெளிவந்தது. :

*''முகிலுக்கு நீர் வழங்கும் புதுமையைப் பெற்றது*
*எவருடைய ஒளி முகம்?*
*அனாதைகள் மீது அன்பாயிருந்ததே அந்த முகம்.*
*விதவைகளின் கண்ணியத்தைக் காத்ததே அந்த முகம்.''*

நினைவிழந்து நீள் துயிலில் மூழ்கிக் கொண்டிருந்த கலீபா அவர்களின் காதுகளில் இக்கவிதை வரிகள் எப்படித்தான் விழுந்தனவோ! உடனே அவர்கள் கண் விரித்தார்கள். ''இந்தப் புகழ் மொழிகளுக்கெல்லாம் உரிய ஒரே ஒருவர் அல்லாஹ்வின் தூதர் அவர்கள் தாம்'' என அறிவித்தார்கள். இறப்பு தம்மைவேகமாய் இழுத்துச் செல்லும் அந்த வேளையிலும் தம் ஆருயிர்த் தலைவரைப் புகழாது தம் மீது புகழாரம் சூட்டப்படுவதைப் பொறுக்காத புனித மனம் அவர்களுடையது.

விரைவில் தந்தையார் இறக்கப் போகிறார்கள் என்பதை அறிந்து கொண்டதும், ஆயிஷா (ரலி) அவர்களால் தமக்கு வந்த அழுகையை அடக்கிக் கொண்டிருக்க இயலவில்லை அன்பிற்குரிய புதல்வி அழுவது கண்டு கலீபா அவர்கள். ''அழ வேண்டாம்!'' என ஆறுதல் கூறினார்கள். ''தங்கள் பிரிவுக்கு அழவில்லை என்றால், பிறகு யார் பிரிவுக்கு அழுவது?'' என்று ஆயிஷா (ரலி) அவர்கள் தம் தந்தையாரைப் பார்த்துக் கேட்ட போது, இப்பொழுது என் உயிர் பிரிவதை விட, வேறு எவரின் உயிர் பிரிவதும் எனக்குப் பிரியமானதல்ல என் உயிர் பிரிவதைவிட ஓர் ஈயின் உயிர் பிரிவதும் எனக்குப் பிரியமானதல்ல' என்று கலீபா கூறினார்கள். அதன்பின் ஹும்ரான் என்பவரைப் பார்த்துக் கூறினார்கள். ''இறப்பின் சமயத்தில் இஸ்லாம் என்னை விட்டுப் போய் விடுமோ என்னும் அச்சம் தான் என்னை அதிகம் வாட்டுகிறது'' என்று.

இறப்பதற்கு முன் கலீபா அவர்கள் புரிந்த கடைசிக் கடமை, உமர் (ரலி) அவர்களை அழைத்து, மென்மையைக் கொண்டு கடுமையை மாற்றும்படிக் கூறிய நீண்ட அறிவுரைகள் தாம்: ''உமரே! நிச்சயமாக, நான் உம்மை அல்லாஹ்வுடைய தூதர் அவர்களின் தோழர்கள் மீது தலைவராய் நியமித்திருக்கிறேன். நீர் உள்ளும் புறமும் இறையச்சம் உள்ளவராக நடந்து கொள்ள வேண்டும். இறைவனுக்கு ஆற்ற வேண்டிய சில கடமைகள் பகலைச் சேர்ந்தவை. அவற்றை அவன் இரவில் ஏற்றுக் கொள்ள மாட்டான். பார்லான கடமைகளைப் புரியாது அவற்றிற்கு அடுத்த நிலையிலுள்ள கடமைகளைச் செய்தால், அவன் ஏற்றுக் கொள்ளப் போவதில்லை. நிச்சயமாக எவர் உண்மையைப் பின்பற்றி, உண்மையான விஷயங்களைப் பெரிதாகக் கருதுகின் றாரோ, அவருடைய எடைதான் மறுமை நாளில் அதிகமாக இருக்கும். உமரே! நிச்சயமாக எவர் பொய்யைப் பின்பற்றி பொய்யான விஷயங் களை இலேசாகக் கருதுகின்றாரோ, அவருடைய எடை தான் மறுமை நாளில் குறைவாக இருக்கும். வெற்றியும், ஈடேற்றமும் இறை வேதத்தின் விதிகளின்படிச் செயல்படுவதில்தான் இருக்கின்றன. உமரே! எச்சரிக்கும்,இரக்கம் காட்டும், தண்டிக்கும் இறைவசனங்கள் இணைந்திணைந்தே வெளியாகியிருப்பது உமக்குத் தெரியாதா? மனிதன் இறைவனுக்கு அஞ்ச வேண்டும். ஆனால் நெஞ்சழிந்து விடக் கூடாது. மனிதன் இறைவனுடைய கடுமைக்குப் பயப்பட வேண்டும். ஆனால் இறைவனின் அருளில் நம்பிக்கை இழந்துவிடக் கூடாது. இறைவன் தண்டிப்பவன் தான், ஆனால் தன்னிகரற்றவன் மன்னிப் பதில் என்பதை மறந்து விடக்கூடாது.''

இந்த அரிய உரையை முடித்துக் கொண்டதும் கலீபா அவர்கள் இந்தக் கடிதத்தை தளபதிகளுக்கு எழுதும்படிக் கூறினார்கள். ''நான் உங்களுக்கு உமரைக் கலீபாவாக நியமித்திருக்கிறேன். இந்த விஷ யத்தில் நான் எவன் மீது எவ்விதக் குறையையும் வைத்துக் கொள்ளவு மில்லை. முஸ்லிம்கள் மீது நான் நன்மையைத் தவிர்த்து, வேறு குறை எதுவும் செய்யவுமில்லை.

இதன்பின் கலீபா ஆங்கிருந்தவர்களைப் பார்த்து ''உமரை விட எனக்கு உகப்பானவர் இல்லை'' என்று கூறினார்கள். இவ்விதம் கூறி யதும் அவர்கள் எதையோ சிந்திப்பது போல் தோன்றியது. அருகிலிருந்த ஆயிஷா (ரலி) அவர்களிடம், ''நான் இப்பொழுது என்ன கூறினேன்?'' என்று கேட்டார்கள். 'உமரை விட எனக்கு உகப்பானவர் இல்லை என்று கூறினீர்கள்'' என ஆயிஷா (ரலி) அவர்கள் அறிவித்

ததும் "அல்ல, உமரைவிட அதிகம் சிறந்தவர் எனக்கு எவருமில்லை" என்று கலீபா தாம் முன்னால் கூறியதில் திருத்தம் செய்தார்கள்.

## இறுதி நேரம்

இவ்வளவு எச்சரிக்கையுடன் இறுதிக்கணம் வரை கடமை புரிந்த கலீபா அவர்களுக்கு அவசியமான ஓய்வை அளிக்க அல்லாஹ் தீர்மானித்தான். மலை சூழ்ந்த மதீனா மஞ்சள் வெய்யிலில் மூழ்கியது. விரைவில் மதீனாவை இருள் சூழஆரம்பித்தது. மக்கள் பள்ளியில் மக்ரிப் தொழுகைக்காகத் திரண்டு கொண்டிருந்தனர். இப்பொழுது கலீபா அவர்களை,இறுதி நாள் வரை இருக்கக் கூடிய நீண்ட உறக்கம் நெருங்கியது. இதுவரை உணர்வை இழப்பதும், அது திரும்பியதும் உரையை உதிர்ப்பதுமாய் இருந்த கலீபா அவர்களின் அதரங்கள், இறுதி முறையாக அசைந்தன. அந்த அசைவிலிருந்து மிருதுவான குரலில் இந்தச் சொற்கள் உதிர்ந்தன: "இறைவனே! நான் முஸ்லிமாக இறக்க வேண்டும், நல்லோருடன் இருக்கவேண்டும் என உன்னிடம் இறைஞ்சு கிறேன்." நெஞ்சில் இந்த இறைஞ்சல் எழ, குரல் அதற்கு ஒலி தர, அதரங்கள் அதற்கு வழிவிட, உடல் உயிருக்கு விடை கொடுத்தது. பொன்றாகப் புகழ்வாழ்வு ஒன்று, குன்றாப் பெரு வாழ்வு ஒன்று, ஹிஜ்ரி 13 – ஆம் ஆண்டு ஜமாதுல் ஆகிர் 22–ம் நாள் ஒரு திங்கட்கிழமையில் நிறைவுற்றது.

அபூபக்ர் (ரலி) அவர்கள் இறந்துவிட்டார்கள் என்பதை அறிந்ததும், "அல்லாஹ்விடமிருந்து வந்தவர் எவரும், அல்லாஹ் விடமே திரும்ப வேண்டும் என்று கூறிவிட்டு, உடனே அவர்களின் இல்லம் ஓடி வந்து அதன் வாயிலில் நின்றவாறே அறிவு நகரின் வாயிலான அலீ (ரலி) அவர்கள் ஆற்றிய உரையிலிருந்த ஒவ்வொரு சொல்லும் உண்மை பொதிந்தது. அன்பிற்குரியவரின் இறப்பால் விளைந்த உணர்ச்சியால் அல்லாமல், அறிவால், அபூபக்ர் (ரலி) அவர்களின் உள்ளையும், புறத்தையும், அறியாமைக் காலத்திலும், இஸ்லாத்திற்கு வந்த பிறகும், அவர்கள் வாழ்ந்த முறையையும், நெறியையும் ஊடுருவிப் பார்த்து, அவற்றை அலசி ஆராய்ந்து உரைக்கப்பட்டவை அவை. மறைந்த தலைவர் மீதிருந்த மதிப்பும், அன்பும் கணிப்பைப் பிழையாக்காமலும் கவலும், நெஞ்சம் கருத்தில் கலந்து அதன் மாற்றைக் குறைத்து உண்மைக்கு மாற்றமாக்காமலும் கூறப் பட்டவை அவை:

"அபூபக்ர் அவர்களே! இறைவனின் அருள் உங்கள் மீது உண் டாகட்டும்! நீங்கள் அல்லாஹ்வுடைய தூதர் அவர்களின் அன்பிற்குரிய

நண்பர். அவர்களுக்கு நீங்கள் மகிழ்வின் ஊற்றாவீர்கள். நீங்கள் அவர்களின் இரகசியங்களை அறிந்தவர்கள். அவர்கள் உங்களின் ஆலோசனையைக் கேட்டார்கள். வயது வந்த ஆண்களில் இஸ்லாத்தைத் தழுவிய முதல்வர் நீங்கள் தாம். உங்களின் நம்பிக்கை தூய்மையானதாகும். இஸ்லாத்தின் மீது உங்களின் நம்பிக்கை அசைக்க ஒண்ணாததாகும். எல்லாவற்றிற்கும் மேலாக அல்லாஹ்வுக்கு நீங்கள் அதிகம் பயந்தீர்கள். அவன் மார்க்கத்திற்கு மாபெரும் சாதகமாக நீங்கள் இருந்தீர்கள். எவரையும் விட அதிகமாய் அல்லாஹ்வின் தூதருடன் இருந்தவர்கள் நீங்கள் தாம். எவரையும் விட அதிகமாய் உங்களுக்குத் தான் இஸ்லாத்தின் மீது அன்பிருந்தது. தோழர்களுக்கு நீங்கள் அருட்கொடையாய் அமைந்தீர்கள். நண்பர்களில் நீங்களே மேலானவர்களாய் இருந்தீர்கள். உதாரகுணம் பலவற்றை அதிகம் அடைந்திருந்தவர்கள் நீங்கள். சாதனையில் மற்றவர்களை மிஞ்சியவர்கள் நீங்கள். குண ஒழுக்கத்திலும், நன் நடத்தையிலும் அன்பிலும், மேன்மையிலும் வேறு எவரையும் விட அல்லாஹ்வின் தூதரை ஒத்திருந்தவர்கள் நீங்கள் தாம். உங்களின் தரம் மேலானது, உங்களின் தகுதி சிறப்பானது. அல்லாஹ்வுடைய தூதரின் பெரும் நம்பிக்கையைப் பெற்றிருந்தவர்கள் நீங்களே. இஸ்லாத்தின் சார்பிலும் அதன் தூதர் சார்பிலும் உங்களுக்கு இறைவன் நன்மையை அருளட்டும்!

"அபூபக்ர் அவர்களே! அல்லாஹ்வின் தூதருக்கு நீங்கள் கண்கள் போலும், காதுகள் போலும் இருந்தீர்கள். எல்லோரும் மறுத்த நிலையில் அவர்கள் தூதின் உண்மையை நீங்கள் ஒப்புக் கொண்டீர்கள். அதனால் நீங்கள் 'அஸ்ஸித்தீக்' என அல்லாஹ்வின் வேத வெளிப்பாட்டால் அழைக்கப்பட்டீர்கள். அவன் சொல்கிறான், "உண்மையுடன் வந்தவர் ஒருவர். உண்மையை ஒப்புக் கொண்டவர் ஒருவர். உண்மையுடன் வந்தவர் முகம்மத், உண்மையை ஒப்புக்கொண்டவர் அபூபக்ர்" என்று. அனைவரும் கைவிட்டபோது, அவர்களை நீங்கள் ஆதரித்தீர்கள். மற்றவர்கள் தம் ஆதரவை விலக்கிக் கொண்டபோது அவர்களின் துன்பங்களில் உதவுவதற்காக நீங்கள் உறுதியாயிருந்தீர்கள். கடுந்துன்ப காலத்திலும் நீங்கள் அவர்களின் மிகச் சிறந்த நண்பராய் இருந்தீர்கள். நீங்களே இருவரில் இரண்டாமவர் ஆவீர்கள். குகையில் அவர்களின் தோழர் தாங்கள் தாம். அமைதியான மனத்தை இறைவன் அருளிய ஒருவர் நீங்கள் தாம். ஹிஜ்ரத் செய்யும் போது, அல்லாஹ்வுடைய தூதரின் ஒரே துணைவர் நீங்கள் தாம். அல்லாஹ்வுடைய தூதரைப் பின்பற்றியவர்களிலும், அல்லாஹ்வின் மார்க்கத்திலும்,

நீங்கள் தாம் அவர்களின் பிரதிநிதியாய் இருந்தீர்கள். பொய்யர்களை இறைதூதர்கள் என மக்கள் நம்பத் திரும்பிய நேரத்தில், மிகவும் அற்புத மான முறையில் கலீபாக் கடமைகளை நீங்கள் நிறைவேற்றினீர்கள். வேறு எந்த இறைதூதரின் கலீபாவும் ஒரு போதும் காட்டியிராத உறுதியை, இறைவன் கட்டளைகளை நிறைவேற்றுவதில் நீங்கள் காட்டினீர்கள். உங்களின் தோழர்கள் தளர்ச்சி காட்டிய போது, நீங்கள் சந்தர்ப்பத்திற்குத் தகுந்தவராக எழுந்தீர்கள். அவர்கள் தாழ்மையைக் காட்டியபோது, நீங்கள் துணிவைக் காட்டினீர்கள். அவர்கள் வலு வினர்களாய் இருந்த போது, நீங்கள் வன்மையானவர்களாய் இருந்தீர்கள். மற்றவர்கள் அல்லாஹ்வின் தூதரின் வழிவிட்டு விலகிய போது, அந்த வழியில் உறுதியாக இருந்தவர்கள் நீங்கள் தாம். அல்லாஹ்வுடைய தூதரின் உண்மையான கலீபா நீங்கள் தாம். அதில் கருத்து வேறுபாடோ, சர்ச்சையோ கிடையாது. இது நயவஞ்சகர் களுக்குத் துன்பமாயிருந்தாலும், இறை மறுப்பவர்களுக்கு இன்னல் தருவதாயிருந்தாலும், அழுக்காறு உள்ளவர்களுக்கு ஆத்திரம் அளித் தாலும், கலகக்காரர்களுக்குச் சினத்தை ஏற்படுத்தினாலும், உண்மை யான கலீபா நீங்கள் தாம் மற்றவர்கள் கோழைத்தனத்தைக் காட்டிய போது, நீங்கள் தாம். அல்லாஹ்வின் கட்டளைகளைப் பற்றிப் பிடித் திருந்தீர்கள். மற்றவர்கள் விலகிச் சென்ற போது நீங்கள் உறுதி தளரா திருந்தீர்கள். அவர்கள் பின்புறம் இருந்தபோது நீங்கள் இறை ஒளியில் மூழ்கிச் சென்றீர்கள். அதன் பின் அவர்கள் உங்களைப் பின்தொடர்ந் தார்கள். அவர்களின் குறிக்கோளை அடைந்தார்கள். உங்களின் குரல் பணிவானது. ஆனால் உங்களின் மதிப்பு உயர்வானது. உங்களின் உரை பின்பற்றத்தக்கதாயிருந்தது. உங்களின் வாதம் நியாயமானதா யிருந்தது. உங்களின் மௌனம் நீளமானதாயிருந்தது. உங்களின் பேச்சு வன்மை மிகுந்ததாயிருந்தது. மனிதர்களில் மிகவும் வீரமானவர்கள் நீங்கள். விஷய அறிவு அதிகம் பெற்றிருந்தவர்கள் நீங்கள். கண்ணிய மான செயலைக் கடைப்பிடித்தவர்கள் நீங்கள்.

''அபூபக்ர் அவர்களே! நான் அல்லாஹ்வின் மீது ஆணையிட்டுக் கூறுகிறேன். நீங்கள் நம்பிக்கையாளர்களின் தலைவராவீர்கள். மற்றவர்கள் விலகி நின்ற போது நீங்கள் மார்க்கத்தைநோக்கி வந்தீர்கள். மற்றவர்கள் அதனை நோக்கித் திரும்பும்போது நீங்கள் அதைப் பின் பற்றிச் சென்று கொண்டிருந்தீர்கள். உண்மையில் நீங்கள் முஸ்லிம் களுக்கு ஓர் அன்புத் தந்தையைப் போல் செயல் புரிந்தீர்கள். உங்களின் குழந்தையன்பு அவர்களை, உங்களின் குழந்தைகளாக்கியது. அவர்

களால் தாங்க முடியாத சுமையை நீங்கள் தாங்கினீர்கள். அவர்கள் செய்யாது தவிர்ந்ததை நீங்கள் செய்ய முன் வந்தீர்கள். அவர்கள் அழித்ததை நீங்கள் பாதுகாத்தீர்கள். அவர்கள் அறியாததை நீங்கள் கற்றுக் கொடுத்தீர்கள். அவர்கள் அபயம் அற்றிருக்கும் போது நீங்கள் ஆபத்தை ஏற்றீர்கள். அவர்கள் பொறுமையின்றி இருந்த போது, நீங்கள் உறுதி குன்றாதிருந்தீர்கள். நீதி கேட்டவன் குறைகளை நீங்கள் நிவர்த்திக்கத் தவறவில்லை. அதனால் அவர்கள் வழிகாட்டப்படு வதற்காக உங்கள் பக்கம் திரும்பினார்கள். அதனால் அவர்கள் வெற்றி யாளர்களாய் ஆனார்கள். தாங்கள் கனவில் கூடக் கருதாததைத் தங்கள் மூலம் அடைந்தார்கள். இறை நம்பிக்கையற்றவர்களுக்குத் தாங்கள் பயங்கரத் தண்டனையாவீர்கள், எரியும் நெருப்பாவீர்கள். இறை நம்பிக்கையாளருக்கு அன்பாவீர்கள், பிரியமாவீர்கள், பாதுகாப் பாவீர்கள். பக்தி வெளியில் நீங்கள் பறந்தீர்கள். அதன் பரிசையும் வனப்பையும் அடைந்தீர்கள். மேனிலையையும் அணைந்தீர்கள். உங்களின் வாதம் ஒரு போதும் பலவீனமாயிருந்ததில்லை. கோழைத் தனமாய் ஒரு போதும் நீங்கள் இருந்தது கிடையாது. உங்களின் இதயம் கோணலாய் ஒரு போதும் போனது கிடையாது. கடுமையான அடிகளுக்கும், மோதும் புயல்களுக்கும் நடுவில் உறுதியோடு நிற்கும் பாறையாவீர்கள் நீங்கள்.

"அல்லாஹ்வின் தூதர் கூறியதைப்போல், நட்பிலும், ஈகையிலும் மிகவும் தாராளமானவர்கள் நீங்கள். அல்லாஹ் வின் கட்டளைகளை நிறைவேற்றுவதில் வன்மையும் உள்ளவர்கள் நீங்கள். இயல்பில் பணிந்தும், இறை பக்தியில் உயர்ந்தும் நீங்கள் இருந்தீர்கள். மனிதர்களின் கண்களில் மேலானவர்களாயும், அவர்களின் மதிப்பைக் பெறுவதில் உயர்ந்தவர்களாயும் நீங்கள் இருந்தீர்கள். எவரும் உங் களைப் பற்றி இகழ்ச்சியாகக் கூற முடியாது. வலுவீனர்களும், பணிவுள்ளவர்களுமே உங்களின் கருத்தில் பலவான்கள். அவர்களின் உரிமைகளை நீங்கள் வாங்கிக் கொடுத்தீர்கள். வலிமையுள்ளவர்கள் உங்களின் கருத்தில் வலுவீனர்கள். மற்றவர்களின் உரிமைகளை விடும்படி அவர்களை நீங்கள் செய்தீர்கள். இந்த விஷயத்தில் உங்களுக்கு நெருக்கமானவர்களும், தொலைவில் இருப் பவர்களும் சமமானவர்களே. அல்லாஹ்வுக்கு அஞ்சுபவர்களும், அவனுக்கு அடி பணிபவர்களும் உங்களுக்கு மிகவும் நெருக்கமானவர்கள். உங்களின் கண்ணியம், நேர்மை, உண்மை, உதவி செய்யும் விருப்பு இவற்றில் தான் இருந்தது. உங்களின் சொல், ஏவல் உணர்த்து வதாயும், தீர்க்கமான

தாயும் இருந்தது. உங்களின் கட்டளை மென்மை யானதாயும், எச்சரிக்கையானதாயும் இருந்தது. உங்களின் தீர்ப்பு அறிவானதாயும் உறுதியானதாயும் இருந்தது. இவ்விதம் நீங்கள் தீமையை வேரறுத்தீர்கள். நேர்வழியைத் துலக்கினீர்கள். அதனால் துன் பங்கள் பரிகரிக்கப்பட்டன. நெருப்பு அணைக்கப்பட்டது. மார்க்கத்திற்கு நீங்கள் வலிமையையும் இஸ்லாத்திற்கு நீங்கள் உறுதியையும், அல்லாஹ்வின் கட்டளைக்கு நீங்கள் வெற்றியையும் கொண்டு வந்தீர்கள். நீங்கள் நல்லது செய்வதில் உயர் பதவியை அடைந்தீர்கள். நாங்கள் வருத்தமுறுவதற்கு அப்பாற்பட்ட உயரத்தில் இருக்கிறீர்கள். உங்களின் இறப்பு மக்களின் முதுகெலும்பை முறித்து விட்டது. நாங்கள் 'இறைவனிடமிருந்து வந்தவர்கள் இறைவனிடமே திரும்பிச் செல்ல வேண்டும்.' என்னும் திருமறை உரையைக் கூறுகிறோம்.

''நாங்கள் அல்லாஹ்வால் விதிக்கப்பட்டதற்கு அடிபணிகிறோம். அவனுடைய கட்டளைக்குக் கீழ்ப்படியத் தயாராயிருக்கிறோம். அல்லாஹ்வின் மீது ஆணையாக, இறை தூதர் இறப்பிற்குப் பின் உங்களின் இறப்பைப் போன்ற பெரிய உற்பாதத்தை நாங்கள் அனுப வித்ததில்லை. நீங்கள் மார்க்கத்திற்குக் கண்ணியம், பாதுகாப்பு, ஆதரவு ஆவீர்கள். இறை நம்பிக்கையாளர்களுக்கு நீங்கள், மக்கள் திரள்போல் வலிமை மிக்க இடம், அடைக்கலம் தேடக் கூடிய இடம் ஆவீர்கள். ஆனால் நயவஞ்சகர்களுக்கு நீங்கள் கண்டிப்பும், பயங்கரமும் ஆவீர்கள்.

''அபூபக்ர் (ரலி) அவர்களே! அல்லாஹ் இவற்றிற்குப் பரிசாக உங்களை இறை தூதர் அருகில் வைத்துக் கொள்ளட்டும்! அவன், உங்கள் முயற்சிகளால் பெற்ற பலன்களை எங்களுக்கும் விலக்கி விடாதிருக்கட்டும். உங்களுக்குப் பிறகு எங்களை வழி கெடுக்காதிருக் கட்டும்.! நாங்கள் மீண்டும், 'அல்லாஹ் விடமிருந்து வந்தவை அனைத்தும், அல்லாஹ்விடமே திரும்பிச் செல்லவேண்டும்' என்று கூறுகிறோம்.''

அலீ (ரலி) அவர்களின் இந்த சொற்பொழிவை மக்கள் தம்மை மறந்து கேட்டனர். அதன் பின், அவர்கள் அனைவரும் ஒருமித்த குரலில், ''அல்லாஹ்வின் தூதர் மருகரே! நீங்கள் என்ன கூறினீர்களோ அவை அனைத்தும் உண்மை'' என்று கூறினர்.

அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு இறப்பு என்றைக்கோ வந்திருக்க வேண்டியதாகும். அல்லாஹ்வின் தூதர் அவர்கள் இறந்த அன்றே

அவர்கள் தம் ஆவியில் பாதியை இழந்து விட்டார்கள். ஆறுதல் எதனாலும் அகற்ற இயலாத அந்தப் பேரிடி இழைத்த பெருந் துயரிலிருந்து இறுதிவரை அவர்களால் எழுந்திருக்கவே இயல வில்லை. இதற்கு ஆதாரம் அப்துல்லாஹ் இப்னு உமர் (ரலி) அவர்களின், "அல்லாஹ்வின் தூதர் அவர்கள் இறந்ததிலிருந்தே அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு ஓர் உள் சோகம் ஏற்பட்டு அதனால் அவர்களின் உடல் இறங்க ஆரம்பித்து விட்டது. அதே நிலையில் அவர்கள் இறந்து விட்டார்கள்" என்னும் இந்த உரையும், சயூத்தி ரஹ்) அவர்களின், "அபூபக்ர் (ரலி) அவர்களின் பிரதான நோய், அல்லாஹ்வின் தூதர் அவர்களின் பிரிவே ஆகும்" என்னும் இந்த உரையும் ஆகும். எத்தனையோ ஆண்டுகள் இறுகிப் போயிருந்த நட்பு, உள்ளிலும், உணர்விலும், என்பிலும், இரத்தத்திலும், ஊனிலும் உயிரிலும், ஊறிப்போயிருந்த தோழமை, அறுந்து விட்டபோது, ஆவியில் பாதியை இழந்துவிட்டது போல் அவர்கள் உணர்ந்திலும், அதனால் உடல் நலிந்ததிலும் ஒரு வியப்பும் இல்லை. அல்லாஹ்வின் தூதர் அவர்கள் இறந்த மாளாத்துயரம் தம் மனத்தில் மூண்டதிலிருந்து, அவர்கள் நாளுக்கு நாள் நலிந்து கொண்டே தான் போனார்கள். அல்லாஹ்வின் தூதர் அவர்களை இழந்த இடியேறு தம் இதயத்தில் விழுந்ததிலிருந்து அவர்கள், நாளுக்கு நாள் மெலிந்து கொண்டேதான் வந்தார்கள், காலம் கரைக்காத கவலையும் உண்டோ என்பார்கள். உண்டு என்பதற்கு அபூபக்ர் (ரலி) அவர்களே உதாரணமாவர். "அல்லாஹ்வின் தூதர் அவர்கள் இறந்தபிறகும் உயிருடன் இருக்கிறோம், அவர்கள் உலவாத மதீனாவில், உடல் சுமந்து திரிகிறோம்" என்பது ஒன்றே போதாதா அபூபக்ர் (ரலி) அவர்களைக் கொல்லாது கொல்வதற்கு?

அல்லாஹ்வின் தூதர் அவர்களின் இறப்பே அபூபக்ர் (ரலி) அவர்களின் இறப்பிற்குப் பிரதான காரணம் என்றாலும், அவர்களின் உயிர்போக்குவதில் உதவியவை அவர்களின் உணவுடன் உட்சென்ற விஷம் என்றும் உதிரத்துடன் கலந்து விட்ட நஞ்சு என்றும் கூறப் படுகிறது. தவ்ர் குகையில் வைத்து அடைக்கப்படாதிருந்த துளை ஒன்றில், தம் கால் பெருவிரலை வைத்து அழுத்திக் கொண்டிருந்த போது, துளையிலிருந்த அரவம் ஒன்று அவர்களைக் கடித்துவிட்டது. அதன் விஷம் தம்மைத் துன்புறுத்திக் கொண்டிருந்ததாய் அவர்கள் தம் இறப்பு வேளையில் கூறினர். அதனால் அவர்களை ஓர் உயிர்த் தியாகி என்றும் உரைக்கப்படுகிறது. ஒரு நாள் அவர்களுக்கு அன்பளிப்பாக ஒருவரிடமிருந்து உணவு வந்தது. அதனை அவர்களும், ஹாரிஸ் பின்

கல்தாவும் அருந்தினர். அப்பொழுது ஹாரிஸ் பின் கல்தா, ''அருந்தாதீர்கள், அதில் நஞ்சு கலந்திருக்கிறது!'' என்று கூறினர். அதை அருந்தியதால், தங்கள் இருவருக்கும் ஒரே நாளில் இறப்புவரும் என்று ஹாரிஸ் பின் கல்தா கூறினர் என்றும், அதே விதம் ஓர் ஆண்டு காலம் நோய்வாய்ப்பட்டிருந்து இருவரும் ஒரே நாளில் இறந்தனர் என்றும், ஜுஹ்ரீ கூறுகிறார். இதனால் அபூபக்ர் (ரலி) அவர்களை ஓர் உயிர்த் தியாகி என்றும் சொல்லப்படுகிறது.

உயிர் வாழும்போதே உலகை எப்பொழுது உதறலாம் எனத் தருணம் பார்த்துக்கொண்டிருந்த அவர்கள், ஆவி இழந்த பின்னர், அரைக் கணமும் உலகில் இருக்க விரும்பமாட்டார்கள் என்பதை அறிந்திருந்த தோழர்களும், இரவு இறந்தால் விடிவதற்குள் அடக்கி விட வேண்டும் என்னும் அவர்களின் விருப்பத்தைத் தெரிந்திருந்த ஆயிஷா (ரலி) அவர்களும், கலீபா அவர்கள் அன்றிரவே அடக்கப்பட்டு விடவேண்டும் என முடிவெடுத்தனர். எந்தக் கைகள் அல்லாஹ்வின் தூதர் அவர்களைக் குளிப்பாட்டினவோ , அந்தக் கைகளினால் தாம், தாமும் குளிப்பாட்டப்பட வேண்டும் எனக் கலீபா விரும்பினார்கள். எனவே நோய்வாய்ப்பட்டிருந்த தம்மைக் காணவந்த அலீ (ரலி) அவர்களிடம், ''தாங்கள் தாம் அல்லாஹ்வின் தூதர் அவர்களைக் குளிப்பாட்டினீர்கள்'' என்று கூறி, அவர்களே தம்மையும் குளிப்பாட்ட வேண்டும் என்று கலீபா அவர்கள் வேண்டிக் கொண்டிருந்தனர். அதன் பிரகாரம் அலீ (ரலி) அவர்களே கலீபா அவர்களைக் குளிப்பாட்டினர். அல்லாஹ்வின் தூதர் அவர்களின் புண்ணிய உடலைத் தூக்கிச் சென்ற அதே தோழர்கள்தாம் கலீபா அவர்களின் கண்ணிய உடலையும் தூக்கிச் சென்றார்கள். அவர்கள் அடக்கப்பட வேண்டிய இடம், அவர்களின் இல்லத்திலிருந்து ஒரு சில அடிகளுக்குள்ளாகவே இருந்தது. மரணத் தொழுகையை உமர் (ரலி) அவர்கள் நடத்தினர். கலீபா அவர்களின் உடலை அல்லாஹ்வின் தூதர் அவர்கள் அடக்கப்பட்டிருக்கும் அறையின் வாயிலில் வைத்ததும். ''தோழரை தோழருடன் சேருங்கள்!'' என்னும் குரல் கேட்டது. அதனை ஆங்கிருந்த அனைவரும் செவியுற்றனர். அல்லாஹ்வின் தூதர் அவர்களின் அனுமதி கிடைத்ததும், கலீபா அவர்களின் உடல் உள்ளே எடுத்துச் செல்லப்பட்டு, அல்லாஹ்வின் தூதர் அவர்களுக்கு அருகில், அல்லாஹ்வின் தூதர் அவர்களின் தோள்பக்கம் தலை இருக்கும் விதம் அடக்கம் செய்யப்பட்டது, உமர் (ரலி) உதுமான் (ரலி), கலீபா அவர்களின் புதல்வர் அப்துர்ரஹ்மான் (ரலி), ஆகியோர் தம் கரங்களைத் தொட்டிலாக்கிக்

கலீபா அவர்களின் உடலை மண் தொட்டியில் கிடத்தினர். மண் துகள்கள் பொன் துகள்கள் போல் கலீபா அவர்களின் கப்ரை நிறைத்தன. கலீபா அவர்கள் மண் அறையில் அடக்கப்பட்டுவிட்டார்கள். ஆனால், மக்களின் கண் மழை தான் அடக்க முடியவில்லை. இஸ்லாம் மட்டும் அழுது பிரலாபிப்பதை அங்கீகரித்திருந்தால் அங்கு ஓலக் கடல் ஒன்றே உருவாகியிருக்கும். அடக்கப்பட்ட ஓலம் மக்களின் மனங்களிலிருந்து உடைப் பெடுத்துக் கொண்டு உருமாறி, கண் வழி வெள்ளமாய் வழிந்தோடியது. ஆனால் அந்த ஊமை ஓலம் வெடித்துக் கொண்டு வெளிக் கிளம்பும் ஓலத்தைவிட எத்தனையோ மடங்கு வேதனை கொடுப்பதாய் இருந்தது.

தம் ஆருயிர்த் தலைவரைப் பிரிந்து சரியாக இரண்டு ஆண்டு, மூன்று மாதம். பதினொரு நாட்கள் கழிந்தபின் அபூபக்ர் (ரலி) அவர்கள், அந்தப் பிரிய தோழரின் அருகில் உறங்க ஆரம்பித்தார்கள். ஆயிஷா (ரலி) அவர்கள் கண்ட கனவின்படி இரண்டாவது முழுமதி அவர்களின் அறையில் உறையத் தொடங்கிவிட்டது. அல்லாஹ்வின் தூதர் அவர்கள் இறந்த அதே வயதிலேயே அபூபக்ர் (ரலி) அவர்களும் இறக்க வேண்டும் என்பதற்காகத்தானோ என்னவோ, அல்லாஹ் அபூபக்ர் (ரலி) அவர்களுக்கு இரண்டு ஆண்டு மூன்று மாதம் பதினொரு நாள் கெடு கொடுத்திருந்தான்.

அகிலத்தில் இருக்கும் போதே சுவர்க்கத்தைக் கொண்டு நன்மாராயம் பெறும் ஆகூழைப் பெற்றவர்கள் அல்லவா அபூபக்ர் (ரலி) அவர்கள். அவர்கள் இறந்ததும், ஒருவர் அவர்களைக் கனவில் கண்டார். ''தாங்கள் எப்போதும் தங்களின் நாவைத் தொட்டுக் காட்டி, 'இது அதிக வேலைகளை என் முன்பாக வைத்திருக்கிறது' என்று சொல்லிக் கொண்டிருப்பீர்களே'' என்று அவர்களைப் பார்த்துக் கேட்டார். ''ஆம், அந்த நாவினால் 'லா இலாஹ இல்லல்லாஹ்' என்று சொன்னேன். சுவனம் என் முன்பாக வைக்கப்பட்டது'' என்று அவர்கள் பதில் கூறினர்.

'லா இலாஹ இல்லல்லாஹ், முகம்மதுர் ரசூலுல்லாஹ்' என்பதை அண்ணல் நபி (ஸல்) அவர்கள் உரைத்ததும், உடனே ஒப்புக் கொண்டு, உண்மை உரைத்ததால் தானோ, என்னவோ, அவர்களுக்கு மறுமையில் 'உண்மை' என்னும் கொடி கொடுக்கப்படும் என்றும், உண்மையுரைத்தோர் அவர்களின் கொடியின் கீழ் ஒன்று திரளுவர் என்றும் கூறப்படுகிறது.

